A DESCRIPTIVE CATALOGUE OF THE

# Tamil Medical Manuscripts

in the

TANJORE MAHARAJA SERFOJI'S
SARASVATI MAHAL LIBRARY, THANJAVUR.

Dr. S. VENKATARAJAN, L. I. M., ( Regd. )

VOLUME V



Published under the authority of the
Administrative Committee

by

*Vidwan A. VADIVELAN,*
Honorary Secretary,
T. M. S. S. M. LIBRARY, THANJAVUR.

1976 Price

A DESCRIPTIVE CATALOGUE OF THE

# Tamil Medical Manuscripts

in the

TANJORE MAHARAJA SERFOJI'S
SARASVATI MAHAL LIBRARY, THANJAVUR.

Dr. S. VENKATARAJAN, L. I. M., (Regd.)

VOLUME V



Published under the authority of the
Administrative Committee

by

*Vidwan* ***A. VADIVELAN,***
Honorary Secretary,
T. M. S. S. M. LIBRARY, THANJAVUR.





1976 Price Rs. 40/-

தஞ்சை சரபோசி

சரசுவதி மகால் நூல் நிலையத்

# தமிழ்ச் சுவடிகளின் ஐந்தாம் தொகுப்பு

( வைத்தியப் பகுதி )

தொகுப்பாசிரியர் :

டாக்டர் எஸ். வெங்கட்டராஜன், எல். ஐ. எம்., ( ரிஜிஸ்டர்டு )

தஞ்சை சரசுவதி மகால் நிருவாகக் கமிட்டியினருக்காகக்

கௌரவ காரியதரிசி

வித்துவான் அ. வடிவேலன்

அவர்களால் வெளியிடப்பட்டது.

சகம் 1898 ] 1976 [ விலை ரூ. 16-50.

# வெளியிடுவோர் உரை



தஞ்சை சரசுவதி மகாலிலுள்ள தமிழ்ச் சுவடிகளின் ஐந்தாவது தொகுப்பாகிய இந்நூலைத் தற்பொழுது வெளியிட்டுள்ளோம் இதன்கண் 113 சுவடிகளை வரிசைப்படுத்தி விவர அட்டவணை தரப்பட்டுள்ளது. இத்தொகுப்பு வைத்தியச் சுவடிகள் மட்டுமே கொண்டுள்ளது. மகால் முன்பே இலக்கியச் சுவடிகளின் தொகுப்பை பாகம் 1, 2 என்றும், வைத்தியச் சுவடிகளின் தொகுப்பை பாகம் 3, 4 என்றும் வெளியிட்டுள்ளது. மேலும் 275 வைத்தியச் சுவடிகளுக்கு விவரப் பட்டியல். தயாரித்து வெளியிட வேண்டும். தொண்டுள்ளம் கொண்ட பெருமக்கள் பலரும் இன்னும் நூலகத்திற்குச் சுவடிகளை அன்பளிப்பாகக் கொடுத்து வருகின்றனர். அவற்றையும் தொடர்ந்து வரும் தொகுப்புகளில் வரிசைப்படுத்தி வெளியிட எண்ணியுள்ளோம்.

டாக்டர் எஸ். வெங்கட்ராஜன், எல். ஐ. எம். அவர்கள் தம்து ஆழ்ந்த அனுபவங் காரணமாகவும், இத்துறையில் வல்லுநராக இருப்பதாலும் இந்நூலை முறையாக வகுத்தெழுதி நன்கு பதிப்பித்துள்ளார்கள். அன்னாருக்கும், இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டுத் தந்த ஜெமினி அச்சக உரிமையாளர் அவர்களுக்கும் எமது நன்றி உரித்தாகுக.

இத்தொகுப்பு நூலை வெளியிட உதவிவரும் நமது தமிழக அரசினருக்கு நூல்நிலைய நிர்வாகக் குழுவின் சார்பாக நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

தஞ்சாவூர்,
10—12—1976.

அ. வடிவேலன்,
*கௌரவ காரியதரிசி.*

# முகவுரை

உலகப் பிரசித்திப்பெற்ற இந்நூல் நிலையத்தில் தமிழ்ச் சுவடிகள் மட்டும் சுமார் 1500 வரை உள்ளன. அவைகளுள் வைத்தியச் சுவடிகள் மட்டுமே 450 வரை சேர்ந்துள்ளன. இன்னும் பல இடங்களிலிருந்தும் சேகரித்து வருகின்றனர்.

இதுகாறும், 187 வைத்தியச் சுவடிகளின் குறிப்புகள் 3-வது, 4-வது தொகுப்புகளாக வெளிவந்துள்ளன. தற்போது இந்த 5-வது தொகுப்பில் 188 முதல் 300 வரையிலுள்ள சுவடிகளின் விவர அட்டவணைக் குறிப்புகள் உள்ளன. இச்சுவடிகளில் பல அச்சாகியிருந்தபோதிலும், அவைகளில் காணப்படும் விவரங்கள் முற்றிலும் ஏடுவாரியாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இதையன்றி ஒரே சுவடியில் பல பிரதிகள் இருப்பினும் அவைகளுக்கும் தனி எண் கொடுக்கப்பட்டு, ஒவ்வொரு ஏட்டிலும் காணப்படும் விவரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளமையால், மருந்து முறைகளைத் தேர்ந்தெடுத்துப் பரிசோதிக்கவும் பாட பேதங்களை அறிந்து கொள்ளவும், மிகவும் உபயோகமாக இருக்கும்.

இத்தொகுப்பில் வைத்தியச் சுவடிகளைத் தவிர, இந்துமத சம்பந்தமான நூல்களும், இஸ்லாமிய மத சம்பந்தமான நூல்களும் காணப்படுகின்றன. இச்சுவடிகள் தஞ்சை அரண்மனை வைத்தியர் திரு. காதர்பாஷா சாயபுவிடமிருந்து பெரும்பாலும் பெறப் பெற்றமையால் முஸ்லீம் மதச்சுவடிகள் பல இதனிடையே கூடியுள்ளன. வைத்திய முறைகள் மட்டுமே காணப்படும் சுவடிகளுக்கு முறையே "வைத்திய அட்டவணை, பலதிரட்டு, வைத்தியப் பலதிரட்டு, பலதிரட்டு அட்டவணை என்றும் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இச்சுவடிகளில் காணப்படும் விஷயங்கள் ரசவாதத்திற்கும், யோகாப்பியாசத்திற்கும், ஞானத்திற்கும், மந்திரசித்திக்குமே பயன்படக்கூடிய வகையில் பரிபாஷையாகக் கூறப்பட்டுள்ளன. எதற்காக இம்மாதிரி முறைகளைப் பரிபாஷையாகச் சொல்லி யாவருக்கும் எளிதில் புரியாவண்ணம் நமது சித்தர்கள் விவரங்களை

மறைத்து வைப்பதற்கான காரணங்களை ஆலோசித்தால் ஒரு உண்மை விளங்கும். சிற்சில அபூர்வ முறைகள் எளிதில் தகாதவர்களிடம் கிடைத்துவிட்டால் அதன்பலன் விபரீதமாகி விடக்கூடும். மேலும் ஜீவாத்மா பல பிறவிகள் எடுக்குந்தோறும், முன் ஜன்மத்தில் கிடைத்த ஞானம் தொடர்ந்து மறுபிறவிகளிலும் வருகின்றன என்பதே நமது கொள்கையாக இருக்கின்றமையால், இப்பரிபாஷைச் சொற்கள் மகான்களுக்குத் தானாகவே விளங்கும். இதையன்றி இந்த மகான்களே மறுபிறவியெடுத்தும் தக்க சமயத்தில் வந்து, பரிபாஷைச் சொற்களின் பொருளை விளக்குவார்கள். எளிதில் அவர்களை அடுத்து அவற்றைத் தெரிந்து கொள்ளவும் வாய்ப்பு இருக்கின்றது. ஆகவே இம்மாதிரியான பரிபாஷை நூல்களினால் உலகிற்குப் பயனில்லையென்றோ, வீணானவைகள் என்றோ நினைத்து ஒதுக்கிவிடக்கூடாது. அவற்றைப் பாதுகாக்கவேண்டியதும் நமது கடமையாகும். ஒரு காலத்தில் இந்த ரசவாத வித்தை நிச்சயமாகக் கைகூடியிருக்கின்றது என்பதைக் காண்பிக்கவே இந்நூல்களைப் பதினெட்டு சித்தர்களும் நூல் வடிவில் அமைத்திருக்கின்றனர். அம்மகான்களே திரும்பவும் பிறந்து அவற்றைப் புரியவைக்கவும் கூடும். இம்மாதிரியான சுவடிகளை நாம் எப்போதும் காப்பாற்ற வேண்டும். தனியார் வசமுள்ள பற்பல சுவடிகளும் சரசுவதி மகால் போன்ற நூல்நிலையங்களுக்குக் கொடுக்கப்படுமானால் அவைகளும் நன்ருகப் பாதுகாக்கப்படும்.

தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையத்தின் தமிழ்ச் சுவடிகளின் 5-வது தொகுப்பை வெளியிட ஆதரவளித்த, நூல்நிலைய கௌரவ காரியதரிசி வித்துவான் திரு **அ. வடிவேலன்** அவர்களுக்கும், தமிழ்ப்பண்டிதர் திரு. **வீ. சொக்கலிங்கம்** அவர்களுக்கும், **ஜெமினி அச்சகத்தாருக்கும்** எனது நன்றி உரித்தாகும். மற்ற தொகுதிகளும் சீக்கிரமே வெளிவர இறைவன் அருள் பாலிப்பாராக.

வாழிய நலனே! வாழிய நலனே!!

தஞ்சாவூர்
*30—9—1976*

**டாக்டர் எஸ். வெங்கட்ராஜன்,**
எல். ஐ. எம். (ரிஜிஸ்டர்டு)
**தஞ்சாவூர்.**

# தஞ்சை சரஸ்வதி மஹால் தமிழ்ச் சுவடிகளின் 5வது தொகுப்பிலுள்ள நூல்களின் அட்டவணை

| கேட்லாக் தொடர் நம்பர் | சுவடியின் பெயர் | சுவடி நம்பர் | பக்கம் |
|---|---|---|---|
| 335 | சட்ரஸ நிகண்டு | 212 (A) | 47 |
| 336 | பெடிசம் (பேடசம்) | 212 (B) | 49 |
| 337 | தக்ஷிணாமூர்த்தி வைசூரி வைத்தியம் | 213 | 50 |
| 338 | அவ்வல் கலிமா | 214 (A) | 52 |
| 339 | சட்ரஸ நிகண்டு | 214 (B) | 53 |
| 340 | கெந்தக ரஸாயனம் | 214 (C) | 53 |
| 341 | நஞ்சு தின்ற பேருக்கு மாற்று (அகவல்) | 214 (D) | 54 |
| 342 | கம்பளிச்சட்டை, கைலாஸநாதர் அருளிய நிகண்டு | 214 (E) | 55 |
| 343 | கண்ணேய் பார்க்கிற விதம் (பலதிரட்டு) | 215 | 58 |
| 344 | ஞான வெட்டியான் | 216 | 59 |
| 345 | அகஸ்தியர் திரட்டு வாகடம் 50 | 217 | 60 |
| 346 | அகஸ்தியர் நாடி நூல் 26 | 218 | 61 |
| 347 | ரஸ வாக்கம் | 219 | 62 |
| 348 | பதார்த்த குணம் | 220 | 64 |
| 349 | — | — | 65 |
| 350 | பற்ப வகை | 222 | 65 |
| 351 | மாத்திரை வர்க்கம் | 223 | 66 |
| 352 | அகஸ்தியர் வைத்திய தர்க்கம் 25 | 224 | 68 |
| 353 | அகஸ்தியர் கும்மி (பிசின்லாடு) | 225 (A) | 69 |
| 354 | உதிரக்கட்டுக் கஷாயம் | 222 (B) | 70 |
| 355 | ,, | 225 (C) | 71 |
| 356 | பேஷஜ கற்பம் நிகண்டு அட்டவணை (தாதுவர்க்கம்) | 225 (D) | 71 |
| 357 | வகார ஸூத்ரம் | 226 (A) | 72 |
| 358 | பூஜா விதி | 226 (B) | 73 |
| 359 | அகஸ்தியர் 12 | 226 (C) | 74 |
| 360 | கொங்கணர் அதிசய சூத்திரம் | 226 (D) | 75 |
| 361 | தக்ஷிணாமூர்த்தி சூத்திரம் 10 | 226 (E) | 76 |
| 362 | வாலை பூஜா விதி | 226 (F) | 77 |
| 363 | கொங்கணர் சடாட்சர விதி | 226 (G) | 78 |
| 364 | மகேச்வர பூஜா | 226 (H) | 86 |
| 365 | சுந்தரானந்தர் அதிசயம் 36 | 226 (I) | 87 |
| 366 | பாலவாகடம் பொதுக்காண்டம் | 227 | 88 |
| 367 | கைலாசச் சட்டைமுனிநாதர் சாஸ்திரம் | 228 (A) | 89 |
| 368 | அகஸ்தியர் பட்சணி | 228 (B) | 91 |

# ஒரே நூலின் பல பிரதிகளின் விபரம்

| தொடர் எண் | சுவடியின் பெயர் | சுவடி நம்பர் | ஏடு | செய்யுள் | பூர்த்தி அபூர்த்தி | பக்கம் |
|---|---|---|---|---|---|---|
| 1. (a) | அகஸ்தியர் ஐந்து | 236 (H) | 1 | 5 | பூர்த்தி | 143 |
| (b) | ,, | 267 (C) | 2 | 5 | பூர்த்தி | 337 |
| 2. (a) | அகஸ்தியர் சூத்திரம் 100 | 258 (A) | 32 | 100 | பூர்த்தி | 294 |
| (b) | ,, | 264 (A) | 20 | 100 | ,, | 319 |
| 3. (a) | அகஸ்தியர் திரட்டு வாகடம் 50 | 217 | 10 | 50 | பூர்த்தி | 60 |
| (b) | ,, | 253 (A) | 10 | 48 | அபூர்த்தி | 282 |
| 4. (a) | அகஸ்தியர் நாடி நூல் 26 | 218 | 13 | 26 | பூர்த்தி | 61 |
| (b) | ,, | 281 (A) | 8 | 26 | ,, | 368 |
| 5. (a) | வைத்திய சிந்தாமணி | 194 | 14 | 96 | பூர்த்தி | 10 |
| (b) | ,, | 200 | 25 | 97 | ,, | 22 |
| 6. (a) | அகஸ்தியர் சூத்திரம் 300 | 202 (A) | 46 | 304 | பூர்த்தி | 26 |
| (b) | அகஸ்தியர் வைத்ய சூத்திரம் 300 | 251 (B) | 43 | 300 | ,, | 273 |
| (c) | ,, | 285 (A) | 55 | 300 | ,, | 125 |
| (d) | ,, | 298 | 83 | 300 | ,, | 457 |
| 7. (a) | அகஸ்தியர் வைத்யரத்னச் சுருக்கம் | 249 | 83 | 360 | பூர்த்தி | 255 |
| (b) | ,, | 290 (A) | 100 | 354 | ,, | 414 |
| (c) | ,, | 269 (J) | 81 | 354 | அபூர்த்தி | 448 |
| 8. (a) | அகஸ்தியர் ரஸவர்க்கம் | 204 (A) | 55 | 418 | பூர்த்தி | 33 |
| (b) | இரஸவர்க்கம் (குணவாகடம்) | 261 | 48 | 311 | அபூர்த்தி | 309 |
| 9. (a) | உதிரக்கட்டுக் கஷாயம் | 225 (B) | 10 | 10 | பூர்த்தி | 70 |
| (b) | ,, | 225 (C) | 14 | | ,, | 71 |

| தொடர் எண் | | சுவடியின் பெயர் | சுவடி நம்பர் | ஏடு | செய்யுள் | பூர்த்தி அபூர்த்தி | பக்கம் |
|---|---|---|---|---|---|---|---|
| 10. | (a) | உரோமரிஷி சூத்திரம் 25 | 228 (G) | 6 | 26 | பூர்த்தி | 97 |
| | (b) | ,, | 236 (M) | 5 | 26 | ,, | 151 |
| 11. | (a) | கர்ப்பகோளம் 16 | 187 (A) | 5 | 16 | பூர்த்தி | 17 |
| | (b) | ,, | 243 (A) | 4 | 16 | ,, | 216 |
| 12. | (a) | சட்ரஸ நிகண்டு | 212 (A) | 35 | 32 | அபூர்த்தி | 47 |
| | (b) | ,, | 214 (*B*) | 23 | 32 | ,, | 53 |
| | (c) | ,, | 252 (E) | 4ஏடுகள் | 18 | ,, | 282 |
| 13. | (a) | சித்திராரூடம் | 252 (D) | 49 | | பூர்த்தி | 280 |
| | (b) | ,, | 255 | 40 | | ,, | 290 |
| 14. | (a) | தன்வந்தரி நிகண்டு (சுருக்கிடை) 300 | 248 (F) | 61 | 302 | பூர்த்தி | 251 |
| | (b) | ,, | 296 (A) | 7 | 36 | அபூர்த்தி | 442 |
| 15. | (a) | தக்ஷிணாமூர்த்தி வைத்தியம் 1500 | 197 (*B*) | 13 | 55 | அபூர்த்தி | 18 |
| | (b) | ,, | 239 | 144 | 677 | ,, | 178 |
| | (c) | ,, | 243 (*B*) | 232 | 1460 | ,, | 217 |
| 16 | (a) | பாலவாகடம் (பொதுக்காண்டம்) | 227 | 56 | 101 | பூர்த்தி | 88 |
| | (b) | ,, | 206 | 61 | 101 | ,, | 38 |
| 17. | (a) | பெடிசம் (பேஷஜம்) | 212 (*B*) | 14 | 185 | பூர்த்தி | 49 |
| | (b) | ,, | 252 (E) | 22 | ,, | ,, | 282 |
| | (c) | (நிகண்டு அட்டவணை) | 225 (D) | 5 | ,, | ,, | 71 |

# தஞ்சை சரசுவதி மகால்

## தமிழ்ச் சுவடிகளின்

## 5வது தொகுப்பு

(வைத்தியப் பகுதி)

---

**305.** சுவடி நெ. *188.*

## வைத்தியத்திரட்டு

ஏடுகள் *13.* பக்கத்திற்கு *6* வரிகள்.

(*சிதிலமாக உள்ளன*)

---

*இதில் அரிதாரச் செந்தூரம், நாகக்கட்டு, ரசக்கட்டு, லிங்கக்கட்டு, வெடியுப்புச்சுன்ன ரசக்கட்டு, உப்புக்கட்டு, அயத் தாமிரம், ரஸபற்பம், லிங்கவில்லைகட்டு, பாஷாணக்கட்டு, சாரக்கட்டுமணி, தங்கபற்பம், வெள்ளிபற்பம், வங்கக்களங்கம், பேரண்டச் சுத்தி, வெடியுப்புச் சுன்னம், கெந்தகச் செம்பு, குப்பிச் செந்தூரம், அயச்செம்பு, தாளகபற்பம், கெந்தகத் தைலம், துருசு பற்பம், துத்தநாகபற்பம், கறியுப்புக்கட்டு, அரிதாரச் செந்தூரம் முதலியன.*

***Beginning :***

*நாகம் இலுப்பெண்ணெயில் 10 திறம் உருக்கிச் ''ய்த்து விராகனெடை 5. தரையில் விரல் கொள்ளக் குழி ''தாண்டிக் குழியில் நாகத்தை யுருக்கிச் சாய்த்து க''ன சாரமும்,*

வெடியுப்புஞ் சேர்த்து ஜயநீர் வாங்கி அதில் 7 திறம் துவைத்து வைத்து மறுபடி எலியாமணக்கங் கட்டையைத் துளைத்து அதில் முன்னுகத்தைச் செலுத்திக் கட்டைத் தூளிட்டமுக்கி வாய்க்கு அந்தக் கட்டையாலடைத்து மட்டமாய் 4 சீலை மண் செய்து, பத்து விராட்டியில் புடமிடவும். இந்தப்படி 5 புடமிட்டெடுத்து வேதை பார்க்கவும்.

* * * *

**தாளகபற்பம் :**

தாளகம் பலம் 1. சீதாள ஓலை கருப்பாயிருக்கிறது மானுவரிக் கத்திரி யிலையும்; புளியம்புரணி சுட்டகரி 1 பலம் அரைத்து அதற்குள்ளே வைத்துச் சீலை செய்து, 5 எருவில் புடமிடப் பற்பமாம். சுரம், இருமல், க்ஷயம், சுவாசகாசத்துக்கு ஷை தேன், நெய்யில் பண வெடை (3 குன்றி) கொடுக்கத் தீரும்.

***End :***

அரிதாரக் கட்டிக்குக் குடிவெட்டிப் (பிருமதண்டி) பால்விட்டு, ரவியிலுலர்த்தி இந்தப்படி மூன்று நாள் செய்துலர்த்தி மறுபடி இந்தக் கட்டியைக் கும்பிடு சிப்பிக்குள் வைத்து 3 சீலை மண் செய்து மூணு விராட்டிப் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். கைகண்டது.

---

**306.** சு. நெ. *189.*

## தக்ஷிணாமூர்த்தி சூத்திரம் 48

ஏடுகள் *23.* பக்கத்திற்கு 7 வரிகள்.

(ஏடுகள் சுமாராகவுள்ளன)

இதில் ரஸவாதத்திற்கேற்ற அரிதாரக்கட்டு (2) பாஷாணக் கட்டு (... கெர்ப்ப நோவுக்கு (6) செம்பு சுத்தி (7) துரிசு (8) இருமல் யே...க்திற்கு சூரணம், வெட்டைக்கு அரையாப்பிற்கு (10)

விப்ருதி, கிரந்தி, சூலைக்கு எண்ணெய் (*11*) வயிரவ பூஜை (*12*) திலகவசியம் (*15*) வாயுவுக்கு அஷ்ட லேகியம் (*15*) சில்விடக் கடிக்கு (*16*) வாடை (*18*) (அதாவது வாசனைப் பொடி) மேல் துவாலை (*21*) கருவங்கபற்பம் (*24*) முதலியன.

***Beginning :***

நாடியதோர் பூரணமாம் வேதாந்தத்தில்
　　நடனதிருச் சூத்திரத்தைப் பாடுதற்கு
ஆடியதோர் கணபதியுங் கந்தன்ருனும்
　　அருள் பெருகும் நாதாக்கள் ரிஷிகள்காப்பு
கூடிய தோர் ஞானமாம் வாலைத்தாய்தான்
　　கூறினுள் நாவுதனில் அரனுஞ் சொன்னுர்
பாடியதோர் பலநூலில் மறைத்துச் சொன்னேன்
　　பால் போலாம் பூரணத்தி னூலிதாமே. (க)

***End :***

தானென்ற ஆணவத்தை விட்டபேர்க்குஞ்
　　சண்டாளக் கோபத்தைந் தள்ளினேர்க்குஞ்
மானென்ற பெண்ணுசை மறந்தபேர்க்கும்
　　வைத்தியமுஞ் சித்தியடா வாதஞ்சித்தி
கோனென்ற குருபதத்தைக் காத்தபேர்க்குக்
　　குறையில்லை யிந்தநூல் நாற்பத்தெட்டும்
ஏனென்று கேட்குமடா மெஞ்ஞானிக்கு
　　இகபரமுங் கொடுக்குமிந்த நூல்தான்முற்றே. (சஅ)

தக்ஷிணுமூர்த்தி பாதாரவிந்தமே துணை.

பின்னர் கருவங்க பற்பமுறை கூறப்பட்டுள்ளது:

கருவங்கத் தகடு தட்டிப் பொடியாய் வெட்டிக் கருநொச்சிச் சாறு, ஆனை நெரிஞ்சிச்சாறு, சிறு சின்னிச்சாறு, மலை வேப்பஞ் சாறு, இது நாலுஞ் சமன் கொண்டு சேர்த்துப் பொடியில்

விட்டரைத்து வில்லை பிடித்து, இந்தப் பச்சிலை யரைத்து வில்லையைப் பொதிந்து, சீலைமண் செய்து முழுப்புடத்தில் வைக்கவும். நீறிப்போகும்.

**அனுபானம் :**

தேனில் கொடுக்கவும். வெட்டின பொடியைச் சாத்தில் நாலு நாழிகை யூறப்போட்டு மறுபடி அரைக்கவும்.

---

### 307. சு. செ. *190.*

## திருமூலர் நூற்றிருபது

( ஏடுகள் *20.* பக்கத்திற்கு *5* வரிகள் )

இதில் கருஉத்பத்தி, லக்ஷணம், இடகலை, பிங்கலை, நாடி வகைகள், வாதபித்தநாடி லக்ஷணம், பஞ்சபூதக் குறிகள், மரண லக்ஷணம், மேகம் பிறக்கும் விதம், சுகசந்நிக் குறிகள் (*10*) சீழ் மூலம், இரத்த மூலம், பவுத்திரக் குறிகள், *6* வித கழிச்சற் கிராணிகள், *20* வித மேகம், பிரமேகம், குன்மரோகக் குறிகள், சூலைநோய் குணம், கெர்ப்பரோகம், மலட்டுநோய்க் குறிகள், குஷ்டரோகக் குறிகள், கண் ரோகத்திற்கு மாத்திரை (*18*) முதலியன.

***Beginning :***

அந்தி நிறத்தனை ஆனை முகத்தனை
இந்து யிளம்பிறை போல வெயித்தனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே

உன்னிய கற்பக் குழியாம் வெளியிலே
பன்னிய நாதம் பகரந்தப் பிருதிவி
வன்னியும் வாயுவும் மாயுறச் சுக்கிலம்
வன்னிச் சமனுய் வளர்க்கு முதகமே. (க)

*End :*

பொடியாம் நோய்போகப் புகழ்சொன்ன ரென்னந்தி
மடிவ்ான சூதம் மகத்தான தங்கம்
பிடிவான கெந்தகம் பேரான சத்துடன்
குடியான செந்தூரிக் குமட்டியே தின்றிடே. (௩கங)

தின்றிட நோய்கள் திசைகெட்டே யோடிடும்
பண்டிட வாயுக்கள் பக்கத்தில் சேராது
தன்றிய லோர்க்குத்தான் செய்த முறையினி
மன்றிய சித்தாய் வரும்வியாதி போகுமே. (௩கச)

*Colophon :*

சருவதாரி வருஷம் வைகாசி மாதம். திருமூலர் முகிந்தது.

முற்றும்.

அதற்குப்பின் கீழ்கண்ட "அஸ்திகர்ணி ரஸாயனம்" முறை கூறப்பட்டுள்ளது.

நாலிரென் டெனுஞ் சேர்தான் வெருகு
மேலி ரெண்டு மரக்கால் கழுனீரும்
நாலி லொன்றென வேதான் காய்ச்சியு – மிருபாகம்

ஏகமாகவும் பால்நாற் சேர்விடு தாகரெண்டரைச் சேரேசர்க்கரை
வேகவேவிடு பாகுபதத்தில் நெய் – படிகூட்டே
சூலிகொண்டிடு திப்பிலிசுக்குடன் னேலமே கடுதான்றிதே சாவரம்
ஞேனிபத்திரி முத்தமு மிதிலிடு – தவறாமல்
கோலிவெட்டியின் வேருமமுக்கிரா பாலிநெல்லிப் பருப்பொடு
மேல்விளங்கதி மதுரமு மிளகொடு – பலமாக [பிச்சமும்
ஞாலமேல்வரு பட்டையிலவங்கமும் மேலிடாமலி டித்திடு சூரணம்
மேலுமேயொரு கோலிடு கிண்டிடு – பொடிதூவி
ஏலவேயெரி யெட்டுமெடுத்தபின் சாலமாகவும் துட்டிடை
காலேமாலே கொடுத்திடு போம்பிணி – வகைகேளே [கொண்டிடு
சாலவே வயிற் நோவுமசீரணம் சூலேவாயுவுடம்பு தடிப்புடன்

தாலுகாலுகை யெரிப்புட னேவிடும் - மலவாயு
தாகசோகந் தலித்திடும் வெட்டைகள் போகமேமிக
வாகவிளைந்திடும்
மேகமாமஸ் திகர்ணிரஸாயனத் தியல்பாமே.

*Colophon :*

இதேபோல் முதல் ஏட்டில்

சர்வசித்தி வருஷம் மாசிமாதம் 22. வைத்திய மஸ்தான் சாயபு குமாரன் உசன்கான் சாயபு திருமூலர் முகிந்தது முத்தும் (முடிந்தது முற்றும்).

திங்கட்கிழமை சிவமயம் என்றிருக்கிறது.

**குறிப்பு :** அஸ்திகர்ணி, கஜகர்ணி, வெருகு.

---

**308.** சு. நெ. *191.*

## அறுசுவை ரஸவர்க்கம்

(பலவகைச் சிந்தாமணி)

ஏடுகள் *12.* ஏட்டுக்கு *4* வரிகள்

(சிறிது சிதைந்து உள்ளன)

இதில் தேரன்கவி - வியாதிவராமல் நடந்துகொள்ளும் விதம் *4.* தினப்படி செய்யவேண்டிய விதிகள் (விருத்தம்) *5.* மறலி அணுகா நெறிமுறைகள், கண்ணேய் அணுகா நெறி முறைகள். உத்தமக் குணங்களறிந்து நடக்க *9.* திருப்புகழ் சந்தத்தில் அறநெறிகள் *10.* ஸ்திரீயைச் சேராத நாள் *10.* மூதேவி இருப்பிடம் *11.* முதலியன.

*Beginning :*

அருசினில் முத்தொளிவாகிய நன்னபி ஆமீனர் வயத்துதித்து ஆலம் அடங்கலும் நல்வெளி. தீனெறியாகிய மகம்முதை பிரிசம தாகவே அவரிரு தாளினைப் பேணியே யான்தொழுது பின்னு

மேயாற் கள்ள சுகாபி மூமீன் முருவீன் அ......ஒரே
துருசுடன் போத்தி ஆலீம் மூலம்மாற் துவாவின் வரிசையினல்
தொல்விபு தன்னில் ஆகிய வஸ்துவின் சூட்சம மதின்னேற்மை
வரிசையுமாம் பல ரஸவர்க்கத்தின் வண்மைதனை யுரைக்க வருவது
மீரா முகைய்தீன் யெந்தன் மனதில் குபிரறவே. (க)

அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றில் பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம் – மேலை
குணமதிக மாமருணைக் கோபுரத்தில் வாழும்
கணபதியைக் கைதொழுதக்கால். (உ)

*End* :

**மூதேவி இருப்பிடம் :**

மாலையுறங்கல் மயிற் முடித்தாதல் மாதருடல்
கோலமளிந்த தன்பின் கூடுதலுஞ் — சாலவே
கொட்டாவி நெட்டி குறுகுறுப்புக் கண்கிடத்தல்
நட்டு விழுகல் நவில். (உரு)

அன்னமிக உண்பானும் ஆடை அழுக்காவானும்
இன்னமுமே யீறுவிளக்கானும் — முன்னமாங்
காலைத்துயில்வானுங் கல்விநல மில்லானும்
ஆலயமா மூதேவிக் கங்கு. (உசு)

மாலை காலை உறக்கமும் மாதர்தன்
கோலமேனி அளிந்துபின் கூடலுஞ்
சாலவுண்டிக்கி ராத்தயிர் சாதமு
மாலோடாகிலும் மாது விட்டேகுமே. (உஎ)

இஞ்சித் தேன் தயி ரெண்ணெயிலைக்கறி
கஞ்சி கயப்பொடு கங்குலி லுண்பீரேல்
செஞ்சொல் மாமகள் பூமகள் சேய்மகள்
அஞ்சிஅஞ்சி அருகில் விட்டோடுமே. (உஅ)

**குறிப்பு :**

முதல் ஏட்டில் ரஸவர்க்கப்பாயிரம். அவூஜாபில்லாஹி. மின்
ஷைத்தானிற்றஜீம் – பிஸ்மில்லா ஹிற்றகமா னிற்றகீம் –
மஹமத் இப்ரஹீம் சாயபு சுவடி என்றிருக்கிறது.

**309.** சு. நெ. *192.*

## லேகிய வர்க்கம்

(ஏடுகள் *15.* பக்கத்திற்கு *6* வரிகள்)

(நீளம் *30* செ. மீ. அகலம் *3* செ. மீ.)

இதில் குண்டலாதி லேகியம், வில்வாதி லேகியம், சிந்தாதி லேகியம் (*2*), இஞ்சி லேகியம் (*3*), கொடிவேலி லேகியம் (*4*), தேங்காய் லேகியம் (*5*), திப்பிலி லேகியம் (*6*), கண்டாமலக லேகியம், சரபங்க வில்வாதி (*8*), சூதிகா வாயுவுக்குக் கெந்தக லேகியம் (*10*), சித்ரமூலாதி லேகியம் (*12*), மேகம் கிரிச்சத்திற்கு (*14*), மதனகாமேசுரம் (*14½*) – வேறு முதலியன.

*Beginning :*

சங்கம்வே ரெடையிரண்டு கண்டங்காலி
திருசவ்வியந் தசமூல மெடைமூன்ருக
எங்குமுயர் பாதாள மூலிதேக்கு
இயல்மூல வேலிபல மெண்பதாகக்
கங்கையுமோர் பலமுமெட்டு மரக்கால்வார்த்துக்
காய்ந்த வஷ்ட பாகமதாங் கழாயந்தன்னில்
பங்கையமாம் பழவெல்ல மெடையும்ரெண்டு
பரவியவே வெந்தபின்பு பதத்தில்வாங்கே. (க)

திப்பிலி யிரு பதுபலமுங்
கூகையில் நீறும் பலம்நாலும்
செப்பு லவங்கங் கேசரம்
மேலஞ் சீரக மோமமுடன்
அப்பிருகாயம் மிளகுட னவைதான்
வையவை மூன்றுபல மஷ்டபலமாம்
நாகம் லோகமும்... ... ...ய் நாலுபலு
மிப்படிதன்னில் மதுவிரு நாழி

யெல்லாமொண்டாக்கி (ஒன்ருக்கி) இது
பாக்களவு கொண்டிட வியாதியேகும்
வகைகேளாய்
மைப்பொரு காசஞ் சோபஞ்சூலை
வலிசுர மத்திசுரம் சிராய்பீனிச விக்கல்
குன்மம் பீலிகை மற்றும் பிணிபோமே. (உ)

*End :*

ஆனதோர் தண்ணீர்மிட்டா னதனுடன் பூனைக்காலி
தானமாம் கிலப்பனை தனித்தனி மூன்றுங் கூட்டி
ஏனமாஞ் சர்க்கரையு மியலுட னாவின்பாலுங்
கானமாங் கருப்பஞ்சாறு கயலது காய்ச்சிக்கூட்டே. (ருக)

கூட்டியே காய்ச்சும்போது கனமது வானபின்பு
நாட்டியே பொடியுந்தூவி நல்லதோர் நெய்யுமிட்டு
நீட்டியே யெடுத்துக்கொண்டு நினைவுட னேழுநாளு
மூட்டியே முகிந்தபின்பு முக்கிரந் தாதுவுண்டாம். (ருஉ)

---

310. சு. நெ. *193.*

## வல்மீகர் நாடி

ஏடுகள் *13.* பக்கத்திற்கு *6* வரிகள்.

மிகவும் சிதிலமானது. நீள அகலம் *40 × 2½* செ. மீ.

**இதில் :**

நாடி பார்க்கிற விதி — மரண நாடிக்குறிகள் — வாத, பித்த, கப, நாடிக்குறிகள் — த்வந்த்வ நாடி, சந்நிபாத நாடிக் குறிகள் — சீதாங்க சந்நி, தனுர்வாத சந்நிக் குறிகள் — முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

கரிமுகனடியை வாழ்த்திக் கைதன்னில் நாடிபார்க்கப்
பெருவிரலடியில் நின்று பிடித்துட னடுவேதொட்டால்
ஒருவிரல் லோடில்வாத மதத்திருவிரலே பித்தஞ்
செருவிரல் மூன்றிலோடில் சேற்பன நாடியாமே. (க)

*End :*

கனசுரம் யீளைக்காசம் புலந்தனில் நாடிதானும்
புடையே.............. நிற்கில்க்கன.................
யனவதில் லாமைமுத் துகில்லது தலைநீட்டானால்
லினமுன் யீளைக் காசம் யெழும்பி.........
... ... ... ... ... ... ... ... ... ...
கேளாயரவுநன் னடையே யானலது கெர்பரோகமது
சுணங்கம் மயில்........... கேளாய்தான
கவுதாரியானல கன்னலக்குவார் குழியில்கண்டித நோயுமென்னே.

*Colophon :*

ஆதியே துணை, அல்லாவுதவி செய்வானுகவும். விக்ருதி வருஷம் பங்குனி மாதம் 2 உ வல்மீகர் நாடி முடிந்தது.

— உசன்கான் சுவடி.

---

311. சு. செ. *194.*

## வைத்ய சிந்தாமணி

(கவி. *96*)

ஏடுகள் *14.* பக்கத்திற்கு *6* வரிகள்.

நீள, அகலம் *38* × *2½* செ. மீ.

இதில் அஷ்டத்தான பரீக்ஷை, நாடிபரீக்ஷை. வாதநாடி, ஸ்திரீ சங்கநாடி , தேகப்பரீக்ஷை, நேத்ரபரீக்ஷை, சுரரோக லக்ஷணங்களும், வகைகளும், சந்நி நோய்க்குறிகள். அதிஸார

வகைகளும், குறிகளும் – அதன் அசாத்யக் குறிகள் – அசாத்ய நாடி லக்ஷணம் – லங்கணம் செய்விக்கும் விதம் முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

சோதியின் ளெளியில்நின்று துலங்கிய முகம்மதாவே
ஆதியிப் புவனந்தன்னில் அமைப்பித்த ஆத.........
......... இரண்டாம்போதே சகலநோய் விபரமெல்லா
ஓதிய சிந்தாமணிக்கு உடையவன் காப்பதாமே.
ஆதியே துணையாமுத் தாரியந் தமிழால்
மூதுலகி லேவைத்யச் சிந்தாமணி வெண்பாநந்தா
திருமன்னுலகா தி யே வுயிர்க்கும் தாயாம்
ஒரு வன் துணை யாகவும்.

ஸரஸ்வதி ஸஹாயம் தேவிஸஹாயம் ஸ்ரீ ஹரிப்யோ நம:
ஒருவாயினல் வாயிம்மத மூன்றிலோர்
இருதாளிற் முற்ருளிசயவரு மோர்களிற்றை
இனிதுரைத்த கல்வியீர் போற்றீர்
வெளிற்றை யினிதுரைக்கவே. (க)

*End :*

காலாகாலமறிந்து மருந்து கொடுக்க

தேயமுங் காலமுந் தேகத்தின் கோட்டுநிலே
ஆயும் வயதுபிணி யாய்ந்தறிந்து — யேயும்
பொருந்தும் வகையறிந்து புத்தியின லோர்ந்தோன்
மருத்துவனே யென்பார் மகிழ்ந்து. (கூடு)

ஐந்தானுளேழானுள் ஆகுமிரண் டொன்பா நாள்
முந்தானள் பன்னென்றின் மூடுசந்நி வந்ததெனில்
தீந்தாலுந் தீருமதுத் தீருமலே யிதனல்
வீய்ந்தாலும் வீய்வர் விளம்பு. (கூகூ)

குறிப்பு : 320 செ. சுவடியையும் பார்க்கவும்.

**312.** சு. செ. *195.*

## வல்மீகர் 80

ஏடுகள் *11.* பக்கத்திற்கு *9* வரிகள்.

நீள, அகலம் *29* × 3½ செ. மீ.

( ஏடுகள் மிகவும் சிதைந்துள்ளன )

இதில் வாதசுரத்தின் குணமும் மருந்தும், பித்த சுரத்தின் குணம் இதற்கு முத்தக்காசு கஷாயம், சிலேஷ்ம சுரத்தின் குணம் – அதற்குக் கஷாயம் – வாதபித்த சுரத்தின் குணம் (*5*) வாத சிலேஷ்ம குணம் – பித்த சிலேஷ்ம சுரக்குணம் – திரிதோஷக் குணம் ( அதாவது சந்நி ) (*7*) பூதசுரத்தின் குணம் (*9*) அசீரணச் சுரம் – அபிகாத சுரக்குணம் (*9*) துவக்கெதசுரக்குணம் (*10*) (த்வக்கத சுரம்) அத்திகத சுரக்குணம் *10* (அஸ்தி கத) ரத்தகத சுரத்தின் குணம் – மாங்கிசகதசுரத்தின் குணம் (மாம்ஸகத சுரக்குறிகள்) (*11*) சந்நிவாத சுரக்குணம், சந்நிக்கு நாசியிலூதச் சீனப்புகை முதலானவை.

***Beginning :***

......வாத சுரந்தனக்குக் குணமேசொல்லி
முகங்கறுக்கு மீறுமுதடு முலர்ந்திருக்கும்
உட்டினமிகுந்......கிக்குமாறு மயிர்க்கால் குத்திடுகை
மலமே மந்தமாய் கறுக்குஞ்
சீறுமரோசியதி தாகதாகந் தின......வரட்சிகுளிர்நடுக்கல்
நடுக்கல் மயக்கல் முரிநிமிர்தல்
நல்லசரீரந் திமிர்த்து நொந்து
படமே முட்டுமிகக் கடுகடுக்கும்
பாணிசிறுத்து எரித்து விழுங்
குடல்வாய் வயிறுமொலுமொலெனுங்
குவடே யொருங்கு மலங் (கழிக்கும்)
மடமாமயிலே யிருமலுண்டாம்
வாதசுரத்தின் வகையிதுவே.

*End :*

அமுதமாடாத் தொடை கோட்ட
மானயேரண்டம் வேர்க் கொம்புக்
கமுதங் கண்டங்கத்தரி வேர்க்
காரங் காயங் கடல்நுரையுங்
குமுதங் குமரிச்சரகுடனே
கூட்டு முதகம் எட்டொன்ருய்ச்
சமுதாய்க் காய்ச்சிக் கொடுமுன்னே
சந்நி வாதசுரந்தீரும்.

சந்நிக்கு நாசியிலூதச் சீனப்புகை :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| துத்தம் | விராகனெடை | 2 | கருஞ்சீரகம் | விராகனெடை | 2 |
| துருசு | ,, | 2 | மிளகு | ,, | 2 |
| அரிதர்ரம் | ,, | 2 | கார்கோலரிசி | ,, | 2 |
| சாதிலிங்கம் | ,, | 2 | சுக்கு | ,, | 2 |
| வெள்ளைக் குங்கிலியம் | ,, | 2 | திப்பிலி | ,, | 2 |

இதுவெல்லாம் குப்பைமேனியிலைச்சாறு வார்த்தரைத்துச் சீலையிலூட்டித் திரித்துக் காயவைத்துக் கொளுத்தி அப்புகையை நாசியிலூதவும். பல்லுக்கிட்டின சந்நி தீரும்.

---

313. சு. நெ. 196 (A)

## பலதிரட்டு

(புலிப்பாணி)

ஏடுகள் 35. பக்கத்திற்கு 6 வரிகள்.

நீளம் × அகலம் 25 × 3 செ. மீ. சுமாராக உள்ளது

இதில் முப்பு விபரம், ரசக்கட்டு (5) (ரஸமணி) வசியமை (6) மாற்றம் (8) அஞ்சனம் (8½) மாரணம் பேதனம் (10) வித்வேஷணம் (11½) வைப்பு – சத்துரு மாரணம் (13) களவு பிடிக்கிறதற்கு (14) எதிரி புலம்பும் சொக்குப்பொடி (16) விந்து கட்ட (17) பூவின்மை (17½) விஷ்ணுக்ராந்திகற்பம். வெள்ளெருக்கு (18½) சீந்தில்கற்பம், ரஸபற்பம் (19½) காப்பு மிளகு சாரணை (20½) புருஷவசியம் (21) பல்லு விழுகிறதற்கு (21½) சுரம் உண்டாக,

வாந்தபேதி உண்டாக (23) துருசுச் சுன்னம் (24) வங்க வெட்டை (26½) வெங்காரச் சுன்னம் (27) நவசாரக் கட்டு (28) தாளகற்பம் (29½) சலாசத்து பற்பம் (30) வெள்வங்க பற்பம் (30½) கெந்தி மெழுகு (33½) முதலானவை.

*Beginning :*

வேதாந்த நாயகியே விமலி வேணி
வீரமா காளியம்மாள் ருத்திரரூபி
நாதாந்தத்துட் பொருளே அகோர வீரி
நாரணியே காரணியே தேவிசத்தி
மூதாந்த சித்தரூட பறையே துர்க்கி
மூவருக்கு முதற்பொருளே ஆனந்தாயி
மாதாந்தந் தனையீன்ற சித்தவல்லி
மாமுகத்தோன் பலதிரட்டுக் காப்புத்தானே.

*End :*

ஆமேனீ சாத்திரத்தை வெளி விடாதே
அவையடக்கம் வெகுபதன மய்யாஅய்யா
வாமேனீ கருமிக்குக் காட் டொண்ணுது
வஞ்சகற்கும் பொல்லாற்கும் சொல்லொண்ணுது
தாமேனீ தந்தைதாய்க் குருக்கள் ராசர்
தயவான பெண்கள் ......... அள்யேவு
நாமேனீ யிவர்களுக்குக் குலேயிடுக்கம் செய்தோர்
நாசமாய் நரகுதனிலமுழுந்துவாரே. (சுசு)

குறிப்பு :

வாதியே வடமொழியிற் சொன்ன மார்க்கம்
வையகத்தோர் பிழைக்க...... னென்பார்
ஆதியே போகரூட காடாட்சத்தாலே
அன்பாகப் புலிப்பாணி பாடினேனே (உரு)

என்பதினுல் இப் "பலதிரட்டு" புலிப்பாணி செய்திருப்ப தாகத் தோன்றுகிறது. அடைப்புக் குறியிலுள்ள நம்பர்கள் ஏட்டின் நம்பர்களாகும்.

314. சு. ரெ. 196 (B)

## யூனானி பலதிரட்டு

ஏடுகள் 15. பக்கத்திற்கு 6 வரிகள்

(சுமாராக உள்ளன)

இதில் வலுவுக்கு மருந்து, பட்டித்தைலம் (3) பந்தனக் குளிகை (4½) தாதுபுஷ்டிக்குப் பேரீச்சங்காய் மருந்து (6) தாதுபுஷ்டிக்கு மருந்துகள் (8½, 9, 10) தாதுபுஷ்டிக்குத் தில்லா (12) தாதுபுஷ்டி வலுவுக்கு லேகியம் (13) பட்டி தாதுபுஷ்டிக்குத் தில்லா (14) வீரிய விருத்திக்கு மருந்து (14½) தாதுபுஷ்டிக்கு விநோதம் (15).

*Beginning :*

வீரிய விருத்திக்குச் சூரணம் :

| | | |
|---|---|---|
| தாமெக்காணு | மாந்தப்பில்லு | சுக்கு |
| நெருஞ்சிக்காய் | தோஸ்தேசும்பல | அட்டங்கண் |
| இஞ்சிச்சுன்னம் | கறன்ப்பூல் | தொகமே கார்ச்கூரீ |
| காட்டுத்தாமரைப்பிஞ்சு | பில்பிலேகிருது | சுவேதமுத்லி |
| தால்ச்சீனி | | |

இவைகளை வகை 1 பலம் இடித்து வஸ்திரகாயஞ் செய்து சூரணம் மூனு பங்கு, வெள்ளைச்சீனி 2 பங்குஞ் சேர்த்து வெருகடிப் பிரமாணங் கொள்ளவும். இச்சாபத்தியம். வாயு பதார்த்தந் தள்ளுபடி. வீரிய விருத்தியாகும்.

*End :*

தாதுபந்தனக் குளிகை :

| | |
|---|---|
| பரட்டை விதை | பூமிச்சக்கரக் கிழங்கு |
| பால்குரண்டி விதை | பூனைக்காலி விதை |
| பொன்முசுட்டை விதை | |

இவைகள் வகைக்கு விராகனிடை 2. இவையெல்லாம் பசுவின் பால்விட்டரைத்து 24 உருண்டைகள் செய்து நிழலுலர்த்தி அந்தி சந்தி பன்னிரெண்டு நாட்கள் உட்க்கொள்ளவும்.

**பத்தியம்:**

கார்ப்பு, புளிப்பு ஆகாது. வெந்நீர் சாப்பிடவும். சங்கம் ஆகாது. பிற்பாடு போகஞ்செய்தால் விந்து விடாது.

**மாத்து:**

எலுமிச்சம்பழம் சாப்பிடவும். பச்சைத் தண்ணீரில் கழுத்தளவு சலத்தில் நிற்கவும்.

---

## 315. சு. நெ. *196* (C)

## அட்டவணை

(*6* ஏடுகள் இதில் *3* ஏடுகள்தான் எழுதின ஏடுகள் மற்றவைகள் காலியாக விடப்பட்டுள்ளன)

இதில் தேள் கொட்டிற்குப் பூச்சு மருந்து, கடுக்காய் ஏழுக்கும் பேர் குணம், சுயமக்கினி முதலான விபரங்கள் அடங்கியுள்ளன.

***Beginning*:**

**தேள் கொட்டினால் பூச்சு மருந்து**

கோரோசனையோ டரிதார ரங் கோஷ்டஞ்சதுரக் கள்ளிப்பால்
ஓரோர் வகைக்குக் கழஞ்சாக ஒக்கவரைத்து வுண்டைசெய்து
பாரோர றியத் தேள்கொட்டிப் பதைக்கவந்த போர்களுக்குத்
தீருதாகிற் புஸ்தகத்தைத் தீயிற்கொளுத்தி விடுவேனே. (க)

***End*:**

**சுயமக்கினி**

சூதமொருபங்கு சொல்நாபி யீர்பங்கு
ஏதமிலாக் காந்தம் யிருமூன்று — தாதுகெந்தம்
எண்பங் கிதற்குச்சம னேத்தவரப் பொடிசேர்
தொன்குமரிச் சாற்றிலரைத் தோர்நாள். (க)

நாளரைத்துப் பின்புகஞ்சம் நற்கலசத் துள்வைத்து
மீளவாயிற் வேறுகல் மேல்முடிக் — கோளிரவி
பூண்டவெய் யில்வைக்கப் புகையெழுந்து பற்பமதாங்
தீண்டிப் பணவெடை தேனில். (உ)

குறிப்பு :

கடைசி மூன்று ஏடுகளில் பெண் பருவம், பேதிவாந்திக்கு மருந்துகள் என்று தனி ஏடுகளாக உள்ளன.

---

## 316. சு. நெ. *197* (A)

## கெர்ப்பகோளம் 16

ஏடுகள் *5*. பக்கத்திற்கு *6* வரிகள்

( ஏடுகள் பூச்சி அரித்துள்ளது )

இதில் ஆண், பெண் மலட்டுக்குறிகள், தசைவளர்ச்சி, வாயு கிருமி, சோறை (இரத்தம்) மதர்ப்பு முதலானவைகளின் குறிகளும் மருந்துகளும் கூறப்பட்டுள்ளன. பத்திய வகைகள் கடைசிச் செய்யுளில் காணப்படுகிறது.

***Beginning :***

பாரப்பா பெண்மலடாங் கர்ப்பகோளின்
பருவமதைச் சொல்லுகிறேன் பண்பாய்த்தானே
யாரப்பா வாண்மலடே யாகுமல்லால்
அப்பனே பெண்மலடு யாதுமில்லை
நேரப்பா தவசிருந்து பொருளையீந்தும்
நேரான திவலையது சூலுங்காணும்
வேரப்பா தேவதையா லாளாகர்ப்பம்
விரித்துநன்ருய்ப் புகலுகிறேன் விரும்பிக்கேளே. (க)

*End :*

மதுவாகும் குளிர்ந்தசலங் கிட்டவாகா
மைந்தனே கொதித்தண்ணீர் மிகவுமாகும்
வேதமுறைநான்கண்டு சொன்னேன் சத்தியந்
தானிந்த நூல்சார்ந்து பாருபாரு
யதுவாகு மிதுவாகு மென்றுயெண்ணி
யலைந்து திரியாம லருளை நோக்கி
பொதுவாகும் நினைவுகொண்டு யிருப்போராகில்
புத்திசித்தி முத்திமுதல் புனிதமாமே. (கசு)

---

### 317. சு. நெ. 197 (B)

## தக்ஷிணாமூர்த்தி வைத்யம் 1500

ஏடுகள் 13. பக்கத்திற்கு 6 வரிகள்.

(அபூர்த்தி)

இதில் நாடிவகைகள், வாத, பித்த, சந்நி நாடிகள் – இடைகலை, பிங்கலை நாடி விபரங்கள். மேகரோகங்கள் பிறக்கும் விதம் (8), மூலம், கிராணிவகைகள் – பித்தவாயுக்குறிகள் (11) முதலானவை.

*Beginning :*

அகண்ட பரிபூரணமா முமையாள் பாதம்
அப்புறத்தே நின்றதொரு அய்யர்பாதம்
புகன்றுநின்ற கணேசனுடு நாதாக்கள் பாதம்
புகழான வாக்குடைய வாணிபாதம்
நிகண்டவே யெனையாண்ட குருவின் பாதம்
நிறைநிறையா சுருபத்தில் நின்றோர்பாதம்
முகந்தெனையீன் றெடுத்தசின் மயத்தின்பாதம்
மூவுலகு மெச்சுதற்குக் காப்புத்தானே. (க)

*End :*

அறிந்திடா வாயுவோடே
அய்யம்வந் தேகுமாகில்
பிரிந்துநீர் பொசிந்திடாது
பிறவெள்ளை வீழ்ந்திடாது
எரிந்திடு மத்திபோலே
யிளைப்புட னிருமலுண்டாம்
மறிந்திடும் புகைச்சல் காணும்
வலி யேழு மேகரோகம். (ருரு)

**குறிப்பு :**

கடைசியில் சில வெற்றேடுகள் கோர்க்கப்பட்டுள்ளன.

---

**318.** சு. நெ. *198.*

## வைத்ய அட்டவணை

ஏடுகள் *30.*

நீளம் *36 × 3* செ. மீ.

(7 ஏடுகளில் மாத்திரமே விபரங்கள் உள்ளன. இடையிடையே பல ஏடுகள் காலியாக விடப்பட்டுள்ளன. இதில் ரஸவாதத்திற்கான முறைகளும் மந்திரங்களும் உள்ளன)

*Beginning :*

| | | | |
|---|---|---|---|
| அரிதாரம் கழஞ்சி | 1 | பூவழலை | 1 |
| வீரம், பூரம் ,, | 2 | வெடியுப்பு | 4 |
| கௌரி | 3 | மதியுப்பு | 4 |
| வெள்ளைப்பாஷாணம் | 4 | சீனம் | 2 |
| ஆகாசம் லிங்கம் | 5 | கரியுப்பு | 2 |

அஞ்சான நூலிலே பஸ்பஞ் சொன்னேன்
அதற்கடுத்த குருமுறையை யறிந்தாயில்லை
மஞ்சான மேகம்வரு ஷித்தாப்போலே
வைத்தியநா லிரண்டுலெட்சம் வளமாய்ப்பார்த்து
துஞ்சாதே யேகமு லிகையின் போக்கு
சொன்னபடி யாடுசரக்குக் கருவைச்சொல்வேன்
தஞ்சான பூனீறு வீரம்பூரம்
சாரமொன்று காரமொன்று தாயுமொன்றே. (க)

தாயுமொன்று வெடியுப்புத் தாரமொன்று
தவளமென்ற வெள்ளையொன்று தானேகூட்டிப்
பாயுவென்ற வெருக்கம்பால் விட்டுவாட்டப்
பற்பமென்ற வகைகளுக்கெல்லாம் சேர்த்துக்
காயென்ற கவசமிட்டுச் சீலைசெய்து
கனமான வோட்டிலிட்டு மண்ணுஞ்செய்து
தீயென்ற நூற்படிக்குப் புடத்தைப்போடு
சிவசிவா யிருநூத்தைந்து திரந்தான்பாரே. (உ)

* * * *

நாகரஸ கெந்தகம் ஹேமரஸ மர்த்தனம்
பாதரவி சும்பனம் ஹேமகுரு ஹேமகுரு.

* * * *

*End :*

படியான வழலைவிட்டால் வாதமில்லை
படிப்படியா யேறுகிற முறையுமில்லை
மிடியான காயசித்தி கவுனசித்தியில்லை
பேய்க்கூத்தாய் சுடலையலைந்து பிரேதமாவான்
அடியான மரத்தினின்று தொத்தியேற
ஆக்குறுணி மட்டுமே யேறலாகும்
முடியான வழலையுப்பை முன்னேசெய்தால்
மோசமில்லை முடியுமட்டு மேறலாமே. (௩)

**319.** சு. செ. *199.*

## அகஸ்தியர் நயனவிதி

ஏடுகள் *21.* பக்கத்திற்கு *6* வரிகள்.

நீள, அகலம் *34 × 2½* செ. மீ.

( அபூர்த்தி; அச்சிடப்பட்டுள்ளது )

நேத்திர ரோகத்திற்குப் பேர்வழி – பாயிரம் (*96* வகை நோயின் பெயர்கள் ) கண் பார்க்கிற விதம் – கண் அளவு – வயது கந்தாயம் – கண்ணோய் வரலாறு – தின சுத்தி – தந்த சுத்தி – பாத சுத்தி – கண் நோய் நிதானம் – நேந்திரப் பரீஷை. வாத, பித்த, காச வகைகள் – மந்த காசம் – பற்பு நோய் வகை – காச நோய் – சந்திரரோகம் – படிகுந்தம் – திமிர்காசம் – வால – பித்த காசம் – சுடற்பல தோன்றல் – மணிநீல காசம் – குமரி காசம் – வால காசம், திமிரம், பில்லம், செலருபம் (*14*) அன்னகோபம், வட்டப்பூ, அளிகண், ஆணிப்பூ, துர்மாங்கிஷம், இரணசுக்கிரன், குவளைவிப்புருதி, வேகமந்தம், கிரந்திசூலே, கண்சூலே, உடைத் தழுந்தல், அமரம், நீர்ப்பாய்ச்சல், குவளைக்கண் பிரிதல், அன்ன கோபம், குருவிழிக்குருதி, படலக்குணம், காசம் *3*-க்கும் நிறம், குத்தி சாஸ்திர விதி (*19*) பில்லம் வாங்கும் குணம் – பற்பரோகம் வாங்க – படலம் உரிக்க முதலியன.

***Beginning :***

நூறினைப் பகுந்தநூரு முகம்மது ஒளிவாலெல்லாந்
தேறினர் ஆதந்தன்னை திரிதின்னம் ரோகந்தன்னால்
யேறின வியாதிக்கெல்லாம் மருந்துண்டு லுக்குமானென்
ரேதினர் ரகிமானுதி யொருபொருள் காப்பதாமே.

அமானல்லா கிருபை செய்யவும்.

கார்நிறை வண்ணமாலுங் கைலையாள் கடவுளானுந்
தார்நிறை யானவேலான் தந்திமா முகனும்வேத
சீர்நிறை வடநூல் தன்னில் செப்பின நிதானங்கண்டு
பார்நிறை தமிழினாலே பகர்ந்திடக் காப்புத்தானே. (*1*)

*End :*

மெத்தென விருத்திதானும் விரிதலை முட்டை போன்று
பத்திநெல்லி னிடை விட்டப்பால் பலநூலால் சுத்திக்கொண்டு
சித்திரமாகக் குத்திச் சிறந்ததோர் சிலாகை விட்டுச்
சுத்தியே மூன்று காலம் சுழிதனில்நீலம்பாடு
வெட்டெனத் தெளிந்து நன்ருய் விரைவுடன் வெளியதாக்கே.

---

## 320. சு. நெ. 200.

## வைத்திய சிந்தாமணி

நீளம் × அகலம் 41 × 2½ செ. மீ.

ஏடுகள் 25. பக்கத்திற்கு 4 வரிகள். பூர்த்தி.

### அல்லாவுதவி

சோதியின் ளொளியில் நின்று துலங்கிய முகம்மதாவே
ஆதியிப்புவனந்தன்னில் அமைப்பித்த ஆதந்தன்னுல்
சாதிரெண் டானபோதே சகலநோய் விபரமெல்லாம்
ஓதியசிந் தாமணிக்கு வுடையவன் காப்பதாமே.
மகமது இப்புராஹிம் சாயபு சுவடி.

இதில் வைத்யன் அறிதல், அஷ்டவித பரீக்ஷை, வாத, பித்த, சிலேஷ்ம நாடிகள், அசீர்ணநாடி, தீபனநாடி, ஸ்திரீசங்கமநாடி, மலபந்தநாடி, சந்நிபாதநாடி, தொந்தநாடி, தேகபரீக்ஷை, நேத்திர பரீக்ஷை, மலப்பரீக்ஷை, மூத்திரபரீக்ஷை, நாக்குப்பரீக்ஷை, 4 வகை அசீர்ணத்திற்கு பேர் – சுரநிதானம். வாத, பித்தம், சிலேஷ்மம், பூதம், அபிகாதம், தருணச்சுரம், வாதபித்தச்சுரம், வாதசிலேத்மம், பித்தசிலேஷ்மச் சுரம், ஆகீகச்சுரக் குறிகள், தாதுகதச் சுரவகைகள், சந்நிவாதச் சுரம், சந்திக – அந்தக – சித்தவிப்ரகசந்நி, சீதாங்க – தாந்திரீக – கண்டகுச்சன் – கர்ணிக சந்நி. புக்குநேத்ரசந்நி, ரத்தொட்டிச்சந்நி, பிரலாபசந்நி, ஜிஹ்வா சந்நி, அபின்யாசசந்நி, சாத்ய ஜன்னி 6-ன் பெயர், அசாத்யம்

7-ன் பெயர், சந்நிக்கு நாளறிதல், அபத்திய வகை - விஷம சந்நி, சீதளம், விஷமசந்நிக் குணம், விஷம சீதளம், பீதசிம்மி, (ஜிஹ்வா) தோஷம், கிருஷ்ணசிம்மி, ரத்தசிம்மி தோஷம். தோஷத்திற்கு நாளறிதல், அதிசார வரலாறு, வாத அதிஸாரம், பித்த - சிலேத்ம - தோஷ - சாத்ய அதிஸாரத்தின் குணம், அஸாத்ய அதிஸாரம், அஸாத்யக்குறி, அஸாத்யநாடி, நாடி நடவாத பேர்கள், லங்கணமில்லாத பேர்கள், சுரத்திற்கு லங்கணமறிதல்.

*Beginning :*

முந்தாதியந் தமிழால் முதுலகிலே வைத்தியச்
சிந்தாமணி வெண்பா செப்புதற்கு — நந்தா
திருமனுலகாதி யெவ் வுயிர்க்குந் தாயாம்
ஒருவன் துணை யாகவும். (க)

ஒருவாயினல் வாய் மதமூன்றி லோரா
ரிருதாளின் முத்தாளிசைய வருமோர்
களிற்றை யினிதுரைத்த கல்வியீர் போற்றி
வெளித்தை யினிதுரைக்கவே. (உ)

*End :*

காலா காலமறிந்து மருந்து கொடுக்க

தேயமுங் காலமுங் தேகத்தின் கோட்டுநிலை
ஆயும்வயது பிணியாய்ந் தறிந்து — யேயும்
பொருத்தும் வகையறிந்து புத்தியினு லோர்ந்தோன்
மருத்துவனே யென்பார் மகிழ்ந்து. (கூசு)

ஐந்தானு ளேழாநாள் ஆகுமிரண் டொன்பானுள்
முந்தானுள் பன்னென்றில் மூடுசந்நி வந்ததெனில்
தீந்தாலுந் தீருமது தீராமலே யதனுல்
வீழ்ந்தாலும் வீழ்வர் விளம்பு. (கூஎ

குறிப்பு :

311 நெ. சுவடியைக் காட்டிலும் இது சுத்தமான பிரதி,

321. சு. நெ. 201

## வகார வைத்திய அட்டவணை

ஏடுகள் 50.

நீள, அகலம் 31 × 3 செ. மீ.

( ஏடுகள் நன்ருகவேயுள்ளன )

இதில் களங்கச் செந்தூரம், சவர்க்காரச் சுன்னம், இரும்புச் செம்பு, அரிதார வித்தை, வெள்ளைப் பாஷாணம், கெந்தகபற்பம், காந்தவெள்ளை, தாம்ரக் கட்டுவகை, நாகக்கட்டு பற்பம், மடல் துத்தமெழுகு, தயிலபேதி 7, சாதிலிங்கச் செந்தூரம் 8, அரிதாரச் செந்தூரம் 9, உப்புக்கட்டு, உப்புச்செந்தூரம் 10, துருசு 11, நாகபற்பம் 12, சாதிலிங்கக்கட்டு 13, அரிதாரக்கட்டு 14, சாதி லிங்கம், கெம்புசுத்தி 14, பஞ்சபாஷாணச் செந்தூரம் – வங்கச் செந்தூரம் – நாகச் செந்தூரம் 15, மடல்துத்தக்கட்டு, இரும்பு – ஈயத்திற்கு மேல்தொழில் 16, துருசுநீறு ஆகியதற்கு மேல் தொழில் விபரம் 16, தங்கமுலாம் பூசும்வகை 17½, விஷகடி நெய்– லிங்கக்கட்டு 18, சுடிந்தபொன்னுக்கு ரசச்செந்தூரம் - கெந்தகத் தைலம் வெள்ளியில் தடவப்பழுக்கும் 18½, ரசக்குளிகை 19, கல்லுப்புக்கட்ட 19½, தாமிரச் செந்தூரம் 19, துரிசுக்கட்டு – லிங்கமெழுகு 20, தங்கபற்பம் – காரீயத்தில் ரசம் எடுக்கும் விபரம் 21, லிங்கமெழுகு - இரும்பில் ஈயம் எடுக்கும் வகை 22, வலுவிற்கு மருந்து 23, சுரமாத்திரை, காரீயச் செந்தூரம்–நேத்திர வாயு சூலைக்கு மை 24, துருசு வெள்ளை 25, வெடியுப்பு சயநீர் 25, நாயனுர் சொன்ன அரிதாரச் செந்தூரமுறை 25½, தாமிரபற்பம் 26, சையது சாயபுமுறை - வெங்காரக்கட்டு – மெழுகு 28, லேபனத்திற்குப் பூச்சு மருந்து அஞ்சனம் 29, குளிர்சுரக் குளிகை 29½, குலாம் உசேன் முறை 30, கிரந்திக்கு எண்ணெய் 32, கூஷ்பாண்ட கிருதம் 1, வல்லாரை நெய் 2, புளியாரை நெய் – சுக்கு நெய் 2½. பஞ்சகவ்விய நெய் 3, பஞ்சகோலகுக் குளு குஷ்டத்திற்கு 3½, படோலா திகுக்குளுகிருதம் – உடம்பு வீக்கத்திற்கு 4, அபாமார்க்ககிருதம் 5, கண்டத்திப்பிலி

லேகியம் 5½, தசமூல லேகியம் 6, சீதசுரத்திற்கு வெருகன் எண்ணெய் 6½, புருஷக்கிரந்திக்கு எண்ணெய் 8⅓, பிரமேகத்திற்கு கல்யாணகிருதம் 8½, விடாச்சுரத்திற்குத் திப்பிலி நெய் 9, அம்ருத சர்க்கரை ரசாயனம் 10, குஷ்டத்திற்குக் கெந்தகரசாயனம் 11, காமாலை பாண்டுக்குப் புளியிலைக் குழம்பு 11½, கண்டாமலகம் 12, மூலத்திற்கு நாரங்கலவணம் – சீதபித்தத்திற்குச் சீந்தில்நெய் 13, பரங்கிப் புண்ணுக்குச் சடைச்சிநெய் 14, 18 சித்தர்களின் ப்பெயர்கள் 16, தாமிரச் செந்தூரம் 17 தங்கபற்பமுறை.

*Beginning :*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாகம் | விரா | 2 | அரப்பொடி | விரா | 1 |
| ரசம் | ,, | 3 | சாதிலிங்கம் | ,, | 1 |
| காரீயம் | ,, | 1½ | அரிதாரம் | ,, | ½ |
| வெள்ளீயம் | ,, | ½ | கெந்தகம் | ,, | ½ |
| பாஷாணம் | ,, | ½ | | | |

வாழைப்பூச் சாறு விட்டரைத்து வில்லைபண்ணி உலர்த்தி யொரு சட்டியில் வைத்துச் செம்புக்கிண்ணி கொண்டு கவிழ்த்து மூடிச் சந்து வாய்க்குக் கோதுமை மாவு, உளுந்து மாவு, லேபனம் செய்து, பிறகு உப்புஞ் சாம்பலும் அரைத்துக் கவசங் கொடுத்துக் கிண்ணிக்குமேல் 2 விரற்கெடை ஊசரம் பூமணல் சொரிந்துமேலே நெல்லுப்போட்டு நெல்லுப் பொரிகிற வரைக்கும் கமலாக்னியாக 4 சாமம் எரியிடவும். குளிர் ஆறினவாறே எடுக்கக் களங்கச் செந்தூரமாம். எடுத்துச் செம்பு, வெள்ளியில் கொடுக்கவும் பழுக்கும்.

*End :*

**வளைவிக்கார பாபா சொல்படி தம்பனைக்குப் பூச்சு மருந்து**

குக்கல் காது உண்ணி பருசாய் 6, 7, அமுக்கிராக் கிழங்கு சுட்டகரி கொஞ்சம், ஆண், பெண் மூத்திரம் விட்டரைத்துத் தண்டில் பூசி உலர்ந்தபின் புணரவும். மாத்து – புளி, கைப்பு பச்சைத் தண்ணீரில் ஸ்நானம் புண்ணவும்.

வேறு :

கவாசு உசேன்அலி சொல்படி

எலிகடி இரைப்பிற்கு, தவசி முருங்கை இடித்து வெள்ளாட்டுப் பால் ½ சேர் விட்டுப் பிழிந்து காலமே கொடுக்கவும். இம்மாதிரி 3 காலமே கொடுக்கவும்: பத்தியம் உப்பு தள்ளுபடி மறுபத்தியம் உப்பு வறுத்துக் கூட்டவும். தீரும்.

வேறு :

ஒருத்தலைவலிக்குத் தைலம்

எள்ளிரதஞ் சேர் 1

வேம்பிலைரசஞ் சேர் 1

இதை மெழுகு பதமாய்க் காய்ச்சி இறக்கையில் அதிமதுரத்தூள் ½ பலம் போட்டிறக்கித் தலைக்குத் தேய்த்து அரப்பிட்டு முழுகவும். முழுகினால் பீனிசம், நீர்வடியுங் குணமாம்.

---

322. சு. நெ. 202 (A)

## அகஸ்தியர் சூத்திரம்

(முன்னூறு)

ஏடுகள் (1 – 46) சிதிலமாக உள்ளது.

நீள, அகலம் 37 × 2½ செ. மீ.

அகஸ்தியர் புலத்தியருக்கு உபதேசம் செய்யப்பட்ட நூல்.

இதில் தாளகபற்பம், காந்த சத்து – அயக்காந்த பற்பம் – (புலத்தியருக்கு உபதேசம்) வாலரசக் குருச் செந்தூரம் – கிரந்த விபரங்கள் – கற்பூர சிலசாத்துச் சுண்ணம் – வெடியுப்புச் சுண்ணம் – அப்பிரகச்சத்து தங்கஅப்ரகம் – நிமிளைச்சத்து – தாளக பற்பம் – பறங்கிப்பட்டைச் சூரணம் அனுபானம் சயரோகத்திற்கு அண்டச்சத்து – லேகியம், மதனகாமேசுரம் – கிருஷ்ணப்பிரகச் செந்தூரம், அமுதசர்க்கரை செய்யும் விதம் – அமுதசர்க்கரை

லேகிய முறை – கருவங்கச் செந்தூரம் – அயச்செந்தூரம். துருசுச் செந்தூரம் – கெந்தகக்கட்டு – வெங்கலச் செந்தூரம் – முத்து மணிச் செந்தூரம் – தாளகமெழுகு – தாமிரச்சுத்தி – நவ சிந்தாமணி லேகியம் – அயக்காந்தச் செந்தூரம்.

*Beginning :*

காலுந்தலையுங் கடந்துநடு வாகிநின்ற
மேலுந்துரியம் விளக்கமே — காலாம்
வைத்தியம் முன்னூறுமே சூத்திர மதாய்
விளங்கப் பயிற்றி யருளுங்கணேசன் பார் (க)

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே யென்குருவே சின்மயமே வய்யா
மாதவத்தா லட்டசித்தி யெட்டும் பெற்ற
வரிசையினால் வைத்தியநூல் வகையாய்ச் சொல்வேன்
போதகத்தின் முகத்தானைக் கடை கோட்டானை
புட்குழியில் விழுந்தானைப் புதல்வன் தன்னைச்
சாதகமாய் மனமடங்கி அறிவில் கூடித்
தற்பறமாய் நின்ற கண பதியே காப்பு .(உ)

*End :*

பாரப்பா அயப்பொடிதான் பலந்தா னென்று
பரிவான காந்தமது பலந் தானென்று
சேரப்பா கெந்தகந்தான் பலந்தான் ரண்டு
திறமான பூநீறு கழஞ்சி யொன்று
காரப்பா பழச்சாற்று லிரண்டு சாமம்
கடுகவே யரைத்துமே யிறகாய்ப்போடு
வேரப்பா மறுகாலும் ரெண்டுசாமம்
அடங்கவே அரைத்துவில்லை காய்ந்த பின்பே – 103

பின்பதனைச் சுடுசெங்கல் குகைக்குள் வைத்துப்
பேசாமல் மேலுமதால் மூடிக் கொண்டு,
பின்பதனைச் சீலைமண்தா னிரண்டு செய்து
யிதமாக மூட்டளவு குழிதான் வெட்டி
அன்பதெருக் குள்ளேபு டத்தைப் போடு
ஆறினபின் னெடுத்துப்பார்ச் செந்தூரமாகும்
துன்பமது கற்பத்தால் சூடு கொண்டு
தோலோடு ... ... ... ... ... ...

---

**323.** சுவடி நெ. *202* (B)

## கைலாஸச் சட்டை முனி பாடல்

ஏடுகள் (*1 – 14*) சிதிலமாக உள்ளது. பக்கத்திற்கு 5 வரிகள்
(நீ × அ. — *37* × *2½* Cms)

இதில் வழலை மார்க்கம், கரிசலாங்கண்ணி கற்பம் முதலியன உள்ளன. பரிபாஷையாகவுள்ளன.

***Beginning :***

பாடுகிறேன் காயகற்ப மைங்கரனே காப்பாம்
பரிவான சின்மயப் பாதன் காப்பு
நாடுகிறேன் சித்தருட பாதங் காப்பு
நாதாந்த மனோன்மணித்தாய் பாதமே காப்பு
தேடுகிறே னென்றாலு மென்னால் போலச்
செப்பார்கள் காயசித்தி சித்தர ப்பா
சூடுகிறேன் காயசித்திக் காதியங்கள்
சொல்லுகிறேன் நன்றாகக் கேளுகேளே. (க)

*End :*

தானென்ற மூலமுள்ளே சித்தியினல்
சகலசித்து மாடலாம் தாய்தான் சொல்வாள்
வானென்ற ஈசனங்கே வார்த்தை சொல்வார்
வந்துதடா ஞானசித்தி யோகசித்தி
கானென்ற மலேதோரு மாடித்தேறிக்
கலமுறையாய் வாசியோடு கருவைக்கேளு
கோனென்றமூலம் விட்டுச் சுவாதிட்டானங்
கூறுகிறேன் ஆறிதழாங் கோடு நாலே. (க)

நாலான கோணமதில் பிரும்மபீசம்
நகாரட்டா லவ்வெழுத்து நன்ருய்க்கேளு
காலானத் துவைத்து வங்கென் ருலு
கன்னியடா சரசுவதி வார்த்தை சொல்வாள்
சேலான ஆறதனில் எழுத்துத் தோணும்
கொடியதொரு வின்னமெல்லா மிவராலாச்சு
சேலான முன்னமில்லே உன்னிப்பாரு
சிறந்துமே மணிபூரம் சிறக்கும்பாரே. (உ)

பாப்பரிமணிபூரம் ெ ...... றைப்போலே.
நிற்கும் பார் ...... திதழும் சூழ்ந்து நிற்கும்.
கோப்பா ...... சித்தி மாலோடு நோ ... மியும் நிற்பார்
கிலேயா அங் கேனு நேரேபாரு.
நோப்பா காயசித்தி ...... க சாதனேயின் போக்கின்தன்
முறிவார்
சேரப்பா அறு ... ... ... ... ... ... கொண்மு
தக்கேளே – ... ... ...

## 324. செ. 203

## இரஸ வர்க்கம் (குணவாகடம்)

ஏடுகள் 134 பக்கத்திற்கு 8 வரிகள். சிதிலமாக உள்ளது.
(நீள × அகலம். 36 × 3 செ. மீ.)

இதில் நெல்வகை தினுசு, அரிசி வகைகளின் குணம் (கார், பிசான், ஈர்க்குச் சம்பா, புனுகு சம்பா, கைவரைச் சம்பா, செஞ்சம்பா, மணக்கத்தை, கருங் குருவை, வாலான், கோதும்பை பொங்கல், பரமானியம், கச்சாயம்) கொழுக்கட்டைக் குணம், வரகு சோற்றின் குணம், கம்பஞ் சோறு, மூங்கிலரிசி மாவு, அடை, களி, கூழ், கேழ்வரகு, தினையரிசி, புக்கம்பு, புல்லரிசியன்னம். கஞ்சி, நீராகாரம், மிளகு நீர், சுடுசோற்றின் குணம், பச்சரிசி, புழுங்கலரிசி, பழவரிசி, தண்ணீர் குணம், ஏரி, கிணறு, குளம், அருவி, ஊற்று, ஓடை, ஆலங்கட்டி, வாழைநீர், அத்திநீர், கருங்காலி நீர், பன்னீர், இளநீர் சாப்பிட்டு உலாத்தல் – காய்ந்து ஆறிய நீர் – உண்பதற்குமுன் தண்ணீர் – வெந்நீர் – சிறுகீரை, முருங்கை இலை, அரைக்கீரை வெந்தயக் கீரை, சாக்கொத்துக் கீரை, பரங்கியிலைக் கீரை, சுரையிலை, பொன்னாங்காணி – தும்பை, திராய், நல்லவேளை, பசலை, நீராரை, காராச்சேம்பு, முசுட்டை, காரை, குரிஞ்சா இலை, பாலையிலை – சீந்தில் – பொன்னாவாரை – முன்னை புளியம்பூ – கையாந்தகரை, கீழாநெல்லி, தாமரை, அல்லி, கொட்டி, செங்கழுநீர், கொத்துமல்லி, இஞ்சி, வெங்காயம், உள்ளி, புளியங்காய், பழம்புளி, மாவடு, மாங்காய், எலுமிச்சம் பழம், போஜன கஸ்தூரி (நாரத்தை) நெல்லி, எலுமிச்சம் பழம், கத்திரி, சிறுவழுதலை – கண்டங்கத்திரி – பாகற்காய் கொத்தவரை – சிந்தங்காய் – சந்திக்காய் – தூதுவேளை – முருங்கை – பரங்கி – சுரை – பூசனி – வெள்ளெரி – பீர்க்கு – புடல் – அவரை – மொச்சை – வாழைக்காய் – பிலா, முள்ளங்கி – கருணை – சர்க்கரைவள்ளி – மா வத்தல் – சுண்டை வத்தல் – தேங்காய் – வேப்பிலைக்கட்டி குணம் – மிளகாய் –

ஆட்டுக்கறி, செம்மறி, மான் – கோழிக்கறி – முட்டை – ஊர்க்குருவி, கௌதாரி – முயல் – உடும்பு, ஆமை, எலி, பன்றி, பெருச்சாளி, முலைப் பால் – பசுவின் பால் – பகலருந்தப் பால் – தயிர், மோர். எண்ணெய். நெய் – எருமைப் பால், தயிர் வெள்ளாட்டுப் பால், தயிர், செம்மறிப் பால், தயிர், நெய் – பால், தயிர், மோருக்கு மாத்து – மாம்பழம் – பிலா – வாழை மாதுளை – விளா – நாரத்தை – நாவல் – பூந்தாழைப்பழம் – தம்பரத்தை – மிந்திரி – பேரீச்சம் – தேன். கரும்பு – வெல்லம் – இளநீர், தேங்காய் – பால் – கொட்டைப் பாக்கு – களிப் பாக்கு– வெற்றிலை – புகையிலை – தாம்பூலம் – கஞ்சா – ஆனையேத்தம் – குதிரையேத்தம் – பல்லாக்கு – அஞ்செண்ணெய் – ஆமணக் கெண்ணெய் – இலுப்பு – புங்கு – வேம்பு. தில்லம் பால் – எருக்கம் பால் – கள்ளிப் பால் – கடுக்காய் பேதம் – தான்றி – நெல்லிமுள்ளி – கடுகு – சீரகம் – சுக்கு – ஏலம் – கெந்தகம் பெருங்காயம் பஞ்சலவணம் – பாஷாணம் – முதலியன.

***Beginning:***

**வியாதி வராமலிருக்க**

ஆதியுமருளிச் செய்தார் அகமதரறிவுதன்னை
நீதியாய் நிரம்பிநின்ற நிர்மலவடிவதாகும்
ஓதியே அறிஞர்க்கெல்லாம் உகந்திடுமென்றுசொன்ன
ஆதியாயுயிருக்கெல்லாம் கத்தனைக் காப்பதாமே.

***Colophon :***

பிரஜோத்பத்தி ஸ்ரீ தைமாதம் 30௨. நயனஜோதி மஸ்தான் சாயபு அவர்கள் குமாரன்.

**ரஸவர்க்கம், குணவாகடம், வியாதிவராமல்...**

தேரன் கவியு சிறுகாலையுண்டியும்
வாரமுடைய மனையாளும் – நேரே
அரைத்திருந்தசாந்து மகில்புகையுங் கண்டக்கால்
நரைத்திருந்தும் சாகாமல் நன்று – 1

அன்று கழுவிய யாடையும் மாவின்பால்
தென்றலும் வாவிய திண்ணையும் – நன்றே
வுரத்திருக்க வல்லாரொருவரே பெத்தக்கால்
நரைத்திருந்தும் சாகாமல் நன்று – 2

இளைய இளநீரும் மூத்த தயிருந்
தொளைய வளையாடா நட்புந் – தலைவளைய
செண்பகமாலையுஞ் செஞ்சாந்தும் பெத்தக்கால்
யெண்பதுக்கு மேலு மினிது. – 3

***End :***

தாம்பூலத்தின் குணம்

பல்லுக் கொழிவுதரும் பார்த்தால் பவிசுண்டாம்
சொல்லுக்கு நன்ருகச் சொல்விக்கும் – மல்லொத்தச்
சிலேட்டுமத்தைப் போக்கும் தின்ருலழகுண்டாம்
ஆத்துமத்துக்குத்தம தானம்.

புகையிலையின் குணம்

விக்கலிருமல் மிகுந்தபிணி னேய்தனக்கு
சொக்கமருந் தொன்றுண்டுச் சொல்லக்கேள் – கைக்கு
வகைக்கு யில்லையென் றெண்ணுதே யென்மனமே யென்னுளும்
புகையிலையைத் தானே குடி.

சுண்ணும்பு

வாய்வேகும் நெஞ்சு வரண்டிரும லுண்டாகும்
ஊனுகப் பல்லுக் குறங் கெடுக்கும் – மானேகேள்
கிளிஞ்சிச்சுண் ணும்பைவிட்டுக் கெட்டிக்கல் சுட்டுத்
தெளிந்தசுண் ணும்புதனைத் தின்.

---

325. சுவடி நெ. 204 (A)

## அகஸ்தியர் ரஸவர்க்கம்

ஏடுகள் 55. பக்கத்திற்கு 8 வரிகள். சுமாராகவுள்ளன
(நீள × அகலம் 24 × 3 செ. மீ.)

இதில் ஆறு, குளம், ஏரி, ஊற்று, சுனைநீர், தாமரைப் பொய்கைநீர், உப்புநீர், அல்லி அழுகியநீர் – வெந்நீர் – ஆவி சேரும் வெந்நீர் – காய்ந்த தண்ணீர் – இவற்றின் குணங்கள் ஆலங்கட்டி குணம், வாழைநீர் – பன்னீர் – இளநீர் – புத்துநீர் – கரும்பு – சீனிச் சர்க்கரை, கற்கண்டு, நெற்பொரி, கடல்நுரை – புதுத் தேன் – பனை வட்டு – தென்னம் வட்டு – பாலின் குணம் – எருக்கம் பால் – வெள்ளாட்டுப் பால் – செம்மரி – பாலாடை – பசுந் தயிர் – வெள்ளாட்டுத் தயிர் – எருமைத் தயிர் – செம்மரி எருமை, வெண்ணெய் குணங்கள் – பன்றி நெய் – அஞ்செண்ணெய் இலுப்பை, ஆமணக்கு, வேம்பு, புங்கு, நல்லெண்ணெய் – முலைப்பால் – தேங்காய்க் குணம் – சுடுசோறு – நெல் – வரகு கம்பு – தினை – கேழ்வரகு – கோதுமை – சிறுபயறு – கஞ்சி வகை – நீராகாரம் – மண்டாங்கி – வேப்பிலைக்கட்டி – பத்திய ஊறுகாய் – காய்ந்த நாரத்தங்காய் – போசன கஸ்தூரி – நெல்லி – நாரத்தை – வடுமாங்காய் – பலாக்காய் வற்றல். சுண்டை வற்றல் – ஆதளை – பலா – சுரை – வாழை – கருவாழை– கதலி வாழை – வாழைப்பூ – மலைவாழை – வாழைக்காய் – வழுதலை – கண்டங்கத்திரி – முள்ளிக்காய் – நந்திக்காய் – கொம்புப் பாகல் – பெரும் பூசனி – பறங்கி – புளியங்காய் – இஞ்சி – பழுபாகல் – வெள்ளெரிக்காய் – புடல் – பீர்க்கங்காய் – மொச்சை – அமுதவல்லி – தேங்காய் – பனங்காய் – கவலைக் கிழங்கு – வள்ளிக் கிழங்கு – சிறுகிழங்கு – முள்ளங்கி – சுவர் முள்ளங்கி – வற்றல் வகை – பருப்பு நீர் – கொள்ளுக் கஷாயம் – இளங்கீரை, தண்டுக்கீரை, அரைக்கீரை, வல்லாரை பல கீரை வகை – தூதுவளை – முருங்கை – அகத்தி – தும்பை – சுரை – பாகல் பறட்டை – தைவேளை – முருங்கை – பசலி – முசுட்டை.

குறிஞ்சா – நீர்முள்ளி – சாறணே – நாயுருவி – திராய் – சூதக்காளி - தாதுமாதளே – பேரீச்சு – முந்திரி – எலுமிச்சை – தமரத்தை – கொளுஞ்சி – விளா. பனம்பழம் – பாலேப்பழம் – நாவல் – தாம்பூலம் - பூமுடித்தல் – விரணம் ஏறுதல் – மூலிகை பிடுங்கிற விதம் – வில்வ வேர் – கையாந்தகரை – கள்ளி – எட்டி– கீழாநெல்லி – நாறுகரந்தை – ஓரிலேத் தாமரை – சித்தாமுட்டி – நிலவேம்பு – ஆடாதோடை – பேய்ப்புடல் – முக்காவேளே – சிவனர்வேம்பு – தேற்றுன் – மாம்பட்டை – பேய்ச்சுரை – பெருமரம் – முடக்கொத்தான் – கஞ்சா. தசமூலம் – கடுக்காய் பேதம் – தான்றி – நெல்லி – சுக்கு மிளகு திப்பிலி – சீரகம் – கருஞ்சீரகம் - வெந்தயம், கிராம்பு. ஓமம் – வசம்பு – உள்ளி – ஈருள்ளி – தாளீசபத்திரி – ஏலம் – அதிமதுரம் – அரத்தை. அக்கிராக்காரம் – விடங்கம் – கடுகு – கொத்தமல்லி – சாதிக்காய்– விழலரிசி – கார்போகு – மஞ்சள் – மரமஞ்சள் – கஸ்தூரி மஞ்சள் கசகசா – லவங்கப்பட்டை – சதகுப்பை – வலம்புரிக்காய் – அதிவிடயம் – கடுகுரோகிணி – பிரண்டை – கோஷ்டம் – பெருங்காயம் – பீதரோகிணி – வாலுளுவை – சிவதை – சேங்கொட்டை – நேர்வாளம் – குக்கில் – அபின் – கஸ்தூரி – கிராம்பு – திரிசாத குணம் – குங்குமப்பூ – கோரோசனே – கிருமி சத்ரு – சர்ப்பகண்டம் – பூனகம். கோழிக்காரம் – பச்சைநாபி - பூபதிக்காரம் – கல்நார் – கல்மதம். துத்தம் – துருசு. கெந்தகம் – தாளகம் – வெள்ளேப்பாஷாணம் – தாமிரபற்பம் – வங்கச்செந்தூரம். செண்பகப்பூ – ரஸம் – நாபி – நெ. கந்தகம் – லிங்கம் – பஞ்சலவணம் – வெங்காரம் – சீனம் – மனேசிலே – கௌரி – தொட்டி – மருநாரசிங்கு. வெள்ளாட்டுக் கறி – கோழி முட்டை – ஊர்க்குருவி – சேவல் காடை. உடும்பு – முயல் – பன்றி முதலிய மாம்ஸ வகைகள்.

*Beginning :*

ஆற்றுநீர் வாத மகற்றிடும் போவதே
சேற்றுநீர் தாகமுறுஞ் செல்ல வொண்ணும் – போற்றுங்கால்
பேதிக்கும் நோற்போரோபின்பு பெருகியநீர்
சாதிக்கவேல் விழியாள் தான். (க)

குளத்துத்தண்ணீர் கோடீசுவரன் வாதத்தை
வளர்த்துமேல் பாரமது வாங்கிக் – குளிர்த்தியே
மெத்தவுண்டா மென்றே மேதினியோர் தங்களுக்கு
கொத்தலரும்பூங் குழலாய் கூறு. (உ)

*End :*

திண்ண மிரண்டுமடக்காமல் சிக்காமல்
பெண்ணின் மேலாசை பெருக்காமல் – உண்ணுங்கால்
நீரருக்கி நெய்யுருக்கி மோர் பெருக்கியுண்பான்றன்
பேருரைக்கப் போமே பிணி. - *418*

மூலஞ் சேர்கறிகூட் டேன் மூற்றதயிருகப்பேன்
முதநாளில் வெந்த கரி யமுதெனினும் விரும்பேன்.

---

**326.** சுவடி நெ. *204* (B)

## இன்பரஸமாலை கெர்பந்தரியுங் குணம்

ஏடுகள் *5*. பக்கத்திற்கு *8* வரிகள்.

இதில், மலஜல வேகங்களை அடக்கிப் புணர்ந்தால் ஏற்படும் தோஷங்கள், பிரதமை, வெள்ளிக்கிழமை இம்மாதிரியான தினங்களில் கர்ப்பம் உண்டானல் இன்னின்ன குறிகள் — தூரஸ்திரீகளைப் புணர்ந்தால் ஏற்படும் தோஷங்கள் முதலானவை கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

ஆதியே யருளிச்செய்தான் அகம்ம தன்னிறியுதன்னை
நீதியாய் நிரம்பிநின்ற நிர்மல வடிவதாகும்
ஓதியே யறிந்தோர்க் கெல்லாம் உகந்திடு மென்று சொன்ன
காதியே யுயிர்கட் கெல்லாங் கார்த்தனே காப்பதாமே. (க)

நன்பாசமாக நிற்கும் நாயநல்மொழியைக் கேட்டு
நின்பாசமாக வோதும் நீதியாம் வேதத்தோர்கள்
அன்பாசமாகப்பூண்டு அகம்மதனருளைக் கொண்டு
யின்பாச மாகியநீ யமைத்ததை யியம்புறேனே. (உ)

*End :*

இன்பரஸ மாலைபடித்தறிந்தவர்கள் வலது நாசில் இடது நாசில் மூச்சொடுங்கி நிற்கிறதறிய வேணும். வலது நாசில் 6 நாழிகைக்கு நிற்கும். இடதுநாசியில் காற்று 6 நாழிகைக்கு நிற்கும். அல்லா வுதவி கொண்டு ஒருத்தன் ஆண் பிள்ளை பெறநினைந்தால் இடது நாசி பொத்திப் பார்த்து வலது நாசியிலே காற்றுவந்தவுடனே முந்தின நாழியில் தன் பெண்சாதியை வீட்டுத்தூரமான பனிரெண்டுநாள் ஈருசு ரெட்டைநாள் பார்த்து வீடு கூடி வலது புறமாக எழுந்திருக்கச் சொன்னல் பெறுவது ஆண் பிள்ளை. வயிற்றிலே பிள்ளை பத்துமாதம் இருந்தபடிக்கு 6 நாழிகைக்கு 20வயதாகப் பிள்ளைக்கு 120. நாழிகை குறையக்குறைய பிள்ளைக்கு வயது குறையும். பெண்பிள்ளை பிறவேணுமானல் இடதுநாசில் வலது
[ நாசிக்குத்தபடி
அல்லா கிருபைசெய்வான் வேணும் - ஆமீன் - அல்லா கிருபை செய்யவும்.

---

## 327. சுவடி நெ. 205

## அகஸ்தியர் சூத்திரம் இருநூற்றைந்து

ஏடுகள் 22. பக்கத்திற்கு 6 வரிகள்.

(நீள × அகலம் 39 × 3 செ. மீ.)

இதில், அயபற்பம், காந்தம், தாமிரம், ரஸம், வெள்ளீயம், காரீய பற்ப முறைகள், வெங்கல பற்பம், திருய், பித்தளை,

பற்ப முறைகள் - ஒழுக்கரை (சோழி) பற்பம், கெருடக் கல், கல்நார் - நாக பற்பம், வெள்ளீயம் (வேறு முறை) தங்க பற்பம். கண்டாத்திரி லேகியம், சிந்திற் சூரணம், வேம்புச் சூரணம், நோய்களுக்குத் தக்கபடி அனுபானபேதம் - கெந்தக பற்ப முறை - மண்டூர பற்பம் - அஞ்சனக் கல் - தாளக பற்பம், சாதிலிங்க பற்பம், வீர பற்பம், வெங்கார பற்பம் - சாஸ்திரவேதி பற்பம், வெண்ணெய் பற்பம், பவள பற்பம், வைர பற்பம், ரத்தின பற்பம் - பாஷாண பற்பம் - சார (க்ஷார பற்பம்) (நவசார பற்பம்) உப்பு பற்பம், ஆமையோடு பற்பம் - முத்துச் சுண்ணம் கற்பூர சுண்ணம் - பொன்னிமிளை பற்பம் - ஏகமூலி - மேகத்திற்கு தைலம் (சந்தனாதி) வில்வவேர்த் தைலம் - வேங்கைத் தைலம் - முதலானவை.

*Beginning :*

பூரணமாமும்மூலம் பொறியில் சூடாம்
    புகையெழும்பி மேகத்தால் சிரஸில் சூடாம்
காரணமாய் தனிற்கலந்து கண்ணில் ரோகம்
    கனலெழுந்து வாயுவினால் சூலை ரோகம்
வாரணமாம் சலத்தெருந்த மேகம் முத்தி
    அய்யத் தொரு மித்திரத்தால் கிராணியாச்சு
காரணமாம் வாயுவினால் குன்மமாச்சு
    காத்தால் சிலேத்மங்கூடிச் சயமதாமே. (க)

ஆமப்பாவாதத்தில் இரண்டுமுண்டாய்
    அஸ்தியிலே சூடு கொண்டால் சுரங்களாச்சு
காமப்பா கலவியிலே மேகமுண்டாம்
    கைகடந்த பித்தத்தால் ரோகமாச்சு
தாமப்பா மேகத்தில் பிறந்தரோகம்
    தாரணியில் நாலாயிற்கு ச்சிலவானந்தான்
பூமப்பா மேகமது யிருப்பதுநாலு
    வுலகத்தில் நீறணிவோன் அளித்தவாறே. (உ)

*End :*

திராணியுள்ள மானிடற்குப் பிழைக்கவென்று
சாற்றுகிறேன் வேங்கையுட தைலம் சொல்வேன்
கண்ணியமாய் வேங்கைபலம் பத்துவாங்கி
காய்ச்சிவிடு தூணிநீ ரெட்டொன்ருக்கித்
திராணியுள்ள கஷாயத்தை வாங்கிக்கொண்டு
திறமான விலாமிச்சம் பலமொன்ருக
அறளியப்பால் கஷாயத்தில ரைத்துப் போட்டு
அழகான மெழுகு பதமான வாறே (மகூ)

குறிப்பு :—

இச்சுவடியின் ஆரம்பத்தில் 7 வெற்றேடுகளும் கடைசியில் 11 ஏடுகளும் எழுதாமல் விடப்பட்டுள்ளன.

---

**328.** சுவடி நெ. 206

## வாலே (பால) வாகடம் (பொதுக் காண்டம்)

ஏடுகள் 61. பக்கத்திற்கு 6 வரிகள்.
ஏடுகள் சுமாராக உள்ளன இது அச்சிடப்பட்டுள்ளது.
(நீள × அகலம் 35 × 3 செ. மீ.)

இதில், முதலில் **பொதுக் காண்டம்,** பின்னர் **மகவில்லாக் காண்டம்** (அதாவது மலட்டுரோகக் காரணங்களும், குறிகளும்) **வியாதி உற்பத்தி** - கருவளிக்கும் பதார்த்தங்கள் மாந்தம் வரும் விதம் - மாந்தம்வரும் பதார்த்தம் - கரப்பான்வரும் பதார்த்தம் - சுழி கணே வரும் பதார்த்தம் - பேதியாகும் பதார்த்தம் - ஆமம் சேரும் பதார்த்தம் - காமாலே வரும் பதார்த்தம் - கீரிப் பூச்சி - அலகை வருகிற விதம். **வியாதி காண்டம்** செங் கிரந்தி - கருங் கிரந்தி செவ்வாப்பு கிரந்தி கரப்பான் - வாத, பித்த, சிலேத்ம கரப்பான் - தோஷம், அரி, பொறி கரப்பான் - செங் கரப்பான் -

மண்டைக் கரப்பான் - ஓடு கரப்பான் - சட்டைக் கரப்பான் - வெடி கரப்பான் மருந்துன் - மாந்தம் 18ன் குணம். தலை மாந்தம், விஷ மாந்தம் - நீர் - வரள் - செறியா - பால் - கட்டு - ஊது - கல் - வலிப்பு - போர் - சந்நி - பேய் மாந்தம் முதலியன. கணை 14க்குக் குணம் - நீர் - வரள் - எரி - சுழி - உழலை மூலக்கணம் - முக்கு - விச்சு - ஆறுமகணம் - மந்தாரக்கணம் - அந்தக கணம் - கண சுரம் - அக்கரக் கணம் - குண்டியக்கரம் - ஆமம் 5க் குணம். ஆமம் - நீராமம் - பேருமம் - ஆம சுரம் - ஆம சந்நி· காமாலையின் குணம் - மஞ்சட் காமாலை - ஊது காமாலை - கீரிப் பூச்சி - மசரிப் புழு - மதுரா சுரம் - குளிர்சந்நி வாதம் - அலத்து சந்நி - கக்குவான், இளம்பிள்ளை வாதம் **அலகை காண்டம்** முதல் மாதக் கெர்ப்பம் - 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 மாதக் கெர்ப்ப காலங்களில் பிடிக்கும் அலகையின் குறிகள். குழந்தை பிறந்து 1 நாழிகை, 2 நாழிகை, பின் முதல் நாள், 2வது நாள், 3வது நாள், 4வது. 5வது, 6, 7, 8, 9, 10, 11, 12, 13, 14, 15, நாட்களில் பிடிக்கும் அலகைக்கு மருந்துகள் - 1வது, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12 மாதங்களில் கொடுக்கப்படும் பலியின் விதிகள். 1 வருடம், 2. 3, 4, 5 வருடம் வரைக்கும் கொடுக்கப்படும் பலி. பின்னர் 10 ஆண்டுவரை பிடிக்கும் அலகைக் குறிகளும் உள்ளன.

*Beginning :*

**பாயிரம்**

வையகத்தினில் வாலையின் வாகடம்
நொய்யசெந்த மிழாற் சொல நாடோறுஞ்
செய்து காத்தளிக் குந்திரு நாயகன்
றுய்ய தாமரைச் சேவடி சூட்டுவாம் — .
சீர்நிறைந்த கருணையின் தேவனே
பார்நிறைந்த வுதரம் படைத்தவா
யேர்நிறைந்த மெய்யன் புடைவல்லவர்
கூர்நிரைந்த சொல்லோருரையது கூறுவாய்.

*End :*

பேய்தான் சேர்ந்து கனவாக பிதற்றும் வெருவும் உடம்புலரும்
தூய்தாயுடம்பு வெதும்பிவிடுஞ் சொல்லுமெண்ணெய் புண்ணுக்கும்
தோயும் கருப்புக் கட்டியுடன் றுய்யமேதித் தயிர்கூட்டி
காயுஞ் சுடலை மாலைதனிற் காடிப்பூசை செய்து வையே. – 101

அலகை காண்டம் முற்றும் - ஆக காண்டம் 6. ஷ பாடல் 294

பாலவாகடம் எழுதி முகிந்தது முற்றும் - அகஸ்தியர் சுவாமி துணையாக வேணும். குருவே துணை.

---

**329.** சுவடி ரெ. 267 (A)

## குணவாகடம்

ஏடுகள் 6. பக்கத்திற்கு 9 வரிகள். சுத்தமாகவுள்ளது.
(நீள × அகலம் 36 × 3½ செ. மீ.)

இதில், நீராம்பல் குணம், காயம் வரண்டு பிறக்கின்ற காமாலை குணம், வலி, கணம், வாயு இவைகளின் நிதானம். கரப்பான் குணம், அனல் தடுக்கம் - சூலை, பித்த விக்கல் - வாத தோஷம் - அயளை - வாத காசம் - மகோதரம் - வயிற்றில் நீராம்பல், பேராம்பல் - பெருஞ்சூரை - உடல் குத்து - குடல் வாயு - வாத குன்மம் - அக்கினி மந்தம் - ஆரு வாயு - பீலிகை உளமாந்தை - பீனிஸம் - கபால வறட்சிமேல் பீனிஸம் - பிர வீச்சு - சூத சன்னி - பிர வீச்சு - கபால குன்மம் - கபால விருத்தி - கபால சந்நி - ரத்த சூரை - கெற்ப ரோகம் - உள் மூலம் - சத்தி குன்மம் - கபால வியாதி - வாயுக் கிராணி - வலி குன்ம வாயு - மூல வாயு - கபால கனப்பு வலி - வாதம் - சந்நி வாதம் - விஷ பாகம் முதலியன.

*Beginning :*

ஆதியங் கடவுளானையடியினைப் போற்றிப் போற்றித்
தீதுரு வியாதிதன்னைத் தெளிவுடனறிய வேண்டிக்
கோதிலார் நல்லோர் பேசுங் குணமிகு பாடல்தன்னை
நீதிசேர் படியின்மீதே நெறியுடனுரைத்தார் மேலோர். - 1

சொன்னதோர் குணங்கள் தன்னைத்தொகுத்துநீரறிவதாகப்
பின்னையும் குணவானாகிப் பேசிய குணத்தின்பாதி
வன்மையாம் வரியோராகி மறுபடி குணங்கள்செய்யு
மின்னமுங் குணங்கள் செய்யுமிடம்பட வறிந்துசொல்லே. - 2

*End :*

ஓடிவுளைந்தேமருகிவரு மொருக்கால் விடாமல் மிகக்குத்தும்
வாடிக்காயம் வறண்டுவரும் வலுவாய் பதறுமுளைவாகத்
தேடிப்புணர்ச்சிதனைச்செய்யா சிறுநீர்த் தெளிந்து கருகிவரும்
நாடிக் கபாலக் கனிப்புவலி நயந்தே நாளில் நல்குவதே. - 90

வோடிய வாதமாகில் உடல்தலை நெஞ்சசந்து
தேடிய கால்கள் கைகள் திராமதாய்ப் பலக்கவொண்ணு
வோடிடல் மேனிதானும் வரண்டிடும் நாவும்பல்லு
மோடிடுமுடல்கள் தோறுமுளைவுடன் குத்துமுண்டே. - 91

---

**330.** சுவடி நெ. *207* (B)

## வால்மீக சுவாமியார் நாடி நிதானம்

*ஏடுகள் 9. பக்கத்திற்கு 9 வரிகள். அபூர்த்தி.*

*( நீள × அகலம் 36 × 3½ செ. மீ. )*

இதில், வாத பித்த கப நாடிகளின் லக்ஷணம், நாடி புலப்படாமலிருப்பதற்குக் காரணங்கள் - நாடிகளின் நடை பேதங்கள் - அப்பியங்கஞ் செய்தவரின் நாடி லக்ஷணம் - மரண நாடி லக்ஷணம் - கெற்ப நாடிக் குறிகள் - பூத நாடிக் குறிகள் -

அஷ்டஸ்தான பரீக்ஷை - வாத பித்த கபப் பிரகிருதிகளின் லக்ஷணங்கள் - மூத்திர பரீக்ஷை - நாடி முற்றும் (செ. 38) சுரரோகக்குறி குணங்கள். (7 வகை) தாதுகதசுர லக்ஷணம். சன்னி 13க்கும் பெயர்கள் குறி குணங்கள். முதலானவை காணப்படுகின்றன,

*Beginning :*

சாத்தினேன் நாடியுட பருவமோடுத்
தாக்கான மலமூத் திரமதாகும்
காத்தினேன் கண்ணோடு பேச்சுதானுங்
காரியமா மெட்டுவகை பரீட்சை தன்னில்
ஆத்தினேன் அவைகளின் குணங்களெல்லாம்
சாத்தியசாத் தியமறிந்து அபயம் பார்த்து
உணர்த்துகிறேன் நாடியுட நன்மையெல்லாம்
நலமறிந்து துர்குணமும் நயந்துபாரே. (க)

நயந்துநீ நாடிதான் பார்க்கும் வாறும்
நலமான புருவ முச்சிக்கண்டம் நெஞ்சு
கயந்து கையில் காலடியில் முழங்கைதன்னில்
கணுக்காலில் முழங்காலில் கைக்குழியிலாகும்
நயந்துதான் தானங்கள் பரிக்கும் நாடிச்
சகலநரம்பு யெழுபத்தீராயிரமுஞ் சார்ந்து
இயைந்துநிற்கும் யிவ்விடத்தில் நாடிபாற்கில்
தேகத்தின் பரீட்சையெல்லா மியம்பிடாயே. (உ)

*End :*

வண்மையாஞ்சிங்குவாகு சந்நிதன்னை
வழுத்திடவே சுவாசமொடு வுஷ்ணமாதல்
தண்மையாய் தாகங்கை கால்லெருவுதல்
தருநாக்கு கருத்துமுள்ளூப் போல்வெடித்தல்

கண் மையாய் காதுகே ளாதிருத்தல்
கடினமாய் வாய்திறவா மல்லிருத்தல்
உண்மையாம் உடம்பெங்குஞ் சரந்தான்வீசல்
உடம்புமா றித்திருத்தல் விக்கலாமே (எஈ)

இருத்தலே வாதபித்த சிலேத்மங்கூடி
யிருமலோடு சுவாசமாய் சுரமடித்தால்
கருத்தலே நாக்குபல வர்ணமாகி
நாவறண்டு நித்திரையும் அதிகமாதல்
தருத்தலே தேகமே ... ... ...
... ... ... ... ... ... ...

இச்செய்யுள் முழுமையும் காணப்படவில்லை.

---

## 331. சுவடி நெ. 208

## மாத்திரை வர்க்கம்

ஏடுகள் 9. பக்கத்திற்கு 6 வரிகள்.

(நீள × அகலம் 35 × $2\frac{1}{2}$ செ. மீ.)

இதில், கோடாசூழி: ஆனந்தபைரவன், பேதிக்கு விங்க மெழுகு - சீதக்சுராங்குசம் - சர்வஜ்வராங்குசம் - தோஷசாந்த பைரவன், மெச்சியவைரவன், சித்தச்சுராங்குசம் - சந்நி சுரத்திற்கு மாத்திரை. சுரகுளிகை - சீதச்சுராங்குசம் - பேதி மாத்திரை - ஏலாதி உருண்டை - சுராங்கிஷம் - சுரகபாடம் - ஜ்வரங்குசம் - சன்னி சுராங்குசம் - கபாட சந்நி ஜ்வராங்குசம் சந்நி வைரவன் - சூலை குன்மச் சுராங்குசம் - சந்நி ஜ்வராங்குசம் (வேறு) கபாட மாத்திரை - கிருணி கபாட மாத்திரை - கண்டவிழ்தம் - குன்மகுடோரி - க்ஷய சிந்தூரம் - குன்மத்திற்கு பற்பம் - சுயமக்னிச் செந்தூரம் - பஞ்ச செந்தூரம் முதலியன,

*Beginning :*

கெந்தக மிருவினாபி கேடில்லா வாளந்தாரம்
வந்த வெங்காரஞ்சுக்கு மருவிள மிளகு தான்றித்
தந்தருள்தரா நெல்லித் திரிகடு திப்பிலியோ
டிந்தமா முருக்கிலேச்சா றிதுகோடா சூழியென்றே. (க)

ஆனந்த வைரவன்

சூதம் நாபி மனோசிலை கெந்தகஞ்
துய்ய லிங்கம் வெங் காரஞ்சமனொடு
சாதியானெலுமிச்சம் பழச்சாறு வார்த்தரைத்
துண்டைபயறள வாதசந்நி குளிர்சுரம் மாறலும்
வஞ்சி யிஞ்சிவடி யிட்டசாற்றினில்
ஆதிஆனந்த வைரவ னென்றக்கால்
அஞ்சி யஞ்சி யலறிக் குதிக்குமே. (உ)

*End :*

பஞ்ச செந்தூரம்

பஞ்சசிந் தூரம் பண்ண பாரியவிரதம் லிங்கம்
தஞ்சமாங் காந்தம் வெள்ளை சௌரியங் கெவுரியஞ்சும்
விஞ்சுறு பதமென் றெண்ணி மேவிய சாற்றரைத்து
மஞ்சுறு சட்டிதன்னில் வைத்துச் செந் தூரம் பண்ணே. (சய)

அல்லாவுதவி செய்யவும்.

---

**332.** சுவடி நெ. 209

## மாத்திரை வர்க்கம்

ஏடுகள் 8. பக்கத்திற்கு 8 வரிகள்

(நீள × அகலம் 26 × 2½ செ. மீ.)

இது, 208 நெ. சுவடியின் எழுத்து சுத்தமாக உள்ள மற்றொரு பிரதியாகும்.

**குறிப்பு :**

கடைசி 4 ஏடுகளில் ஊழிக்காற்றின் விபரங்கள் செய்யுட்களாகக் கூறப்பட்டுள்ளன.

## 333. சுவடி செ. 210

# வைத்திய அட்டவணை

ஏடுகள் 40. பக்கத்திற்கு 7 வரிகள்.

(நீள × அகலம் 23 × 3 செ. மீ.)

இதில் கணைக்கு எண்ணெய், ஒட்டு மாந்தத்திற்கு - வறள் கணைக்கு - முலைப்பால் சுரக்கப் பூச்சு - சாதிக்காய் மருந்து - பித்த எரிவுக்கு மருந்து - சுரத்திற்குத் தைலம் (அருளன்) பித்த சுரத்திற்குக் குடிநீர் - கஷாயம் - பித்தக் கிருகிருப்பிற்கு. பூச்சு - பித்தம் 40. பீனிஸம் - 9, தைலம் பண்ணி முழுக - மேகம், பித்தத்திற்கு உசிதமான சந்தனாதித் தைலம் — (இது மெக்கம் பெருமாள் வேளாளர் அவர்களுக்கு மேகலானந்த குருசுவாமியார் அவர்கள் தர்மம் - பூரி வாகடம் கொடுத்து அந்த வாகடப்படி வேளாரப்பன் கையாண்டு அதன்படி எழுதியது) மேக வெட்டைக்கு - மன்னைக் கட்டுக்கு மருந்து - வெட்டையின் மேல் இருமலுக்கு - உஷ்ணத்திற்கு - சுக்கிலப் பிரமேகத்திற்கு - சல வெட்டைக்கு - கெந்தக மருந்து வெட்டைக்கு - ஆராத புண்ணுக்கு மருந்து - சகல பேதிக்கும் அரோசகத்திற்கும் - வாத சந்நி - முகவாத சந்நி தீர. குருவெட்டித் தைலம் - இருமலுக்கு இளைப்பிற்கு மருந்துகள் - ஆசனக் கடுப்பிற்கு - வாயுவிற்குச் சூரணம்.

*Beginning :*

கணைக்கு

ஒழக்கு விளக்கெண்ணெயில் ஒரு பேய்க்குமட்டிக்காய் அறிந்துபோட்டு, இரண்டு கடுக்காய், ஒரு வசம்பு இந்தப்படி போட்டு எண்ணெய் காய்ச்சவும். சிவந்துவருகிற பதத்தில் சீரகம், வெந்தயம் பொரித்துப் பொடிபண்ணி எண்ணெயில் போட்டு இறக்கவும். ஒரு கரண்டி எண்ணெயெடுத்துக் கொடுத்து வயிறு பேதியானதின் பிறகு மோருங் கஞ்சியும் கொடுக்கவும். கஞ்சி குடியாத பிள்ளைக்கு மோர் புகட்டவும் அன்றைய தினத்திற்கு உப்பு, புளி கார்க்கவும்.

*End :*

நற்சீரகம் விராகனெடை *1*, மிளகு பலம் ¼. வெள்ளுள்ளி ¼ பலம், பாவட்டம் கொழுந்து *1* பிடி, இண்டங் கொழுந்து *1* பிடி, எட்டிக் கொழுந்து *1* பிடி, காம்பு நீக்கின வெற்றிலை *1* கவுளி, ஆடுதீண்டாப்பாளை இலை *1* பிடி, துளசி இலை *1* பிடி, குப்பைமேனி இலை *1* பிடி, அழிஞ்சிப்பட்டை வேர் இதுவெல்லாம் இடித்து வகையொன்றுக்குச் சாறு நிதானப்படிக்கு எடுத்து இது இடிச்ச சக்கையும் சாறும் கூட ½ படி, முக்கால் படி நல்லெண் ணெயில் விட்டுக் காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கிக்கொண்டு. மூணுநாளைக்கு ஒருதிறத்தில் முழுகவும். உடம்பிலே சளியன்...

குருபாதமே கதி – சிவமயம்.

---

**334.** சுவடி நெ. *211*

## வைத்திய அட்டவணை

ஏடுகள் *24*. பக்கத்திற்கு *3* வரிகள்.

(நீள × அகலம் *35* × *2½* செ. மீ.)

இதில், வாதஞ்செய்ய ஆதிகுருமருந்து - முப்புவாகிய பூமிநாதத்தால் சகல சரக்குகளை கட்டுவதற்கு முறையும் உள்ளது. இடையே பல ஏடுகள் காலியாக விடப்பட்டுள்ளன. கடைசி *10* ஏடுகளில் ஹிந்துஸ்தானி (கொரான் மாதிரி) பாஷையை தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. மையிடப்படவில்லை.

*Beginning :*

ஆதியாம் பூமிநாதம் அதையைந்து சுத்திசெய்து
வேதியாம் பழத்தின் சாறும் விட்டரைத் துலர்த்திக் கொண்டு
சாதியாம் ஓட்டில் வைத்துத் தணலிடு கோழியாக
வாதியாம் பெயரீர் கேளாய் வடிந்திடு மெண்ணெய்தானே

*End :*

அஹ்லத் தூலனியா மைகி யாகஹு‍மே - பாதலகறகேபி சிலி சமகே அலசாரே துனியா கானகே தோபத்தே அலே-
நாக் கேந்தனியா - மைகிஸாக ஹுமே -
மேரே அஹ்லத் தூலனிஸா - மைகி ஸாக ஹுரே.

குறிப்பு :

இடையில் பல ஏடுகள் காலியாக விடப்பட்டுள்ளன.

---

**335.** சுவடி நெ. *212* (A)

## சட்ரஸ நிகண்டு

மதுர வர்க்கம்

ஏடுகள் *35*. பக்கத்திற்கு *8* வரிகள். சுத்தமான பிரதி.

(நீள × அகலம் *36* × $4\frac{1}{2}$ செ. மீ.)

இதில், பலவகைப் பாலின் குணம் - பசு வெண்ணெய், நெய். எண்ணெய் - தண்ணீர் விட்டான் கிழங்கு - தேன் குணம் - பனம் பழம் - பேரீச்சம் பழம் - பொன்னாங்கணி யிலை - நன்னாரி வேர் - வரட்சுண்டி - இலுப்பைப்பூ - எள்ளு - வாழை - அகத்தி சர்க்கரை. எலிச்செவிக் கீரை - சிறுகாஞ்சோறி - மாகாளிக் கீரை - அருகு - வெள்ளருகு - பறங்கிப் பட்டை - முந்திரிப் பழம்- ஆரைக் கீரை - பருத்தி - கோதுமை - மெழுகு - சித்தாமுட்டி பேராமுட்டி - பூச்சக்கரக் கிழங்கு **அம்ல வர்க்கம்** தயிர் - மோர் - தயிர்த் தெளிவு - கழுநீர் - கள்ளு - மாதளை - நெல்லிக் காய் - நாரத்தை - கிட்டம் - கிளா - இலந்தை - புளியாரை - இரும்பு. **லவண வர்க்கம்** வளையலுப்பு - இந்துப்பு - மணலுப்பு - கல்லுப்பு. பிடலவணம் - எவச்சாரம் - வெங்காரம் - காரீயம் - வெள்ளீயம் பித்தளை **கசப்பு வர்க்கம்** சத்திச் சாரம்

ஆடாதோடை - கோஷ்டம் - பேய்ப்புடல் - சீந்தில் பற்பாடகம் - கடுகரோகிணி - கருங்காலி - இலைக்கள்ளி - தழுதாழை - காட்டாமணக்கு - நிலவேம்பு - கொன்னை - வல்லாரை - நல் கோவை - சந்தனம் பிரமி - குங்குமப்பூ - கர்ப்பூரம் - மரு - சடாமாஞ்சி - கோரோசனை - ஊமத்தை - அரளி - நொச்சி - குக்குலு - புங்கு - கர்ப்பூரசிலாசது - தேள் கொடுக்கு - திராய் - ஆயில் - முசுமுசுக்கை - ஆமணக்கு **உரைப்பு வர்க்கம்** சுக்கு, மிளகு, திப்பிலி, திரிகடு, சீரகம், சிறுநாகப்பூ, ஏலம், லவங்கப் பட்டை, தாளீசம், லவங்கம், கிராம்பு, தும்பை, பூண்டு, கண்டங்கத்திரி, வேளை, சதகுப்பை, முருங்கை, செய்புளிச்சை, சேங்கொட்டை, காயம், ஓமம், கஸ்தூரி, வெங்காயம், தக்கோலம், கருஞ்சீரகம், எட்டி, திப்பிலிமூலம், தாளீசம், லிங்கம், செந்தூரம், சாதிக்காய், சாதிப்பத்திரி, மல்லிகை, முல்லை, வெட்சி, யானைத் திப்பிலி - சித்திரமூலம். **துவர் வர்க்கம்** சிவதைவேர், கோரைக் கிழங்கு, அரக்கு, வில்வம், தான்றி, கடுக்காய், நெல்லி, நாவல், மா, ஊசித்தகரை, பின்னை, தகரை, வன்னி, மாவிலங்கு, அமுக்கிரா, கமுகு, வாகை, சிறுகாஞ்சோறி, மருது, அரசு, இச்சில், ஆல், அத்தி, மகிழ், சிறுபூளை, குன்றி, நீர்க்கடம்பு, ஆவாரை, குமரிசத்து, சங்கம்வேர், காவிக்கல், குங்கிலியம்.

*Beginning :*

பூவராச்சிரகிரியிற் பொன்னினவர் வளைத்த
மாவாரணமுகனை வாழ்த்தியேனுவார்
ஆறுசுவை நேர்நிகண்டினுரியத்தைச் செந்தமிழாற்
தேறு சுவை செய்தேன் தெரிந்து.

*End :*

சுரத்தகமுங் கீரிமுஞ்சோற் காவிக்கற்கே
வுரத்தது வராங் குளுமை யொன்றுமே – அரத்தம்
விளையும் பயித்தியமும் மேல் வெப்பு மோடி
யளையினிடையே புகுதலாம். (ரு-க

அக்கினியின் வல்லபத் தொடர்ந் தேவதூபமென
இக்கு மொழிகுங்கிலிக்கத்தின் பெயரூர் – தக்ககுணந்
தம்பனமு முட்டினமுந் தக்கதுவ ரோடினிப்பாங்
கம்பனமாய்ப் போமலகை காண். (௩௨)

குறிப்பு :

ஆக வர்க்க வகை கவிவெண்பா 180 ஆக இனம் 4க்கு வெண்பா 360, சட்ரச வர்க்கம் முடிந்தது.

---

**336.** சுவடி நெ. 212 (B)

## பெடிசம்

(பக்கங்கள் 35 — 48)

ஏடுகள் 14. பக்கத்திற்கு 9 வரிகள். சுத்தமான பிரதி.

(நீள × அகலம் 36 × 4½ செ. மீ.)

இதில், நிறைவகைகள் (எடுத்தளவும், முகத்தலளவும்) கூறப்பட்டுள்ளன. மாகத நிறை - வைகீத நிறைகள் - கடாயம் செய்யும் முறை - நெய் பண்ணும் வகை - தைலம் செய்யும் வகை - குடிநீர் அளவு - பானீய லக்ஷணம். சாம, நிராமத் திரவியங்கள் - மருந்துகள் காய்ச்சநாளறிதல் - தைலப் பதம் - மருந்துகள் செய்யுமடவு - கந்தசாரம் - வேர்ச்சாரம் - தோல்சாரம் - வயிரஞ்சாரம் - பூச்சாரம் - பன்னைச்சாரம் - பலச்சாரம் - விரைச்சாரம் - பிசின்சாரம் - பால்ச்சாரம் - மருந்தின் பலநாளறிதல் - முதலியன.

*Beginning :*

திருவார் சிரகிரிவாழ் செவ்வந்தியாஊ
மருவார் கமலபதம் வாழ்த்தி – தெருளவே
வாகடமதாம் பெடிசத்தை வண்டமிழின் வெண்பாவால்
பாகடாச் சொல்வேன் பரிந்து. (௧)

அத்திரியுஞ் சுச்சுருதர் ஆரீதர் பேளருடன்
முத்துசரகர் முதலேவர் – உத்தமர்கள்
செப்புகின்ற பெடசத்தைத் தேர்ந்தெடுத்து வாகடனு
ரிப்புவியில் சொன்னுரிசைந்து. (உ)

*End :*

தாம்பூலங் கன்னிகையுந் தாரணியும் நன்மருந்து
மோம்புசால் கிராம்போ ரைந்தும் – ஏம்பில்நலங்
கொள்வான் கொடுப்பானுங் கூறிலிருவருக்கும்
விள்வாய் பலன் சரியாமென்றும் (யகடு)

---

**337.** சுவடி நெ. *213*

## தக்ஷிணுமூர்த்தி வைசூரி வைத்தியம்

ஏடுகள் *18.* பக்கத்திற்கு *6* வரிகள். சிறிது பூச்சியரித்துள்ளது.
(நீள × அகலம் $39 \times 2\frac{1}{2}$ செ. மீ.)

வைசூரி வரலாறு - வைசூரி *11*ன் பெயர் அறிதல் - பனைமுகரிக் குணம் - பாலம்மை - மொழுகம்மை - வரகுதிரி - கல்லுதிரி - உப்புதிரி - கடுகம்மை - கரும்பனசை - வெந்தய அம்மை - பாசிப்பயத்தம்மை - கொள்ளம்மை - விச்சிரிப்பு அம்மை - நீர்க்குளுவான் அம்மைக் குணம் - தவளைக்குரு - மருந்துகள் - வாந்தி பேதியாக மருந்து - காந்தல் தீர இளநீர் மருந்து - பேதி கண்டால் மருந்து - வயிறு பேதிக்கு மருந்து - அதிசாரத்திற்கு மருந்து - மண்ணைக்கட்டிக்கு - சுரம் கண்டால் - கொள்ளம்மைக்கு மான் கொம்புக் கஷாயம் - சூலைக்கட்டுக்கு வேது - புண்ணுருத்துக்கு - மறுமுள்ளு வரலாறு - பத்திய வகை - ஆகாத வஸ்து - முதலானவை உள்ளன.

*Beginning :*

பூரணமாய் நீதிநிறை சோதிபாதம்
போற்றிசெய்து தினந்தினமும் புகழ்ந்தங்கேற்றி
காரணமாய் மாலயனுந் தேடிக்காணுக்
கடவுள்பதம் போற்றிசெய்து கருணைபெற்ற
ஆரணமால் மருகனெனு முருகன்கந்தன்
அடியிணையைப் போற்றிசெய்து அன்பினாலே
வாரணமும் மதம்பொழியு மைங்கரனை நித்தம்
மனோகரமாயனுதினமும் வணங்கியேற்றே (க)

ஏற்றியே போற்றிசெய்து பின்புகேளா
யிதமான வைசூரியென்றுங் குறுநோயென்றும்
வாத்தியதோர் போடகமாம் அம்மையென்றும்
மகிழ்வாக நால்வருக்குள் பிறந்தரோகஞ்
சாத்தியதோர் அசாத்தியமுஞ் சாத்தியமுங்கூடத்
தருவாக யிவர்களுக்குட் பிறந்துதானே
பாத்திடுகிலவரவர்கள் பேரேகேட்கிற்
பரிவாக யிருநான்கு மூன்றுமாமே. (உ)

*End :*

சாந்தமென்ற விழியதனில் பூவேவந்தால்
தப்பாது மருந்ததுவுஞ் சாற்றக் கேளாய்
ஏந்தலென்ற பனங்குருத்தை நறுக்கித்தானே
யிதமாகக் கண்ணதனில் பிழியத்தீரும்
பாந்தமென்ற முருங்கைப்பூ நெருஞ்சிப்பூவும்
பரிவாக நந்தியாவட்டம் பூவுங்கூட்டு
சேர்ந்தசீ ரகங்கூட்டிக் கண்ணில்வார்க்கத்
திறமான பூவதுந்தீருந்தானே. (அக)

தானென்ற வைசூரியது குணமுஞ் சொன்னேன்
தருவான லட்சணமும் அவிழ்தஞ்சொன்னேன்
தேனென்ற சாத்தியமும் அசாத்தியஞ் சொன்னேன்
திறமான பத்தியமும் பாகஞ்சொன்னேன்
வானென்ற யினமதுவும் விபரஞ் சொன்னேன்
வளமாக விந்தமுறை மார்க்கமெல்லாங்
கானென்ற சித்தருக்கு முலகத்தோர்க்கும்
கருத்தாகச் சொல்லிவிட்டேன் வைசூரிமுத்தே (அஉ)

அல்லாகிருபை செய்யவும் முகைதீன் ஆண்டவர்கிருபை செய்யவேணும்.........

குறிப்பு :

கடைசியில் 6 ஏடுகள் காலியாக விடப்பட்டுள்ளன.

---

## 338. சுவடி எ. 214 (A)

## அவ்வல் கலிமா

ஏடுகள் 6. கூடியவரை நன்ருக இருக்கின்றன.

(நீள × அகலம் 3 × 36 செ. மீ.)

இதில், கலிமாவும் பாத்தியா ஓதும் முறையும் உள்ளன.

*Beginning :*

தய்யபு லாலிலாகாயிலல்லாஹு
முகம்மது ராற சூலுல்லாகி – துயங்கலி மாய் – சகரததது

அழகத்து அல்லா யிலாகா யில்லல்லாஹு
உயதகு லா சரீக்கல் குவிஷகது அன்னமம்மதன் அபுத்துஹு
உரசூலுஹு.

*End :*

ஓ சல்லியம் ஆலயீ அல்லாகும் மருசுருணு கயிரத்தா –
ரயினி – ம – அலக்கொரு ப்பீ வலியகிலாசு ஓசைய யத்தி
ஓ சலாமத்தி ஒல்லமு நீ ஒல ல் லாபியா ஒல்லிஷதி – காமா
பித்தினீ – ஒத்துன்னிய ஒல ஆகிருயின் னக்கா அலாக்குல்லி
சய்யின் கதீற் சுபையாறைரப்பிக்கா ரெப்பிலயீசத்தி
அம்மா யெசீ பூவன் ஓசலாமுன் அல்ல முருசலீனு
ஏல அமுது லில்லாஹி ரெப்பில். – ஆலமியன்

---

**339.** சுவடி நெ. *214* (B)

## சட்ரஸ நிகண்டு

ஏடுகள் *23*.

(நீள × அகலம் *3 × 36* செ. மீ.)

நெ. *212* சுவடியின் மற்றொரு பிரதியாகும்.

**குறிப்பு :**

ருத்ரோத்காரி வருஷம் பங்குனி மாதம் 3௳ கண்வைத்யம் மஸ்தான் சாயபு குமாரன் பாவா சாயபு சுவடி எழுதினது முத்து நாயக்க வாத்யார் கைெழுத்து.

சற்குரு பாதந்துணை என்று காணப்படுகிறது.

---

**340.** சுவடி நெ. *214* (C)

## கெந்தக ரஸாயனம்

ஏடுகள் *2*. சுத்தமாக உள்ளன.

*Beginning :*

திருவளர் கயிலைச் சிவன் மகிழ்ந்தெடுத்த
அருள்வளர் கெந்தகம் அம்ருதசஞ்சீவி
வருமுறை சொல்ல வைத்தியர் கேள்மின்
பரவுநற் கெந்தகம் பலமோர் பத்து

களங்க யிருப்புக் கரண்டியிலிட்டு
விளங்கு நற்பசுவின் வெண்ணெய் போட்டுருக்கிக்
கெந்தக மாவின் தீரத்தொழிக்கு
ஐந்துமுறையும் அப்படிச்சாய்த்துக்
குப்பைமேனி குறுங்கரிசாலை
கற்பது பொன்னுங் காணியிம் மூன்றும்
வெவ்வேருக விதம் பெறத்துவைத்து
ஒவ்வொரு படிச்சா றென்ருய்விடுத்து
செப்பமாய்க் காய்ச்சித் தெளிந்த பின்னிறுத்து
வெப்பறு தாழை விழுதுநீர் நாழி
யீருள்ளிச் சாறு யிம்முறை கூட்டிச்
சாற்பெறவைந்து சாறுமொன்ருக்கி
நேர்ந்த கெந்தகத் திலின்னீர் விடுத்து.
... ... ... ... ...
* * * *
மேகங்கிரந்தி வெடித்தி டுஞ்சூலை
ஆக மறச்சன்னி அரோசிகந் தோஷம்
வாத ரோகம் வயத்துநற் கெண்டை
கோதறு குஷ்டங் குன்மரோகங்
கடிவிஷமூலம் கனத்திடும் வாயுவும்
பிடிபடர்திருக்கும் பெரும்பிணிமுதலாய்
அடங்குநற் கெந்தகம் அம்ருதசஞ்சீவி
துடங்கி உண்பவர்கள் சுகம்பெறுவாரே.

---

341. சுவடி நெ. *214* (D)

## நஞ்சுதின்றபேர்க்கு மாற்று

( அகவல் )

ஒரு ஏடு

*Beginning :*

எட்டிக்கு நாவல் யெழில் தோன்றி தான்றிக்காய்
வட்டமூலை தாமரையார் மத்தைக்கு – ஒட்டியே

மாவாரைக்கள்ளி அலரிக்கிடுகடுக்காய்
மேவியநெய் பித்தனுக்குவெந்தகரிப் – பாவையரே
எள்ளோடு சர்க்கரையும் மென்றுரெருக்கிலேக்கி
வள்ளசங்கம் பழங் கழுதைவண்டுக்கு – மெள்ளவே
நீத்துக்கு மஞ்சளாம் நேர்வாளம் நல்வசம்பு
வேத்துச் சிவதைக்கு வெள்வேலாம் – போத்தியே
நெல்வேருஞ் சர்க்கரையும் நேரொக்கக்கொண்டார்க்கு
எல்லோருஞ் சொன்னரிலாமிச்சை – நல்லாம் கேள்
நாபிசிறுகீரை நற்குன்றி வெங்காரந்
தாவிய பாஷாணந் தருமிளகு – ஓவியமே
வெத்திலையில் லெண்ணெய் விளாவிக்குடிப்பார்க்கு
முந்தியதேங்காய் மொழிந் தோமே – இத்தனையும்
நீலிக்குத்தீருமிது நிச்சயமென் றேமுனிவன்
போதித்த நஞ்சுவகை போம் — .

---

342. சுவடி நெ. 214 (E)

## கம்பளிச்சட்டை

## கைலாஸநாதர் அருளிச்செய்த நிகண்டு

(விருத்தம்)

ஏடுகள் 26.

(நீள × அகலம் 36 × 3 செ. மீ.)

இதில், மூலிகை மந்திரம் - வில்வம், நாயுருவி, மிளகுத் தக்காளி - தூதுவளை - கண்டங்கத்திரி - வல்லாரை - புளியாரை - நிலவாகை - வெத்திலை - பொன்னுங்காணி - சிறுகீரை - புளியாஞ் சிறுகீரை - பிரண்டை - கத்தாழை - நாறுகரந்தை - கையாந் தகரை - சீந்தில் - மருள் - கொடிவேலி - கோவை - கட்டுக்கொடி - நிலப்பனை - வேம்பு - சிவனர் வேம்பு - சிறுசெருப்படி - குப்பைமேனி - பிரமி-விழுதி - ஆடுதின்னுப்பாளை - சத்திச்சாறணை- அழிஞ்சில் - கஞ்சா - மறுதோன்றி - காட்டாமணக்கு - சரக் கொன்னை - செவ்வகத்தி - எருக்கு - சதுரக்கள்ளி - சிவந்த

கள்ளி - தில்லை மரம் - தேள் கொடுக்கு - கருமத்தை - பொன்னூமத்தை - கருடங் கிழங்கு - செவ்வரளி - மாவலிங்கு - தேத்தான் - பேய்த் தும்பை - பேய்க் கொள்ளு - முதலான சரக்குகளின் வேறு பெயர்கள் - மாணிக்கம் - வைடூரியம் - பொன் - வெள்ளி - செம்பு - காரீயம் - வெள்ளீயம் - நாகம் - பித்தளை - வெங்கலம் - திராய் இரும்பு, உருக்கினம் பேர் - வெள்ளைப்பாஷாணம் - கௌரீ - தொட்டி - குதிரைப்பல் - சிங்க பாஷாணம் - தீமுறுகல் - கருமுகில் - சாதிலிங்கம் - குங்குமம் - ரெத்த பாஷாணங்களின் வேறுபெயர்கள் - சூதம் - கெந்தகம் - கோழித்தலைக் கெந்தகம் - வாணகெந்தி - சௌவீரம் - கோடாசூரி - துத்தம் - துருசு - அரிதாரம் - சூடம் - பச்சைக்கற்பூரம் - பொன்னிமிளை - அப்ரகம் - காந்தம் - கற்பூரசிலாஜது - கல்நார் - கல்மதம் - சீனக்காரம் - வெங்காரம் - அன்ன பேதி - அஸ்தி பேதி - சுவர்ண பேதி - மாங்கிஷ பேதி - பொன்னம்பர் - மீனம்பர் - தாளகம் - கல்லுப்பு - மனோசிலை - வெடியுப்பு - இந்துப்பு - வளையலுப்பு - சவுட்டுப்பு - அமுரியுப்பு - சத்திச்சாரம் - யவச்சாரம் - ஏகம்பச்சாரம் - முலைப்பால் - மூத்திரத்தின் பேர் பெண்ணுடகாமம் - சுக்கிலம் - மாதவிடாய். சுன்ன முறை - புடத் திட்டம் - ஊத்தின் குறிப்பு ( துருத்தி ) எரிப்புகாலத்தின் குறிப்பு - செயநீர். குருமுறை - செந்தூரகாலம் - கிராவணக் குணம் - சாரஜயனீர் - வழலை - பூவழலை - உவர் மண் - கருமணல் - செம்மணல் - சுத்தமண் - படிக்கம் - சுக்கான் - கருங்கல் சாவி - நீலாஞ்சனம் - ஈரக்கல் - ராஜாவர்த்தம் - ஓடு - கெப்புக்கல் - எலும்பு - மயிர் - நாகறவண்டு - ஆமை - யானைக்கொம்பு - ஆட்டுக்கொம்பு - காண்டாமிருகக் கொம்பு - பூநாகம் - இந்திர கோபம் - காடி - கல்கிட்டம் - பேரோசனை - பல் - மயிலிறகு - குருந்தக்கல் - கெருடன் - காகம் - செம்போத்து - கோமேதகம் - வைரம் - புஷ்பராகம் - நீலம் - பச்சை - முத்து - பச்சை - உடும்பு - கருநாகம் - பூரக்குரு - மெழுகு வழி - நண்டு - ஊமச்சி - செவ்வட்டை - கிழிஞ்சில் - ஆமை - தவளை - சங்கு - முத்துச் சிப்பி - சுக்கான் - சாலக்கிராமம் - கடுக்காய் - மிளகு - வாலுளுவை - தக்கோலம் - சாதிக்காய் - கிராம்பு - திப்பிலி முதலானவைகளின் பரிபாஷை பெயர்கள் உள்ளன.

*Beginning :*

ஆதியந்த மில்லாத பூரணத்தை நோக்கி
யடுக்கிநின்றவுன் மதத்தாய் பதத்தைப்போற்றி
யாதியந்த மாகிநின்ற உமையாள் சொல்லப்
பாங்கான சின்மயத்தின் கருணையாலே
ஓதியந்த வாதமென்ற நூலுக் கெல்லாம்
உயர வைத்த நாகமணிக் கிரீடம் போலச்
சாற்றியந்தக் குணத்தோடு நிகண்டு சொல்வேன்
சச்சிதானந்த வெளிக் காப்புத்தானே. (க)

போச்சென்று நூல்களெல்லாம் பொய்யாகாமல்
புகழாகச் சொல்லிவிட்டேன் நிகண்டுக்குள்ளே
ஆச்சென்று யிதையறிந்தால் அவனே வாதி
யறியாட்டாலாசானை யறிந்து கேளு
மூச்சென்று வாசியைப்போல் வாதத்திற்கு
முகிந்தவிடம் வழலையென்பார் சொல்லார் சொல்லார்
பேச்சென்ற பேச்செல்லா மிதனுலாச்சுப்
பேரான யென்னூலைப் பேணிக்காணே. (உ)

*End :*

கல்பமுண்டு யேறுதற்கு வரிசைசொன்னேன்
கைமுறையாய் உலகமெல்லாஞ் சித்தாய்ப்போக
அல்பமென்று யென்னூலைச் சொன்னுனுகில்
அழுந்துவான் ரவிகோடி நாதத்துள்ளே
சொல்பமன்றே காயசித்து கொண்டு தேறத்
துடர்ந்துன்னை விட்டகுறை தாக்குந் தாக்குந்
நில்பமென்றே மனமுரைத்து நில்லு நில்லு
நிச்சயமா மென்னூலிற் சித்தியாமே. (உநுய)

**343.** சுவடி நெ. *215*

(பலதிரட்டு)

## கண் நோய் பார்க்கிற விதம்

ஏடுகள் 20. சுத்தமாகவுள்ளது.

(நீள × அகலம் 25 × 3 செ. மீ.)

1 முதல் 7 ஏடுகள்வரை. அகஸ்தியர் நயனவிதி 500ல் காணப்படும் 96 வித கண்ணோய்களின் குறிகள் உள்ளன.

*Beginning :*

பாதுமைப்பாகன் சொன்ன மாமறை முதலையாய்ந்து
தீதுகள் வாராதென்று திருவுளத்து தித்தபோது
ஆதிமாமுனிவன் சொன்ன ஆயுருவேதத்துள்ளே
நாதனுர் தெரிந்துரைத்த நயனமாம் விதிகள்தானே.

*End :*

பிரிவுட்தெரிந்திடுங் கருமைபச்சை தீர்வாதபித்தந்தானும்
பிரிந்திடும் பசுமை வெண்மை பித்தசிலேத்துமத்தின்கூறு
வரிந்திடுஞ் சிவப்பு வெள்ளை வாதசிலேத்மத்தின் வர்ணம்
அறிந்திடு மிதனைக் கண்டால் அறிந்து
சொல்தொந்தமென்றே. (௩௰)

பின்னர் சித்திரவல்லாதி, சிவநாமரஸம், இஞ்சி ரசாயனம். உதிரக்கட்டுக்குக் கஷாயம் - உடும்புச் சூரணம் - புடத்திட்டம் - குடாக்கின் குணம் - புகையிலையின் குணம்.

*End :*

கண்புகையும் நெஞ்சுலரும் கைகாலசந்துவிடும்
வெண்புறமாய் மேனி வெளுத்துவரும் – பண்புமிக
யீரல்கருக்கு மிந்திரியம் நஷ்டமாய்
பாரப் புகையிலையின் பண்பு.

**344.** *சுவடி ரெ. 216*

# ஞானவெட்டியான்

(*வைத்யம் நாற்பத்தொன்று*)

*ஏடுகள் 7. அபூர்த்தி.*

(*நீள × அகலம் 38 × 2½ செ. மீ.*)

*இதில், சுக்குச் சூர்ணம் - காரீயச் செந்தூரத்தின் குணம் - நீர்க்கடுப்பின் குறிகள் - ஒவ்வொரு மாதங்களிலும் கர்ப்பம் வளரும் விதம் - கல்ப விதிமுறைகள் முதலானவை பரிபாஷையாகக் கூறப்பட்டுள்ளன.*

*குளிகை - கன்னிப்பெண் லக்ஷணம் முதலானவைகளும் காணப்படுகின்றன.*

*Beginning :*

*கண்டகுறியெல்லாங் கட்டுரையாய்ப் பாடியபின்*
*விண்டு ரைப்பேனின்னும் விதங்கேளாய் – நன்றியுடன்*
*வாதம் வைத்தியமும் வண்காய சித்தியுடன்*
*ஓதத் துடங்குவே னுத்து*
*வைத்யம் பாடுகிறேன் ஆண்டே வைத்தியம் பாடுகிறேன்*
*வைத்யம் பாடுகிறேன் மூலப் புளி தன்னை*
*வாங்கியரைத்து மைப்போ லேயுருட்டி*
*சைத்தியமாகிய பேர்களுக்கு வைக்க*
*தாப சோபமுதல் தானேதீர.* (க)

*எமனுக்கு எமனுமோ யிவனேயாச்சு*
*ஈஸ்வரனுக் கதிகமாயிவ னேயாச்சு*
*காமனைக் கண்ணாலெரித்த கதைகள்போலக்*
*கருவியெல்லாம் மாய்ந்ததடா கசடுபோச்சு*
*பூமலிபோ லிருந்ததெல்லாம் பொன்னேயாச்சு*

பொன் மேரோ யிவனுக்கு அறுவதாச்சு
வீமனுட வீர்யம்போலே தேகமாச்சு
வெகுசுருக்கு மெத்தநன்று வேதம்பாரே. (சஉ)

லேகியங் கொண்டேன் சிவசிவா
லேகியங் கொண்டேன். - சிந்து. புளியை...

---

### 345. சுவடி எ. 217

## அகஸ்தியர் திரட்டு வாகடம் ஐம்பது

ஏடுகள் 10. பூர்த்தி
(நீள × அகலம் 40 × 2 செ. மீ.)

இதில், வாதத்தின் விபரம் - மருந்து - வாதத்திற்குத் தைலம் பித்த விபரம் மருந்து - தைலம் - சிலேத்ம விபரம் - மருந்து - நெய் - தைலம் - மூலத்தின் விபரம் - மருந்து - கிராணியின் விபரம் - கிராணிக்கு உடும்புச் சூரணம் - குன்மத்தின் விபரம் - மருந்து - மேக உற்பத்தி - மருந்து - தைலம் - மேகத்தின் விபரம் மருந்து - காமாலை விபரம் - மருந்து - சூலை, புண், பெரு வியாதி விபரம் - நெய் - கபால சூலை - பீனிச விபரம் - மருந்து - தைலம் - மகோதரம் பெருவயிறு விபரம் - எண்ணெய் - வாயு விபரம் - மருந்து - சுரத்திற்கு கஷாயம் - சன்னி - கரப்பான் - விஷ பாகங்கள் - கண்டமாலை - நேத்திர ரோக விபரம் முதலியன.

*Beginning :*

வாதத்தின் விபரம்

வாதந்தானெண்பதாக வருகின்ற பக்ஷவாதம்
சீதமே நடுக்குவாதஞ் சிறந்திடு முடக்குவாதஞ்
சூதமே அசந்தவாதந் தோன்றிய முகத்தில்வாதம்
பேதமாய் வாதந்தீரப் பொருந்திட மருந்துகேளே.

*End :*

**நேந்திர ரோகத்திற்குத் தைலம்**

போமிது பொன்னுங்கணி புகழ்சிறுகீரை முத்தம்
போமிது சீந்தில்நிம்பமுயறுநா ரத்தைகோஷ்டம்
மாமிது மதுரமேல மடருஞ்செண் பகப்பூ வங்கம்
நாமிது சொன்னேமெண்ணெய் நயந்தெரி முழுகப்போமே.

*Colophon :*

ஈச்வர வருஷம் மார்கழி மாதம் 4உ அகஸ்தியர் திரட்டு வாகடம் எழுதி முகிந்தது முற்றும்.

---

**346.** *சுவடி நெ. 218.*

## அகஸ்தியர் நாடிநூல் 26

*ஏடுகள் 13. பூர்த்தி.*

*(நீள × அகலம் 42 × 2 செ. மீ.)*

இதில் யோகசித்தன் லக்ஷணம் - வைத்தியன் அறிதல் - வைத்தியன் குணம் - நாடி நடை - வியாதிகளில் நாடியின் நடை பேதங்கள். காலை, மாலை நேரங்களில் நாடி நடை - மரண நாடிக் குறிகள் - தீபன நாடி லஷணம் - வாத பித்த கப தேகி லக்ஷணம் - பேச்சுக் குறிகள் - வாத பித்த கப சுர லக்ஷணம்.

*Beginning :*

ஆதிதன் பிரியமான அக்ம்மதரருளினாலே,
நீதியாம் நாடிநூலை நின்மய வடிவுகொண்டு
காதியா முகைய்யதீசன் கருத்தினால் துதித்துயின்னஞ்
சோதியா மறிஞோர் தங்கள் துணைவடி சரணங்காப்பாம்

மூலத்தி லெழுபத்தீரா யிரம்நாடி முளைத்தெழுந்து
வலைபோலே முடிந்தத்தோடே
கோலமாய் பதிமூவா யிரம்நரம்பு
கோர்வையாஞ் சூழ்ந்திருக்குங் கூட்டுக்குள்ளே
காலனும் நாடிபத்து வாயுபத்துக்
கதிப்பதெல்லாம் (நம்)முற் கோர்வை வகையினாலே
நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு
நாயிஞ்சுபேர் பிறக்குமென்று நாட்டலாமே (க)

*End :*

ஓமென்ற மலக்கட்டைக் கழிக்கவைத்தால்
உடலிலுள்ள வாதையெல்லாம் ஓடிப்போச்சு
தாமின்ற சிறுநீரைக் கழியவைத்தால்
சடத்திலுள்ள வேகமெல்லாந் தணிந்துபோச்சு
கூமின்ற உமிநீரை முறியவைத்தால்
கூட்டிலுள்ள பகையெல்லாம் குலைந்துபோச்சு
கோமென்ற யிவைமூன்றும் களங்கமத்தால்
கொல்லவந்த காலனையும் வெல்லலாமே. (உகூ)

அகஸ்தியர் நாடி நூல் இருபத்தாறு முற்றிற்று.

**குறிப்பு :**

அ. முகம்மது இப்ரஹீம் சாயபு சுவடி.

---

**347.** சுவடி நெ. *219*

## ரஸ வர்க்கம்

ஏடுகள் *10.* சுத்தமாக உள்ளன.

(நீள × அகலம் *30* × *3* செ. மீ.)

இதில், தீட்டான தினத்திலிருந்து ஏற்பட்ட கருவின் குண விசேஷங்கள், தாமிர பற்ப முறை - பிள்ளையார் காப்புச்

செய்யுட்கள் - நெல் வகை - தானிய வகைக் குணம். பலதானிய வகையின் குணம். ஈர்க்குச் சம்பா அரிசியின் குணம். கைவாரைச் சம்பா - செஞ்சம்பா - கல்லுண்டை - மணக்கத்தை - கருங் குருவை - வாலான் - இவற்றின் குணம் முதலானவை.

*Beginning :*

அரிவையர்கள் பூப்புநா ளன்றுமுத லீரெட்டே
தான்நாள் வரைதன்னிலு
மடைவாகவே கருதரிக்குநா ளதினைங்கி
லாஞ்சிசுக் கல்விவானும்
பெருகுநா ளைந்தினிற் சோரனுமாறினிற்
பெருந்தவர் ஏழாந்தினம்
பிரபலதயாபரச னெட்டதனிற் மிடியனும்
பீடு தனவானென்பதில்
லரியபத்தாந்தினங் காமியாம் பதினொன்றில்
லதிதுட்ட னீராறினில்
லருமைமிகு பண்டிதன் பதிமூன்றிலேயினேன்
மாபதி னன்கிலீனன்
கருதேந்தல் பதினைந்தி லீரெட்டின்யோகியாம்
கற்பகவி லாசமேவுங்
கங்கைபுனை யீசனே மங்கை மகிழ்நேசனே
கைலயங்கிரி வாசனே —

*End :*

மணக்கத்தைக் கருங்குருவை வாலான் யிவைமூன்றுமங்
கணக்குவாதங் கரப்பான் தாமுமே – யெனக்கொத்த
இன்னம் வெகுவிதங்கள் யானறியமாட்டேன்
அன்னநடை மானே அறி: (கக)

348. சுவடி நெ: 220

## பதார்த்த குணம்

ஏடுகள் 11 × 1 + 1 (சுத்தப் பிரதி)

(நீள × அகலம் 35 × 3 செ. மீ.)

இதில், சுக்கு, மிளகு, திப்பிலி - திப்பிலி மூலம் - வெந்தயம் - சீரகம் - ஓமம் - சதகுப்பை - சித்தரத்தை - அதிமதுரம் - தான்றிக்காய். நெல்லிமுள்ளி - கடுரோகிணி - கருஞ்சீரகம் - காட்டுசீரகம் - பரங்கிப்பட்டை. ஏலம் - கிராம்பு - சாதிக்காய் - கத்தாழை. கடுக்காய் - பெருங்காயம் - கோஷ்டம் - சடாமாஞ்சில் - தாளீசபத்திரி - குராசானி ஓமம் - கார்போகு - வலம்புரிக்காய் - வாலுளுவை - வாயுவிடங்கம் - அக்கிராக்காரம் - ஓரிலைத்தாமரை - கரியபோளம் - லவங்கப்பட்டை - கஸ்தூரி மஞ்சள் - கசகசா, கடுகு, சந்தனம் - கொத்துமல்லி - பிரண்டை - இஞ்சி - வெங்காயம் - பூண்டு - பழம்புளி - மஞ்சள் - மிளகாய் - சிவனார்வேம்பு - வெள்ளைக்காக்கணம். நாயுருவி - இம்புரல் - பச்சைக்கற்பூரம் - கெந்தகம் - லிங்கம் - பஞ்சலவணம் - தொட்டிப்பாஷாணம் - நவபாஷாணம் - மிருதார்சிங்கு - துத்தம் - உப்பு முதலான சரக்குகளின் குணங்கள் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

சுக்கு குணம்

சுக்குக்கு நெஞ்செரிப்பு தோஷவழலையறும்
தக்கயிருமல் தனைச் சாடிவிக்கும் – ஒக்குமென
மூக்குநீர்ப் பாய்ச்சல் போம் மூலரோகத்தினொடு
போக்கிவிடுங் கண்குளிரும் போற்று.

* * * *

இளகுமுலைமாதே யேந்திழையீர் நீர்கேளீர்
மிளகுதனையுண்பவர்க்கு மேகம்போம் – களபமணி
அங்கத்து நோயகற்றும் அன்பாய்ப்புசிப்பவர்க்குத்
தங்கத்து மேனிவொளிதான்.

*End :*

ஓடுங்குவதும் ஓய்வதுவும் வாதபித்தச்சிலேத்துமம்
உறமான மண்டலமூன்ருருதாரம்
நெடுங்கவினைத்தசவாயுவில் விரிந்தநூலில்
நெட்டான பலரோகம் நாற்பதனூர்மேல்
விடுங்கிளேயாம் நானூத்தி நாற்பத்தெட்டும்
மேதினியிலிடருமின்னம் வினைகளெல்லாம்
நடுங்கிவிடும் பின்துயறும் உப்பினலே
நல்லோர்கள் கண்டறிவாரின்னங்கேளே. (அங)

---

**349.** சுவடி நெ. *221*

காணப்படவில்லை.

---

**350.** சுவடி நெ. *222*

## பற்ப வகை

ஏடுகள் *8.* அபூர்த்தி.

(நீள × அகலம் *36* × *3½* செ. மீ.)

இதில் துருசுக்குரு – ரஸபற்பம் – தங்கபற்பம் – வெங்கார தாளக பற்பம் – வங்க பற்பம் – முதலியவைகள் உள்ளன.

**குறிப்பு :**

கடைசியில் *3* ஏடுகள் காலியாகவே உள்ளன.

*Beginning :*

உத்தமனே சீலைகட்டி முழப் புடத்தில் நீற்றப்பா நீறியது
வெள்ளையாகும்
நினைவாகப்பினமந்து நீருலாட்டே — — — — —
ஆட்டயிலே சாரமது காசுபோடு அடங்காத சூடனது காசுபோடு
நீட்டையிலே வீரமது காசுபோடு நினைவாகப் பூனீறு காசுபோடு
நாட்டியிலே சுண்ணும்புப் பொடியில் வைத்துச்
சுறுக்காக முழப்புடந்தான் சூட்டி வாங்கே

*End :*

கேளடா வங்கத்தைச் சுத்திபண்ணிக்
    கொடியாக லேசதாய்த் தகடுதட்டித்
தாளடா தாளகமும் ரசமுங்கூட்டிச்
    சமனுக வாய்நீராலரைத்துக் கொண்டு
வாளடா வங்கமென்ற தகட்டிலேதான்
    சமனுகப் பூசியே சமனுய் நீயும்
ஆளடா ரவிமுகத்தி லுலரப்போடு
    அப்பனே சுண்ணும்புச் சீலை சுத்தே.

சுத்தியே சுண்ணும்புக் குள்ளேவைத்து
    சுகமாக முழப்புடத்தில் நீறிப்போகும்
மத்தியே வங்கமென்ற பற்பந்தன்னை
    வரிசையாய் திரிபலாதி சூரணத்திற்
குற்றியே பணவெடைதான் தேனிலப்பா
    குழைத்துக்கொண் டுண்டுவரத் தீரும்நோய்கேள்
வத்தியே பிரமியங்கள் பிரமேகங்கள்
    வளருகின்ற யெலும்புருக்கி மாண்டுபோமே.

மாண்டுபோம் கிரந்தி யொரு நூற்றிருபதும்
    வரட்சியோடு சொறிசிரங்கு மாண்டுபோகும்
மாண்டுபோம் மேலூறல் படர்ந்தவூறல்
    வகையான சில்விஷங்கள் மாறிப்போகும்
மாண்டுபோம் வாதமென்ற சூலையெல்லாம்
    வகையான நாகத்தின் பற்பங்கேளே.

---

**351.** சுவடி எண். *223*

## மாத்திரை வர்க்கம்

ஏடுகள் *11.* (*69* முதல் *79* வரை)

(நீள × அகலம் *34½* × *2½* செ. மீ.)

இதில், கோடாசூழி, ஆனந்தபைரவன், லிங்க மெழுகு, சீத ஜ்வராங்கிஷம், சர்வ சுராங்குசம் - தோஷ சாந்த வைரவன் -

மெச்சிய வைரவன் - வைரவ சீதச் சுராங்குசம் - சன்னிச் சுர மாத்திரை. பேதி மாத்திரை - ஏலாதி உருண்டை - சுராங்குசம் - சுர கவாடம் - சந்நிச் சுராங்குசம் - கபாட மாத்திரை - சந்நிபாத பைரவன் - சூல குன்ம சுராங்குசம் - காளமேகம் - கிராணி கபாடம் - கண்டௌஷதம் - குன்ம குடோரி - சயச் செந்தூரம் - சுயமக்கினி - பஞ்சச் செந்தூரம் - வங்கச் செந்தூரம் - அரிதாரச் செந்தூரம் - லோகச் செந்தூரம் - வெள்ளை மாத்திரை - சூலை கிரந்திக்கு - காசம் புண்ணுக்குச் சிலோதாரி மாத்திரை - சொறி சிரங்குத் தைலம் முதலானவை.

*Beginning :*

கோடாசூழி

கெந்தகம் இருவி நாபி கேடில்லா வாளந்தாரம்
வந்தவெங் காரஞ்சுக்கு மருவிள மிளகுதான்றித்
தந்தருளிரதம் நெல்லித்திருகடு திப்பிலியோ
டிந்தமா முருக்கிலைச்சா றிதுகோடாசூழி யென்றே. (க)

ஆனந்தவைரவன்

சூதம் நாபிம னோசிலை கெந்தகந்
துய்யலிங்கம் வெங் காரஞ்சமனிடு
சாதியா னவெலும்பிச் சம்பழச்
சாறுவார்த்தரைத் துண்டை பயறள
வாதசந்நி குளிர் சுரமாறலும்
வஞ்சி யிஞ்சிவடி யிட்டசாத்தினில்
ஆதிவானந்த வயிரவனென்றக்கால்
அஞ்சியஞ்சி யலரிக் குதிக்குமே. (உ)

* * * *

*End :*

சுராங்குசம்

கூட்டிய லிங்கம் நாபி கொடியதா ளகமொன்ருக்கி
வாட்டிய நிம்பச்சாத்தில் வளருண்டை தன்னைப்பண்ணி
காட்டிய வனுபானத்தில் கலந்துதான் கொண்டபோதே
தீட்டிய சுரங்க ளெல்லாந் தேசம்விட் டோடிப்போமே. (சகூ)

### சொறிசிரங்குத் தைலம்

கார்போகி நீரெட்டிகருஞ்சீரகம் சூதம் கற்க கெந்தகத்துடனே
நீரோடு தென்னம்பழச் சாறுவிட்டு நீநெகிழ வரைத்தபின்னை
தாரோடு வெள்ளெண்ணெய் யெரித்துக்
குளிர்ந்ததைத்தான் மெய்யிற் பூசிவிடுபின்
நீருட நாளுேட யெண்ணவே சிரங்கெல்லாம்
நிலைகெட்டு ஓடிவிடுமே.

---

### 352. சுவடி நெ. 224

## அகஸ்தியர் வைத்திய தர்க்கம் இருபத்தைந்து

ஏடுகள் 8. பூர்த்தி.

(நீள × அகலம் 29 × 3 செ. மீ.)

இதில், மருந்துகள் செய்வதற்கான கல்வம், குழவி, குப்பி வைப்புச் சரக்குகள் இவைகளின் தாத்பர்யம் - கஞ்சமுடா - பித்தளை அண்டா - திரா இவைகளின் தாத்பர்யம் - அயம், பித்தளை, கஞ்சம் (வெங்கலம்) தாமிரப் பாத்திரத்தின் குணம் - இவற்றிற்கு அக்ஷரம் - மரச் செப்பின் குணம் - கொம்புச் செப்பின் குணம் - மூங்கில் செப்பின் குணம் - தந்தச் சிமிழின் குணம் - தாம்பூலக் குணம் - சீலைமண் குணம்.

இவைகள் கேள்வி பதில் ரூபமாக உள்ளன.

***Beginning :***

சீர்பொருந்தும் சாஸ்திரமும் மருந்துவைப்புந்
தேவியங்க மானபொருள் பலவுஞ்சொல்லி
ஒருபொழுது மெழுத்தாணி யோலையம்மி
யியல்பான கருவிமுதல் பைக்கூரைசெப்புங்
கூரோடே சாஸ்திரங்கள் சொன்னுனல்
குருவாகு மவருடனே யெதிர்க்கவேண்டாம்
தார்பொருந்துஞ் சாஸ்திரங்கள் சொல்லாவிட்டால்
சண்டாளப் பயல்களுட பையை வாங்கே. (க)

*End :*

சீலேயாஞ்சிவனே நல்ல செயலருந் தானுஞ்சத்தி
ஆலேயந் தன்னேச்சூழ்ந்த அச்சரங் கயிறுதானே
வேலேநூல் வேதமாகும் மென்றுதான் முனியோடன்னுள்
ஆலேமேலுன்னேக் கண்டோர் அருளியவேதநூலே (உரு)

குறிப்பு :

10 ஏடுகள் எழுதப்படாமலிருக்கின்றன. (காலியாக விடப்பட்டுள்ளன)

---

**353.** சுவடி நெ. 225 (A)

## அகஸ்தியர் கும்மி - பிசின்லாடு

ஏடுகள் $1\frac{1}{2}$

(நீள × அகலம் 37 × 3 செ. மீ.)

பிரஸவித்த ஸ்திரீகளுக்குப் பலத்தைக் கொடுக்கக்கூடிய பிசின் வகைகள் சேர்ந்த வடகம்.

*Beginning :*

கும்மியடி பெண்ணே கும்மியடி
யிரு கொங்கை குலுங்கவே கும்மியடி
நன்மை விநயகன் பாதத்தைப் போற்றியே
நாடிக் கும்மிய டியுங்கடி — புகழ்ந்
தோடிக் கும்மிய டியுங்கடி. (க)

ஓடிமன்மதன் தனேபுகழ்ந்து ரதி
யுண்மையதாகவே நன்மையுடன்
கோடிகாலம் பூசை செய்து வந்த
கொத்தவனின் மனமுத்திடவே — பின்னும்
நத்தியுவன் பாதம் முத்தியிட்டாள்,

*End :*

பிணியறுமென்று தான் பேசுகின்றபெண்ணினைப்
போத்திச் சுதனுக் கிய்ய
துணிவாய் வணங்கித்தன் தோகைக்கு ரைத்திடச்
சொன்னால் முனிக்குமென் றோதுங்கடி நீங்கள்
நன்றாகவே கும்மி பாடுங்கடி. (கரு)

அகஸ்தியர் பிசின்லாடு முற்றும் ஆதியே துணை.

---

**354.** சுவடி நெ. *225* (B)

## உதிரக்கட்டுக் கஷாயம்

ஏடுகள் *10*. (*3* to *13* ஏடுகள்) உலா.

உதிரக்கட்டுக்கு உலா - உதிரக்கட்டு வண்ணம் - சுண்டு வடை உதிரக் காயப்பாட்டு - உதிரக்கட்டு நஞ்சுக் கஷாயம் - மதுஸ்நுஹி ரஸாயனம் - நெல்லிக்காய் லேகியம் - மகா வில்வாதி லேகியம் - மாதுலுங்க வில்வாதி லேகியம் - இஞ்சி ரஸாயனம் - தாளீச பத்திரிச் சூரணம் - குக்கிலாதி வடகம் - கரண்டி கட்டுவாதி மாத்திரை.

*Beginning :*

ஆத்திமரத்தடி யமைந்தருளீசரைப்
போத்தியே யம்மனும் புகழ்ந்தவளு ரைப்பள்
மண்டலமெங்கும் மானிடர் தம்மைக்
கொண்டு நீர் படைத்த குருவே சரணம்
ஆணும் பெண்ணும் அதிசயமாக்கிக்
கூடி மகிழக் கொண் டருள் செய்தீர்
மாய்கைப் பிள்ளை பிறந்தவள் வயத்திற்
காயத்துதிரக் கட்டு விடாதால்
நல்லதோர் கஷாயம் நமக்குரை யென்று
தேவி பணியச் சிவனருள் செய்தார்.

* * * * *

*End :*

கிராணி கட்டுவாதி மாத்திரை

சாதியின்கனியோடு மாதளேயோடுமே புளித்தோலுமேதானு
மாசியின் காயுமே வபின்கூடவேயிலவம் பிசின்

நீதியாம் வெள்ளை காசுக்கட்டி நிறையு மோண்டுட னேழுமே
நேர்மையா யரைத்தேவழித் ததையுமோர்
கரண்டியி லீந்துமே

மேதியின் தயிரால் வறுத்ததை மென்மையா யரைத்தானபின்
மிக்க மாத்திரைகுன்றி தேத்தினின் வித்துப்போல்
செய்து வைத்ததை

தீதுவாமதிசார மோடுளவான்பேதி தெரித்திடும்
சேர்ந்த ரத்த மறு கிருணி கபாடமா மிதைச்செப்புமே.
(க)

---

**355.** சுவடி நெ. 225 (C)

## உதிரக்கட்டுக் கஷாயம்

ஏடுகள் 14. (3 to 16) உலா.

சுத்தமாக உள்ளது.

முன்பிரதியைப் போன்றது.

---

**356.** சுவடி நெ. 225 (D)

## பேஷஜகற்பம் நிகண்டு அட்டவணை

## தாதுவர்க்கம்

ஏடுகள் 5.

செய்யுட்களின் முதலடியின் அட்டவணையாக காணப்படுகின்றது.

*Beginning :*

1. திருவாழ் சிரகிரிவாழ்
2. அத்திரியுஞ் சுச்ருதரர்

3. நிறைகள் களவுசெய்
4. ஒன்றியிடு நிஷ்ட
5. உவந்தபல நூறுகொ
6. அளவு தொடியிரட்டி
7. மன்னுடக மிரட்டி வாளசிங்

*End :*

21. அகத்திசொல்லக்குருபோயா
22. சர்க்கரை யக்காரம் பாணித
23. எலிச்செவி வெள்ளெரிக்காய் துண்ணு
24. காஞ்சோறி கபிகச்சு செந்
25. மாகாளி மாகாளியின் பெயரு

குறிப்பு :

கடைசி 2 ஏடுகளில் மேகரணம், சொறி, தேமல், கடி சிரங்குக்கு எண்ணெய் எழுதப்பட்டுள்ளது.

---

## 357. சுவடி நெ. 226 (A)

## வகாரஸூத்ரம்

இதில், ரஸவாதத்திற்கான முறைகள் பரிபாஷையாகக் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

கேளப்பா நான்முகன் மாலிந்ததேவர்
 கெடியான வேதமுதற் சமயத்தோரும்
தேளப்பா தேடியறி யாதவஸ்து
 தெளிவான வெளியதன் பரமதாகும்
கேளப்பா பரமான வஸ்துதன்னை
 கிருபையுடன்னறிவரோ யாதியந்தம்
கேளப்பா வாதிவஸ்து மனுபடைத்த
 பரகதியேவருகுவதே விளம்புரேனே.

*End :*

பாரான பார்தனிமேலனுவுண்டாகி
பதிவாக வந்ததின்பின் னனேகசாஸ்திரம்
நேரான சாஸ்திரங்கள் சூத்திரங்கள்
நேர்மையுள்ள ரிஷிமுனிவர் சித்தரெல்லாம்
மேரான பாரதனில் தபஸுபண்ணி
வெகுகோடி காலம்வரை யோகஞ்செய்து
பேரான வெளியோடே வெளியாய்ச்சேர்ந்த
பலமானவிலக்குவகை பேசக்கேளே. (உசு)

---

358. சுவடி நெ. 226 (B)

## பூஜா விதி

இதில், இந்திரன் வ்யது நிர்ணயம் - ரிஷி முனிவர் வயது - முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

கேளடா புலத்தியனே மைந்தா நீயுங்
கெணிதமுள்ள யுகமதுதான் பதினெட்டப்பா
ஆளடா அரியின் யுகமீரேழ்கோடி
அர்ப்புதனுர்யுக மதுதா னீரஞ்சுகோடி
வாளடா மதனயுக மீளறுகோடி
மகத்தான ராசியுக மீரெட்டுக்கோடி
கேளடா தாண்டன்யுக மீரஞ்சுகோடி
கனமான விண்ணரசன் நாலஞ்சுதானே. (க)

தானென்ற விண்ணதினிலீ ரெட்டுக்கோடி
தருவான வாயுதயுக மேழுகோடி
மானென்ற மயிதன்யுகமிருமூன்று கோடி
மகத்தான மணிகள்யுக மறுமூன்றுகோடி
பானென்று பணியிரதன் நான்குகோடி
பணிவான விசுவாகன்யுக மூன்றுகோடி
வானென்ற தயிதன்யுக மொரு கோடியாகும்
மார்க்கமுடன் கிரேதாயுக மதுவைப்பாரே. (உ)

*End :*

காணப்பா குருபூஜை நன்ருய்ச்செய்து
கருணைவளர் சமாதிதனிற் கடாட்சமாக
பூணவே நித்தியமும்பூஜை செய்தால்
பூரணமா மூர்த்திகரமும் புதுமையாகும்
தோணவே சத்தியுட சமாதிதன்னி
துலங்கும்வெகு புதுமைகள்நா னென்னசொல்வேன்
பேணவே பூரணமாய் ரசமாதுபூசை
பெருமைவிட்டு அருமையதாய் நீ செய்துபாரே. (௩அ)

குறிப்பு :

இதற்கிடையில் 2 ஏடுகள் மலையாள லிபியில் எழுதப்பட்டுள்ளன.

---

**359.** சுவடி நெ. 226 (C)

## அகஸ்தியர் பன்னிரண்டு

ஏடுகள் 4.

*Beginning :*

தாயான உன் மனையாள் பாதம் போற்றி
சாஸ்திரமோ வாயிரத்து யிருநூறுக்குள்
தோயாத கருவொன்று மில்லையில்லைச்
சொல்லடக்க மாயுரைத்தேன் வாலையொன்றுங்
காயாகு மிதைக் குறுக்கி யிருநூறுஞ் சொன்னேன்
கனிபோலேயிந்த நூல் பன்னிரண்டுக்குள்
வாயாரச் சொல்லுகிறேன் வகாரமார்க்க
மதியிரவி யண்டபிண்டம் வளமைகேளே. (க)

*End :*

தானென்ன அண்டபிண்டங் குருவைச்செய்யத்
த ப்ப / த்வு வேணுஞ் சிவம் வேணும் தயவுவேணும்

மானென்ற யக்கினியாமுப்பைக் காண
மதிவேணும் விதிவேணும் வாசம்வேணும்
நானென்ற ஆணவத்தை முடுக்கவேணும்
நலமான சிவயோகம் நாட்டம்வேணும்
தேனென்ற சர்குருவைக் கார்க்கவேணும்
சித்தியாம் பனிரெண்டுஞ் சிறக்கமுற்றே.

அகஸ்தியர் பனிரெண்டு முற்றும்.

---

**360.** சுவடி நெ. 226 (D)

## கொங்கணர் அதிசய சூத்திரம்

ஏடுகள் 9

இதில், வாதம், யோகம் முதலியவைகளைக் கூறும் பாகமும் புண், புரைகளுக்கான சிந்தூர வகைகளும் உள்ளன.

*Beginning :*

ஓமென்னும் பூரணமாங் கண்டவீதி
உத்தமமாஞ் சோதியெனும் பாதம் போற்றி
வாமென்னும் திரிகோண விந்துவட்டம்
வூனமென்ற மோகனத்தாய் வாலைபாதம்
நாமென்றும் பூஜைசெய்தோம் போகர்சொல்ல
மூலர் சொல்லக் காலாங்கி நாதர்சொல்ல
ஆமென்னும் முனிவர் மெச்சச் சித்தர் போற்ற
ஆதிசெய் சூத்திரமா யரைந்திட்டேனே. (க)

அரைந்திட்டேன் சூட்சமாய் வாதஞான
ஆதியந்த மூலமந்திரஞ் சரக்குவைப்பு
உரைத்திட்டே னனந்த லகிரிதானும்
உத்தமனேவெளியாகத் தோணும் பாரு
பறைந்திட்டேன் தொந்தங்கள் கருவுஞ்சொன்னேன்
பாங்காகச் சிவசக்தி நடனங்காணும்
நிறைந்திட்டேன் தாய்பதத்தில் சித்துவித்தை
நேரான பொருளெல்லாம் கண்டேன்பாரே. (உ)

*End :*

வாயான புண்பொடிகள் கானக்குட்டம்
மகத்தான கிரந்தியொடு பறங்கிதீரும்
தாயான வைத்திருந்து பிரிந்திருப்பத்
தப்பாது வசீகரமாம் சொன்னேன்சூக்ஷ்மம்
காயானவைங்கோல மிந்த வித்தை
கருவான மாந்திரீக மெல்லாம் சித்தி
பாயான கூடுவிட்டுக்கூடு பாயும்
பாங்கான வதிசெயசூத் திரமுமுற்றே. — 27

கொங்கணர் அதிசய ஸூத்ரம் முற்றும். 27 முற்றும். அபிராமி துணை.

---

**361.** சுவடி நெ. 226 (E)

## தட்சிணாமூர்த்தி சூத்திரம் பத்து

ஏடுகள் 4.

ரஸவாத முறைகள் உள்ளன.

*Beginning :*

காணப்பா ஏரியிலே வளர்ந்த பிண்டங்
கடியாக மாங்கிசத்தோ டெடுத்துவந்து
மூணப்பா பொரிக்காரம் பொரித்துக்கொண்டு
பிண்டத்தை வாய்பிளந்து யதனிற்போடு
ஆணப்பா பெண்ணோடு கூடினாற்போல்
அப்பனே நாதமங்கே யிறங்கும்பாரு
தாணப்பா லோகத்தால் சட்டியொன்றில்
சாதகமா யிணங்கனையும் அதனில்போடே. (க)

போட்டேநீ யடுப்பிலே தீயைமூட்டிப்
புகழ்பெருகப் போடாதே யொழுகாய்ப்போடு
தேட்டமென்ன யிதைவிட்டால் தேட்டமுண்டோ
சிலம்போலோ யுருகினிற்கும் பருவம்பார்த்து

வாட்டமில்லா நாதநீர் குத்திக்குத்தி
வண்மைபெற முங்கவிட்டு வடுப்பில்வைத்து
நாட்டிலுள்ளோர் காணுமல் மறைவில்வைத்து
நன்ருகக் குளிர்ந்தபின்பு யெடுத்துவையே. (உ)

*End :*

ஆடலா மிதுகொண்டு கோடாகோடி
அளவறிந்த வித்தையெல்லா மிதற்குள்ளாச்சு
ஓடலாமிதனுலே குளிகைசெய்து
வுசத்தியுள்ள மலைகளெல்லா மேறிப்பார்க்க
நாடெல்லாந்திரிந்தாலு மிந்தப் போக்கு
நல்லமுறை யிதுபோலு மெங்குமில்லை
பாடலாய்ச் சொன்னதென்று யெண்ணவேணும்
பத்துமோசூத்திரமாய் பாடிமுற்றே. (கo)

குருவே துணை.

---

**362.** சுவடி நெ. *226* (F)

## வாலைபூசாவிதி

ஏடுகள் *9*

இதில், வாலைபூசை (பாலா) முறைகள் - மனமடங்கச் சாதனைகள் பூரணத்தின் மகிமை, தேவி பூசையின்றி வாதம் சித்தியாது முதலியன.

*Beginning :*

ஆதியென்ற வாலையவளிருந்த வீடு
யாச்சரிய மெத்தமெத்த வதுதான்பாரு
சோதியென்ற நடுவீடு பீடமாகச்
சொகுசுப் பியினிகுருநாள் துரைப்பெண்ணுத்தாள்
வீதியிலே யாறு தேறுவமர்ந்த வீடு
வீளையாடி நின்றநிர்வாணி கண்டாய்
பாதியந்த மதிசூடி யிருந்தசாமி
பத்துவயதாகுமிவள் வாமிதானே. (க)

வாமியிவள் வாமம்வைத்துப் பூசைபண்ண
மதியுமக்கு வேணுமடா வதீதமாகக்
காமியிவள் வெகுகாமி சிவகாமி ரூபி
காணரிது சிறுபிள்ளைக்கண்ணி கண்ணி
யாமிவளையறிந்தவனே யவனே சித்தன்
அறிந்தாலு மனதடக்க மறியவேணும்
நாமிவளை பூசைபண்ண நினைத்தவாறு
நாட்டிலே சொல்லென்றல் நகைப்பார்காணே. (உ)

* * * * * *

*End :*

தெளிவதற்குத் தெளிவுதருஞ் சிவந்தமேனி
திருவடியும் பொருச்சிணத்திற் திறக்கக்காணும்
வளியதனிற் நல்லவழியுங் கூட்டி நின்று
மகத்தான வேதாந்தச்சித்தாந்தங் கண்டு
ஒளியதனிற் ஒளிவுதரு முறுதிசொல்ல
வுற்பனத்தி லுற்பனமா யுறுதிதோணும்
வெளியதனில் வெளியாகி நாதத்துள்ளே
விளங்குகின்ற வாலைப்பெண் ணுதிமுற்றே. (௩௧)

திருபுரசுந்தரியம்மாள் துணை.

---

**363.** சுவடி நெ. *226* (G)

## கொங்கணர் சடாட்சர விதி

ஏடுகள் *26*. பக்கத்திற்கு *7* வரிகள். சுத்தமாக உள்ளன.

இதிலுள்ள தலைப்புகள்

**(a) மூல சூத்திரம் 10. சட்டைமுனி போதகம்.**

*Beginning :*

உதிரமதே வோமென்ற மூலசிவன்
ஓங்காரப் பிரணவமு மிதுவுமாச்சு

பதியான வட்டமிது கணேசன் வீடு
　　பாங்கான குண்டலியும் வல்லபையுமாகும்
விதியான விதியெல்லா மிதனுலாகும்
　　வேதாந்தஞ் சித்தாந்தமாண்டு மங்கே
பதியான ரவிமதியுமுடே போட்டி
　　வாசியென்ற எழுத்தினல் தாக்குதாக்கே. (க)

* * * * * *

*End :*

தானவனு மாகிநிற்பா யப்பாசொன்னேன்
　　தத்துவந் தொண்ணூற்ருறுந் தாண்டியோடு
மோனவழி யுள்ளழியு மூலசூத்ர
　　மூதண்டப் பாவெளியுங் கடந்து நிற்குங்
கான மிர்தமுண்டாக்கா லவனேயோகிக்
　　கருணையுள்ள மெய்ஞானி யாவதற்கு
ஞானமா மணித்தாய்தா னெனக்குச் சொன்னுள்
　　காதமென்ற நிலையெனக்குக் காட்டினளே. (ம)

* * * * * *

ஆட்டு நீஅவ்வுமுவ்வு மொன்ருய்க்கூட்டி
　　யதனுடனே கிலுயுமய்யுஞ் சவ்வுங்கூடகூட்டிப்
பூட்டினே னிப்பூட்டு திறக்கப்போமே
　　பூரணத்தி லொடுங்குமந்த வூமையாகுங்
காட்டில்நீ யலையாதே வழியைப்பார்த்து
　　கண்டாலோ பரவாசல் திறக்குமப்பா
தேட்டுநீ யோங்காரத்தட்சர மேயப்பா
　　சிவயமென்ற வடசரத்தைக் கூடக்கூட்டே. (கஉ)

மூல சூத்திரம் முற்றும்.

### (b) ஞானமூல சூத்திரம்

அரியாகி யாதியண்ட பிண்டமாகி
யாணுகிப் பெண்ணுகி வலியுமாகித்
தெரியாத பொருளாகிச் சித்தரியாகிச்
சிவயவசிக் காலாகி மூலமாகிப்
பரியான கரிதேர்கள் நிதிகள்தேடிப்
பாழாகிப் போகாமல் வழியைச் சொல்வேன்
பரியான வசியெழுத்தின் பிறந்த மூலம்
பார்க்கையிலே வாறெழுத்தாய் நிறைந்தவாறே. (க)

* * * * * *

பார்த்தாலே வோரெழுத்தைச் சொல்லக்கேளு
பாட்டிலே முடியாது பரிவாய்ச்சொல்வேன்
கீத்தாலே கீறிநீ ரண்டுசுழியிட்டுக்
கீத்தடியில் சித்தரியைக் கணிப்பாயாகில்
ஆத்தாளு மப்பனுமுன் வசமேயாவார்
அகிலமெல்லா முனக்களிப்பா ளப்பாபாரு
நீற்றாலே தினசரிதான் கீறிக்கொண்டு
நிஷ்டையிலே யிருந்துநீ நேசிப்பாயே. (கரு)

ஞான சூத்திரம் முற்றும். ஆக விருத்தம் 25.

### (c) வாத சூத்திரம் 20

நேசிப்பாய் பத்தான யகாரத்தாலே
நிர்மலமாந் தச வாயு வுண்டாச்சப்பா
வாசிப்பா யானுங்கால் யோகமெய்தும்
மகத்தான யகாரமென்ற வழியைச்சொல்வேன்
ஆசிப்பா யகாரமது உகாரங்கூட்டி
அப்பனே மகாரமாய் வாறத்தொக்கும்
வீசிப்பாய் மகாரமென்ற மௌனம் போக்கும்
வித்தையடா ஓங்காரமூலமாமே. (க)

* * * * * *

மாட்டினேன் கபாடத்தி லிட்டுந் தொன்னெ
யாறுமங்க ......... ராட்டால் வாதமில்லை
காட்டினேன் கருக்கிடையாக் குறுக்கிடையுந்தானுங்
கைமுறையுந்தவருமல் காணச்சொன்னேன்
ஆட்டினேன் சுண்ணத்தால் மெழுகுமார்க்கம்
யப்பனே பன்னிரண்டி லடக்கினேனே. (கஉ)

வாத சூத்திரம் முற்றும். ஆக விருத்தம் 37.

குறிப்பு :

5வது செய்யுள் முதல் 12 செய்யுள் வரை மலையாள லிபியில் எழுதப்பட்டுள்ளன.

## (d) சிற்ப சூத்திரம்

ஆமப்பா நாலுபத்துச் சென்றதானல்
அடங்காத வாதமடா பதினலாகும்
ஓமப்பா ஒருபத்து ஆரேயானு
லுரைக்குமடா வாதமது வுண்மைப்போக்கால்
காமப்பா விரண்டுபத்து மூன்றுபத்துங்
கைக்கடங்கா நாதமது கருணைநாதம்
காமப்பா யிப்படியே செய்து கொண்டால்
நாதத்தின் வாதவித்தை நாட்டினேமே. (க)

* * * * *

குருவான சடாட்சரத்தைப் பூசித்தே தான்
குறியுள்ள வித்தையெல்லா முபதேசித்தார்
அறிவான குருவெல்லா மற்றப்பேரெல்லாம்
மகத்தான சடாட்சரமேகுரு ஞானமூர்த்தி
திருவான லட்சுமியுஞ் சிவனுமாவாய்
சந்தித்த ருத்திரனும் பிரும்மாவாவாய்
வருவான மயேசுரனும் பெருமாளாவாய்
அப்பனே ஆறுமுகம் பட்டற்றுரே. (கஉ)

ஆக விருத்தம் 49.

## (e) பாத சூத்திரம்

வட்டமாய் நாற்சத்திப் பீடமாகி
மகத்தான பிறையாகி முக்கோணமாகி
யெட்டாத வாய்வறு கோணமாகி
யேகாந்த வட்டத்தி லரிகிலியுமாகி
தட்டாத யிடையின்னுஞ் சுழிமுனையுமாகிச்
சதாசிவமா யுடலுயிராய் நிறைந்தவாறு
மொட்டாது காலவாயுச் சத்திக்கூறு
ஓகோகோ பாதமென்று வுரைகூவேனே. (க)

* * * * *

தள்ளியே நடையிட்டு கூகென்றாணு
தரித்தடக்கி மனதில் வைத்துச் சார்பில்நில்லு
மெள்ளமெள்ள அங்கென்று நடுவில்வைநீ
வேதாந்தச் சிங்கெனவேயுள்ளே யேற்றும்
வள்ளவே அம்ருதமங்கே அருவிபாயும்
வாசமாக முன்னெத்தி யிருத்திரேசித்
தெள்ளம்ருதப் பாலுண்டு ஆயுசுண்டுச்
சிவயோகஞ் சித்திக்குந் திறமிதென்றே. (கரு)

பாத சூத்திரம் முற்றும். ஆக விருத்தம் 65

## (f) கடிகை முதலப்பு விதம் 10க்கும் வகை

## (g) பாதமிரண்டாம் சூத்திரம்

முட்டையிலே அகாரமென்ற வெழுத்துக்குள்ளே
முட்டையதாய் குஞ்சஞ்சு மூலமாச்சு
ஓட்டையிலே ஓங்காரத் தடங்கிப்போச்சு
வோகோகோ கருவிகட்தா ஜெடுங்கும்வாறு
கட்டையிலே கிடக்கயிலே தனஞ்செயனும் போவான்
காத்துநிற்பா னதுவரைக்குங் கருணைகூறாய்
நிட்டையிலே மனமுறைத்தா ளாருங்கால
நிலையன்றியாதியென்ற தாளங்காணே. (க)

* * * * *

செப்பினரிப்படியே யிந்தமுறைசெய்தோன்
ஜெகஜ்ஜால மாடிடுவான் குளிகைசித்தி
யப்பினர் சரக்கெல்லாங் களங்கமாகும்
அதனாலே மெழுகாகுஞ் செந்தூரமாகும்
முப்பினல் வைப்பென்ற கற்பமாகும்
ஓகோகோ வதிற்கொல்லில் தேகம்பொன்னும்
ஒப்பில்லை யிந்தமுறை யொளியாமற் சொன்னேன்
உமையாள்தான் சொன்னபடி யான்சொன்னேனே. (கங)

சித்தாத யோகம் பாதமிரண்டாஞ் சூத்திரம் முற்றும்.
ஆக விருத்தம் 81.

## (h) வைத்திய சூத்திரம்

சொன்னேனனிப்படியே வைத்தியத்தைச் சொல்ல
வெனக்குமோ சின்மயந்தான் சொன்னரப்பா
பொன்னன வுமையாளுவிட்டுனுவுந் தானும்
புகழ்பெற்ற பிரம்மாவுங் கணேசன்றானும்
அன்னளில் விதித்தபடி எனக்குச்சொன்ன
ரப்பனே தாதுவைத்தா னறிவிப்பேனே. (க)

* * * * *

போட்டதற்குள் ளறுகோண முள்ளேபோடு
போக்காக வதற்குள்ளே வட்டம்போடு
நீட்டியே அகாரமிடு றீங்காரம்போடு
நிலத்தை அவ்வை யதின்மேலே யூணிப்போடு
காட்டியே ஓம்நம சிவாயமென்று
கணக்கோடே யாறெழுத்துங் கருதிப்போடு
ஆட்டவென்று லம்மையுங் கிலியுமென்று
அப்பனே உம்முடன்சவ்வு மோதே. (கஉ)

வைத்திய சூத்திரம் முற்றும். ஆக விருத்தம் 93.

## (i) வாத சூத்திரம்

ஓங்கார மூலகுரு சின்மயத்தால்
ஓகோகோ வாதத்தைச் சுருக்கிச் சொல்வேன்
ஆங்கார மானதொரு கல்லில் சுண்ணம்
அப்பனே வைரம்போல் கல்லேயாகும்
நீங்காத மதுரையென்ற தட்டுக்குள்ளே
நிலைத்ததடா மலையாக வெளுத்தகல்லாய்
ஆங்காணு மிதையறிந்தோ னவனேவாதி
யறியாதான் பாவியென்ற கழுதைமாடே. (க)

மாட்டுதற்குக் குருசொல்வே னின்னங் கேளு
வாக்கான வாதமென்ற சயநீராலே
கூட்டுவா யுவருப்புங் கல்லுப்புரெண்டுங்
குறியான வப்போடே மூன்றுங்கூட்டி
ஆட்டுவாய் சாமமொன்று யிந்தநீரால்
அப்பனே நாதத்திற் கற்சுண்ணம் போட்டே
நீட்டிடுவாய் சூடனைத்தான் கூடப்போட்டு
நிறைசமனுய் யெடுத்துநன்ருய் நீராலாட்டே. (உ)

ஆட்டிடுவா யிப்படியே யஞ்சுநாட்டாள்
அப்புறமே வில்லைதட்டி ரவியிற்போடு
ஏட்டிலே எழுதவென்ருல் வருஷம்போதா
என்மக்கா ளிந்தவில்லை யுலையிலூதக்
காட்டிலே யலைவானே வாதமெல்லாங்
கைக்குள்ளே சுண்ணும்பால் பொன்னேயாச்சு
நீட்டையிலே மண்ணும்விண்ணு மலைபொன்னுச்சு
நிறையான சரக்கெல்லா மிதனுல் சாமே. (ங)

வாத சூத்திரம் முற்றும். ஆக விருத்தம் 96.

கொங்கணமூர்த்தி பாதாரவிந்தமே கதி. வாலைத்தாய் துணை.

## (j) ஞான சூத்திரம் 5

முப்புமுடித்தபின் முதல்வனுன சிவனடா
வப்புவாரபோதிலே யடக்கலாஞ் சரக்கெலாம்
ஒப்பமான அண்டத்தி லொடுக்கியதென்னுலப்பா
அப்பனே கருக்குருரண்டானவாருசத்தியே. (ரு)

சூத்திரம் முற்றும். வாலாம்பாள் துணை. நமச்சிவாய குருசாமி துணை. சாமினுதய்யன் வாலைத்தாய் துணை.

## (k) போகர் பூசாவிதி

பாரப்பா வாலைதனைப் பூசைசெய்து
பாங்காக நவகோணமெட்டுஞ் சூழ
சேரப்பா இருவிளைப்பூ வாசல் நாலு
சிறப்பாக றீங்கார மிட்டு நன்ருய்
காரப்பா கீழ்வாசல் கணபதியுங் கந்தன்
கருணையுள்ள ஜயவீர வாஸுதேவர்
ஆரப்பா அவைகளிலே கிழக்கே தொட்டு
அகாரமுட னுகாரஞ் சவுகாரம் போடே. (க)

ஆமப்பா இதுவல்லோ தசதீட்சை யென்று
அறிவுடைய பெரியோர்கள் அறிவிப்பார்கள்
ஓமப்பா மூலமென்ற மந்திரத்தைக்கேளு
ஒருமொழியாய் மூலருக்கு உபதேசித்தார்
வேமப்பா ஐயென்றுங் கிலியும்மென்றும்
வீறுடைய ஸௌவென்றும் மூலமென்றும்
தாமப்பா சஞ்சிதம்பிராரப்த மாகாமிய
தலைமாறி ஓகப்பியே ரைநீட்டாயே. (எ)

---

**364.** சுவடி நெ. 226 (H)

## மகேச்வர பூஜா

ஏடுகள் *10.* பக்கத்திற்கு *7* வரிகள்.

இதில் 6 வரி முத்திரை வடிவங்கள் (சோவினி, யோகினி, குரு முத்திரை, திராவினி முத்திரை) முதலியன கூறப்பட்டுள்ளன.

***Beginning :***

கேளப்பா மகேசுரர்க்கு பூசை கிருபையுடன்
முறையேதன்ருல்
வாளப்பா வன்னமுடன் பலகாரங்கள் வர்க்கவகை
நெய்யுடனே பாயாசங்கள்
ஆளப்பா வெண்டயிரு வண்டத்தோடு வருள்பெருகு
வஸ்துவொடு சுத்திவைத்து
காலப்பா தானறிந்து நைவேத்யஞ்செய்து கருணைபெறத்
தூபமுடன் தீபங்காட்டே. (க)

* * * * *

***End :***

முத்தியுள்ள கரத்தின்விரல் மகிமைதன்னை
மோனமொடு சொல்லுகிறேன் நன்ருய்க்கேளு
பத்தியுள்ள அங்குட்டம் பெருவிரலாம்நிற்கும்
பதிவாக வடுத்தவிரல் தர்சணியாம்மைந்தா
சித்தியுள்ள நடுவிரல்தான் மத்திமையாய்நிற்கும்
திருவான பவித்திரந்தா னுமிகைதானப்பா
சுத்தமுள்ள சுண்டுவிரல் கனிஷ்டையெனலாகுஞ்
சுகமாக யிதையறிந்து முத்திரையைச்செய்யே. (௩௪)

ஸ்ரீ ஹரயே நம :

## 365. சுவடி நெ. 226 (I)

# சுந்தரானந்திரதிசயம் முப்பத்தாறு

ஏடுகள் *10.* பக்கத்திற்கு *8* வரிகள்.

இதில் எலிவளை, அணில் கூடு - வெண்காகம் - பூஞ்சிட்டு - கரிக் குருவி - கொண்டைக் கரிச்சான் - பூச்சிமுள்ளு - கவுதாரிக் கூடு - தெண்டு புடையன் - முடம் புடையன் - மீன்கொத்தி - கொண்டைச்சிலாத்தி - செண்பக பட்சி - கூகை - தூக்கணாங் குருவி முதலான பட்சிகளின் கூடுகளில் காணப்படும் வேர்களை எடுத்துவந்து உருச்செபித்து உபயோகிக்கச் சித்திகள் உண்டாகும் என்பனவற்றைக் கூறும் நூல்.

*Beginning :*

சீரான வுமைதேவி பாதம் போற்றி
　　சகமகிழச் சுந்தரனார் புவியோர்மெய்க்கு
பேரான வதிசயநூல் முப்பத்தாறிற்
　　பிரியமுடன் பாடுதற்குக் குருவைப்போற்றி
தாரான பட்சியுடகூட்டில் வேர்தான்
　　தனையறிந்து தொழில்வகைகள் தானேசொல்ல
காராளை முகனாணையுமையா ளாணை
　　கருமுறைக ளிதுபோலு மில்லைபாரே. (க)

* * * * *

*End :*

போதுமடா பிராந்துனுட கூட்டில்தானும்
　　புள்ளிகருப் பானதொடு வேரேயுண்டு
நீதமடா யதையெடுத்து நசியோமென்று
　　நீலெட்ச முருச்செபித்து விஷத்திற் கெல்லாம்
வேதமுனி வெந்நீரிலரைத்து மீய
　　வேரதனை கடிவாயிலுரைத்துப் போடு
ஓதுமிந்த மந்திரத்தால் தீர்ந்துபோகும்
　　ஓகோகோ முன்னூலும் முதவாதென்னே. (௩௬)

## 366. சுவடி நெ. 227.

# பாலவாகடம் பொதுக்காண்டம்

ஏடுகள் 56. சுத்தமாக உள்ள பிரதி. பக்கத்திற்கு 6 வரிகள்.
(நீள × அகலம் 36 × 3 செ. மீ.)

இதில் குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்கள், அதற்கான மருந்துகள் முதலானவை கூறப்பட்டுள்ளன. 6 காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. (1) பொதுக் காண்டம் பாட்டு 11. (2) மகவில்லாக் காண்டம் பாட்டு 33. (3) கெற்ப உத்பத்தி காண்டம் பாடல் 39. (4) வியாதி உத்பத்தி காண்டம் பாடல் 58. (5) வியாதி காண்டம் மொத்த பாடல் 198. (6) அலகை காண்டம் மொத்த பாடல் 295. மலட்டின் லக்ஷணம் - கருவழியும் பதார்த்தம். கரப்பான் வர்க்கம் - கணை நோய் வர்க்கம். கருங்கிரந்தி குணம். மாந்தத்தின் குணம். மருந்து - கல் மாந்தம் - ஊது மாந்தம் - வலிப்பு - போர் மாந்தம் - பேய் மாந்தம் - மாந்த சன்னிக் குணம் - துலை மாந்தம் - மாந்த சுரம் - கணை மாந்தம் - நீர்க்கணம் - வறட்கணம் - சுழிக்கணம் - மூலக்கணம் - முக்குகணம் - விஷகணம் - ஆமம் - மந்தாரகணம் - அந்தகக்கணம் - குன்றி அக்கரக்கணம் - நீராமைக் குணம் - மஞ்சக்காமாலை - ஊதுகாமாலை - கீரிப்பூச்சி - மசரிப்புழு - குளிர்சந்நி - கக்குவான் - இளம்பிள்ளை வாதம் - குழந்தைகளுக்கு ஏற்படும் காற்றுச் சேட்டைகள் முதலானவைகளின் குறிகளும் மருந்துகளும் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

வையகத்தினில் வாலையின் வாகடம்
நொய்ய செந்தமி ழாற்சொல்ல நாடோறும்
செய்து காத்தளிக் குந்திரு நாயகன்
துய்ய தாமரைச் சேவடி சூட்டுவாம்.

சீர்நிறைந்த கருணையின் றேவனே
பார்நிறைந்த வுதரம் படைத்தவர்
யேர்நிறைந்த மெய்யன்புட வல்லவர்
கூர்நிறைந்தச்சொல் லொன்றது கூறுவாய். (க)

*End :*

பேய்தான்சேர்ந்து கனவாகப் பிதத்தும் வெருவுமுடம்புலரும்
காயுமுடம்பு வெதும்பிவிடுஞ் சொல்லுமெண்ணெய் புண்ணுக்குத்
தோயுங்கருப்புக் கட்டியுடன் துய்ய மேதித்தயிர் கூட்டி
காயுஞ் சுடலைமாலை தனிற்காட்டிப்பூசை செய்துவையே. (௰௧)

அலகை காண்டம் முற்றும். ஆக காண்டம் 6க்கும் பாடல் 295.

குறிப்பு :

பாலை வாகடம் எழுதி முகிந்தது முற்றும். இது தம்பி கிருஷ்ண பிள்ளை பாடின பாடல் முற்றும். இது நயன செபித்து மிருகான் சுவடி.

ஜய வருஷம் மார்கழி மாதம் 15ந் தேதி எழுதி முகிந்தது. முற்றும்.

---

**367.** சுவடி நெ. 228 (A)

## கயிலாசச் சட்டைமுனிநாதர் சாஸ்த்திரம்

ஏடுகள் 41. பக்கத்திற்கு 10 வரிகள். சுத்தமான பிரதி.

(நீள × அகலம் 17½ × 2½ செ. மீ.)

இதில் சிலசரிமைனம் - சிலசரி மெழுகு - சிலசரி மருந்து - பஞ்சலோகச் செந்தூரம் - சிப்பி அரிசிக்குரு - மயூர அண்டக்குரு - குக்குட அண்டக்குரு - பூனகக்குரு - இந்திர கோபக்குரு - உறுக்கினம். நீத்தினம் - உபரசச் செந்தூரம் - பரிசவேதை முறைகள் - கல்நார் சத்வம் - சுன்னம் இனம் - அய நாகம் - முதலான ரஸவாதத்திற்கான மருந்து முறைகள் கூறப்பட்டு உள்ளன.

***Beginning :***

கானென்ற சிலசரியைச் சொல்லக்கேளு
சாதகமாய் வெகுசுருக்குப் பாற்...
வேனென்ற பூமியொரு வட்டிலாச்சு
வைத்ததொரு கிண்ணியெல்லோ...வாச்சு
கானென்ற வாயுவது மெழுகுமாச்சு
கலந்துவிட்ட சலமல்லோ கடலுமாச்சு
ஊனென்ற சரக்கான சிவசக்திரெண்டால்
வேதையென்ற செந் ( தூரமது ) வாச்சே. (க)

*     *     *     *     *     *

***End :***

செப்பினே னுபரசங்கள் நூத்திரெண்டு பத்தில்
திறமாக ஒளித்துரைத்த நாமமெல்லாஞ்
செப்பினேன் பாஷாண மறுபத்துநாலுந்
தெரியாத பேரிட்ட பேரையெல்லாம்
செப்பினேன் லவணமொடு காரசாரம்
திருக்காகப் பேரிட்ட பேரையெல்லாம்
செப்பினேன் நவலோகஞ்சேர்ந்த யினமெல்லாம்
திருட்டான நாமமெல்லாந் தெரியத்தானே. (சகக)

தெரியவெல்லோ மாயினுடசாஸ்திரங்க ளெல்லாந்
திறமாகப் பார்த்தளிந்து தேவியைத்தான் கேட்டு
எரியவல்லோ மூலத்தில் ஞானத்தீபம்
ஈன்றெடுத்த தாயோடு தந்தையுந்தான் கேட்டுச்
சரியவல்லோ அமர்ந்து நின்றதாயாரான
உன்மனையைக் கேட்டு நன்றாய் .........
திரியவல்லோ அண்டரண்ட பதங்க ளெல்லாஞ்
செப்பினேன் நிகண்டொன்று செப்பினேனே. (சகஉ)

**குறிப்பு :**

கைலாசச் சட்டைமுனிநாதர் சாத்திரம் 413 முற்றும். இந்தச் சுவடி யெழுதினது திருநெல்வேலியிலிருக்கும் வன்னியப்ப வாத்யார்,

**368.** சுவடி நெ. 228 (B)

## அகஸ்தியர் பட்சணி

*ஏடுகள் 12. பக்கத்திற்கு 8 முதல் 11 வரிகள்.*

இதில் அரிதாரவெள்ளை - புழுகுதம்பலத்தின் பூச்சி - வழிவேதை - வசியம் - அரவு விஷம் போக்கி அம்ருதம் உண்ணுதல் - நேத்திரத்தின் ஒளிவு - கதிரொளி தெரிதல் முதலியன பரிபாஷையாக உள்ளது.

*Beginning :*

திருமகள் சோதியாகும் செகதல்லி வல்லிமாது
மருமக ளவளே யுந்தி மவுனத்தி நந்தி தோணக்
கருவது நாமோ சொல்வோம் கண்டதை விண்டிடாதே
பருவமாய் மாதுகற்பம் பட்சணி யறிந்து கொள்ளே (க)

அறிந்து கொண் டென்னைத்தானே அந்தணன் ஓதிக்காட்டி
அறிந்து கொண் டுன்னைப்போலே யடக்கமா யோடுங்காலை
அறிந்து கொண் டதுவே போத மாகமபுராண நூலாம்
அறிந்து கொண்டாரும் பார்க்க வானந்த ஜோதியாமே. (உ)

உதித்த வெண்கரு மதித்த செம்புனல்
துதித்த உந்தியில் மதித்தெழும் பாரே. (ங)

பண்டறி வித்தை யுண்டறி சத்தை
குண்டலி கத்தை மண்டல முட்டுமே. (ச)

*End :*

நிச்சயமாய் வந்துதித்து சத்துநிலை பாரு
அச்சமதுவில்லை முன்பு வச்சபொருள் தேடு
கைச்சுருதி யாகவொரு சர்ச்சையினி வேறு
புச்சை வர்ணருபியிப் பட்சனியின் முற்றே. (கஙஎ)

திருவுரு வாக மேவி யருவுருவாக மேவி
யருவுருவாகமுத்த அகஸ்தியனென்ற நாமக்
கருவதுகாட்டியீசன் கையினலணைத்தே பையன்
பருவமதிதுவே யென்று பட்சணி யுரைக்கமுத்தே. (கஉஅ)

தண்டலையாதி நாமுந் தண்டக மோதும் போது
அண்டரு முனிவர் போற்ற அகஸ்தியன் என்றநாமம்
கொண்டனன் ஈசன்வந்து குருமுனி யென்று கூற
பண்டுள நந்தியென்பார் பட்சணியென்பார் முத்தே. (கஉகூ)

பட்சணி நந்தி மூலர் பாடலும் நம்மைபார்த்து
பட்சணி பாடினர்கள் பாக்கிநற் தண்டகத்தில்
நிட்சய மின்னூல் தன்னில் நிகழ்த்திறே மேகமொன்று
யட்சமுமில்லையப்பா போர்க்காதியான சுரப்பான் முற்றே.
(கங0)

முற்றிலும் நூறுங்கூட்டி முப்பத்தி ரெண்டும்பாரு
உத்திடமது வாய்க்காணும் முற்பனத்துறுதி தோணும்
கற்றவாரென்னூல் தன்னை கருவுடன் கருவைக்காணர்
செத்தபேரில்லை யிந்தநூல் சேர்ப்பதுமுத்தியாமே. (கஙக)

அகஸ்தியர் பட்சணி முற்றும். குரு முன்னிற்க – புறதேவதை துணையுண்டு – குமரன் துணை.

---

**369.** சுவடி நெ. 228 (C)

## பலதிரட்டு

ஏடுகள் 12 முதல் 27 வரை இல்லை. 28 முதல் 46 வரை உள்ளன.
பக்கத்திற்கு 10 வரிகள்.

***Beginning :***

போமென்ற தம்பனமும் வசியம் மோகம்
புகழான பேதனமும் மாரணமுமொன்றுய்

நாமென்ற வாகர்ஷணம் வித்வேசனமும் மொன்றாய்
நலமான உச்சி யாடினம் நாட்டினர்கள்
வேமென்ற அஷ்டகரும மெட்டோடு ந்தான்
விரைந் தொன்றாய் ஆடுதற்கு விபரங்கேளு
ஆமென்ற உடலச்சக்கரத்தைக்கீறி
அப்பனே வட்சரங்களை யறிந்து போடே. (கஉக)

*End :*

வைப்பாகக்கலை கலைசோதி யெல்லாம்
வளமாக வடக்கிவெகு
அய்யப்பா நினையாதே பொய் சொல்லாதே
யாத்தாளை அனுதினமு மறவாதேநீ
செய்யாத தீவினைகள் கொடிது பாவம்
சேர்ந்து வெல்லாமீ சனென்று தெளிவாய்க்காணும்
மெய்யான குருபதத்தைப் பணிந்துபோற்றி
விளம்பினேன் பலதிரட்டுத் திறந்தான் முத்தே.
(உசஎ)

கையில் முகிந்தது முற்றும். சிவசுப்ரமண்யன் துணை. ஓமென்ற உத்தமி துணை. சீயென்றவர் துணை. பரதேவதை துணையுண்டாக வேணும். குருகடாட்சமுண்டு.

---

370. சுவடி நெ. 228 (D)

## திருமந்திரம் மூவாயிரத்திற்கு நிகண்டு வழலை சூத்திரம் முன்னூறு

ஏடுகள் 47. 48 முதல் 93 வரை. பக்கத்திற்கு 10 வரிகள். சுத்தமாகவுள்ளன.

வழலை தயாரிக்கும் விதம் - அதிமூலத்திற்கு லேகியம் - தெய்வச்சரக்குப்பெற - கற்பம் சாப்பிடுதல் - வேதைக்கு - காரீயக் களங்கு - குளிகை கற்பம் - ஊசிக்காந்தச் சத்து - தேவாசுரர்

பிறப்பு - கண்ணுக்குச் சொர்ணக் குழம்பு - கோச பீஜ ஞானம் - பூசை மகிமை - கருவூருக் குணம் - வழக்கம் நீதி - நாதவிந்து மகிமைநிலை - பெரியோர்கள் லட்சணம் - ஞானம் - மௌனக் குறிப்பு - ஊமை உபதேசம் - ரச பற்பம் - தேசவழக்காம் புத்தி - உப்புக்கட்டு - சூத பற்பம் - சூத சுத்தி - உப்புச் சுண்ணம் - சுன்ன லட்சணம் - கட்டுவகை - சந்தனுதித் தைலம் - மகா சந்தனுதித் தைலம் - ரசம் சுத்தி - பூரணக் குளிகை.

*Beginning :*

சீரான தேவச் சரக்கு நிகண்டுதான்
தாரா மறுகணி சத்திகணபதி
பேரான தேவர்கள் பேரையுரைத்திடக்
காரானை மும்மதன் காட்சியின் காப்பே. (க,

காட்சியாங்காரணங் கன்னிதன்னுலே
மீட்சியாஞ்சத்தமா லோகஞ் சமுத்திர
முட்சிதமாயெங்கு முறுதியாஞ் சிற்பரை
வாட்சியா மாநிலம் வாழ்கின்ற தோற்றமே. (உ)

*End :*

சத்துருவெல்லாஞ் க்ஷணத்திலே மாண்டிடு
மித்துருவாகி வெகு மோகனங் கொள்ளு
புத்திராளெல்லாம் சற்புத்திர ராவார்
குத்திராளெல்லாம் குலட்சயமாவாரே. (உகூகூ)

வாரமாயிந்தக் குளிகையைச் செந்தூரித்
தூரமாய் யெண்பது லோகமும் பேதிக்கும்
ஆரமாயிரதம் தோன்றிட அன்பதாம்
பாரமாமாத்துப் பறிகள்ளொப் பல்லவே. (௩௦௦)

ஒப்பறச் செந்தூரம் ஒருமாவருந்திடில்
அப்பனே சித்தி அரைச்சணங் தன்னிலே
செப்பினே னிந்தப் படியே மவுனத்தில்
எப்போதுஞ் சென்று இருப்பார்க்கு முக்தியே. (௩௦க)

371. சுவடி நெ. 328 (E)

## ராமதேவர் அஷ்டாங்க பட்சணி

ஏடுகள் *11.* பக்கத்திற்கு *10* வரிகள். சுத்தமாக உள்ளது.

இதில் சயநீர் வகைகள் - அஞ்சன முறைகள் - வசீகரணத்திற்குத் திலதம் - முதலான முறைகள் உள்ளன. முற்றிலும் பரிபாஷையாகக் கூறப்பட்டிருக்கிறது.

*Beginning :*

ஆதியிலே வாலைமனோன் மணிதான் கூவி
அழைத்திட்டு ஆதியந்த மறியச் சொன்னுள்
சோதியிலே கருவுருவை வுன்னிப்பாரு
சொல்ல வொண்ணு வதிசயங்கள் தானேதோத்தும்
நீதியிலே சதாநந்தி யென்னைப் பெற்ருள்
கீழ்திசையிலுள்ள சித்தர் மெச்சிக்கொள்ள
வாதியென்று வந்தோர்க்குத் திறவுகோல்போல்
வசனித்தேன் பத்துமொரு எட்டும்ரெண்டாய். (க)

ரெண்டாகி ஒன்ருனக் கருவைத்தொட்டு
நின்றனடா ஆதியந்தம் நிலைக்கவேதான்
ஒன்ருனருபமடா யார்க்கும் தோணு
துண்மையடா மவுனியடா வாலைப்பெண்தான்
நீண்டாளே நகாரமேல் மகாரங்கீழே
நிர்விகற்ப சமாதியென நின்ருள் வாழி
சென்ருளே ஆதியந்த மறியவென்று
ஜகமயக்குந் திகைப்பூண்டு திலதம் பூண்டாள். (உ)

*End :*

எட்டுரெண்டு மறிந்தவர்க்கு யெய்துமெய்தும்
யில்லாட்டால் யின்னூல்தான் கிட்டாகிட்டா

துட்டருடனெருநாளும் கூடவேண்டாம்
துடியாக வொருவரையும் பேசவேண்டாம்
இட்டமுட னின்னூல்தான் ஐம்பத்தொன்றும்
ஏகமாய் மௌனமுடனிருந்து கொண்டு
அட்டாங்க யோகமதைத் தினமும்பாரு
அருளான மனேன்மணிதான் காப்பாள்முற்றே. (ருக)

குருபாதந் துணை. மனேன்மணி கடாட்சமுண்டாக வேணும்.

---

**372.** சுவடி நெ. 228 (F)

## ராமதேவர் சூத்திரம் முப்பது

ஏடுகள் 8. பக்கத்திற்கு 9 வரிகள்.

இதில் முப்புச்சுன்னம் செய்முறை - துருசுச் சுன்னம் - வெள்ளீயச் சுன்னம் - நாகச் சுன்னம் - பிண்டவித்தை - மதிய மூர்த பற்பம் - அம்ருத சஞ்சீவி முதலியன உள்ளன.

*Beginning :*

ஆதிகுருவான தொரு பிருமன் பாதம்
அனுதினமும்நெஞ்சில் வைத்து அவளை நோக்கி
சோதிவெளிக் கப்பாலே துலங்குஞ்சத்தி
துணையெனவே கருமானச் சுருக்கஞ்சொல்வேன்
நீதியுள்ள வாலைமானேன் மணிதான் வந்து
நிலைத்தபொருள் கருமறைப்பை நிலத்துளோர்க்குச்
சோதனையாய்ச் சொல்லுவையேர்மாராய்ச் சொல்லி
மனக்கச டகத்திவந் துதித்தாள் பாரே. (க)

பாரப்பா அவளுடைய கடாட்சத்தாலே
பாடினேன் ரண்டு பத்து பத்துங்கூட்டி
தேறப்பா முப்பதென்ற பொருளைக் காணர்
நேரறிந்த சிவயோகிக் கென்னூல் வேணும்

காரப்பா சதாசிவத்தைக்கருத்துள் வைத்துக்
கருவான உப்பெடுத்துக் கலசத்திட்டு
வாரப்பா சுத்த ஜலம் படிதானென்று
வளமான காரமது பலமும் ரெண்டே. (உ)

*End :*

வரிசையுள்ள யென்னூலு மன்பத் தொன்றும்
வகையுடனே துகைபார்க்க யெண்பத்தொன்றும்
உருசையுள்ள அமுதமென உன்னிப்பார்த்தால்
உண்மையுள்ள அஷ்டகர்மம் சித்தியாகும்
பரிசுடைய பூரணத்தை வணங்கிப் போத்திப்
பலகாலும் கேசரத்தில் மனத்தை வைத்து
அருமையுட னமிர்தநிலை தன்னைப் பெற்று
அருள்பெருக திருவின்ப மனப்பர் முத்தே. (௯௰)

குருசாமி துணை. மீனாக்ஷி துணையாகவேணும்.

---

**373.** சுவடி நெ. 228 (G)

## ரோமரிஷி சூத்திரம் இருபத்தைந்து

ஏடுகள் 6; 13 முதல் 18 வரை. பக்கத்திற்கு 10 வரிகள்.

இதில் கரியுப்புச் செந்தூரம் - கெந்தக மெழுகு - செம்புக் கட்டு. சவர்க்காரவைப்பு - வழலைவைப்பு முறை - வேதைக்குச் செந்தூர வகைகள் முதலான முறைகள் உள்ளன.

*Beginning :*

ஓமூலதந்தி முகவன் சரணம் முகந்தோன்று
ஆமூலநந்தி யரசனை யானுந் தொழுது
தான்மூலங் காப்பாரைசரஸ்வதி யெந்தன் வாக்கில்நின்று
ஏமூலசூத்திரங் காப்புத் தொழுதான் ரூசனுக்கே. (க)

மயமான சூத்திரத்திலுப்பு மார்க்கம்
வாதத்திற்காதியென விரித்துச்சொல்ல
சயமான குருநந்தி யுபதேசித்தார்
சிவனோடு உமைபார்வதி நிர்வாணியும்
நயமாக வெப்போதும் முன்னேநின்று
நாடறிய சூத்திரத்தை நயந்து கார்க்க
வயமாகச் சொல்லுகிறே னிருபத்தஞ்சில்
வாதிகளே யென்னூலை வணங்கிக்கேளே. (உ)

**End :**

ஆமப்பா இக்குருவிற்சூதங் கட்டும்
அம்மாள்தான் நந்திக்கு உபதேசித்தாள்
நாமப்பா சொல்லிவிட்டோம் குருபாதந்தான்
நன்றாக யிந்நூல்தான் சுருக்கமப்பா
காமப்பா விரைதனையடுக்க வேண்டாம்
கைமுறைகள் காட்டாதே கருச்சொல்லாதே
ஆமப்பா முன்சாபம் வந்துதீரும்
அருள்பொருளுஞ் சூத்திரந்தா னிருபத்தஞ்சே (உரு)

அருளான நந்தீச ரெந்தனுக்கு
அருளினா ரென்மகனே ரோமரிஷியென்று
கருசமலர்க்குருவைவிட்டால் வானமேமென்ற
பொறிவந்து நீரிப் போவாய்
தஞ்சமென வந்த விடசானும் போற்றத்
தயவுசெய்வார் சூத்திரந்தான் முடிவுமுத்தே (உசு)

குருபாதந்துணை. மனோன்மணிதுணை.

---

**374.** சுவடி நெ. 228 (H)

## சுந்தரானந்தர் சூத்திரம் இருபத்தஞ்சு.

ஏடுகள் 4. 9 முதல் 12 வரை.

இதில் கல்லுப்பு, வெளுத்த உப்பு, அப்பிலே விளைந்த உப்பு, வகைகள், வழலை செய்முறை, முப்பு முடிக்கும் விதம். கவுனக் குளிகை – லிங்கச் சுன்னம் முதலானவைகள் காணப்படுகின்றன.

*Beginning :*

பூமிநாத மேகமே புனல் சொரிந்த பூவதாம்
ஆமடா ரவிமுகத்தி லாயிருந்த விந்தடா
சோமநாத மீறியே சொரூபம் வைத்தசத்தியாம்
ஏமவித்தை பூரணம் மிருக்கவஷ்ட சித்தியே. (க)

அஷ்ட சித்தியாம்புரி யஷ்டகருமம் நேர்மைகேள்
கிட்டமா மெழுத்தும் வகைப் பிறப்பறிந்த யோகிகாள்
மட்டிலாத பஞ்சவாசல் மனமொடுங்கக் கருவிதான்
கொட்டிலேகல் லுப்பிதென்று கூறுவார்கள் மேகமே. (உ)

*End :*

வேதைகாட்டக்கைமுறை வேணுமல்லா தோர்தனக்
காதரவென்னூலடா யறிந்து பாரு வுண்மையாய்
ஓதிதம்போல் நந்திவந்து உபதேசமே செப்புவார்
ஆதியான பூரண மறிந்து பாரு சோதியே. (உரு)

குருபாதந் துணை.

சுந்தரானந்தர் மூர்த்தி சொன்ன இருபத்தைந்து முற்றும்.

---

**375.** சுவடி நெ. 228 (I)

## சராயத்துமாலை

கேள்வி பதிலாகக் கொடுக்கப்பட்டுள்ள இல்லாமிய மத நூல் எனத் தோன்றுகின்றது.

*Beginning :*

முன்னுளரவுபகல் முதுரையு மில்லாநாள்
யென்னவகை யாயிருந்ததுசொல் – பொன்னுக
விளங்குகின்ற ஞானவெளிச் சத்தேரல்லாமல்
பிளக்கின்றூர் பேச்சறியார் பின். (க)

பிணக்காத்து நீர்கொண்டு பேசிமுழங்குகின்ற
தணக்குறிப்பு சொல்லுந் தலைவரே – தணங்குறிப்பு
ஒப்பில்லை சொல்ல உபாயமாய் சொன்னுரே
தப்பாமல் குருவென்று சாத்து. (உ)

*End :*

அறிந்துதவம் பெருவீர்...மீனுக்கல்லாது
முழுமோடர்கிட்டாது
ஏகன் ரகசியமுழுமெழுதி முடியாது கண்டீர்
பேதியெளியேன் பிரார்த்தியர் நயத்தை
தெரிந்தமட்டுந்தானும் செப்பினேன்
தீன்னோர் கண்டு ஆமீன் அல்லாக்கு
ஆமீன்அறிந்து தவம் பெருவீர்
நாதனிருப்பிடமும் வெளியாகத்
தோணுதடா வேதமோதும் பாவிகளே.

*Colophon :*

பட்டீச்சுரத்திலே இருமதுள் புத்திரனுகிய குமாரன் ராமசாமி யென்பவன் எழுதினது. விருதிகிருது வருஷம் தை மாதம் 30௳ எழுதி ராவுத்தர் ராவானுக்குக் கொடுத்தது. அப்துல் சலீல் ராவுத்தருக்குக் கொடுப்பது.

பின்னர் கடைசி ஏட்டில், **சுந்திரானந்தசுவாமி கேசரி நூல்** என்ற தலைப்பில் கீழ்கண்டுள்ள செய்யுள் மாத்திரம் காணப்படுகின்றது.

கேளப்பா வினேதவித்தை கோடியுண்டு கேசரிபோல்
சுருக்கொன்று இல்லையப்பா
மாளப்பா மாண்டவுடனெடுத்துவந்து மாண்டேதான்
ஆள்புழங்க விடத்தில்போட்டு
சூளப்பா சுவரைவைத்துமேலேமூடி சுகமாகக்
காத்துவெய்யில் மழைபடாமல்
வாளப்பா மண்டலந்தான் கிடந்தபின்பு வளமாகச்
சமூலமெல்லாம் வாங்கு வாங்கே (க)

கடைசி ஏட்டில் அகஸ்தீசர் 205 என்ற பெயரில் 'துருசுப்போக்கு' ஒரே செய்யுள் அபூர்த்தியாக எழுதப் பட்டுள்ளது.

376. சுவடி நெ. 229

# தேரையர் வைத்யம்

ஏடுகள் 60. பக்கத்திற்கு 8 வரிகள்.

(நீள × அகலம் 30 × 3 செ. மீ.)

ஓலையின் நுனிப்புறம் சிதைந்துள்ளன. பிரதி கூடியவரை சுத்தமாக இருக்கின்றது.

இதில், சுயமாய் பிறந்த தாது. பரங்கி வைப்பு - பஞ்சதொட்டி வகை - நவலோகம் - சத்துரு மித்துரு சாரக்குரு - துருசுக்குரு - காரக்குரு - உப்புக்குரு - பூரக்குரு - உபரசப் போக்கு - கழங்கம் மெழுகு - சூதப் பெயர் - புடம் - ஊத்து எரிப்பு - செயநீர் காலம் - குருமுறை - திராவகச் செந்தூரம் - சிங்கிக் கிராவண வகை - மாதவிடாய் - சுக்கிலம் - பெண்களின் பெயர் - முலைப்பால்; அமுரிப் பெயர் - ஞானம். ஸௌவீரவைப்பு - செயநீர்குரு - வெள்ளிக்குரு - பஞ்சபாஷாணக் குரு - கிளிஞ்சிச் சுத்தி - சாரஞ்சயம் - வீர மெழுகு - துரிசுக்குரு - கெந்தகப் பாஷாணம் - கவுன குளிகைக்குரு - சாரமுதல் சயநீர் நூறுக்கு வகை - பாத்திரம் - வீரம் - துரிசுச் செயநீர் - சாரக்கட்டு - சார ஜயநீர் - தங்கக்குரு - கல்லுப்புக்குரு - பூரச் சுன்னம் - தாளகச் சுன்னம் - கௌரீசத்துச் செந்தூரம் - வீரச் சுன்னம் - கண்டரசச் சுன்னம். அண்டம் 10க்கு வகை. அண்ட தைலம் - கல்லுப்புக்கட்டு - பஞ்சவண்ணக்கட்டு - திராவகம் - கபரிதூம்ர வேதை - நிமிளை - மயிலண்ட வித்தை - தாளக வித்தை - காந்தம் - அப்பிரகம் - நிலையான ருத்திரன் ரஸம் - சந்தானச் சூதம் - பால ரசப் பெயர் - நீலகண்ட சூதம் - தத்துவம் 90க்கும் விபரம் - காம நோவுக்குக் கல்பம் - தீட்சை - உயர் தேவரசம் - ஆதிமகா ரசம் - ருத்திர ரசம் - நிர்மலச் சூதச் செந்தூரம் - குளிகைச் சாறணைத் தைலம் - குளிகைக் கிடைத்திட்டம் - கடுக்காய் - சதிரக் கள்ளி - மிளகு - கற்றாழை - நாறு கரந்தை - பொற்றலைக் கையான் - சீந்தில் - வேம்பு - சிறுசெருப்படி - சிவனார் வேம்பு -

வாலுளுவை - தூதுவளை - அழிஞ்சில் - கண்டங்கத்திரி - அமுகண்ணி - தொழுகண்ணி - சாயாவ்ருட்சம் - இவைகளின் பெயர் - வராக வித்தை (ஏடு 47) தேரையர் சுந்தரருக்குச் சொல்லியது - உப்புக்கட்டு - சைலோதகம் - நூல் தொகை முதலானவை.

*Beginning :*

சதை நிறம் செந்தில் ......... உதநிறமாநிற் முடியகாரநிறம்
பந்நிறம் புவுநிறம் பறங்கிச்சிலைநிறம் மதநிறம்போல
மாங்கிலச் சிலையே. (கஉஎ)

மாந்துளிர்க்கல்

நவிநிறம் தோனிறம் ......... நல்நிறம் செப்பின்சிலையாந்தவிநிறந்
தன்னிறந் தனிமாதளைசிவ்வ மாந்துளிர்கல்லின் பெயரே.
(கஉஅ)

*End :*

தாமிரச் செந்தூர முறை

செம்பு கெந்தி சூதம் லிங்கஞ் சீத பூத மளவு கேள்
தேச பாஷை ராசி கேழ் சிறந்த வாரம் வேதமே
அம்பரைந்து மரைத்துமோர் கற்கமுள்ளடைத்தபின்
ஆனசில்லு மூடிச்சீலை ஏழுபோடுலர்த்தியே.
செம்படாத தீபமுங் கமலமுங் காடாக்கினி
தீநிறுத்திடாமலே யிராப்பகலறுபதும்
வம்பாடா தெரித்தெடு களங்கமே செந்தூரமாம்
வடர்ந்த நோயறிந்துசெய் மருந்திலோர் பணவெடை
அறுந்த வாத மெண்பதும் அகன்ற பித்தம் நாற்பதும்
துடர்ந்த சிலேத்மந் தொண்ணூற்றாறுஞ் சூலை வாயுவு
சோகையும்
படர்ந்த குஷ்டங்கள் முவ்வாறும் பதைக்குங் குன்மமெட்டுடன்
பாரில்சூலை பதினெட்டுடனே பகருங்கிரூணி யறுவகை.

கிடர்ந்த சுரோணித வாயு மேகம் காசஞ்சய மிருபதும்
காணு மூல மென்பதும் கடிவிகார மானதும்
தடர்ந்த அண்ட வாதஞ்சன்னி தோழமுஞ் சயித்தியங்
தானறு மென்றே வுலகில் சாற்றினர் செந்தூரமே.

இதனுரை :-

**அரைப்பு :** குன்மகுடோரி இலை. உத்தமாதாளி - குமரிச் சாறு - பழச் சாறு வகைக்கு ½ சாமம் என்றரைத்து உலர்த்திப் பொடி செய்து ஒரு கலசத்திலிட்டுச் சில்லிட்டுச் சீலையேழு செய்துலர்த்தி ஒரு சட்டியில் ஆற்று மணல் 1 அங்குலம் பரப்பி மேல் மருந்தின் கலசம் வைத்து மேல் சட்டி மூடி 7 சீலைமண் செய்துலர்த்தி அடுப்பிலேத்தி தீபாக்கினி 20 நாழிகை, கமலாக்னி 20 நாழிகை, காடாக்னி 20 நாழிகை விடாமலெரித்து, ஆறினவாறே எடுத்துத் தூள் செய்து, ஒரு கலையத்திலிட்டு மூடி, நெல்லில் ஒரு மாதம் புதைத்துவைத்து, எடுத்துப் பரணியில் அடைத்துக் கொண்டு, வாதபித்த சிலேத்மத்திற்கு அனுபானமறிந்து சுக்கு, சீரகம், மல்லி, கடுக்காய், நிலாவாரை இவை சமனிடித்துத் தூள் செய்து, வெருகடித் தூளுடன் செந்தூரம் பணவெடை சேர்த்துக் கொடுக்கவும். பித்தவெட்டை, சோகைக்குக் கிட்டான் சூரணத்தில் பணவெடை சேர்த்துக் கொடுக்கவும். இன்னும் அனுபானமறிந்து தேன், நெய், வெண்ணெய், சீனி, இஞ்சிச் சாறு இதுகளிலுங் கொடுக்கலாம். மருந்தெல்லாம் நன்றாய் சுத்திசெய்து சேர்க்கவும் எரிப்பிற்கு ஒரு சாதி விறகாலெரிக்கவும். மருந்தில் களங்கம் இருந்தால் பழச் சாத்தால் 4 சாமமரைத்து, முன்போல் 4 சாமம் எரித்தெடுத்துக் கொடுக்கச் சகல வியாதியுந் தீரும். பத்தியம் இச்சா பத்தியம். புளி, புகை, கைப்பு, கடுகு, பூசணி, பாகல், தவிறவும். மருந்தின் நிறை :- தேசம் 56, பாஷை 18, ராசி 12, வாரம் 7, வேதம் 4, என்று அறியவும்.

### கோடாசூழி மாத்திரை

இரதங் கெந்தக மரிதாரமிசைந்த நாபி யிருவியுடன்
சுரதந்திப்பிலி வெங்காரம் துய்யமிளகு வேர்க்கொம்பு

உரதங்கடுக்காய் நெல்லிதாணி வோங்கும் வாளஞ்சரிகூட்டி
விரதங்கையாஞ் சாத்தரைத்து மிகுத்தகோடா சூழியிதே.

இதன்பொருள் :-

அரிதாரம், லிங்கம், நாபி, திரிகடு, திரிபலை, இரதம், இருவி வகைக்கு வராகனெடை 1, சுத்திசெய்த வாளம் சமன் கூட்டி, முருக்கிலைச் சாத்திலரைத்துக் குன்றிப்பிரமாண வுண்டை செய்து அனுபானத்திலிடவும். சகல சுரமும், வாயுவும், குன்மமும் தீரும்.

கடைசி ஏட்டில்

பொன்னிலேக் கந்தனண் புகழ்பெறவே யான்படிக்கக்
கன்னிமுக வாரணமே காப்பு.

என்று எழுதப்பட்டுள்ளது.

---

377. சுவடி நெ. 230

## தன்வந்தரி குணவாகடம்

ஏடுகள் 186. பக்கத்திற்கு 7 வரிகள்.

(பல ஏடுகளில் பூச்சியரிக்க ஆரம்பமாகியுள்ளன)

(நீள × அகலம் 30 × 3 செ. மீ.)

இதில், பாயிரம், கெற்பசாரம், சத்ததாது, வயதுநிலை, பஞ்சபூதப் பிறநிலை, தசவாயு, பிராண, அபான, வியான, உதான, சமான வாயு கூர்மன், கிரிசரன், தேவதத்தன், தனஞ்சயன், முதலியவை. தசநாடி - நாடி பரிஷை, தச அவஸ்தை சுவாச விவரம் - கருவிக் குரைதல் - வாத சரீரம் - பித்த சரீரம் - சிலேத்தும சரீரம் - தேக பரிட்சை - சலப் பரிட்சை - நாடியளவு - நாடி நடை லக்ஷணம் - வாத, பித்த, தொந்த, வாதச்லேத்மம் - நாடி யிடம் தெரிய - மரண நாடி - சந்நி நாடி - சுர லட்சணம் - ஸ்திரீசங்கம நாடி - நாடி அகவல் - வாத நிதானம் அகவல் - பித்த நிதானம் அகவல் - பித்த நாடி

அகவல் - சிலேத்ம நாடி அகவல் - அசாத்ய நாடி அகவல் - 13 வகை சந்நி நிதான அகவல் - அஸாத்ய குணம் - வியாதி வராமல் தடுக்கும் விதம் - நாடி பார்க்கும் மாதம் - வாத, பித்த, கப காலம். வாத பித்த கோபம் - பித்த கோபம் - சிலேத்ம கோபம், வாத பித்த கபக்கதிப்பு - நாடி லக்ஷணக் குறி - சுர நிதானம் - சுரலங்கன விதி - வாத, பித்த, கபச் சுர வகை - விஷம - பூத - சந்நி நிதானம் - சாத்யா சாத்யம் - சந்நி பாதச் சுரம் - பித்த வெறி - பித்த வாத வெறி - மூத்திர பரீக்ஷை - மல பரீக்ஷை - அண்டவாதம் - வாத கரப்பான் - பித்த குணம் - கீழ்நோக்கிய ரத்த பித்தம் - சயரோகக் குணம் - உளமாந்தை - விப்புருதி - மூலக் குணம் - வாத, பித்த, சிலேத்ம மூலம் - அதிசாரம். பிரமேகம் - உதரக்கிரிகை - குன்ம நிதானம் - எழுநாயறு குணம் - ஒருத்தலைவலி - சூதக வாயு - காமாலை - விக்கல் - குடல் கொழுப்பு - அருவை - நீராமை - பீலிகை - மகோதரம் - கன்ன ரோகம் - தந்த ரோகம் - விஷபாகம் - சலமஞ்சரி. (நீர் கட்டுக்கு) நீரழிவு மருந்து - குன்மக் கட்டிக்கு மருந்து - திராவகக் கரு - உபரஸங்களுக்குச் சோதனை - பத்தியம் - நடுக்குவாதக் குணம் - அசாத்யக் குறிகள் - சுரம், சயம், அதிசாரம், சன்னி முதலியன. 64 சுரத்திற்கும் பெயர் - மாறல் சுரம் - க்ஷய சுரம் - தருண ஜ்வரகஷாயம் - குடிநீர் வகைகள் - விஷ நிதானம் - தேனில் அவுஷதம் - சூரண வகைகள் - தாளீசாதி - அச்வசந்தி - கற்பூராதி - தானேந்திரக் குளிகை - தாளகச் செந்தூரம் - வச்சிரவல்லி லேகியம் - பாண்டுரோக மருந்து - பாரிச வாயு குணம் - பரங்கிபட்டைச் சூரணம் - சூலை மருந்து - சுகவிரேசனம் - கெற்ப வாயுக் குளிகை - ராமபாணத் தைலம் - மாந்தத்திற்கு எண்ணெய் - அக்கரத்திற்குக் குளிகை - மூத்திர கிரிச்சம் - பவுத்திரம், கிராணி என்பன.

*Beginning :*

மெய்யுடைய வடிவுடையார் மேல்
விருப்புடையான் கற்பூர விளக்குப்போலேன்

பொய்யுடைய வருள்போதப் பொருளுடையா
னருளுடையான் பொரு ளயந்தாலும்
மெய்யுடைய மனத்தாலும் மயக்குடையார்
தங்களைத்தான் மகங்களாக்குங்
கையுடைய முகமுடையானைத் தினந்தோரும்
கருத்தினிலிருத்தல் செய்வாம். (க)

சோதிட விவகாரங்கள் சுத்தியாம் பிராயச்சித்தி
நீதியாம் வைத்தியங்கள் நெறியுஞ்சாத் திரப்படிக்கும்
ஓதிடப்பாவமில்லை யுத்தமக்கருமமாகும்
நீதிடப் பிரும்மஹத்தி செய்பவர் மூடர்தாமே. (உ)

*End :*

உடம்பு வெளுக்குங் கருக்கை பசுக்கை
உதிரம் போலாகை ஒளியுண்டகை பலகால்
நித்திரை உதடும்நாக்கருகை
திடம்படிடைக்கண் குவளையிசிக்கை தீண்டர்
பரிமளமும் திணறுஞ்சோத்தைத் தாகமுமுன்னூர்
திடவான குரலோய்தல் வட்டிபெறு மேனியும்
வாயும் நாறுங்கை மயிர் தாரரையிடுகை
வலுவில்லாதவர் குரலுண்டாகை வாராநித்திரையும்
மாடமயில் லவைநின்னம் நெகிழகை நல்லறிவும் கெடுகை
நாடலிக்குணமே யதனிலுரைவார் நாசமுமாவாரே.
(ருஉ)

தலையிலு மெண்ணெய் தடவி யெருமைதனிலும் பன்றியிலும்
தரவுயுரம்பில் லொய்புலிகழுதை தானிவை மீதேறி
கலையள் சிவப்புமணியுங் குளித்துக் கருகினுய் தினவெடங்
காணவுமொருவன் தெற்கேபோகக் காண்பதுமிவையன்றி
மலைதனில் நின்று கீழேவிழவும் வளர்புத்தில் நரியில்
வாழை முருக்கிலேறவு மெண்ணெய் வாங்கி வந்தாலும்
பலவகை யிட்டிக் கனவில் காண்பார் பரியநோய் கொள்வார்
பாரியநோய்களடைந்தோர் பரம பதஞ் சேர்வாரே.
(ருஉக)

### 378. சுவடி நெ. *231* (A)

# கொங்கண நாயனுர் அருளிச்செய்த கடைக்காண்டம் ஆயிரம்

(*மனோன்மணி*)

ஏடுகள் *116.* பக்கத்திற்கு *8* வரிகள். சிதிலமாயுள்ளன.

(*நீள × அகலம் 30 × 3 செ. மீ.*)

இதில், உப்புக்கட்டு, உப்புச்சுன்னம் - தாளகச்சுண்ணம் - வங்கம் - தாளகம் - பூரவைப்பு - ஜயநீர் வழலையிட - கெந்தி ஜயநீர் - துரிசுச் சுன்னம் சவர்க்காரச் சுன்னம் - பூர ஜயநீர் - தாமிரச்சுத்தி - துரிசு வெண்ணெய் - துருசு மகத்வம் - கள்ளிப் பால் நீர், பொன் விளைவு - பஞ்ச பூதம் - துரிசுச் சுன்னம் - லிங்கசுத்தி லிங்கக் கட்டு - கட்டு - கட்டினத்துக்குரு - வங்கக்குரு - கருவங்கப் பெருமை குளிகை கட்டச் சாறணை - சித்திக் குளிகை - உபமான திருடன் - சிருஷ்டி விபரம் - லிங்கக்கட்டு - லிங்கச் சூதக்கட்டு - துத்தச் சுண்ணம் - தங்கநீர் - வீரக்கட்டு - உப்புச் சுன்னம் - தனி மூன்று வழலை - வீரமெழுகு - ரசிதச் சுன்னம் - வாதிகுணம் - ஞானம் - சிவன்சத்தி மூலம். தைலசிங்கி - உதகசிங்கித் தைலம் ராஜஸ தாமதம் - இரும்பு உருக்க - இரும்பு செம்பிலூட்ட — நூலுட விபரம் - மாத்துபலன் - ஞானவாத உகமை - கோடியில் ஒருவர் - நாகக்கட்டு - வாலைரஸம் - நூல் பாறிக்க - மட்டவிபரம். உப்புச் சுன்னம் - இணங்கன் சுன்னம் - தங்கச் சுன்னம். உப்புஞ் சூதம் ரண்டுஞ்சமன் - உலகத்திற்குப் புத்தி - கன்னி ருதுவறிந்த ஐந்தா நாள்கூட - பஞ்சபூத மிஞ்சில் பிண்ட உற்பத்தி - நினைத்த புத்திப்பிள்ளைக்கு அனுபோகம் - உப்பு அப்பு - உப்பும் கிண்ணம் - உப்பு அடியைத் தொட்டாடு - உப்புக்கட்டு, களங்கு வகை - செந்தூர வகை - குரு வகை - மெழுகு வகை. நித்தினம் உருக்கினம் - செந்தூரம் - வர்ண இனம் - கட்டினம் - யோகம் - யோக நிஷ்டை - உப்பாய தண்ணீர் வங்நி - துருசுக்குரு - லிங்கம் கட்ட - கபாலவித்தை - மயினம் - ஆதார தியான பூஜை - கசடர் ஜயமார்க்கம் - சூஷ்ம வைரச் சுன்னம் - எழுசரக்கு - உப்பு

அடியைத் தொடுவார்க்கு - குரு நடனம் - வழலைச்சுன்னம் - வங்க - தங்க - துருசுச் சுன்னவகைகள் - வாத பூராதார வழலைச்சுன்னம் - துடிவங்கம் காணுதார்க்கு - ராலுக்கு விபரம் - உப்பு - சூதச் சுன்னம் - உப்புப் பெருமை - ஞானம் - மூலாதாரம் - பிராணயாமம் - 6 ஆதாரம் - பூரணம் மூன்றும் தொடும் இடங்கள் மூலம் - துரியாதீதம் - சுவாதி - பூரகம் - சுழி அனுகதம் - சுழுத்தி - விசுத்தி - கனு - மணித்தாய்சாக்கிரம் - வெடியுப்பு மகிமை - வேதாந்த தத்துவம் - சித்தாந்த தத்துவம் - சிவனடக்கம் - துரிசு - வங்கச் சுன்னம் - புருஷன் ஞானம் - அயனுகம வித்தை - உபரசத்தின் பெருமை - அஞ்சு தொழிலுண்டு குருவைக்கேளு - நாகரச கெந்தகம் - கபாலத்திற்குள்ளே எழுத்தென்பார் - நத்தை, சங்கு, கிளிஞ்சி, காட்டுநத்தை - கபால அஸ்தி - பூநுக அம்ருதசஞ்சீவி - இந்திரகோபம் - எட்டும் இரண்டும் - விளக்கில் கெந்திபோட - வழலை வங்கம் சத்துவகை சேர்க்க - அப்ரகச்சத்து - பூநுகச் சத்து - உருக்கு முறை - அஷ்டகர்மக் குளிகை - சஞ்சலப் போக்கு - முத்தனுபாவுகமை சொல் - மூலிகை உண்ணும் வகை - குருபதம் சதஙித்தம் உள்ளேபார் - அகஸ்தியரைக் காணல் - வற்றுவித்தை - பர்ப்பினி - புணர்ச்சிக்கு விபரம் - அமுதநிலை - துரிசு சுன்னம் - வாசிக்குதிரை - ஞானம், சோதியெல்லாஞ் சுன்னம் - ரசங்கட்ட. கெந்தகச்சத்து - தாமிரக்குரு - சுக்கிலத்தினல் சிகப்புநாதவிந்து - சடம் - யெமுங்கைத் தோற்றம் அமுரிக்குரு - ஞானமதிப் பலகை - வங்கங்கொண்டு கடைதிறக்க - அசந்திட்டயிடம் - நவக்ரஹம் - துருசுக் கட்டுவகை - வங்கத்தில் கெந்தியிட்டுத் துத்தம் சேர்க்க - வங்கம் போனல் சிங்கி - சிங்கியினல் கலக்கோவிலெல்லாம் பறிமடல் - உதகப்பூரிப்பு - குளிகை மார்க்கம் - உதகமெழுகு கற்பம் - முதலியன.

***Beginning :***

மன்னனை ஆயிரத்தை விரித்துச் சொல்வேன்
பேரான தொழிலோட வழக்கங் கோடி
முன்னனை கருக்கோடி களங்கங்கோடி
மருவியதோர் மெழுகு முதல் குளிகைகோடி

தன்னுன வுதாரணச்சொல் லதிலே கோடி
மயங்காத சத்துடன்கைத் தொழில்கள் கோடி
அன்னுனப் பிரக் கண்டம் பாதமென்றன்
அதுவிட்டால் நடப்பேது அசடர் பாரே. (க)

* * * * * *

*End :*

போச்சென்று பார்த்தபடி யடியேன் சொன்னேன்
புகழுத்த பெரியோரைக் கோபம் வேண்டாம்
ஆச்சென்று முனுகாண்டஞ் சொன்னேன் சொன்னேன்
அருள் பொருளே தப்புகிலு மடிமைமேலே
வாச்சென்று கோபம் வந்தால் மைந்தனென்று
மகத்தான பெரியோர்கள் பொறுத்து மாந்தும்
ஓச்சென்று யென்னூலி லுரைத்த கருமம்
ஓங்கியதோர் மணித்தாய்க்குங் குருவுக்காச்சே. (1049)

குருவிற்குப் பணிந்து நின்றேன் இருபத்தொன்று
கூறுகப் பசிஞெருக்கால் மூலரைநான் தொழுதேன்
கருவுரைத்த சித்தர்களை யேழுதிறந் துதித்தேன்
கடாக்ஷித்த பெரியோர்கள் பதத்தையென்றும் பணிந்தேன்
திருவுறைந்த யென்னூலை படித்த வர்க்கெல்லாஞ்
சிவயோகத் தவமுடைத்த பெரியோ ரய்யா
பருகுகின்ற நாலி லொன்றிப் பராபரமுமாவார்.

... ... ... ... ... ...

கடைசி ஏடு சுவடியில் காணப்படவில்லை.

---

**379.** சுவடி நெ. *231* (B)

## கொங்கணர் வழலைமுறை முப்பது

ஏடுகள் 3. பக்கத்திற்கு 8 வரிகள்

ரஸவாதத்திற்கு உபயோகமானது.

*Beginning :*

அஞ்சென்ற மனத்திற்கப்பால் அகம்புறம் ரெண்டுவுண்டு
நெஞ்சுண்டகந்தான் சாது நயனந்தான் புறமுமாச்சு
அஞ்சென்ற ரண்டுமங்கே யடைபட்டால் போதங்காணும்
தஞ்சென்றனுத்தாள் சொன்னுள் தான்தேடிப் பார்த்தவாறே (க)

தேடிமுன் சித்தர் பார்த்துத்தெளிவான காலைக்கொண்டு
ஓடிமுன் சீச்சீயென்று ஒளித்தார்கள் லோக மாய்கை
நாடிமுன் சுழிக்குக்கீழே நலமான யிடைபின்ரண்டு
வாடிமுன் சிறந்துநாலும் வன்னிக்குள் ளடைத்தார்பாரே. (உ)

*End :*

சிவப்பான வயிற்றின் மேல்த்தெளிவான வெளிமுன்றுண்டா
முவப்பான வயிற்றுள்ளேயே ஊறு மூன்றுண்டாம்பாரு
நவப்பான கோணம்மேலே நவரத்தின வொளிகள்வீசும்
தவப்பான பாக்கியங்கே விதாகியுள் நோக்குவாறே. (உகூ)

தாக்கியுள் நோக்கினுக்கால் தானமரஞ்சுவேறே தோன்றுஞ்
சாக்கிரங் கண்டதெல்லாங் தயாநிதி நிர்மலமாய்
தூக்கியுள் ளோடும்பாரு சொற்பனங்களுருக்கினுப் போல்
தேக்கியுள் ளழுந்தினுக்கால் தேற நாள்செல்லும்பாரே. (௩௰)

கொங்கணர் வழலைமுறை முற்றும்.

---

**380.** சுவடி நெ. *231* (C)

## கொங்கணர் சரக்குவைப்பு நூற்றுமூன்று

ஏடுகள் *14*. *32* முதல் *45* வரை. பக்கத்திற்கு 8 வரிகள்.

இதில், சீன வைப்பு - சூடன் வைப்பு - வெங்கார வைப்பு - சார வைப்பு - துருசு வைப்பு - சீனப் பாஷாண வைப்பு - கௌரி - தொட்டி பாஷாண வைப்பு - கெந்தி முறை - மிருதார்சிங்கி

வைப்பு - சாம்பிராணி வைப்பு - துத்தநாக முறை - வெள்ளீய முறை - பெருங்காயம் - அபினி வைப்பு - கவுன குளிகை முதலியன.

குறிப்பு :

இந்த சுவடி 'கொங்கணர் சரக்குவைப்பு நூறு' என்ற பெயரில் ஏற்கனவே சரஸ்வதிமஹால் நூல்நிலையத்தாரால் அச்சிடப்பட்டுள்ளது.

*Beginning :*

ஆதியந்தமில்லாத வெளியுந்தாண்டி
அகன்றுநின்ற போகருட பாதம்போற்றி
சோதியென்ற சின்மயத்தின் ஆயிபாதம்
துலங்கியதோ ரிஷிகளுட பாதம்போற்றி
நாதமென்ற சுந்தரமே சொல்லக்கேளு
நலமான முறையதுவோ துறந்துசொல்வேன்
நீதியென்ற ஆயியுட பாதந்தன்னை
நினைவுகெட்டுச் சொல்லாதே நிலத்துள்ளோர்க்கே.

*End :*

தானென்ற செங்கதிரோன் முறையேதென்னில்
தனித்துநின்ற வுப்பொன்று மூலம்பாதி
வேனென்ற மூலத்தில் படிகம்பாதி
விளங்கியதோர் படிகத்தில் தாயேபாதி
கானென்ற திவையெல்லாம் அரைத்துக்கொண்டு
கைமுறையால் தீபமதாயெரிக்கும் போது
நானென்று உருகியல்லோ மெழுகுமாகும்
நலமாக வெயில் வைக்கநீறுமாமே. (மஉ)

ஆமப்பா கேசமான அமுரியாலே
அப்பனே உடைந்து சுன்னம்பாதி
சோமப்பா குழம்பாக்கிச் சாய்த்துப் போடு
செகத்தைவென்ற வயிரவன்தான் ஏமத்தின்தைலம்

நாமப்பா தொட்டிக்கு அரைத்துக்கொண்டு
நன்ருகச் சட்டிக்குள் மூடிப்பின்னை
ஏமப்பா எடுத்திடுகில் சொன்னேன் சொன்னேன்
உத்தமனே துறைக்கெல்லாம் ஆதிகூட்டே. (௰௩)

முற்றும் தேவி சகாயம். இப்படிக்கு ரங்கசாமி எழுதினது முற்றும்.

---

### 381. சுவடி நெ. 231 (D)

## மச்சமுனி பாடல் வழலைமார்க்கம்

ஏடுகள் 6. பக்கத்திற்கு 8 வரிகள்.

இதில், பதி, பசு விளக்கம் - முப்பு, கவன குளிகை, கார சார வகை முதலானவை விளக்கப்பட்டுள்ளன.

*Beginning :*

நடுமைய்ய காகார வகாரத் திரையங்
கடவிதடத்தானை முகனங்காப்பாம்
திடமான சார்த்துரையுந் தனிச்சூடன்றன்னி
ருங்காரத் துரைத்தனங்காண்பொன்னிமுலா போக்கி
ரசவாதம் நன்னயமாக நாட்டினுன் பாட்டில்
கன்னியிலுண்டைச் சவுக்காரமன்றி
பின்னொரு காரம் பிதற்றுகின்ருரே. (க)

ஆரமிடுமுப்பூவை அறிந்தவன் சீருள்ள
வாதியாதிட்டரு செலுத்துவான் சாரில்
பதினெண் முழத்துளாய் தொண்டிருரை
ஆதிசிவனுன வாறே. (உ)

* * * * *

வித்தானவிந்துநிற மேவிடும் வேதை யாம்
வித்தான நாதநீர் விட்டிடும் வேதையாம்
வித்தாம் மகாரசமே தங்க வேதையாம்
வித்தான வீரந்தான் மேவப் பலிக்குமே. - 52

*End :*

ஒப்பவைரவமாம் அதிலுள்ளங் கண்டவன்
எப்போதுஞ்சாகா னிறையவனென்னலாம்
அப்பா பராபரத்தான் வெழுத்தைச்செப்பச்
செப்பச்சிவமாஞ் சேரவும் முற்றுமே. - 81

மச்சமுனியார் பாடல் எண்பது முற்றும்.

* * * * *

இருவதிருந்தயிடம் எண்டிசையண்டம்
அரிபிரமாதிக ளாருமறிந்திலர்
பரிதியும் சோமனும் பவித்தநம்முள்ளே
சுருதி முடிந்திடச் சொல்லவொண்ணுதே.

அடி முற்றும்.

---

382. சுவடி செ. 231 (E)

## அகஸ்திய நாயனுர் அருளிச்செய்த இரண்டாம் பூரண ஸூத்ரம் இருநூறு

ஏடுகள் 16. 15 முதல் 31 வரை. பக்கத்திற்கு 8 வரிகள்.

முப்பு முடிப்பதற்கான வழிமுறைகள் - குருபூஜை - வாலை பூஜை முதலானவைகளுள்ளன.

15 – 16

*Beginning :*

மேருவிலுதித்த பூரணமதாகி வெளிப்படுஞ் சோதியதனல்
கருவினிற்றங்கி நான்முகன் விதிக்கக் கணபதியுச்சியிடத்தே
யுருவினிற்றேன்று மானிடப்பூரண முதிக்கின்ற சோதிமணியே
திருவினிலுதித்தது ஞானவெளியெனத் தெளிந்தவர்
மதியெனக்காப்பு. (க)

விதித்ததோர் வட்டத்தில்மேவுதிருவடி
பதித்ததோர் பிரமன்பாதியிடமாக
உதித்ததோரவ்விடம் ஓங்காரத்துள்ளே
சதித்ததோர் பூரணந் தானதுதாமே. (உ)

*End :*

வாதுசெய்யா பூரணத்தைக் காட்டவேண்டாம்
மைந்தனேயுனக்கதுதான் புத்தியப்பா
மோதுசெய்யா வுலகுதனில் திருடருண்டு
பொய்கொலைகள் செய்வாரைச் சேரவேண்டாம்
நீதஞ்செய்யும் பெரியோர்கள் வேதாந்தியாகிலும்
நிலவரத்தைக்கண்டு மனந் தேறிச்சொல்லும்
கோதைசெய்யும் பெண்மாய்கை நீக்கிநீயும்
கொண்டேறிப் பூரணத்தை நோக்கிப்பாரே. – 200

நோக்குமப்பா புலத்தியனே யிருநூறும் பார்த்தால்
நூலரு பக்கவெளிபோலே துலக்கமாகும்
வாக்குமப்பா வுந்தனுக்குப் பூரணத்தை
மருவியே சொல்லிவிட்டு யிந்தேறிக்கொள்ளு
போக்குவது வுயிரெழுத்து ஆக்கினையில்லை
சொன்ன பொதுவாக்குக்கு வறிந்தடங்கிநீயும்
தாக்குவது மொன்றப்பா யூணிநீயும்
சதாசித்யம் சிவயோகம் பூட்டிவாழி. – 201

பூரண சூத்திரம் முற்றும்.

## 383. சுவடி நெ. 231 (F)

## கருவூர் சுவாமியார் சாஸ்திரம்

(அதிசயத் திரட்டு சூத்திரம் பாடல் திரட்டு.)

ஏடுகள் 46 முதல் 91 வரை. பக்கத்திற்கு 8 வரிகள்

இதில், வங்கவேதை, சூத வித்தை, ரச சுத்தி, செம்பு சுத்தி, நாக பற்பம், அஞ்சனம், கலியுக சித்தி, சூத்திரத் திரட்டு, ஞானு உருக்கு - தாளகப் போக்கு - சவுக்காரம் - சட்டி மூடு வர்சை - உப்புச் செந்தூரம் - ஞானு மூலம் - பாஷாணக் கட்டு - தங்கச் செம்பு அரிசி - தம்பனக் குளிகை - தம்பனம் விந்து கட்ட - நாக சுத்தி - அயச் செம்புச் செந்தூரம் - வெள்ளி வித்தை - பீங்கான் வெள்ளி முறை - துரிசு மெழுகு - செம்பு சுத்தி - கிளிஞ்சிச் சுண்ணும்பு நீரில் (சார நீரில்) வேதை - அயக்கிண்ணி - வராகத்திண் வயணம் - செம்பு சுத்தி - சாதி வயணம் - நாகத்தில் மருந்து - உப்புச் செந்தூரம் - விந்து ரஸ மகிமை - நாகத்திரா மருந்து - பூரணத்தில் சூதம் சேர்க்க - சித்தச் செந்தூரம் - செந்தூர அஞ்சனம் - செந்தூர கெவுன பூசைவிதி சக்கரம் - போகர் கல்லைப் பெண்ணுக்கியது - லிங்கமணி - சவ்வீர வைப்பு - கலியுகத்து மகிமை - அஷ்ட கர்மம் - மாரணம் - காய மருந்து - கோரக்கர் கற்பம் - வெள்ளைக் குராமூலம் - விஷ்ணுக்ராந்தி - கருஞ்செம்பை - வெள்குன்றி - நாயுருவி - தண்ணீர் ஸ்தம்பனம் - கட்டுக்கொடி - பால்குமட்டி - பரட்டை - நீர்முள்ளி - நத்தைச்சூரி - சத்திச்சாரணை கற்பம் - பூமிச்சக்கரை- குதிரைவால் புல் கற்பம் - மான்செவி - அண்டி - நரிக்கொம்பு - கண்டங்கத்திரி - தேள் - பச்சை ஓந்தி - நாறுகரந்தை - திருகு கள்ளிக் குளிசம் - சங்கதாரி - கீழாநெல்லி - பாதாளமூலி - ஆகர்ஷணம் - புலிதொடரி - மிருகவசியம் - அழுகண்ணி - குக்குடத்தின் வேர் - வட்டத்துத்தி சங்கம் வேர் - மாவலிங்கம் - நீர்மேல் நெருப்பு - சீந்தில் - பாதிரி வேர் - நச்சுப்புல் - மருதோன்றி - தென்னமாலை - செத்தவனையெழுப்ப - முதலான விபரங்கள் அடங்கியுள்ளன.

*Beginning :*

பாடுகிறேன் பலதிரட்டு முடிவையெல்லாம்
பதருமல் (கேளுங்கள்) பண்பாய் மக்காள்
பாடுகிறேன் சூத்திரமுஞ் சாஸ்திரமுந் தேர்ந்து
பாஷையெல்லாஞ் சுறுக்கியொரு மாலையாக
பாடுகிறேன் குருக்கிடையுங் கருக்கெடையும்பார்த்து
பராபரத்தி னினிமுதலாய் பக்தியாகப்
பாடுகிறேன் வேதாந்த முடிவையெல்லாம்
பண்பானபரை கணேசன்குகன் பதத்தைப்பார்த்தே. (க)

பார்த்திடவே நந்தீசர் மூலமூர்த்தி
பண்பான அகத்தீசர் சட்டநாதர்
சேர்த்திடவே பதஞ்சலி வியாக்ரபாதர்
கோரக்கர் கமலமுனி கூனக்கண்ணர்
காத்திடவே இடைக்காடர் சண்டிகேசர்
கைலாசப் போகரொடு சிவவாக்யசித்தர்
போத்திடவே காலாங்கி புண்ணுக்கீசர்
புகழ்மச்சர் கொங்கணருங் காப்புத்தானே. (உ)

*End :*

குறையாத சத்திசிவங் காரசாரம்
கொத்தோடே நிறக்கசடச் சீனஞ்சேரில்
நிறையாகத் தொட்டதெல்லாங் கட்டிக்கொள்ளும்
நிகரில்லா பூனீருக்குண்பித்தானல்
துரையோடே முழைகோடி தோத்தங்கோடி
சூட்டிவைக்கும் நட்டிவைக்குஞ் சுருதியந்தம்
மறையாக மறைத்துவிட்டார் பெரியோரெல்லாம்
மறைப்பையெல்லாம் வாய்திறந்து வழங்கினேனே. (உகூகூ)

வழங்கினதோர் சாஸ்திரமும் மைந்தாகேளு
வாசையுடன் பலதிரட்டுப் பலகற்பமோடு
வழங்கிநிறை கருக்கிடையுங் குருக்கிடையும் நன்ருய்
விபரமுடன் பலதிரட்டில் விரித்துச் சொன்னேன்
அளங்கின்று அலையாமல் பலநூல்தேடி
ஆத்தாளைப் பூசித்து அம்ருதங்கொண்டு
தளங்கி நின்ற மனத்தோடே கற்பங்கொண்டு
சதாநித்ய மேறிடுவாய்த் திரட்டுமுற்றே. (௩௰)

**384.** சுவடி நெ. 232

## வைத்தியத்திரட்டு

ஏடுகள் *18* முதல் *218* வரை. சிதிலமானது.

(நீள × அகலம் *40* × *3* செ. மீ.)

இதில், ரசபூபதி, காலாக்னிருத்ரன், சுவச்சந்தவயிரவம், ராஜமிருகாங்கம், கண்டங்கத்திரி நெய் - திப்பிலி நெய் - கண்டங் கத்தரி நெய் வேறு - க்ஷயத்திற்குக் கஷாயம் - கதலிகந்த கிருதம்- பெரும்பாட்டுக்குச் சதாவரி நெய் - அமுக்குரா நெய் - அஷ்ட சந்தன விபரம் - கற்பூரவல்லி நெய் - கிரிச்சனம் ஆறுக்கும் இளநீர் நெய் - சயத்திற்குப் பூஷணிக்காய் நெய் - வெள்ளுள்ளி நெய் - தயிர் நெய் - பஞ்சகவ்ய நெய் - தசமூல கிருதம் - தூர்வாதி கிருதம் அல்லது வெள்ளருகு கிருதம் - சீந்தில் - நெய் - ரெத்தம் விழுவதற்கும் - வெள்ளுடைப்பிற்கும் - நஸ்யம் - சடைச்சி நெய் - குடல்வாத குன்மத்திற்கு மூலிகைப் பிரயோகம். பூதவயிரவன் குளிகை - ருத்திரபைரவன் - புகைப்பிரண்டைச் சூரணம் - கலிங்கம் - அஞ்சனம் - வெறிக்கு மருந்து - சூலை 18க்கும் கெந்தக தைலம் - பொரிமா - புண்ணுக்குப் புகை - நேத்திரத்திற்கு மருந்து - சுடர்க்காலஞ்சனம் - நேத்திரப் புகைச்சலுக்கு - வெள்ளெழுத்திற்கு - மாலைக்கண்ணுக்கு - சந்நிபேய்க்கு அஞ்சனம் - உன்மாதத்திற்குப் பத்தியம் - எலி கடிக்கு - பூச்சு மருந்து - பொரி மயக்கத்திற்கு - வெறி மயக்கத்திற்கு மருந்து - பிரகடத்திற்கு மருந்து. சாருய வெறிக்கு மருந்து - நீகாமை (நீராமை) கவுசைக்குத் துருசு பற்பம் - பெருவயிறு கவுசைக்கு மருந்து - படுவன், பரு. படர்தாமரைக்கு - மலக்கட்டு வலிக்கு - பவுத்திரத்திற்கு மருந்து - தாகத்திற்கு மருந்து - கரப்பான் சிலந்திக்கு - சடைக் கிரந்திக்குக் குக்கில் நெய் - இருமலுக்கு அரிதாரப் புகை - வங்க பற்பம் - குன்ம குடோரி - சூலைக்கு ராமபாணம் - அரிதார பற்பம் - ரச பற்பம் - பரங்கிப்பட்டை ரஸாயனம் - தேவமுக உதையாக்னிச் செந்தூரம் - உதையாக்கினி பற்பம் - கோடாசூழிக் குளிகை வாயுக்குத்

தைலம் - ஆனந்தவைரவன் செந்தூரக் குளிகை - ரஸாயன வைரவன் - சிலபான குளிகை - சுவாசகுடோரி - நாபி சுத்தி - கர்ப்பூராதி காயத்ரி மாத்திரை - சசாங்க ரஸம் - மகோதரத் துருண்டை - கிரிச்சனத்திற்குச் சிலோதாரி உருண்டை - சுராங்குச மாத்திரை - துத்தரஸ மாத்திரை - பாஷாண உருண்டை - சூலைக்கு மூலிகைச் சம்பிரதாயம் - மண்டைச் சூலைக்கு மூலிகை - இருமலுக்குக் கஷாயம் - சிறுக்குன்மத்திற்குக் கஷாயம் - ரஸ முறிவு - இரத்த பித்தத்திற்கு மருந்து - மலமடைப்பிற்கு - சல உடைப்பிற்கு - கல்லடைப்பிற்கு - வல்லாரைச் சூரணம் - கல்லடைப்பிற்குக் கருவங்க பற்பம் - நீரழிவுச் சூரணம் - சூத பற்பம் - கிரிச்சினத்திற்கு மேகாதிச் சூரணம் - வங்க பற்பம் - செந்தூரம் - லோகமுதச் செந்தூரம் - சலக் கழிச்சலுக்கு மருந்து - மதுராதித் தைலம் - நாக பூபதி - கெந்தகத் தைலம் - சூதச் செந்தூரம் (குப்பிவைப்பு) - காது கேழ்க்க - சயகுலாந்தகம். சந்நிக்கு அஞ்செண்ணெய்த் தைலம் - சந்தனாதித் தைலம் - முத்தோஷச் சுரக் கஷாயம் - வாத சீத சுரக் கஷாயம் - மகா பில்வாதி லேகியம் - குண்டலாதி லேகியம். சுவாசகுடோரி சூரணம் - அரக்கெண்ணெய் - மந்தாரகாசத் தைலம் - அமுக்குராச் சூரணம் - மாதவிடாய் ஆக மருந்து - காயசித்தி - கண்டங்கத்திரி லேகியம் - வாத சந்நித் தைலம் - சண்டமாருத லேகியம் - இருமலுக்குக் கஷாயம் முதலான முறைகள் உள்ளன சுத்தமாக எழுதப்பட்டிருக்கின்றன.

*Beginning :*

சேர்த்திடவும் சயமுமிகுவாதந்தானும்
பொல்லாத வீக்கமுடன் வறட்சிபோமே. (ருஅ)

ரசபூபதி

வரட்சிபோம் வெட்டைபோம் வலுக்குந்தேகம்
மைந்தனே சஞ்சீவி மகத்தாம்சித்தி
இரட்சியொடு நரம்பெல்லாமமிருத மூறும்
மூர்த்தமென பூபதியை யியம்பக்கேளு

வரட்சிபோமிந்த பற்பம் தாம்பிரபற்பம்
வாங்காத நாபியிவை நேர்தான் தூக்கி
குரைத்திடாய் கெந்திரெண்டு திரிகடுதிரிபலையும
கூருகயிவை யெல்லாம் நொறுக்கிடாயே. (ருகூ)

நொறுக்கியபின் தழுதாழை கண்டங்கத்திரி
நொச்சியுடன் பேய்த்துமட்டி யிவைகளெல்லாம்
நறுக்கியதோர் கொடிவேலி தீண்டாப்பாளை
நாட்டடா கஷாயமிட்டு வாங்கிமைந்தா
சிறுக்கடா யிருபதுநாளாட்டிவாங்கிச்
சீரான உழுந்திடைக்கிக் குளிகைகட்டிச்
சுறுக்கான சந்நிக்கு யீய்ந்தாயானால்
தொட்டவுடன் பதின்மூன்றுந்தாள் நீராமே. (சூம)

*End :*

ஆட்டடா கோழிமுட்டைத் தைலம்வாங்கி
வதிலேதா னிருகழஞ்சு தைலந்தன்னில்
பூட்டடா செந்தூரம் பணவெடைதானென்று
போதி......... தான் பூட்டுபூட்டு
மூட்டடா யுன்மத்தம் பிசாசுபேய்கள்
முரணான சயகாசமேம குட்டம்
நீட்டடா மேகவகை நீரழிவுநிலை
நில்லாது கிராணியொடு பவுத்திரங்கள் போமே.

– *1380*

போமப்பா பவுத்திரமும் கரப்பனோடு
கிரந்திப்புண் பொடிகள் அரையாப்பு.

... ... ... ... ... ...

385. சுவடி நெ. 233

## ஓசீயத்து

ஏடுகள் 1 முதல் 78 வரை. பக்கத்திற்கு 8 வரிகள்.
ஆரம்பத்தில் சிறிது சிதைந்துள்ளது.
(நீள × அகலம் 22 × 3 செ. மீ.)

இது, மகமதியர்களின் மத சம்மந்தமான சுவடி.

*Beginning :*

எல்லாம் புகழ்......... வுக்காம்
எல்லாம் படை......... கையாலே
எல்லாம் அவனலே சொல்லவே யாம்
எல்லா......... கென்றல்லாவோதான்.........
......... தீன இசுலாம். (இஸ்லாம்)

மாட்டார்க்கெல்வாம் நற்கத்துள்ளே
நல்லாற் புகழ் எல்லாம் நபி சொர்கத்தே
நடந்த அதீதுத்தான் நடத்தலுத்தேன். (க)

* * * *

காசையும் பணத்தையும் கவன்றுதேடியே
பூசையும் புலத்தையும் பொழுது போக்கியே
மீசையும் தாடியும் வெளுத்தும்மெய்தொழார்
ஆசையும் அகத்தீயு மகன்று நாயனே. (௯)

*End :*

இதமாமென் யின்னயின்மையிற் துணையின்ன
மகம்மது மாயத்தை உடனெழுந்து
தீன்சேதிக்காட்டி உமறு உஸ்மானுர்
ழேபாதக்கேட்டு போது மானிலத்திலே

வாளைப்போட்டாற் பொடியாற் தூனிலே தொளை
போட்டாற் சாதீமானபட்டு அவரவரே
தம்மை தமக்கே தேவாத்திருந்தார். (சஉஉ)

அல்லாவுடைய அனுக்கிரகமாய் ...... கதாகவும்.
ஆமீன் ஆமீன் யாற்புலாலமீன் –

குறிப்பு :

தமிழ் விரோதிகிருது வருஷம் வைகாசி மாதம் 18உ வெள்ளிக் கிழமை அம்மாவாசை காலமே மணி 8க்கு தஞ்சாவூர் வைத்திய படேசாயபுவுடைய ஓசீயத்து எழுதி முடிந்தது. யாராவது இந்த சுவடியை எடுத்தவங்கள் படித்து இதிலே ஏதாகிலும் பிழையிருந்தால் நீக்கிக்கொடுக்கவும்.

ஆமீன் யாற்புல்லாலமீன் அல்லா துணை.

---

386. சுவடி நெ. 234 (A)

## அகஸ்தீசர் சூத்திரம் நூற்றுப்பத்து

(லோகமாரணம்)

ஏடுகள் 1 முதல் 21 வரை. பக்கத்திற்கு 8 வரிகள்.
(நீள × அகலம் 40 × 3 செ. மீ.)

இதில், சுவர்ணச் செந்தூரம், வெள்ளிச் செந்தூரம், வெங்கல பற்பம் - பித்தளை பற்பம் - காரீயச் செந்தூரம் - நாகச் செந்தூரம் - சிங்கி பற்பம் - அரிதார பற்பம் - கெந்தக பற்பம் - ரச செந்தூரம் - ஆனந்தவைரவன் மாத்திரை - வங்காரச் சஞ்சீவி - அக்கினி குமாரன் - உத்தண்ட அக்கினி குமாரன் - காளமேக நாராயணச் செந்தூரம் - க்ஷய சிந்தாமணி - மகாபூர்ண சந்திரோதயம் - வாதராசன் - மண்டூரச் செந்தூரம் - திரிலோக மண்டூரம் - மகாதிராவகம் - காசகுலாந்தகன் - குடோரி மாத்திரை - பூனீறுத்துறை முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

சொல்லுகிறேன் பூனீரும் பூச்செம்புத்துத்தநாகம்
துடியானகாரீயம் வெள்ளீயம் முதலாய்
சொல்லுகிறமித்திர வகையைக் கேளும்
கோமியமோர் காடியெண்ணெய் யெருக்கம்பாலில்
நல்லதொரு சம்பழச் சாறுதான் சாத்தில்
நலமான வெண்தேவி தோய்க்க (வெல்லாம்)
வெல்லரிய வங்கமொடு மூன்றுந் தீயில்
வெக்குடனு முருக்கியதில் சாய்க்கநன்றே. (க)

சாய்த்திடுவா யொவ்வொன்றில் காய்ச்சிமுக்கால்
தான் தோய்க்கச் சாய்க்க வுள்ளநீரம்பேதித்து
காய்ப்பேறி வலுவேறி சாதாலோகங்
கள்ளமறும் நிசமான சுத்தியாகும்
வைத்தசேர் செந்தூரம் பறபமாகும்
வறுப்பதற்குக் களங்குநிசங்குரு வேயாகும்
பந்தீபாவும் வீழ்ச்சதங்கட் கெல்லாம்தம்
செய்திடுவாய் சுத்திசுத்தி முறையீதாமே. (உ)

*End :*

தெரித்ததொரு வங்கத்தை வெள்ளி ரெண்டில்
சேரப்பா விதுவொன்றிந்து வதுவுந்தூளா
மரித்ததொரு வெள்ளியிடை சூதம்போட்டு
மாட்டு விந்த ரெண்டுக்கு முத்துவெள்ளீ
நெரித்ததொரு முன்பாலில் நீரைவார்த்து
நேராகவரைத்து நன்ருய் உருட்டிக்கட்டி
பொரித்ததொரு உண்டையின்மேல் பெலக்கக்கட்டி
பொங்கியதோர் வெங்காரம் மேலேபூச. (எஅ)

பூசியது மேலேந்து சீலேசெய்து
புகழாக வுண்டையின்மேல் மணலைக்கொட்டி
மாசதியின் மேலிருக்க ஈசானத்தில்
வைரவர்க்குப் பூசையிட்டுப் புடத்தைப்போடு
காசினியோர் மெச்சுதற்குக் குருவேயாகும்
காட்டப்பா வங்கத்தில் நூற்றுக்கொன்று
பேசிவென்ற ரசவாத வெள்ளிவித்தை
வித்தையென்ன பதினறு மாத்துத்தானே. (எசு)

அகஸ்தீசர் சூத்திரம் நூற்றுப்பத்து முற்றும்.

---

387. சுவடி நெ. 234 (B)

## கொங்கண நாயனுர் சுவாமி கடைக்காண்ட சூத்திர தீட்சை விபரம்

ஏடுகள் 23 முதல் 37 வரை.

இடையிடையே சிதிலமாகவுள்ளது,

இதில், மனமடக்கும் முறைகள் - வழலை செய்முறைகள் - சவர்க்காரம் செய்முறை - உவர்ச்சாரம் எட்டுவிதம் - கல்லுச் சுண்ணம் - வெடியுப்புக்கட்டு - மச்சமுனி தீட்சை பார்க்கவும் - கும்பமுனி தீட்சை 200 பார்க்கவும் - 12 வருடம் சோதிக்கவும் - 6 தீட்சை விபரம் - சிவ தீட்சை, சத்தி தீட்சை, மௌன தீட்சை, போலி குருக்கள் உண்டு - அவர் லக்ஷணம் - புவனேச்வரி தீட்சை, திரிபுரை தீட்சை - சியாமளா தீட்சை - அம்பிகாசத்தி தீட்சை - சத்தி தீட்சை - வல்லபை தீட்சை - மயேச்வரி தீட்சை - ஆறு ஆதாரங்கள் தீட்சை - கடைசியில் சமாதி தீட்சை முதலியன,

*Beginning :*

ஆதியந்தங் கடந்துநின்ற பூரணந்தான் போற்றி
அம்மனெடு மூலத்தில் கணேசன் காப்பு
பாதியிந்து மலர்கடந்த மூவர் காப்பு
பரமாகி யடியிருந்த போகர் காப்பு
சோதியாய் நின்றதொரு பெரியோர் காப்பு
துரியவெளிக்குள்ளான ரிஷிகள் காப்பு
நீதிபெறு அறுபதுக்குள் தீட்சை மார்க்கம்
நெறியாக வுள்ளபடி நிலைக்கின்றேனே. (க)

*End :*

கள்ளமென்றுந் தெரியாதே தீட்சை மார்க்கம்
கைலாசத் தேகுடியி ருக்கப்பண்ணும்
வெள்ளனென்ற மனங்கண்டால் வீழ்வாரன்பாய்
வேறுவீணர் போல்திரிந்தா லேதுமில்லை
உள்ளபடி முப்பாழுக் கப்பால் நின்ற
ஓகோகோ சுருதிமுடிந் திட்டவாறு
வள்ளவே பூரணத்தின் தீட்சைசொன்னேன்
வள்மான கனியொன்ருய்க் கனிந்தமுத்தே. (சுக)

ஹரி : ஓம் நன்ருகக் குருவாழ்க குருவே துணை.

கொங்கண சுவாமியார் பிறகாண்ட சூத்திரம் தீட்சாவிதி எழுதி முகிந்தது முத்தும்.

சத்குரு பாதமே கதி.

குறிப்பு :

இச்சுவடியில் சுமார் 20 வெற்று ஏடுகள் கோர்க்கப்பட்டு உள்ளன. கடைசியில் திருபலா சூரண முறை, த்ராளீசபத்திரிச் சூரணம், மகாதாளீசாதிச் சூரண முறைகள் முதலானவைகள் உள்ளன.

**388.** சுவடி நெ. 235 (A)

# அகஸ்தியர் வைத்ய சூத்திரம் முன்னூறு

(செந்தூரம்)

ஏடுகள் 1 முதல் 55 வரை.

(நீள × அகலம் 36 × 3 செ. மீ.)

இதில், காந்த சத்து - கார சத்து - ஈயம் - வாலை ரஸம் - வாலை ரஸச் செந்தூரம் - கற்பூர சிலாசத்துநீறு - அப்பிக வெள்ளை - பொன்னிமிளைச் செந்தூரம் - தாளக வெள்ளை - ரஸ பற்பம் - ரஸச் சுன்னம் - குட்டத்திற்கு லேகியம் - அம்பிகா செந்தூரம் - சீந்தில் சர்க்கரை - சீந்தில் சர்க்கரைச் சூரணம் - அம்ருத ஸஞ்சீவி - நீரிழிவு - மேகவகைக்கெல்லாம் லேகியம் - கருவங்கச் செந்தூரம் - லிங்கப்புத்துக்கு - நீரிழிவுக்கு அயச் செந்தூரம் - சூக கண்டத்திற்குச் துருசு செந்தூரம் - பாண்டுவுக்கு அயச் செந்தூரம் - துருசுச் செந்தூரம் வேறு - வெங்கலச் செந்தூரம் - தாமிர ரஸச் செந்தூரம் - நவசிந்தாமணி லேகியம் - காந்தச் செந்தூரம் - ஆறுவகைக் கிராணிக்கு - நோயாளிக்கான வைத்ய விருத்தி - கிளிஞ்சிச் சுன்னம் - முப்புச் சுன்னம் - அயச் செந்தூரம் - சாதிலிங்கச் செந்தூரம் - உளுந்தடை - நாகச் செந்தூரம் - வங்கச் செந்தூரம் . ஓடுகாடிக்குச் சூரணம் - கிராணிக்கு, வாயுவுக்கு - வங்கச் செந்தூரம் - தங்கச் செந்தூரம் - அக்கினி குமாரன் பொடி - ஆனந்த வைரவன் - வைர பற்பம் - பேதிக்கு லேகியம் - குன்மத்திற்குச் செந்தூரம் - அயச் செந்தூரம் - காந்தச் செந்தூரம் - மண்டூரச் செந்தூரம் - பதங்கால் செந்தூரம் - வீரசூர சங்கார பூபதி - சுகபேதி - நாகச் செந்தூரம் - சரக்கு சுத்தி - காந்த செந்தூரம் - மண்டூரம் - நாகச் செந்தூரம் - குன்மத்திற்கு - நாக பற்பம் - சிலாசத்துச் செந்தூரம் - காந்தச் செந்தூரம் - சயத்திற்கு அனுபானம் - வாதத்திற்கு வேப்பெண்ணெய்த் தைலம் - ஷிக்கு சுவுரித் தைலம் - முக்கூட்டெண்ணெய் முதலியன.

*Beginning :*

காலுந்தலையுங் கடந்துநடு வாகிநின்ற
மேலுந்தரிய விளக்காம் மெய்க்கனலாம் – வால
வைத்திய முன்னூறு சூத்திரமாய் விளங்கிய
வைத்தியங் காணே சம்பார்.

பூதலத்தில் தென்பொதிகை தன்னில்வாழும்
பூரணமேயென்குருவே சிவமே அய்யா
மாதவத்தாலஷ்டசித்து யெட்டும் பெற்று
வரிசையினல் வைத்தியநூல் வகையாய்ச்சொல்வேன்
பூதலத்தின் முகத்தானை கைக்கோட்டானை
புழுக்குழியில் வீழ்ந்தானைப் புதல்வன்றன்னைச்
சாதகமாய் மனமடங்கிவறிவிற் கூடித்
தற்பரமாய் நின்றகண பதியே காப்பு. (க)

* * * * *

காணப்பா தங்கமது பலந்தானென்று
கடியதொரு குகைதனிலே யுருகும்போது
தோணப்பா சூதமொடு மிருதார்சிங்கி
சுத்திசெய்த வெள்ளீயஞ் சாதிலிங்கம்
பேணப்பா வரிதாரம் நிமிளை வீரம்
பேரான வெங்கார மெட்டுங் கூட்டி
பேணப்பா வகையொன்று பலமுங் கால்தான்
புகழான பழச்சாற்று லரைத்துக் கூட்டே. (கஅச)

* * * * *

*End :*

காணப்பா பார்த்துணர்ந்த வர்தம்கண்ணு
கவனந் தப்பாமல்வைத்யம் செய்வாய்
தோணப்பா வடுகனேடு பூசை செய்வாய்
சொல்குருவை மறவாதே லட்சியத்துள்ளே

தோணப்பா நந்தி குரு யுபதேசித்தே
............ சூட்சுமமாய்ப் பேணிப்பாரு
ஆணப்பா ஆணவத்தை விட்டுக்கற்பம்
கொண்டவர் காசங்கொண்டு மூலங்காணே. (உகூ)

ஓம்அம்ஏச்சப்பா நீபராணி அகஸ்தியநாயன்
பாதமே துணை

மூலாக்கினி யெழுத்தாலெ மவுனங்கொண்டு
மூட்டினன் வடுகனங்கே நிருத்தஞ் செய்வான்
ஞாலத்தின் குண்டலிக்குள் ளொடுக்கப்பாரு
ஆசையவன் வைப்பதற்கு வடமாலைச் சாற்று
நீலத்தில் நந்தியுட பூசைபண்ணு
செகன்னுத வொலிமணியினேசை (கேட்கும்)
காலத்தின் கருவறிந்து பூசைசெய்தால்
கைக்குள்ளே வைத்தியமுன் னூறும் முற்றும். (கூ)

---

389. சுவடி நெ. 235 (B)

## தன்வந்தரி வைத்யம் இருநூறு

ஏடுகள் 26 முதல் 42 வரை. பக்கத்திற்கு 8 வரிகள்.
76 செய்யுட்களே உள்ளன. அபூர்த்தி.

இதில், வைத்திய வழலை - சுரம் 64 வகைக்கும் மாத்திரை - குங்குமக் குளிகை - வயிரவ மாத்திரை - கிரந்தி 7க்கும் மாத்திரை (நந்தி சொன்னது) - பத்தியம் - கலிக்க மாத்திரை - சன்னி மாத்திரை - மேகராசாங்கத்தெண்ணெய் - வாதத்திற்குத் தைலம்- மேகத்தெண்ணெய் - பத்தியம் - பெரும்பாட்டுக்கெண்ணெய் - புடத் தைலம் - புங்கந் தைலம் - அருகம் வேர்த் தைலம் - ரணங்களுக்குத் தைலம் - சயகாசத் தைலம் - முதலியன.

*Beginning :*

............
ஆதியந்த மல்லாமலகண்டபரி பூரணமாய்
சோதியந்த வாள்மயிலே சொற்பெரிய – வாதியேகேள்

ஆதியந்தமான நல்லதொரு சரஸ்வதியே
வாதியெந்தன் பங்கிலுறை வாழ்கவே. (க)

வாதியென்ன வல்லபையின் வளர்முகத்தான் கணபதியே
சோதியன்னமன விளக்கின் சொற்பரிய – நாதிமறை
ஆதியன்ன நான்முகவன் நல்லதொரு பிரும்மாவின்
காதியென்னுவில் கணக்கே. (உ)

*End :*

போடப்பா குழித்தைலம் தன்னைவாங்கு
புகழான சீசாவில் பதனம்பண்ணு
ஆடப்பா மனிதருக்கு வுள்ளுக்கீய்ந்தா
லப்பனே புண்புரைகளாறும் புண்ணும்
வாட்டப்பா பதினெட்டில் பிறந்தரோகம்
வளமாகப் பறந்துவிடு மோடிப்போகும்
நாட்டப்பா ரணத்தின்மேல் தைலம்போடு
நலமாகப் பறந்துவிடும் ரணங்கள்தாமே. (எரு)

தானான ரணத்தைலம் சொன்னேனப்பா
தயவான சயத்திற்குத்தைலம் கேளு
சேனான செம்முள்ளிவேர் வீசைரெண்டு
செயமான சங்கம்வேர் வீசைரெண்டு
ஆனான ஆடாதோடை மூலிவேரும்
அப்பனே வீசையது ரெண்டுங்கூட்டி
வானான யிதுமுன்றுங் குழித்தைலம்வாங்கு
வளமான தைலத்தைப் பதனம்பண்ணு. (எசு)

பண்ணப்பா பணவெடைதான் கொள்ளச்சொல்லு
பரிவான யிருபோது ............

சுவடி முற்றுப்பெறவில்லை.

## 390. சுவடி நெ. 235 (c)

## சுந்தரானந்தர் தண்டகம்

ஏடுகள் 1 முதல் 7 வரை. பக்கத்திற்கு 7 வரிகள்.

செய்யுட்டொகை 23. அபூர்த்தி.

இதில், அஷ்டகர்மத் தகடு - தாம்ரவங்கம் - ஆவாரைக் குழித்தைலம் - திலதம் - ஸகல விஷங்களுக்குத் தகடு - கோரக்கர் மெழுகு - நந்தை மருந்து - திகைப்பூண்டுப் பூச்சி குணம் - மை - முதலியன.

*Beginning :*

அரஹரா ...... அக்கனுவுமாகி
யதிலேதான் சுழித்தயிருசுழியுமாகி
தெரியாத பொருளாகி சித்தரியுமாகி
சிவனுமாய் சத்தியுமாய் ரெண்டும் ஒன்ருய்
தெரியாத தனமோடா யிதையறிந்தால்
தாயான மௌனத்தை யறிவானப்பா
விரிகமலத் தோன்றியா னந்தமூல
வேதாந்தச் சித்தாந்தம் வெளிவிட்டேனே. (க)

விட்டதொரு கொம்புசுழி அகாரமாகி
உன்மனதே வேதாந்த மூலமந்திரமிதுவே யாச்சு
தொட்டதொரு மூலமந்திரங் கருமத்துக்குத்
தொம்தோமென் ருடிடவே மூன்றெழுத்துஞ்சொன்னேன்
கட்டிவிக்கும் கட்டறுக்கும் காலனையும்தள்ளும்
கடியதோர் அஷ்டகர்மமிதனலாகும்
வெட்டவெளி யானதொரு மெஞ்ஞானதீதம்
வேதாந்த சுழுமுனையை வீசுறேனே. (உ)

*End :*

ஊட்டியே தேசிரத்தம் சத்தேகூட்டு
உருதிட்ட வேணுமென்றல் பிரங்கால் சடையுங்கூட்டு
நாட்டிலுள்ளோர் கொண்டாடும் சீலையிலைப்பொடியை
நன்றய் பரத்தித் திரித்துக் கொண்டு
வாட்டமில்லா தெரியாத யெண்ணெய் வாங்கு
மகத்தான வித்தையடாசித்தம் மெச்சத்
தேட்டன்ன யிதைவிட்டால் தேட்டுமுண்டோ
செகமெல்லாம் மெச்சிடவே மையைவாங்கே. (உங)

மைவாங்கும் குணங்கேளு வரிசைகேளு
மன்னர் மெய்க்க வானைக்கண் சட்டிவாங்கு
வகுப்பான தலைமண்டை வோட்டில் பாக்ய
வல்லிய மாகவென்ரு லெண்ணெயிட்டுக்
கடுகவே திரிபோட்டுச் சட்டிமூடி
அய்யாநீ மையிறங்கும் வித்தைபாரு
ஆத்தாளும் ... ... ... ... ...

---

## 391. சுவடி. நெ. 235 (D)

## வைத்திய அட்டவணை

ஏடுகள் 13. பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள்.

இதில், நவலோகச் செந்தூரம் - லிங்க செந்தூரம் - லிங்கக் கட்டு - கந்தக மெழுகு - பாஷாணக் கட்டு - கருஞ்சைம்பைத் தைலம் - சுரத்திற்கு மாத்திரை - பூநீர் எடுக்கும் விதம் முதலியன உள்ளன.

### நவலோகச் செந்தூரம்

*Beginning :*

அரப்பொடி வராகனெடை 14 பழச்சாறு விட்டு
சாமம் அரைத்துக் கழுவிப்போட்டு 2வராகனெடை

நெல்லிக்காய் கெந்தகம் பொடிபண்ணிக் கூடப்போட்டுப் பீங்கானில்போட்டுக் காட்டாமணக்குப்பால் விட்டு வெயிலில் வைத்துக்கொண்டு வரவும். பால்விட்டுவிட்டு வெயிலில் வைக்கவும். இதற்குப்பதம்:- கையினால் தொட்டுப்பார்க்க மைபோலே ஆகிறவரைக்கும் பால் விட்டுவைத்துக் கொண்டுவரவும். பிறகுகல்வத்தில் போட்டு மேற்படி அந்தப்பாலை விட்டு, அரைத்து, வில்லை செய்து நிழலில் உலர்த்தவும். நன்றாக உலர்ந்த பிற்பாடு ஆவாரம் இலை, நிழல் உலர்த்தி இடித்துத் தூள்செய்து சவுக்கத்துணியிலே ஒருகுடைதூள் பரப்பி. அதின் பேரில் வில்லைவைத்து, அதன் பேரில் ஒருகுடை தூள்பரப்பி நாலு சவுக்க மூலையுமடக்கிமுடிந்து, முடிச்சு அமுங்கப் பள்ளம் செய்து முடிச்சு பள்ளத்தில் நிற்கும்படிவைத்து மேலே நடுவே நெருப்பு ஒரு புளியங்கொட்டை யளவு வைக்கவும்.

* * * * *

*End :*

## லிங்கக் கட்டு

அமுரியில் பூனீறுகலக்கி சுறுக்குக்கொடுக்கவும்
கட்டுக் கொடியில் கவசம்செய்து புடம்போடவும்

பூனீறும் பச்சைச் சுண்ணும்புக்கல்லும் கலந்து, ஒரு சாலில் அடியில் கரியும்,உமியும் கலந்து போட்டு அதின்மீதில் காட்டு விராட்டியும் பரப்பி அதன் மீது முன் கல்லைக் கொட்டி மேலும் அந்தப்பிரகாரம் செய்து வேகவைக்கவும்.
வெந்த பிறகு பூநீறை வாரிக்கொண்டு அந்தப்பூனீறைஜலம் விட்டு அலம்பி. அந்த ஜலத்தைப் பீங்கானில் வார்த்து ரவி மதியில் வைக்கவும். பூவாகும். கல்லுப்பைப் பூசெய்து, கூடக் கலக்கவும். சத்தித்தியானம் செய்யவும் வைரவன் பூசை செய்யவும்.

---

392. சுவடி நெ. 235 (E)

## அகஸ்தியர் கலைஞானச் சுருக்கம் 120

ஏடுகள் 29. பக்கத்திற்கு 6 வரிகள்.
இடையிடையே செல்லரித்திருக்கின்றது.

இதில், முப்புவின் கரு, கேசரி. ரவி, மதி, அண்ட மெழுகு - கேசரி வித்தை - காரம் - சாரம் - வெடியுப்பு - மெழுகு - வெள்ளி - எட்டு ரெண்டு கந்தகம் - ரஸமணி - மாரண மெழுகு - வசிய விபூதி - திலதம் - அஞ்சன மை - ஆலத்திக் கர்ப்பூர வைப்பு - அண்ட மெழுகு வேதை - வெள்ளி முறை - அஷ்ட சித்து - அஷ்ட சித்துக் கரு - பூர பற்பம - அங்கோலத் தைலம் - கார சாரம் - ரவிமதிநாதவுப்பு - சாரைப் பாம்பு - குடவன் - கலப்பதற்குப் பத்தியம் - நவக்கிரக வீடு - சவுக்காரம் - மூலிகை விபரம் - முதலியன கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

ஆதிசத்தி சிவமான சோதிகாப்பு
அண்டமெனப் பூரணத்தின்றிருவே காப்பு
சோதியென்ற வாலைமனோன் மணியேகாப்பு
சொல்லடங்கா விண்ணொளியின் சுடரேகாப்பு
நீதியுள்ள சத்குருவின் பாதங்காப்பு
நீயென்றும் நானென்றும் நின்றேன்காப்பு
சத்தியெனுஞ் சிவசக்தி சக்தி (யான)
சிவமானதற்பரத்தின் பொருள் காப்பாமே. (க)

ஆமப்பா சகலகலை ஞானபீடம்
ஆயிரத்திலிருநூற்றி லன்பாய்ச் சொன்னேன்
நாமப்பா யதைக்குறுக்கிப் பத்துக்கொண்டு
நாட்டினேன் புலத்தியனே நன்றாய்க்கேளு
காமப்பால் கானல்பா விரண்டுங்கொண்டு
கருவான பூரணத்தின் கருணைவைத்து
வாமப்பால் கொண்டவனே சித்தயோகி
வலிமையுள்ள சிவயோகி மௌனியாமே. (உ)

*End :*

போற்றிநின்று வெருகடிதா னெடுத்துக்கொண்டு
புதுமையுள்ள தேனதிலே கொண்டால்மைந்தா
பார்த்திபனே தேகத்தில் வாதபித்தம்
பாதகனே சயந்தெழுந்த நோய்கள்யாவும்
தேத்தியே மண்டலந்தா னுண்டாயானல்
சிவசிவா தேகத்தையென்ன சொல்வேன்
சாத்தியமாய் நின்றதொரு தேகந்தன்னில்
சட்டையொன்று வெளுப்பாகத் தள்ளுந்தானே.

(கக அ)

தானேதான் தேகமதுதங்கமாகும்
தன்மையுள்ள தாம்மருகிப் பாயுமப்பா
ஊனேதான் நரைதிரைக ளற்றுப்போகும்
உத்தமனே வாசியது வுறுதியாகும்
மானேகே ளம்ருதரஸ மருவிபாயும்
மகத்தான மவுனமது முறுதியாகும்
தேனேதான் தீபவொளி கண்ணில்காணும்
காய்ந்ததொரு பால்போலே யமிர்தமூறும். (ககக)

கனியான யமிர்தத்தைத் தினமும்கொள்ளுஞ்
சிறந்ததொரு பூரணத்தைதினமுங் கொண்டு
சிவமான மௌனத்தைச் சேரச்சித்தே. (கஉ௦)

குருவே துணை.

---

**393.** சுவடி நெ. *236* (A)

## அகஸ்தியர் பூரண கர்மகாண்டம் முப்பத்தாறு

ஏடுகள் *6*. பக்கத்திற்கு *7* வரிகள்.

( நீள × அகலம் *30 × 3* செ. மீ. )

இதில், புதையல் எடுக்க - அஞ்சன மை - பாதாளம் - எதிரி மாரணம் செய்ய - சரக்கு நிவ்ருத்தி - அஞ்சுவகைச் சரக்கு முதலியன உள்ளன.

*Beginning :*

பூரணமாங் ஞானங் காப்பு
புவிநீருந் தீயுங்காப்பு
ஆரணமாம் வாயுங் காப்பு
ஆகாசகணேசன் காப்பு
காரண நாத விந்து
கன்னமார் போதங்காப்பு
வாரண முகத்தோன் பாதம்
வல்லபையுங் காப்புத்தானே. (க)

*End :*

போமென்று சொன்ன லப்போது
பொறிகளை யடக்கிச் சொன்னேன்
ஓமென்று நம்பிக் கொண்டு
உலகமெல்லாம் நிவ்ருத்தியாகும்
ஆமென்று நிறுத்தி நெஞ்சில்
ஆகார உகாரங் கூட்டி
மாமென்று மகரஞ் சித்தி
மவுனத்தால் கருமந்தீரும். (நடு)

தீருமே பூரணகர்மம்
செகத்தினி லறிந்துகொண்டால்
ஆருமே செய்வாரப்பா
அறிவரி யோர்கள் செய்வார்
பாருமே வைத்யர்க் கெல்லாம்
பார்த்துச் செய் முப்பத்தாறில்
ஊருமே அதிக முற்றும்
பூரண கருமமுற்றே. (நசு)

பூரணகர்மகாண்டம்
புதுமையைச் சொல்லிப்போட்டேன்
ஆரணமா மஞ்சாம்
மதிகமா மூலமப்பா
காரணவல்லிசொன்ன
கர்மத்தை நிவ்ருத்திபண்ணி
வாரணம் போகசுவாமி
வகையெல்லாம் சொன்னார் முற்றே. (௩எ)

குருவே துணை. தக்ஷிணாமூர்த்தி பாதம் துணை.

---

## 394. சுவடி செ. 236 (B)

## அகஸ்தியர் சூத்திரம் முப்பது

ஏடுகள் 9. பக்கத்திற்கு 8 வரிகள். சுத்தமான பிரதி. பூர்த்தி.

இதில், வழலை வகைகள் - கல் சுண்ணம் - வாடைப் பொடி முதலியன கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

ஆதியெனை யாண்டதொரு சோதிபாதம்
அம்பரத்தில் நின்றதொரு அய்யர்பாதம்
நீதியெனை யாண்டதொரு குகன்தன்பாதம்
நினைவாக முப்பதிலே நிறைந்துவாழும்
பாதிமதி தனையணிந்தபர ஞானசோதி
பாதமல ரெண்ணளும் பணிந்துமிக்க
வாதியெனப் பேர்படைத்த புலத்தியனே யய்யா
வரிசையாய் வழலையுட வகையைக்கேளே. (க)

கேளப்பா வழலையுட வகையைக்கேளு
கெடியான உவச்சாரம் படியோயெட்டு
நாளப்பா கல்சுன்னம் படியோ ரெண்டு
நலமான கல்லுப்புப் படியோவொன்று
வேளப்பா வமுரிபடி பதினாலுக்குள்
விரவியே யிதுவெல்லாம் கலக்கிக்கொண்டு
கேளப்பா சொல்லுகிறேன் தெளியவைத்துக்
குறுகவே யடுப்பேத்தி யெரித்திடாயே. (உ)

*End :*

ஆச்சப்பா முப்பதிலே வழலைசொன்னேன்
ஓகோகோ யிந்தநூல் போலக்காணேன்
நீச்சப்பா மற்றநூல் கடுநீச்சாகும்
நினைவாகப் பூரணத்தை வெளிவிடாதே
பேச்சப்பா பேச்சினுல் வருவதேது
பேய்மக்காள் நினைவுவிட்டா லெல்லாம்போச்சு
மூச்சப்பா வடங்குமுன்னே சித்தியாகும்
முறையான முப்பதுதான் முடிவுமுற்றே. (௩௰)

அகஸ்தியர் பாதமே கதி — குருவே துணையாகவேணும்.
மணிக்கார் வாடேசாயபு சுவடி முற்றும்.

---

395. சுவடி நெ. 236 (C)

## அகஸ்தியர் முப்பு பதினாறு

ஏடுகள் 6. பக்கத்திற்கு 5 வரிகள். சுத்தமான பிரதி.

இதில், முப்புதீக்ஷை மார்க்கம் - அறுவகை நிறச் சுன்னம் - வெடியுப்பு ஜயநீர் - முதலியன உள்ளன.

*Beginning :*

பூரணமாம் பகவன்தான் பாதம்போற்றி
புகழ்பெறவேசிவகாமி ஆத்தாள் பாதம்
காரணமாம் அறிவில்நின்ற மனதைப்போற்றிக்
கந்தனுக்கும் கருணைபெறச் சீஷனுகி
வாரணமாம் முகத்தானைப் பணிந்துபோற்றி
வல்லமையா யின்னூலின் பொருளைக்காண
சீரணமாய்ப் போகாமல் தெளிந்து சொல்வேன்
சித்தர்பதம் மனதில்வைப்பா யொன்றுகாப்பே. (க)

*End :*

ஆறியபின் வில்லைவைத்துச் சீலைசெய்து
அடைவாக நூறெருவில் புடத்தைப்போடு
தேறியபின் நாலிலொன்று சாரம்சேர்த்துச்
சிறப்பாக வாட்டியபின் பீங்கானில்வைக்க
கூறியபின் நீரச்சு வீரம்பூரம்
கூடயிட்டுச் சரக்குகளில் தடவிவாட்டம்
ஆறியபின் கடிகையஞ்சு சுருக்குத்தாக்க
மாண்டுபோம் நவலோகம் பொன்னும்பாரே (கசு)

பாரிந்த நூலை பகர்ந்தா லெழுநரகம்
பாரிந்த நூலை பண்பாகப் பூசைசெய்
பாரிந்த நூலை பதினறு சுருக்கமே
பாரிந்த நூலைப் பகரூர் பெரியோர்கள். (கஎ)

ஓம் இம் வம் அம் உம் மம் மகத்தான அகஸ்தியர் சுப்ரமண்யர் சிவாய நம:

---

## 396. சுவடி நெ. 236 (D)

# அகஸ்தியர் காவ்யம் பதினாறு

ஏடுகள் 5. 40 முதல் 44 வரை.
பக்கத்திற்கு 6 முதல் 8 வரிகள்.

இதில், யோக முறைகள் - புலத்தியருக்கு உபதேசம் செய்தமாதிரி எழுதப்பட்டுள்ளது - ராசயோக முறைகள் உள்ளன.

*Beginning :*

ஆதிமுதல் சாஸ்திரங்கள் பிறந்தவாறும்
அடிமுடியின் நடுவாகிப் பொருளுண்டாகி
வேதியனும் மால்சிவனும் நின்றவாறும்
வேதமுட னுகமங்கள் பிறந்தவாறும்
சாதிபலதொழில் முறைக ளானவாறும்
தன்னுக்குள் அஷ்டாங்கஞ் செய்தவாறும்
ஆதிநூல் வாகடங்கள் செய்தவாறும்
ஆதிமகா கணபதியே காப்புத்தாமே. (க)

காப்பானகணபதியை யெழுப்பி மேலே
கருத்தினல் மனமாகுங் கருத்திலுன்னி
சேப்பான கும்பகத்தில்ச் சாரமுண்டு
சிவசிவா நடுவாகி நிலையில்நின்று
கோப்பான புலஸ்தியனே நாதமதுக்கும்
கும்பகமே சதாநித்தம் மௌனம்பூண்டு
வாப்பான வதுவல்லோ மௌன யோகி
மத்தெல்லாம் யோகமல்லோ மடையர்தாமே. (உ)

*End :*

ஆச்சப்பா கும்பகமும் தீர்ந்தபின்பு
அரஹரா சுழிமுனையில் வுத்துநில்லு
பேச்சப்பா ஒன்றுமில்லை வாசியோகம்
பெருமைசிவ ராஜயோகம் புகழைப்பாரு
பூச்சப்பா மத்துமிந்த யோகமெல்லாம்
பொய்யாச்சு வல்லாமல் விதியுமில்லை
ஆச்சப்பா வென்றுசொல்லி யுன்னுமேலே
காட்டினேன் சிவராஜ யோகங்காணே. (கரு)

---

**397.** சுவடி நெ. *236* (E)

## அகஸ்தியர் பகவதி தியானம்

ஏடுகள் *4.* பக்கத்திற்கு *7* வரிகள்.

இதில், பகவதி தியான முறைகள் - ராஜராஜேச்வரி தியானம் - திருநீறணிதல் - மலையாளபகவதி தியானம் - அம்ருத ரஸபானம் முதலியவை செய்யலாம்.

*Beginning :*

செளியான பரவெளி தன்னைக்காட்டி
வேதாந்த ப்ரும்மவெளி தன்னிலேதான்
சுளியான சோதிபரஞ் சோதியான
உத்தகலை யானயிரு நயனங்காட்டி
விழியான நயனமிரு சூட்ச்சுமங்காட்டி
மேலான வனுக்கிரக வீடுஞ்சொல்லித்
தெளிவான சிந்தையை நாட்டம்வைத்துச்
சிவசிவா சிவயோகத் திறனும் பாரே. (க)

பாரப்பா யின்னமொரு தீட்சைமார்க்கம்
புத்தியுள்ள புலத்தியனே சொல்லக்கேளு
நேரப்பா பகவதியாள் தியானந்தன்னை
நேர்மையுடன் சொல்லுகிறேன் நிசமதாகச்
சாரப்பா வதின்சமான நிலையில்நின்று
சங்கையுடன் ஓம்ரீம்அங் கென்றேதான்
காரப்பா புருவநடுக் கமலத்தேகிக்
கருணையுட னுயிரத்தின் உருவேசெய்யே. (உ)

*End :*

நோக்குவதைத் தீபமதை நோக்கவேனும்
நொடியான சிவநிலை காணவேணும்
மூக்குநுனி முனையறிந்து முன்மையத்தில்
முத்தியுடன் சிவயோகம் முடிக்கவேணும்
வாக்குமன மொன்ருகி மனக்கண் கொண்டு
மகத்தான சத்திசிவ பூஜைவேணும்
தூக்கியதோர் கெவுனரச வாசிவேணும்
சுகமான இடமறிந்து தூங்குவாயே. (கச)

---

398. சுவடி நெ. 236 (F)

## அகத்தியர் முப்புச் சுருக்கம் ஆறு

ஏடுகள் 2. பக்கத்திற்கு 7 வரிகள்.

*Beginning :*

பாடுகிறேன் சூட்சமது ஆறினுள்ளே
பண்பான பிள்ளைகளுக் கடக்கித்தானே
ஊடுகிறேன் இரண்டெழுத்தும் சராசரந்தானுச்சு
உத்தமனே மனோன்மணித்தா யிருந்தவீடு
நாடு நீ அகாரத்தில் மேலேதாக்கு
அண்டமெல்லாம் படைத்ததொரு ஆயிதாளைத்
தேடியே யொன்ருக்குச் சித்தெல்லாம் பாரு
திறந்துவிட்டேன் ஞானத்தின் திறவுதானே. (க,

தானென்ற பதினறில் முதல் நாதந்தான்
தயங்காதே உப்பினுட வேகந்தானே
கோளென்ற விராட்டி யெனுங் கூடிநின்று
குவிந்தவிடம் நோக்கியந்த வழலேவாக்கு
தேனென்ற பொற்றலேயின் வேகங்கேளு
தென்டிறைசூழ் வையமெல்லாந் தொட்டியாகும்
கோனென்ற முப்புவது முப்பூவாச்சு
கைகடந்த வோசையிது விந்துவாச்சே. (உ)

ஆச்சப்பா யிவ்வளவும் பெரியோர் செய்வார்
அம்புவியில் மானிடர்க்குத் திறவுகேளு
பாச்சென்ற சூதத்தைச் சுத்திசெய்து
பாங்காகச் சிவகரந்தைக் குகையிலிட்டு
வீச்சென்ற மூனுநாள் வைத்தபின்பு
வீரான சூதமொரு சேர்தானென்று
காச்சென்ற லிங்கமொரு சேர்தானென்று
கனமான வீரமொரு சேர்தானென்றே. (ங)

ஒன்ருன வெடியுப்புச் சேர்தானென்று
உத்தமனே தில்லம்பால் தன்னிலாட்டிக்
கன்ருன சூதத்தை தன்னில் வைத்து
கமலத்தீ யாகவொரு நாள்தான் செய்து
மன்ருன குப்பிவிட்டு இறக்கிவைத்துப்
பாரப்பா செந்தூர மருணனுகும்
கொண்டாடும் நூற்றுக்கு ஒன்றேயாகும்
குறிப்பான தாம்பிரத்தி லீவதாமே. (ச)

ஆமப்பா கற்பத்திற் காகுமாகும்
ஆச்சரிய மென்னசொல்வேன் சடமேபொன்னும்
போமப்பா சட்டையது ஏழுந்தள்ளும்
பொற்பதுமை போலாகும் தேகமெல்லாம்

காமப்பால் விட்டக்கா லொன்றுமில்லை
கனமான துறையெல்லாம் பொய்யாய்ப்போகும்
நாமப்பா வுள்ளபடி சொன்னேம் சொன்னேம்
நாடிப்பார் மாணுக்கா! நாடிப்பாரே. (ரு)

பாரப்பா ஐங்கோண யெழுத்தினுலே
பராபரத்தி னெளிகாட்டும் பாருபாரு
ஆரப்பா விந்துவிட யெழுத்தேயாகும்
ஆச்சரியம் வேறென்றால் ஆடாதப்பா
காரப்பா பெரியோரை பனிரெண்டாண்டு
கருத்தறிந்து திறங்கண்டு கையிலீவார்
வேரப்பா வேதைக்கு யிதுதானுறு
வேதாந்தி யானுக்கால் செய்யநன்றே. (சா)

அகஸ்தியர் அருளிச்செய்த முப்புச் சுருக்க மாறும் முடிவு – முத்தும். அங்கப்பன் ஹஸ்த லிகிதம். ஸ்ரீ ராமஜெயம் – சிவமயம் – குருவே துணை.

---

**399.** சுவடி கெ. *236* (G)

## சுந்தரானந்தர் சூத்ரம் மூன்று

ஏடு *1.* பக்கத்திற்கு *6* வரிகள்.

***Beginning :***

ஆவேணு உள்வு சுமந்ததோர் பத்தாம்
ஈருணு ஒன்றும் இசைந்தோர் நாவாம்
பூவனுக் கொண்டு பொருளறி வாளருக்கு
சீவனு யீசன் தெளிந்துரைத் தானே. (க)

உரையது அஞ்சு புதாதி னுவை
மறையிது வேதம் மறைத்தார் பெரியோர்
கரையிது வென்று காணவல் லார்க்கு
நிரையிது வாகும் நீள் சடையொக்குமே. (உ)

ஒக்குமே சூத்திரம் ஒருமூன்று பாட்டினில்
தக்குமே ஞானம் தண்டல மாடிடும்
பக்குவ மேத்தி தேகம்பன்னீர் கொடிபோல்
சிக்குமே வாசி தெளிவிது முற்றே. (ஙு)

குருவே துணை. அல்லாவுதவிசெய்யவும்.

---

400. சுவடி நெ. 236 (H)

## அகஸ்தியர் ஐந்து

ஏடு 1. பக்கத்திற்கு 8 வரிகள்

நாட்டியதோர் நந்திமுகந் தனைப்பணிந்து
இனமாக வுரைத்திடுவார் நந்தி பின்னும்
தேடியதோர் மந்திரத்தி லஷ்டசித்திக்
கிரமமாக வுரைக்கிறேன் யோகியோர்க்கும்
கூடியதோர் கெந்தமதைச் சிதம்பரத்தில்
குணமான வாலைதனைக் கூட்டிமுட்டி
ஓடியதோ ரைம்புலனை மூலத்துள்ளே
அரஹரா மூலகண பதியே காப்பு. (க)

காப்பான பூரணசூத் திரம்நாநூறும்
கட்டான ஐம்பதுந்தான் பதினாறுக்கும்
வாய்ப்பான வழிதுறைக்கும் குருமுறைக்கும்
வாங்குமந்த வுள்கருவும் வழியேகாட்டும்
கோப்பான வேதைமகா லிங்கப்போக்கும்
குணமுடனே வாழ்வதற்குக் குருவாய்ச்செய்யே
காப்ரப்பான நூத்திலேகால் தலையாய்ப்பாடிக்
கட்டாகச் சொல்லிவிட்டேன் கருச்சேராமல் (உ)

சேராமல் சொன்னதொரு லிங்கப்போக்கே
திறமுடைய யேகமு லிகையேமுன்னே
பாராமல் செய்துகொண்டு சுத்திசேரப்
பாங்குடனே சுறுக்கிடுநீர் சுத்தியாச்சு
வீராகச் சுத்தியது செய்தபின்பு
விளங்கியதோர் கட்டதுவே பின்னுகச்செய்து
கூறுகச் செய்ததொரு லிங்கந்தன்னைக்
குணமாகச் செய்துகொண்டு கூட்டியாட்டே. (ங)

ஆட்டியதோர் லிங்கத்தை வங்கம்போல்செய்து
அடவாக யுருக்கியொன்றுய் மணியாய்வாங்கி
கூட்டியதோர் மணியதனை வெள்ளியேழும்
குணமான செம்பதுதான் மூன்றுங்கூட்டி
நாடியதோர் குருவதுதான் ஒன்றுங்கூட்டி
நலமாக வுருக்கியதைத் தெளிந்தேநீயும்
கூட்டியதோர் வைத்தெருமக் கடைக்கியேற்கும்
சொல்லாதே கருவெல்லாம் சொன்னுல்தோஷம். (ச)

தோஷமது தீர்வதற்கு பீசங்கேளும்
சொல்லுகிறேன் அகாரமொடு உகாரம்சேரும்
வாசமுடன் மகரமுடன் சிகரந்தன்னும்
வகாரமுடன் பிராணநகர் நிலையேயாகும்
பாசமுடன் நீசேர்ந்து மவுனியாகிப்
பாங்கான நாதவொளி சிதம்பரத்தில்
ஓசையுடன் உறுதியாய்த் தேறும்பாரு
ஒருவருக்கும் விள்ளாதே அஞ்சுமுத்தே. (ரு)

அகஸ்திய நாயனுர் அருளிச்செய்த ஐந்து முத்தே.

---

401. சுவடி நெ. 236 (I)

## அகஸ்தியர் சூத்திரம் ஐம்பது

ஏடுகள் 12. பக்கங்கள் 30 முதல் 41 வரை.
பக்கத்திற்கு 6 முதல் 7 வரிகள்.

இதில், முப்பு முடிக்கும் விதம் - நீத்துவகை தெரிந்தவன் வைத்தியன் - உப்புச் சுன்ன முறை - வீரச் சுன்னம் - பூனீறு - காரச் சுன்னம் (உருக்கினம்) - அயமணி - அப்பிரக மணி - கருடப் பச்சை மணி - கல்நார் மணி - சங்கு மணி - சலாசத்து மணி - நவரத்தின மணி - மனித எலும்பு மணி - மான்கொம்பு மணி - ஆமையோடு மணி - எல்லா மணியோடும் கெந்தி சேர்த்து செந்தூரம் செய்யவும். நவரத்தினங்களிலே செந்தூரங்களின் குணம், அனுபான விசேஷம் முதலியன உள்ளன.

*Beginning :*

ஆதியாய் ரஸவாதமான வைத்யமும்
பொதிகை யன்பதிலே முப்பூவும்பூட்டினேன் – துதிகை
வாரணத்தன் பாதம் மறவாமல் யென்னுளுங்
காரணமான தேவிபாதங் காப்பு (க)

வானும் புவியும் மதியும் கதிரொளியும்
தேனுந் தெளிந்த சிவகுருவை – தானுந்தான்
நால் மறையுமாராய்ந்து நண்ணுவா னென்பதையும்
கோலமுடன் கணேசன் கூறு. (உ)

மயமான முப்புவின் மார்க்கந்தன்னே
வைத்தியர்க் காக்கியே விரித்துச்சொல்லச்
செயமான கணபதியுங் கந்தந்தானும்
சிவனோடு பார்வதியும் நிர்வாணிதானும்
நயமாக வெப்போதும்முன்னே நின்று
நாடறிய முப்பூவை நயந்துகேட்க
மயமாகச் சொல்லுகிறே னன்பதுக்குள்
வைத்தியரே யெப்போதும் வணங்கிக்கேளே. (ங)

*End :*

உலகத்தோர் பிழைக்கவென்றும் குருவைச்சொன்னேன்
உரையப்பா வைத்தியத்தை உன்னிச்சொன்னேன்
நிலைகெட்ட மான்பருக்கு ஆகச்சொன்னேன்
நிலைத்துவரும் புண்ணியத்தை நிகழ்த்தினேன் நான்
வலைகட்டி மீன்பிடிக்கு மிந்தமாயம்போலே
வையகத்தில் நோய்களுக்கு வலைதானுமே
சிலையொத்த தேகமடா மானிடவர் தேகம்
செய்கையினல் அழிந்துசெத்துப் போகுங்காலே (சகூ)

காலான வைத்தியத்தை யருதியாகக்
கைமுறைகள் தப்பாமல் கருதிச்செய்தால்
பாலான நிறமுடைய பிரும்மனுவான்
பாரிலே வாழ்வதற்குக் குருவுமாவான்
சேலான திறமுடைய செல்வனுவான்
சிந்தையிலே களங்கமற்றால் சித்தனுவான்
நாலான மறைபோதப் பிரும்மா சொன்ன
நலமுடைய முனிவர்மொழி நாடிமுத்தே. (ருய)

சிவமய குருவே துணை.

---

**402.** சுவடி செ. 236 (J)

## நந்திதேவர் முப்பு சூத்திரம் முப்பது

**ஏடுகள் 5. பக்கத்திற்கு 6 வரிகள்.**

இதில், முப்பு முறைகளை 18 சித்தர்களும் ஒரேவிதமாகவே பகர்ந்திருக்கின்றார்கள் என்ற குறிப்புடன் உப்பு தீட்சை - மெஞ்ஞானம் பெறவேண்டிய முறை - சவுக்கார உப்பு - உப்பு திராவகம் செய்முறை - சவர்காரத்தீனீர் - முதலியன உள்ளன.

*Beginning :*

பூரணமான பொன்னடிமூலம்
காரணமான கணபதிசத்திச்
சாறணை மேலாய் சார்ந்திடுஞ்சோதி
ஆரணஞானத் தடிமூலங் காப்பே. (க)

கார்ப்பது மீசன் கருணையினுலே
கூர்ப்புடன் வாதக் குறிப்பறிந்திட்டேன்
சேர்ப்பது வாதத் தெளிவு முன்னுரை
பார்ப்பவர்க்கல்லோ பலித்திடுஞ் சித்தியே. (உ)

சித்தியாம் நந்தி தேவனென் றென்பெயர்
அத்தினுற் கூப்பிட்டருள்கின்ற வாதம்
பேதத்தினுலே பேர் எனக்காச்சு
முத்தமிழாலே மொழிந்த முன்னூறே. (ந)

*End :*

ஆமேயிவைசவுக் காரத்தீனீருல்
ஓமி மிருதார சிங்கி லூட்டியே
வாமே சுண்ணும்பில் வைத்திட் டெரித்திட
தாமே நிறைந்த சற்குரு வென்னே. (நக)

குருவினில் பச்சைத் துருசது சுன்னம்
குருவினி லென்ன சரக்குகள் சுன்னம்
குருவினிலுபரசக் கூட்டமிதெல்லாம்
குருவது வாசிக் கோலமாமூலமே. (நஉ)

கோலமிதென்னும் குருவிதுநாலே
காலனுமில்லை கலயனுமில்லை
பாலெனு மமுத மானமுமுண்டாம்
மூலமிதான முப்பதுமுற்றே. (நந)

குருவே துணை.

403. சுவடி நெ. 236 (K)

## தக்ஷிணாமூர்த்தி ரஸக் குளிகை

ஏடுகள் 4. பக்கத்திற்கு 7 வரிகள்.

புலத்தியருக்கு உபதேசித்தது - ரஸ மணி - கவுன குளிகை - நுனி நாக்கை அண்ணாக்கில் மோதி லம்பினி யோகம் செய்தல் சுவாசபந்தனம் செய்யவும். இம்முறையை வெளியில் சொன்னால் கழுதையாய் பிறப்பார்கள் என்றும் காணப்படுகிறது.

*Beginning :*

ஆதியந்த மில்லாத சின்மயத்தின் பாதம்
அகண்டபரி பூரணமாமாத்தாள் பாதம்
சோதி நிறமாகி நின்ற கணேசன் பாதம்
சொல் தனக்கு மெட்டாத சூட்சாசூட்மம்
வீதி யென்ற பராபரத்தில் நந்திபாதம்
வேதாந்த சாஸ்திரத்தின் வெளியின் மார்க்கம்
சோதி யெனு மம்பரத்தில் நடனம்செய்த
சுடரொளியின் பாதமது காப்புத்தானே. (க)

தானென்ற ஞானிக்குக் குளிகையுண்டு
சாத்துகிறேன் புலத்தியனே சார்ந்துகேளு
தானென்ற விந்துவல்லோ ரஸமுமாகும்
திரண்டமணி யாவதற்கு வகையைக்கேளு
மானென்ற அக்கினியே புடமுமாகும்
மக்களே ரஸமணியின் மார்க்கத்தாலே
ஊனென்ற சடத்திலே மணிபோல்ச் செய்து
உத்தமனே கவுனத்தி லோடலாமே. (உ)

*End :*

ஆமென்ற ரஸமணியின் வேகத்தாலே
அண்டர்களும் முனிவர்களு மயங்கினார்கள்
தேனென்ற யிம்முறையைச் சொன்னேன் யானும்
சிவஞானிக்கும் மௌனிக்கும் சொன்னதல்ல

ஊனென்றே பிறந்தோர்க்கும் மான்பருக்கும்
உலுத்தருக்கு மிம்முறையைச் சொன்னுயானல்
கானென்ற கழுதையுட ஜன்மமாகி
கடைப்பிறப்பாய் பிறந்திடுவார் கருதிப்பாரே. (௧௩)

பார்க்கவே யிம்முறையைச் சொன்னுயானல்
பாழான நரகமெய்தும் பாருபாரு
கார்க்கவே சீஷனுட மனத்தைக்கண்டு
கைமுறையாய் சொல்லிவிடு ஞானமார்க்கம்
ஏற்கவே ரஸமணியின் மார்க்கந்தானும்
யென்மக்காள் சொல்லிவிட்டேன் ஞானமார்க்கம்
சேர்க்கவே யிம்முறையை யுனக்குச் சொன்னேன்
செழுங்கருணை பதினலில் கடாக்ஷமுற்றே. (௧௪)

---

## 404. சுவடி நெ. 236 (L)

## சுந்தரானந்தர் தர்க்கப்பத்து

ஏடுகள் 3. பக்கத்திற்கு 8 வரிகள். சிதிலமாக்வுள்ளது.

இதில், பரம்பொருளைப்பற்றி கேள்வி பதிலாக அமைந்து இருக்கின்றது.

*Beginning :*

ஆதிபரம் வடிவாகி நின்றநிலையெங்கே
அகார வெளிதிறந்து மனதறிவதெங்கே
சோதியாய் மூன்றில்வந்த சுரூபமெங்கே
சொல்லடங்கி நின்றசக சாலமெங்கே
பாதியாய் யறனுமையுஞ் சேர்ந்த விடமெங்கே
பாழ்கடந்து பரமாகி நின்ற விடமெங்கே
கோதில்லா ஞானிக்குக் கூட்டமெங்கே
குறிப்புடனே எந்தனுக்கு அருள்செய்வீரே. (௧)

ஆதிபரம் வடிவாகி நின்றதுதான் நாதம்
அகாரவெளி திறந்ததுதான் விந்துவாகும்
சோதியாய் மூன்றில் வந்தபொருள் நீயாகும்
சொல்லடங்கி நின்ற சகஜால மேனி
பாதியாய் ருனுமையுஞ் சேர்ந்த விடஞ்ஞானம்
பாழ்கடந்து பரமாகி நின்றது தானரவு
கோதில்லா ஞானகுரு கூட்டந்தா னசைவு
குறிப்புடனே யிப்பொருளைக் குறித்துக்கொள்ளே (உ)

*End :*

வல்லமையுமாய் கையுடமாய்கை நிலையெங்கே
மணவாசி யேறிவருந் தேசிகனுமெங்கே
அல்லுபக லற்றவிட மருவுருபமெங்கே
அண்டரண்ட மூடுருவி அகண்டவெளியெங்கே
சொல்லுறுதி யுற்றவிடஞ் சோதிநிலையெங்கே
சும்மாவிருக்கவும் நான் பெற்றவிடமெங்கே
யெல்லை கடந்தெப்பொருளு மிருக்குமிடமெங்கே
என்குருவே என்மணி எனக்கருள்செய்வாயே. (சு)

வல்லமையு மாய்கையுடன் மாய்கை.........
பகையான வாசியேறிவரும் தேசிகனின்போதம்
அல்லுபகலற்ற விடமருவுருப மனமாம்
அண்டரண்டமூடுருவி அகண்ட வெளிபரையாம்
சொல்லுறுதி யுற்றவிடம் சோதிமதி வீடாம்
சும்மாவிருக்கவும் நான்பெற்ற விடசர்க்கும்
எல்லைகடந் தெப்பொருளுமிருக்குமிடம் நீயாம்
யென்மகனே யெனத்தெளிந்து
தெளிந்துயிசைத்தானே. (மி)

405. சுவடி நெ. 236 (M)

# ரோமரிஷி நாயனுர் அருளிச்செய்த சூத்திரம் இருபத்தைந்து

ஏடுகள் 5. பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள்.

இதில், கரியுப்புக்கட்டு - உப்பு செந்தூரம் - வாதத்திற்கு நந்தி அருள்பெறவேண்டும் - கெந்தக மெழுகு - செம்புக்கட்டு - பூனீர் வித்தை - சவுக்காரவைப்பு - வழலையுப்பு - துருசுச்சுன்னம் முதலியன உள்ளன.

*Beginning :*

மயமான சூத்திரத்தி லுப்புமார்க்கம்
வாதத்திற் காதியாய் விரித்துச்சொன்னேன்
செயமான குருநந்தி யுபதேசித்தார்
சிவனேடு பார்வதியும் நிர்வாணியும்
நயமாக யெப்போதும் முன்னேநின்று
நாடறிய சூத்திரத்தை நயந்துகார்க்க
வளமாகச் சொல்லுகிறே னிருபத்தைந்தில்
வாதிகளே யென்னூலை வணங்கிக்கேளே. (க)

கேளடா கரியுப்பைக் கட்டிதானும்
கணேசனையுந் தேவியுட பதத்தேபோற்றி
ஊரடா திரிந்தலையும் உலுத்தருக்கு
ஒளித்து வைத்தேனின்னூலைக் கைக்கொடாதே
வாளடா தீக்ஷ்ணமாங் கவந்தமோடு
வளமான தக்காளி முசுமுசுக்கை
ஆளடா வகையொன்று சாறுபடிகால்தா
னதிற்சொல்வேன் கரியுப்புக் கால்தான்பாரே. (உ)

*End :*

அஞ்சான நந்திகுரு ஆசான்றானும்
அருளினுற் யென்மகனே ரோமரிஷியென்று
கஞ்சமலர் திருப்புயனே சுரூபானந்தர்
கடாட்சித்தா ரெந்தனுக்கு யானுஞ்சொன்னேன்
வஞ்சகமாய் திரியாதே குருவைவிட்டு
வானென்ற பொறிவந்து நீறிப்போவாய்
தஞ்சமெனவந்தடைந்து சரணம் போற்றத்
தயவுசெய்வார் சூத்திரந்தான் முடிவுமுற்றே. (உசு)

ரோமரிஷி நாயனுர் அருளிச்செய்த சூத்திரம் (உசு) முற்றும்.

---

## 406. சுவடி நெ. 236 (N)

## தேரையார் பற்பவகை பதினாறு

ஏடுகள் 4. பக்கத்திற்கு 5 முதல் 8 வரிகள்.

இதில். அய பற்பம் - தங்க பற்பம் - தாமிரத்துட்டு பற்பம் - வெள்ளி பற்பம் - காரீய பற்பம் - சூத பற்பம் - வெள்வங்க பற்பம் - நாக பற்பம் - பித்தளை பற்பம் - வெங்கல பற்பம் - உருக்கு பற்பம் - முத்து பற்பம் - முதலியன காணப்படுகின்றன.

*Beginning :*

கங்கை சடை தரித்தபர னீன்ற தந்தி
கணபதிபொற் பாதமதைக் கருத்துள் வைத்து
யெங்கள் பிரான் குறுமுனிவர் பாதம் போற்றி
யெனையாண்ட கும்பமுனி யருளே போற்றி
மங்களஞ்செய் யாயுருவே தத்திலுள்ள
பரநடனமுஞ் சூத்திரமு மழைத்துப்பார்த்து
அங்கமுள்ள நல்லோர்கள் நீற்றினத்தை
அழகான பதினாறி லருளுவேனே, (க)

அருளுவேன் முன்னுரைத்த நூல்களெல்லாம்
அரகரா காரசா ரத்தால் நீறும்
பெரியோர்கள் உரைத்திடும்நற் காரசாரம்
பெருமையினுல் நீத்தினங்கள் பலமுண்டாச்சு
தெரியாத நானடியேன் சித்தரருட்ச்
சீஷனெனுந் தேரையன்நான் செப்பும்நூல்கள்
பெருமையினுல் மூலிகையினுல் நவலோகத்தைப்
பலமாக நீத்துவகை பேசுறேனே. (உ)

*End :*

முத்துநீறு தன்னுலே வியாதியெல்லாம்
முன்னிற்க மாட்டாது சிற்றின்பம் போம்
குத்தமில்லை நான்சொன்னபற் பத்திற்கு
கூர்மையா மனுபான மறிந்துண் டாக்கால்
பித்தமில்லை வாதமில்லை சிலேத்துமத்தின்
பிறந்தபல ரோகமெல்லாம் பிரிந்துபோகுஞ்
சாத்தியமாய்ச் சொல்லிவிட்டேன் இந்நூல்மார்க்கந்
தப்பாத தேரையர்சொல் தமிழ்தான்முத்தே. (கசு)

---

407: சுவடி நெ. 236 (o)

## வைத்திய அட்டவணை

ஏடுகள் 52. பக்கத்திற்கு 5 முதல் 10 வரிகள்.

இதில், பச்சைத் தண்ணிரில் குடிக்கப் பேதி மாத்திரை - சர்வ ஸஞ்சீவி மாத்திரை - ஆனந்தபைரவன் - பலகரை லேகியம் - உப்புக்கட்டு - நாக பற்பம் - இருமல் இளைப்பிற்குத் தாமிர பற்பம் - கல்நார் பற்பம் - அய பற்பம் - கந்தக பற்பம் - தாமிரச் செந்தூரம் - ரஸ பற்பம் - காரீய பற்பம் - வெங்கல பற்பம் - திராய் பற்பம் - கல்நார் பற்பம் - அஞ்சனக்கல் பற்பம் -

சங்கவேர் தைலம் - வேப்பம்பட்டைத் தைலம் - அமுக்கிராத் தைலம் - இஞ்சித் தைலம் - அருக்கன்வேர் தைலம் - சாரணைத் தைலம் - சவுரித் தைலம் - ஆமையோடு பற்பம் - கர்ப்பூர பற்பம் - சாதிலிங்கக் குழம்பு - பூரணுதி லேகியம் - கோரோசனைக் குளிகை - வடுக வெங்காரக் குளிகை - சவுரி எண்ணெய் - கோரோசனைக் குளிகை - கெந்தகச் செந்தூரம் - பெரும்பாட்டுக்கு மருந்து - சன்னிக்கு நஸ்யம் - செந்தூரம் - ரஸ பற்பம் - பூரணுதி லேகியம் - சந்தனுதிச் சூரணம் - வருவங்க வெட்டை - சில்விஷத்திற்கு மருந்து - ரத்த காசத்திற்கு - பின்ளை பெற மாட்டாதற்கு வளையம் - வெள்ளீய பற்பம் - சாம்புருணிக் குளிகை - நாகக்கட்டு - முதலியன உள்ளன.

*Beginning :*

| | | | |
|---|---|---|---|
| சாதிலிங்கம் வராகனெடை | — | — | 1 |
| வெங்காரம் வராகனெடை | — | — | 1 |
| அரிசித்திப்பிலி வராகனெடை | — | — | 1 |
| நாபி வராகனெடை | — | — | 1 |
| தலைச்சுருளி வேர் சுட்ட சாம்பல் வராகனெடை | | — | 10 |
| வாளம் வராகனெடை | — | — | 5 |

பழச்சாறு விட்டு அரைத்து உளுந்துப் பிரமாணம் உருண்டை செய்து வைத்துக்கொண்டு 3 உருண்டை பச்சைத்தண்ணீரில் குடிக்கப் பேதியாகும்.

* * * * *

தாமிரத்துட்டுக் காய்ச்சித் தட்டிக் காய்ச்சி எருக்கம்பால் 1 படி அல்லது ½ படி கொண்டுவந்து அதில் 7 திறம் காய்ச்சி காய்ச்சித் தோய்க்கவும் அந்தப் பாலிலே 1 படி ஓமத்தை மைபோலரைத்து 2 அடையாகத் தட்டி அந்த அடையில் துட்டை வைத்து மேல் அடை மூடிப் பொதிந்து நன்ருகக் காய வைத்துக் கஜபுடம் போடவும். அதை நன்ருக ஆறவைத்து எடுத்துக் கவசம் நீக்கிப் பார்க்க வெள்ளை பற்பமாகும்.

* * * * *

*End :*

தாக்குவதும் தாமிரம தனையுருக்கிச்
சதிராக அவி புடத்தில் மருந்தைச் சேர்த்து
முருக்கமுள்ள தாம்பிரம் கட்டிம்போகும்
முத்தியுள்ள வெள்ளியெட்டில் ரெண்டே சேரு
திறக்கமுடன் உருக்கினம்டா பார்க்கும்போது
சிவசிவா பொன்னொளி யென்னசொல்வேன்
மார்க்கமுள்ள தங்கமடா பத்துக் கொன்று
வைத்து உருக்கத் தங்கமது ஆகும் மைந்தா.

---

408. சுவடி நெ. 236 (P)

## மச்சமுனி ஞானம் இருபத்தைந்து

ஏடுகள் 2. பக்கத்திற்கு 7 வரிகள். செய்யுட்தொகை 8.

இதில், அங்கஙிலே விவரணம் 9 – ஆறு ஆதாரங்கள் முதலியவை உள்ளன. அபூர்த்தி.

*Beginning :*

முத்திதரும் வேதாந்தக்கடலே போற்றி
முதலானபூரணமே தாயே போற்றி
அத்திமுக றுறுமுகந் தன்னைப் போற்றி
ஆனந்த ஆறுமுகன் ஆயிபோற்றி
எத்தியிலும் எத்திசையும் யீன்ருய் போற்றி
ஈசன்முதல் மூவருக்கு மரசே போற்றி
பத்தியுள்ள மனந்தோரும் மறைந்தாய் போற்றி
பார்வதியுன் பாதமலர் காப்பதாமே. (க)

*End :*

போகாமல் பரத்தி லொன்றாய் நின்ற
புண்ணியமாஞ் சூட்சமது சொல்லார் சொல்லார்

ஆகாச பூமியென்று மில்லையப்பா
அம்பரமாய்த் தோன்றுமது அகண்டமாச்சு

வாகான ஞானிக்கும் சித்தர்க்கெல்லாம்
விளங்காது விளங்காது மத்தோர்க்கப்பா

சாகாமல் லிருக்கவென்றால் தீட்சைபத்தும்
சாதிப்பாய் குருவருளால் சாதிப்பாயே. (அ)

---

409. சுவடி நெ. 236 (Q)

## வைத்திய நூல்

ஏடுகள் 44. பக்கத்திற்கு 8 முதல் 10 வரிகள்.
பூச்சி அரிக்கவாரம்பித்துள்ளது.

இதில், பல மருந்து முறைகள் செய்யுட்களாகக் கொடுக்கப் பட்டுள்ளன. மொத்த செய்யுட்டொகை உ௩௯ முறையாவன: சந்தானபைரவன் மாத்திரை - வாதாராக்ஷஸன் - சுயமக்கினி கர்ப்பக மாத்திரை - பேதி மாத்திரை - ரஸ சிந்தூர மணி - கோரோசனைக் குளிகை - அர்த்தநாரீச்வர மாத்திரை - சிலோதார மாத்திரை - கரிசாலை லேகியம் - கண்டங்கத்திரி லேகியம் - பஞ்சதீபாக்னி லேகியம் - சித்தாதி லேகியம் - மகா பில்வாதி லேகியம் - சரபங்க வில்வாதி லேகியம் - திப்பிலி ரசாயனம் - மதுஸ்னுஹி ரசாயனம் - சௌபாக்ய சுண்டி - கூஷ்மாண்ட லேகியம் - அக்னீச்வரன் - அச்வகந்திச் சூரணம் - கண்டங்கத்திரி சூரணம் - தாளீசபத்திரிச் சூரணம் - வல்லாரைச் சூரணம் - இஞ்சிச் சூரணம் - ஏலாதிச் சூரணம் - அச்வகந்தி பலா - குடூசித் தைலம் - கொம்பரக்குத் தைலம் - பிருங்காமலகத் தைலம் - சந்தனாதித் தைலம் - பொன்னாங்காணித் தைலம் - கீழாநெல்லித் தைலம் - சிரச்சூலைக்கு நெய் - நிலப்பனைக் கிருதம் -

புளியாரைக் கிருதம் - வல்லாரைக் கிருதம் - கூஷ்மாண்ட கிருதம் - தூதுவேளைக் கிருதம் - கண்டங்கத்திரிக் கிருதம் - கணை எண்ணெய் - மாந்த எண்ணெய் - மேக எண்ணெய் - அஞ்செண்ணெய் - சுகசீதபேதி எண்ணெய் - எலுமிச்சப்பழவெண்ணெய் - விப்பிருதி வீக்கத்திற்கு ஆக்ராணம் - கண்டௌஷதம் - சூரண சுத்தி - லோகச் செந்தூரம் - காந்தச் செந்தூரம் - அயச் செந்தூரம் - திரிலோகச் செந்தூரம் - பஞ்சலோகச் செந்தூரம் முதலியன உள்ளன.

*Beginning :*

பாரப்பா புலத்தியரே சத்தான பரிவான
வைரவந்தான் சொல்லக் கேளும்
சேரப்பா திரிகடு சிகப்பு நாபி
திறமான யெரிச்ச லொடு பொரிச்ச லேனும்
தீரப்பா சமன்கூட்டி பழச்சாறுபடி
நிசமாக நால் சாமம் அரைத்துக்கொண்டு
தாரப்பா குன்றிபோல் நிழலுலர்த்தித்
தப்பாமல் செப்பில் வைத்துச் சொல்லக்கேளே. (க)

கேளப்பா இஞ்சிநீர் உள்ளித்தைலம்
கெடியான முலைப்பாலில் கொடுத்தாயானால்
நாலப்பா சன்னிவகை யெல்லாம் போகும்
நலமான தேன் கூட்டிக் கொடுத்தாயானால்
தாளப்பா தோஷமென்ற தெல்லாம் போகும்
தப்பாது கன்னலிடத் தீரும் தீரும்
தேளப்பா ரசானந்த வயிரவந்தான்
செப்புகிறேன் சிகப்புநாலு பொரிதானேட்டே. (உ)

*End :*

கொள்ளடா பஞ்சலோகச் சிந்தூரந்தான்
கெடியான தங்கமொடு வெள்ளிசெம்பு
நாளடா கெந்த மொடு இரும்பு அஞ்சு
நலமாகச் சுத்தி செய்து சமனாய்க் கூட்டி

வேளடா கெந்தகந்தான் ரெட்டிப்பிட்டு
　　வெருளான சூதமரை வராகன் கால்தான்
ஆளடா முப்பூவின் சுன்னமொன்று
　　அப்பனே பழச்சாறதால் சாமம் நாலே. (உ௩எ)

நால்சாம மரைத்துமே உலரவைத்து
　　நன்ருக ஓட்டிலிட்டு ஓடுமூடி
சீலானச் சீலேசெய்து முழப்புடத்தில்
　　சேர்த்துநீ வாறினபின் னெடுத்துக் கொண்டு
காலான கரிசாலைச் சாற்ருலாட்டிக்
　　கச்சாமல் நால் சாமமரைத்துக் கொண்டு
வேளடா முழப்புடத்தில் செந்தூர மாகும்
　　வெருதான செருப்புக்கால் சாமம்நாலாட்டே. (உ௩அ)

ஆட்டியே முழப்புடத்தில் செந்தூரம் தான்
　　அருணனைப் போல் நிறமாகு மெடுத்துக்கொண்டு
முட்டியே திரிகடுகு பணந்தான் கொள்ள
　　மூதண்டத்தேன் கூட்டி மண்டலங்கொள்ள
நாடியே வாயுவென்ற எண்பதும் போம்
　　நாடாது பித்தத்தின் மூலந்தீரும்
காட்டியே சிலேத்மங்க ளிருபதும் போம்
　　கருவான இன்னமொன்று கருதக்கேளே. (உ௩௯)

---

**410.** சுவடி நெ. *237* (A)

## முகைதீன் காப்பாடு

ஏடுகள் *3.* பக்கத்திற்கு *7* வரிகள். சிதிலமாகி உள்ளது,
(நீள × அகலம் *33* × *3* செ. மீ.)

இது, முஸ்லீம் மத சம்மந்தமான நூல்.

*Beginning :*

............ நாமம் இருபத்தினலெழுத்துஞ்
சொல்லெல்லாம் நிறைந்துநின்ற சோதியாம் பொருக்கானேதி
அல்லல்லாம் இருளைக்கேளு அருணன்போ லறிவதான
வெல்லல்லாம் இவிலீசனை பிணையனை விம்மிக்கொண்டேன். (க)

வெளியிளில் லொளிவதான வெத்ததை சபீறைகிலும்
ஒளியினில் உருவதான உண்மையாய் நபிக்கென்றீய்ந்து
தெளியவே அதனைஓதித் தெரிந்திடும் அறிவினலே
நளியெனும் ஞானத்தோடே நாயனை வணங்கினரே. (உ)

*End :*

ஆய ஞெருவனை அருவினையகல
தூய நாயகனைத் தொழுவோம் நாமே. (கரு)

ஆயோர் நாயஞெருவனை நாழிநினைப்பவர்
மாய டலர்பர வாழ்வு பெருவரே. (கஎ)

வேதாம்பரேயி ரசூல்விளக்கும்
மகமது நபி ஆதாரமே அல்லா. (கஅ)

---

411. சுவடி நெ. 237 (B)

## அகஸ்தியர் நயனவிதி 500

ஏடுகள் 46. பக்கத்திற்கு 7 வரிகள்.
இடையிடையே செல்லு அரித்துள்ளது.
(நீள × அகலம் 33 × 3 செ. மீ.)

இதில், கண் ரோகங்கள் 96 - கண் நோய் நிதானம் - அதற்கான மருந்து முறைகள் முதலானவை கூறப்பட்டுள்ளன. 347 பாடல்களேயுள்ளன. இது ஏற்கனவே அச்சிடப்பட்டுள்ளது. இது முஸ்லிம் வசமுள்ள சுவடியானபடியால் காப்புச்செய்யுள் தனியாகக் கூறப்பட்டிருக்கிறது.

*Beginning :*

நூரினைப் பகுந்தநூறு முகமது ஒழிவா லெல்லாம்
தேரினூர் ஆதம்தன்னை திரிதின்னம் ரோகம்தன்னுல்
யேறின வியாதிக்கெல்லாம் மருந்துண்டு லுக்குமானென்
டோதின ரகிமான் ஆதி யொருபொருள் காப்பதாமே.

அமானல்லா கிருபைசெய்யவும்.

கார் நிறவண்ண மாலுங் கைலேயான் கடவுளானும்
தார் நிறையான வேலோன் தந்திமாமுகனும் வேத
சீர் நிறை வடநூல் தன்னில் செப்பின நிதானம்கண்டு
பார் நிறை தமிழினுலே பகர்ந்திடக் காப்புத்தானே. (க)

*End :*

துத்தந் துரிசு அரிதாரம் துய்ய இரதங் கெந்தகமும்
மத்துஞ் சிலேயிநோர்வாளம் வடிவாம் வெள்ளேயுடன்கூட்டி
மெத்துமேனி யிலேச்சாற்றில் மேலாயரைத்து உண்டைசெய்து
கொத்துக் கட்ட கண்ணேய்கள் குலேந்தேபோகுங் கண்டீரே.
(ந௲சஎ)

---

**412. சுவடி நெ. 237 (C)**

## வைத்ய அட்டவணே

ஏடுகள் 54 முதல் 245 வரை. பக்கத்திற்கு 7 முதல் 10 வரிகள்.

இதில், 81, 82, 93, 94, 110 முதல் 132 வரை ஏடுகள் காலியாக விடப்பட்டுள்ளன, ரொம்பவும் பூச்சி அரித்துள்ளது. ஆனுல் எழுத்து மிகவும் சுத்தமாக உள்ளது.

கீழ்கண்ட மருந்து முறைகள் உள்ளன. ரெத்னுதி மாத்திரை - செம்பூராதி மாத்திரை - வெண்ணெய் மருந்து - கோரோசனுதி மாத்திரை - பீதரோகினி மாத்திரை - தாமிராதி மாத்திரை - செம்பீராதி மாத்திரை - மஞ்சக்காமாலே மருந்து -

கண்ணில் சீழ்பிடித்தால் மருந்து - சிவநாம ரஸம் - மூக்கு ஆக்ராணம் - வத்தித் துணி - அத்திப்பால் வத்தித் துணி - கள்ளிப்பால் வத்தி - குறட்டைப்பழ வத்தி - கபாலேச்சூலே வத்தி - சுராங்குசம் - நாரத்தப்பழ நெய் - அக்கினி மாந்தியத்திற்கு மருந்து - சூத சலமஞ்சரி - வங்க பற்பம் - கெந்தகச் செந்தூரம் - வெள்ளேப்பாஷாணச் செந்தூரம் - லிங்கச் செந்தூரம் - தாளகச் சிந்தூரம் - கரப்பான் கிரந்திக்கு எண்ணெய் - லசுனத் தைலம் (விரைவாதத்திற்கு) - சலமஞ்சரி பண்ணும் விதம் - புளியாரை எண்ணெய் - சன்னிவாத பயிரவன் - ஜ்வராங்குசம் - சௌவீர பற்பம் (எடை குறையாமல் எடுக்க முறை) அம்ருதவல்லாதிப் பிரயோகம் - காதில் சீழ் விழுவதற்கும், மண்டை ரணத்திற்கும் எண்ணெய் - இலகு வல்லாதி லேகியம் - அண்டவாதத்திற்குக் குக்குளு மருந்து - சொறிசிரங்கு எண்ணெய் - நீரழிவுக்கு எண்ணெய் - நவசாரக் கட்டு - மூலத்திற்கு நெய் - சகல வியாதிக்கும் உருக்கு உப்பு - கணையின்மேல் பேதிச் சுரம், இருமலுக்குக் கபாட நெய் - மகாகிராணி கபாட மாத்திரை, அந்திரவாயு, விரைவாதத்திற்கு - சுழி மாந்தக் கஷாயம் - சிரோவாயு ஆக்கிராணம் - மன்மத சிந்தாமணி லேகியம் - பீனிஸ இருமலுக்கு - வாயில் கண்ட மேகக் கட்டிகளுக்கு ஒண்ணிப்போடுகிற நெய் - புகை - கரப்பானுக்கு எண்ணெய் - கிரந்திக்குக் களிம்பு - தீராத கரப்பான், கிரந்திக்குக் காரத் துணி - கிரந்திப் புண்ணுக்குக் களிம்பு - பல்பொடி - சௌபாக்ய சுண்டி - தாளீசாதி வடகம் - அக்கினி முகச் சூரணம் - அஸ்வகந்திச் சூரணம் - வேப்பெண்ணெத் தைலம் - நாரத்தைக் கஷாயம் - ரத்த க்ஷயத்திற்குக் காரீய பற்பம் - தலேமுழுகத் தைலம் - தாளீசபத்திரி வடகம் - மது மேகத்தில் நீர் இறங்க சன்யாசி அப்புராவ் சொல்படி - வாயு மாத்திரை - சிவநாம ரஸம். (நன்னு சாயபு மகன் பெரிய பாவா சுயம் பாடியது) - தோஷத்திற்குக் கண்டௌஷதம் - சௌபாக்ய சுண்டி - கருங்கோழிச் சூரணம் - பூவரசங்காயெண்ணெய் - துரிசு பற்பம் - பாஷாணக் கட்டு - வங்க பற்பம் - ஈச்வரமூலிக் கற்பம் -

ப்ரும்மதண்டுக் கற்பம் - பூவரசம்பட்டைக் கற்பம் - குறட்டைக் கற்பம் - கத்தரிநாயகன் கற்பம் - துத்திக் கற்பம் - அகத்திக் கற்பம்- இலேக்கள்ளிக் கற்பம் - கொல்லங்கோவைக் கற்பம் - நத்தைச்சூரிக் கற்பம் - சிறுகீரைக் கற்பம் - வெள்ளைக்காக்கணேக் கற்பம் - எரிகுன்மத்திற்கு - சித்திரமூலச் சூரணம் - சிவனூர்வேம்புச் சூரணம் - கருப்பம் தரிக்கச் சாறுவகை - நீர் கட்டுக்கு - மேகம், எலும்புருக்கி, மலட்டுக்கும் - மலட்டு வலிக்கு - பால் சுரக்க - ஆறாத புண்ணுக்கு - சகல கிராணிக்கும், பவுத்திரத்திற்கும் - ஆசைகொள்ள வசியமருந்து - நிலவாகைக் கற்பம் - முருங்கையிலேக் கற்பம் - சௌபாக்ய சுண்டி - வங்கச் செந்தூரம் - கெந்தக பற்பம் - உள்நாக்குக்கு - அண்டவாதம் - விரைவாதத்திற்கு - மகோதரக் கட்டிக்கு - விப்புருதி - இறங்கு வாதத்திற்கு - பைத்தியத்திற்கு - வெள்ளைச் சாறணேவேர் கண் பூவிற்கு - இன்னும் பல கண் ரோகங்களுக்கு - ரச சுத்தி - ரஸ பற்பம் - தாளக பற்பம் - இரும்புத் தாம்பூரம் - பூநாகச் செம்பும் மயிலிறகுச் செம்பும் - நவலோக பற்பம் - பாஷாணக் கட்டு - கன்னப்புத்துக்கு - கண்டமாலைக்குப் பத்து - வண்டுகடி குஷ்டத்திற்கு, க்ஷயத்திற்கு, சூதிகாக்கிராணிக் கழிச்சலுக்கு - சூதக வாயு, கால், கை எரிச்சலுக்கு - அண்ட வாதத்திற்கு - சோகை - சீதக் கடுப்பிற்கு - சூலைக் கட்டுக்கு - நரம்புச் சிலந்திக்கு - மார் வலிக்கு நிலப்பனே அடை - இடுப்பு வலி - வாயு, மூச்சுக்கு - காது வலிக்கு - அரையாப்புக் கட்டிக்கு - ரெத்தப் பிரமியத்திற்கு - கெந்தக தைலம் - கெந்தகப் பற்பம் - தாளகப் பற்பம் - அனுபானத்துடன் - பிள்ளையுண்டாக - பிள்ளையுண்டானபேருக்கு வயிற்று வலிக்கு - கர்பத்தின்மேல் உதிரம் விழுந்தால் - பீனச வாயுவிற்கு. முழுக நஸ்யம் பண்ண - தீராத சிரங்குக்கு எண்ணெய் - கரப்பான், கிரந்தி, குஷ்டம், பெருவியாதிக்கு, பீனிசத்திற்குத் தைலம் - இருமலுக்குச் சூரணம் - சர்வ ரோகத்திற்கும் சிந்தாமணிக் குளிகை - இருமல், சுவாசம், பீனிஸத்திற்கு மருந்து - பாண்டு, வீக்கத்திற்கு உச்சிதம் - மன்மத சிந்தாமணி லேகியம் - கணத்துக்கு எண்ணெய் - பீனிஸ எண்ணெய் - பிள்ளையுண்டாக -

மேகத்திற்கு எண்ணெய் - மூலபவுத்திர எண்ணெய் - சர்பத் - அஷ்ட குன்மத்திற்கு - தாதுவிருத்திக்கு - மன்மத சிந்தாமணி பணியாரம் - சர்வாங்க (சரபுங்க) வில்வாதி லேகியம் - சகல மேகத்திற்கு எண்ணெய் - மேகம் 20க்கும் மதுஸ்நுஹி ரஸாயனம். திரிதோஷக் கஷாயம் - இருமலுக்கு மருந்து - சலமஞ்சரி, நீர்க் கட்டுக்கு மருந்து - தம்பனத்திற்கு - பிள்ளையுண்டாக - வசிய முறைகள் - ஸ்தம்பன முறைகள் - மயிர் உதிர - அக்கினிக்கட்டு - செக்கில் எண்ணெய் வராமல் செய்ய - பாதாள அஞ்சனம் - முத லஞ்சனம் - பாதாள அஞ்சனம் - கட்டிகளுக்கு - மேகம், மூலம், மூலப் பவுத்திரம், கிரிச்ரம் இவைகளுக்கு நெய் - சுழிகணத்திற்கு எண்ணெய் - மூலத்திற்குப் பாஷாணம் - சகல சுரத்திற்கும் மகா கோடாசூழிக் குளிகை - மாந்தத்திற்கு ஓம பாவனை - தீராத ரணத்திற்கு எண்ணெய் - சகல குன்மத்திற்கும் மருந்து - கணத்துக்கு மருந்து - சுழிமாந்த உருண்டை - சூதிகா வாதத்திற்கு நாரத்தங்காய்க் கடுகு - ஆரோக்கியத்திற்குச் சிந்தாமணி - பீனிசத்திற்கு நஸ்யம் - சிரங்கு எண்ணெய் - மெழுகு - கரப்பான் எண்ணெய் - கிரந்திக்கு - பீனிஸத் தைலம் - ஈளை இருமலுக்குச் சூரணம் - விக்கலுக்கு மருந்து - சர்வரோக சிந்தாமணி - இருமல், சுவாசத்திற்கு மருந்து - வெண்ணேக் காட்டுக்கு ஒத்தடம் - பாண்டு வீக்கத்திற்கு - தலைமுழுகத் தைலம் - தனுர்வாதம், கெர்பிணிமேல் சன்னிக்கு - கைவிட்ட சந்நிக்கு நஸ்யம் - சகல வியாதிக்குஞ் சூரணம் - கெந்தக சுத்தி - பொட்டிலுப்பு சுத்தி - பீனிசத்திற்கு எண்ணெய் - க்ஷயத்திற்கு முயல் மருந்து - மேகத்திற்கு மேல் இருமலுக்கு - சுவாசகபம், பீனிசம் வாந்திக்கு ஆயில்பட்டைத் தைலம் - சிலேத்மத்திற்கு வாந்திக்கு - கிரந்தி சூலைக்கு மருந்து - பரங்கிப்பட்டைப் புகை - நெற்றி கபால சூலைக்கு ஆக்ராணம் - சூதிகா, மூலக்கிராணி, வரள்வாயுவுக்குச் செந்தூரம் - மேக வாயுவுக்கு மருந்து - பெரும்பாட்டுக்கு மருந்து-செகராச்சின்னித் (ஜகரக்ஷணி) தொழில்- பீனிசத்திற்கு மருந்து - ஆனந்தபைரவன் - சூதிகா வாயு, கெர்ப்ப சூலை - கிரந்தி வெட்டைக்கு மருந்து - சிலேத்ம சுவாச

காசத்திற்கு மருந்து - பீனிசத்திற்கு - பீனசத்திற்கு - சிலேத்ம மஞ்சக்காமாலைக்குக் கஷாயம் - இந்திரியம் பேதிக்க மருந்து - நயனமுதத் தைலம் - மதுமேக ரஸாயனம் - மேகத்திற்கு மேல் வரட்சிக்கு - பீனிசத்திற்கு எண்ணெய் - புகை - செம்பிரத் தைலம் - நேத்திர வாயு, தலை வாயு, கபால வாயு, பீனிசத்திற்கு எண்ணெய் - மூனுவகை பீனிசத்திற்கும் எண்ணெய் - பீனிசத்திற்கு - சீழ் பீனிஸம் - பீனிஸத் தலைவலிக்கு - பீனிஸத் திற்குத்திரி - நீர் பீனிஸம் - நஸ்யம் - சல பீனிஸத்திற்கு மருந்து - சகல குன்மத்திற்கும் லவணச்சார உருக்கு - சுவாஸம் வாத சிலேத்மச்வாஸத்திற்கு மருந்து - மேகத்திற்குக் கைகண்ட மருந்து - வெல்லச் சயநீர் - கட்டிகளுக்கு - பீனிச வாயுவிற்கு - முழுக நஸ்யமிட - தீராத சிரங்குக்கு எண்ணெய் - குமரகண்ட வலி - முயல் வலிப்புக்கு - குன்மம், அகுவை - கவுசை - மகோதரம் - நீராமை - கிணிசை, கொர்ப்ப விப்புருதி முதலான வியாதிக்குப் போஜன சஞ்சீவி - வங்க பற்பம் - சுராங்குச மாத்திரை - முயல் வலிப்பிற்கு - ஒரு விரை வீக்கத்திற்குப் பூரணச் செந்தூரம் - அஷ்ட குன்மத்திற்குப் பஞ்சலவணச் செந்தூரம் - இருமலுக்குத் தாளீசபத்திரி வடகம் - குன்மத்திற்கு - வயிற்றுக் கட்டி வலி குன்மத்திற்கு - குன்மத்திற்குக் கெந்தக பற்பம் - மணிகண்டாதிச் சூரணம் - சர்வ குஷ்டத்திற்குத் தாளக பற்பம் - தாமிரச் செந்தூரம் - மதனகாமேச்வரம் - வங்கச் சிந்தூரம் சகல நீரிழிவுக்கும் - பிரமியத்திற்குச் சோதனை கைகண்ட மருந்து - சுக்கிலப் பிரமியத்திற்கு - ரத்தப் பிரமியத் திற்கு - நீர்க் கடுப்பு - கண்டமாலை பவுத்திரத்திற்கு - அஸ்தி ஜ்வரத்திற்குச் சாறணை கற்பம் - மூலத்திற்குப் புகை - ரசச் சிந்தூரம் - பொட்டிலுப்புச் செயநீர் - இளம்பிள்ளை வாதத்திற்கு - ரசஜெய பற்பம் - குளிர் சுரத்திற்கு ராமபாணம் - உப்பு வத்த - நரைதிறை மாற - பெருவயிறுக்கு - தண்டு பெருக்க - ரஸகுளிகை தம்பனம் - ரஸகுளிகை - தம்பனகுளிகை - மண்டை வியாதி, பீனிசம் என்ற வகைக்கெல்லாம் பாஷாணக்கட்டு, நாக பற்பம் - தங்க பற்பம் - பறங்கிப்பட்டைச் சூரணம் - எஃகு பற்பம் -

தங்கச் சுண்ணம் - சன்னி பதிமூன்றிற்கும் தீராச் செந்தூரம் - நல்லபாம்பு, விரியன், பேய்நாய் கடிக்கு மருந்து - ராமபாணத் தைலம் - லசுனத் தைலம் விரைவாதத்திற்கு - மூலத்திற்கு நெய் - குக்குடாதி லேகியம் - கிருணிக்கு - மாந்தகணத்திற்கு எண்ணெய் - பினிசத்திற்குத் தைலம் - மேகத்திற்கு மருந்து - பீனிசத்திற்கு நசியம் - மூலத்திற்குப் புகை - மேகத்திற்கு எண்ணெய் - சுவாசத்திற்கு மருந்து - சிலேத்மம் கபத்திற்கு அண்டவுப்பு - சகல ரோகத்திற்கும் கெந்தக பற்பம் - புளிகுடித்த பேர்களுக்கு - மேக வாயுவுக்குக் கஷாயம் - வாயுவுக்கு உருக்கு உப்பு - பச்சைக்கற்பூரக் கட்டு - நீர்க்கட்டுக்குச் சலமஞ்சரி - அண்ட வாதத்திற்கு எண்ணெய் - பரங்கிப்பட்டைச் சூரணம் - ஆக்கிராணம் - சுவாசத்திற்கு மருந்து - குன்மத்திற்கு லவணச் சாறு உருக்கு உப்பு - மேகம், மூலம், பவுத்திரத்திற்கு நெய் - சுழிகணத்திற்கு எண்ணெய் - கோடாசூழி மாத்திரை - சுழிமாந்த சந்நிக்கு உருண்டை - சரபுங்க வில்வாதி லேகியம் - வல்லாதி லேகியம் முதலிய பல மருந்து முறைகள் உள்ளன.

*Beginning :*

| | | | |
|---|---|---|---|
| சிகப்பு இரத்னப் பொடி | வராகனெடை | — | 2 |
| வெள்ளி சரிகை சுட்டது | ,, | — | 4 |
| துத்தம் | ,, | — | 6 |
| சிலாஜது | ,, | — | 6 |
| பவளப் பொடி | ,, | — | 6 |
| சீனக்காரம் | ,, | — | 6 |
| அதிமதுரம் | ,, | — | 6 |
| சுக்கு | ,, | — | 6 |
| மிளகு | ,, | — | 6 |
| யானைசீவதந்தம் | ,, | — | 6 |
| தேத்தாம் விரை | ,, | — | 6 |
| வெள்ளை காக்கரட்டான் வேர் | ,, | — | 6 |
| தாம்பிர அரப் பொடி | ,, | — | 18 |

| | | | |
|---|---|---|---|
| பொன் மெழுகு | ,, | — | 8 |
| படிகக் கல்லு | ,, | — | 15 |
| கடல் நுரை | ,, | — | 2½ |
| கருங் கொள்ளு | ,, | — | 2 |
| பீங்கான் பொடி | ,, | — | 6 |
| சன்ன முத்துப் பொடி | ,, | — | 2 |
| தங்க ரேக்கு | ,, | — | 2 |
| துரிசு | ,, | — | 6 |
| சங்குப் பொடி | ,, | — | 6 |
| தேசாவரிக் கடுக்காய் | ,, | — | 6 |
| பீதரோகிணி | ,, | — | 6 |
| கலைமான் கொம்பு அரைத்துக் காயவைத்தது | ,, | — | 6 |
| திப்பிலி | ,, | — | 6 |
| கடுக்காய் | ,, | — | 6 |
| கஸ்தூரி மஞ்சள் | ,, | — | 6 |
| வெள்ளைச்சாரணை வேர் | ,, | — | 6 |
| வங்காளப் பச்சை | ,, | — | 3 |
| வெங்கல அரப் பொடி | ,, | — | 28½ |
| குருந்தக் கல்லுப் பொடி | ,, | — | 11 |
| பூங்காவி | ,, | — | 3 |
| விரால்மீன் கல் | ,, | — | 6 |
| பித்தளைப் பொடி | ,, | — | 18 |
| முட்டைக் கூடு | ,, | — | 6 |

இந்த மருந்தெல்லாம் இடித்து வஸ்திரகாயம் செய்து பெரிய அம்மியில் போட்டு அரைக்கிறது. இதற்குச் சாறுவகை. எலுமிச்சம்பழச் சாறு விட்டு 3 நாள் - கோவையிலைச் சாறு விட்டு 3 நாள் - கையாந்தரைச் சாறு விட்டு 3 நாள் - மறுபடி நாகர வண்டு 30 போட்டு 1 நாள் அரைக்கிறது. முசுமுசுக்கைச் சாறு விட்டு 3 நாள் - அவரையிலைச் சாறு விட்டு 3 நாள் ·

புளியிலைச் சாறு விட்டு 3 நாள் - இதில் கடைசியில் எலுமிச்சம் பழச் சாறு விட்டுக் கம்பிபோல் மாத்திரை செய்து நிழல் உலர்த்தாக உலர்த்திப் பதனமாக வைத்துக்கொண்டு. கண்ணுக்கு அனுபானம் அறிந்து போட்டால் 96 ரோகங்களும் தீரும். (நாகாரவண்டை கடைசியில் அரைத்து மாத்திரை செய்யவும்.)

*End :*

**வல்லாதி லேகியம்**

சேங்கொட்டை சேர் ¾ நீரடிமுத்து ஓடுபோக்கிப் பலம் 2½ கஸ்தூரிமஞ்சள் பலம் 1, கார்த்திகைக் கிழங்கு பலம் ¼ வெண்ணுபி பலம் ½, கருநாபி பலம் ¼, எள்ளு படி ½ இதுவெல்லாம் கல்லுரலிலிட்டு கனப்பாரை கொண்டு இடித்துவைத்துக்கொண்டு சகல வாயுவிற்கும் கொடுக்கலாம்.

---

**413.** சுவடி நெ. 237 (D)

**சுல்தான் சிக்கந்தர் பசருபந்து**

ஏடு 1. 247வது. வரிகள் பக்கத்திற்கு 8 வரிகள்.

இது, முஸ்லீம் மத சம்மந்தமான நூல்.

*Beginning :*

வீசுமில்லாஹி சாயீ பிசுமில்லாகீ
முகாபீ– சுகற்சின்னூ – கூறுசால்சின்னூ
முகம்மது காத்திபா சிலையுமான் நபிக்கே பங்பங்
கேகையிறக்கே பங்பங் – றகிமானக்கே பங்பங்
அல்லாக்கே பங்பங் ரசூல் கேபங்பங்
உமர்க்கே பங்பங் உமர்கத்தாக்கே பங்பங்
மீரான்கே பங்பங் மீரான் சாயபுக்கா பங்பங்

*End :*

சுலேயுமானீ பயகாம்பற் திலக்கரே திலப்பாக்கரே
காமதாமக்கரே – உடுக்கும் பேதுக்கரே – ரெட்கடாணு
ரெட்டணு சாதுக் கொணக்கரே ஒயீ சலாமரே
அக்குலாயீ லாகயில் லல்லாஹூ
முகம்மது ரசூலுல்லாகீ பந்பந் சாடு சாடு –.

---

414. சுவடி நெ. 237 (E)

## மனே சாஸ்திரம்

ஏடுகள் 2. 248 முதல் 249 வரை.
பக்கத்திற்கு 8 வரிகள். சிதிலம்.

வீடு கட்டப்படவேண்டிய முறைகளைக் குறிக்கும் சாஸ்திரம்.

*Beginning :*

திருவெனும் மடவாய் கேளாய்
சீர் மனே கட்டவேண்டில்
அரியதோர் அடியினலே
அளந்திடும் வகையைக்கேளு
உரியதோரடி ஏழானல்
மிடியினி லுழல்வாரென்று
விரியுநூல் விதியினலே
விளம்பினர் மேலோர்தாமே. (க)

*End :*

சிலேயதே சிலேயதாகும்
செங்கல்லே கனகமாகும்
நிலமதில் வேரதாகில்
நிச்சயம் வியாதியுண்டாம்

விலகு வெண்டலேயதனுல்
வேந்தரால் கோளே சொல்லும்
கலேதருகரிய தானுல்
கனப்பகை யாகுமன்றே. (கரு)

ஆடித்திங்களிலார் வண்ணப்பட்டநாள்
ஆலித்துப் பொரும் பாரதம் மார்கழி
வீடுற்ருன் புரட்டாசியி ரண்யன்
வேதத் தோர்—.

---

## 415. சுவடி நெ. 237 (F)

## சிதம்பர சக்கரம்

ஏடுகள் 4. 250 முதல் 254 வரை. மிக சிதிலமாக உள்ளது.

இதில், வசீகரம். சகல காரியசித்திக்கும் - ராஜ வசீகரம் - முகப்பத்துக்கு - பேய்க்கு - சிதம்பரச் சக்கரம் - (விருத்தம்) பேய் பிசாசுக்கு - முக வசீகரம் - மூச்சுப்பிடித்த பேர்களுக்கு - முதலானவைகளுக்கு சக்கரங்கள் உள்ளன.

*Beginning :*

சிதம்பர சக்கரம்

| | | |
|---|---|---|
| 16 | 21 | 14 |
| 15 | 17 | 19 |
| 20 | 13 | 18 |

வசீகரம்

| | | | |
|---|---|---|---|
| 8 | 24 | 27 | 1 |
| 26 | 2 | 7 | 25 |
| 3 | 29 | 22 | 6 |
| 23 | 5 | 4 | 28 |

*End :*

| | | |
|---|---|---|
| 6 | 11 | 3 |
| 4 | 7 | 9 |
| 10 | 2 | 8 |

| | | | |
|---|---|---|---|
| 6 | 1 | 4 | 7 |
| 3 | 8 | 5 | 2 |
| 5 | 2 | 3 | 8 |
| 4 | 7 | 6 | 1 |

**416.** சுவடி நெ. *238*

## வைத்திய அட்டவணை

ஏடுகள் *194.* பக்கத்திற்கு *8* வரிகள்.

(நீள × அகலம் *36 × 3* செ. மீ.)

இடையே ஏடுகள் பூச்சியினல் அரிக்கப்பட்டுள்ளன.

இதில் கீழ்கண்ட மருந்து முறைகள் உள்ளன.

தாளீசாதி வடகம் - சகலக்கிரந்திக்கும் களிம்பு, புகை - சூலைக்கட்டு மதுமேகத்திற்கு - பிரமியத்திற்கு - சீழ்பிரமியத்திற்கு- காரச்சீலை - புண்ணுக்கு வெள்ளைச் சேர்வை - மலடி சாஸ்திரம் - தாபசுரத்திற்கு - தக்ரதைலம் - கெர்பிணிசுரம் - வாதசிலேத் மச்சுரத்திற்கு - வாத சுரம் - சன்னிபாத சுரத்திற்குக் கஷாயம் - பித்தசுரம் - சிலேத்மச் சுரத்திற்கு - சிலேத்மச் சுர உழப்பிற்கு - தாபசுரம் - உழலைச் சுரத்திற்குக் கஷாயம் - நாள்பட்டஜ்வாம் - சீதசுரக் கஷாயம் - குளிர்காய்ச்சல் - தாகச் சுரத்திற்குச் சீரகாதி கஷாயம்-கர்ப்பசுரக் கஷாயம்-ரத்தபித்த அதிசாரசுரக் கஷாயம் - விஷஜ்வரம் - தொந்தச் சுரத்திற்குத் தசமூல கஷாயம் - மந்தசுரம் - சன்னிக்கு-பழங்காய்ச்சலுக்கு - சுரத்திற்கு நெய் - தோஷத்திற்குக் கண்டூஷம் - சன்னிக்குப் புகை. நஸ்யம் - சன்னிவாத குலாந்தகத் தைலம் - சன்னி வாதத்திற்குப் பூனைக தைலம் — திரிப்புகை —

கஷாயம் – அரிதாரப் பற்பம் – கிரந்தி, புண்ணுக்குப் பரங்கிப் பட்டைச் சூரணம்-அரக்கெண்ணெய் தைலம்-மேகனாதித் தைலம் - பரங்கிப்பட்டைச் சூரணம் – புகை – விக்கலுக்குப் புகை மருந்து கிராணிக்கு ஜாதிக்காய் மருந்து – அண்ட பற்பம் – விருத்திக்கு மருந்து - அப்பிரகச்சுத்தி, மேகத்தின் மேல்கண்ட மேகக்கட்டி, அரையாப்புக் கட்டிக்கு - 21 வகைக் கஷாயம் - சன்னிக்குப்புகை - கருத்தரிக்க – ஆயில்யத் தைலம் – விரேசனத் தைலம் - சம்பீரத் தைலம் - வெருகந்தைலம் - கிரந்திக்கு - ஆமலகக்கிருதம் - சந்தனாதி கிருதம் - தசமூலாதிக் கிருதம் - அசுவகந்தாதிக் கிருதம் - கண்டங் கத்தரிக் கிருதம் – வில்வாதி லேகியம் – சவாசகாசச் சூரணம் – சகல குன்மத்திற்கும் – வயத்தில் திரட்சியான வாயுவுக்கு – உதர வியாதிகளுக்குப் பற்பம் – அண்டவாதத்திற்கு – வயிறு கடுப்பு 12க்கும் கிராணிக்குளிகை – நீரிழிவுக் கழிச்சலுக்கு – மேகனாதி மாத்திரை – சேத்துமம் விழுந்து போகிறதற்கு – பச்சைரசம் வியாபித்துக் கட்டினால் முறிவு – மேகவெட்டை கண்ணெரிவிற்குச் சந்தனாதித் தைலம் – அச்வகந்தாதிச் சூரணம் – சூரணராஜன் – சௌபாக்ய சுண்டி – ஸ்ரீ கண்டாதிச் சூரணம் ஸர்வமேகத்திற்கும் – சௌபாக்ய சுண்டி (வேறு) – பஞ்ச பாஷாண மாஷம் - மருந்தீடுக்கு. சுரத்திற்குக் கர்பூராதிக் குளிகை பல்லாதி மாத்திரை – கஸ்தூரித் தைலம் – விக்கலுக்கு, கர்ப்பக் குழியில் புழுவிற்கு – கண்ணீர், நீர் விழுந்தால் – காணாக்கடி விஷத்திற்கு - சஞ்சீவகரணீத் தைலம் - ஊர்க்குருவித் தைலம் – மகாப்பிராஸாரணி தைலம் – தேத்தாங்கொட்டைத் தைலம் – கருநொச்சித் தைலம் - பால் தைலம் - அரளித் தைலம் - இஞ்சிக் குழம்பு – கையந்தகரை லேகியம் – உள்ளாதி லேகியம் – அஷ்டமங்களக் கிருதம் – மகாகண்டகாரிக் கிருதம் – வல்லாதி லேகியம் – ஆடாதோடைக் கடுகு – பரங்கிப்பட்டைச் சூரணம் – நீரிழிவிற்குக் கனகஸுந்தர ரஸம் – தாவாய் பல்லுக் கிட்டினால் தைலம் – சௌபாக்ய சுண்டி, மூலங்கரைய – மந்தார காசம் – பீனிசத்திற்கு – வாத, பித்த, சிலேத்ம சத்தி விக்கலுக்கு. பாரிசகுன்மத்திற்கு – சத்தி, மறு சத்தி யெடுப்பிக்க – சித்ரமூல

கிருதம் – அஷ்டகுன்மத்திற்குச் சாரநாரீசாதி லேகியம் – மந்தார காச பீனிசத்திற்கு – குன்மத்திற்கு – சத்தி குன்மத்திற்கு – குன்மத்திற்கு ஆவாரங்கற்பம் – சூலைக்கட்டு, உதட்டுப்புழு – நரம்புச் சிலந்திக்கு – கபால சூலைக்கு – நீரிழிவுச்கு எண்ணெய் – நவச்சாரக்கட்டு – மெலிந்த பிள்ளைக்கு நெய். மருந்தீட்டிற்கு – மருந்து முறிவுக் கட்டுக்கு – விஷசத்துக்கு ராமபாணத் தைலம் – சந்திரகாள ரஸம் – அச்வகந்தி லேகியம் – சூதசல மஞ்சரி – மேகசலாந்தக பற்பம் – கெந்தகச் செந்தூரம் – வெள்ளைப் பாஷாணச் செந்தூரம் – கௌரீபாஷாணச் செந்தூரம். சாதி லிங்கச் செந்தூரம் – தாளகச் செந்தூரம் – லோகச் செந்தூரம் – லசுனத் தைலம் – விரைவாதத்திற்கு – மகாகுக்குடாதிச் சூரணம் - பிள்ளை முழங்கி – நாய்க்கணை மருந்து விபரம் – நல்லபாம்பு விரியன் – பேநாய் – பேய்நரி சன்னி இதற்கு மருந்து – உச்சி வாதத்திற்கு – கபாலச் சூலைக்கு – அக்கினி மந்தத்திற்கு – சகல வாயுப் பிடிப்புக்குக் குக்குடாதி லேகியம் – மூலத்திற்கு நெய் கைகண்டது – குளத்தூர் அச்சன் சொல்படி கிராணிக்கு – தாது விருத்தி மருந்து – மாந்தம் – கணத்திற்கு ஆனந்தன் சொல்படி எண்ணெய் - மாடு, குதிரைக்கு பூவுக்கு - பீனிசத்திற்குத் தைலம் - உள்ளுக்கு மருந்து - விஷ பாகம், பீனிசத்திற்கு மேகத்திற்குக் கைகண்ட மருந்து – வாத மேகத்திற்கு – நாள்பட்ட மேகத் திற்கும், பீனிசத்துக்கும் நஸ்யம் – மூலக்கடுப்புக்குப் புகை. சுவாசத்திற்கு மருந்து - சிலேத்தும க்ஷயத்திற்கு அண்ட உப்பு - சகல ரோகத்திற்குக் கெந்தகம் - புளி குடித்த பேருக்கு - உதிரிக் காயம் - மேக வாயுவிற்குக் கஷாயம் - நயனம்ருதத் தைலம் - சீதள, சிலேத்ம கபத்திற்கு மருந்து - வாயுவிற்கு உருக்கு உப்பு - பச்சைக்கற்பூரக் கட்டு - மஞ்சக்காமாலைக்குக் கஷாயம் - நசியம் - சூரணம் - தொண்டையில் சிலேத்மகயத்திற்கு - வாந்திக்கு - அரோசக வாந்திக்கு - மாரில் கபம் விழ வாந்தி - அதிக வாந்திக்கு - நிற்க மாத்து - தீராத மேக ரணத்திற்கு - மதுமேக ரஸாயனம் - மேகத்தின் மேல் வரட்சிக்கு - சகல வியாதிக்கும் உருக்கு உப்பு - கணத்தின்மேல் பேதி சுரம், இருமலுக்குக்

| | பாடல் எண் |
|---|---|
| கைலாசச் சட்டைமுனியர் ஷோடசம் — | 53 |
| மூல முதல் முன்னூறு ஞானம் — | 101 |
| பின்னூறு ஞானம் — | 101 |
| காயகல்பம், வழலை முறை — | 101 |
| மந்திர முறை — | 200 |
| நிகண்டு மந்திரப் பேர் — | 1200 |
| வாதநூல் முறை — | 1001 |
| சட்டை முனியார் பாடல் — | 2753 |
| மச்சமுனியார் தீக்ஷை முறை — | 101 |
| கொங்கண நாயனர் அருளிச்செய்த ஐநூற்றிரட்டு | |
| அகஸ்தியர் பாடல் துகை — | 570 |
| கொங்கணர் பாடல் — | 520 |
| கருவூரார் சூத்திரம் — | 115 |
| மச்சமுனியர் சூத்திரம் — | 100 |
| போகர் சூத்திரம் — | 44 |
| சரநூல் உரை உள்பட — | 64 |
| பத்திரகிரியார் பாடல் — | 42 |
| திருமூலர் வழலை முறை — | 4315 |
| சித்தாந்தம் விருத்தகிரி புராணம் உள்பட — | 1335 |
| ஆகவேதாந்தம், சித்தாந்தம் என்ற வகை இரண்டிற்குந் தொகை — | 5640 |
| திருமந்திர வழலை முறை — | 42 |
| சரநூல் பாடல் 51 – உரை 51 ஆக — | 102 |
| அகஸ்திய முனிவர் வர்க்க சூத்திரம் — | 202 |
| கருவூரார் பாடல் சூத்ரம் — | 5 |
| போகர் சூத்ரம் வாலை பூஜாவிதி — | 44 |

| | | |
|---|---|---|
| பத்திரகிரி ராஜா புலம்பல் கண்ணிகள் | — | 193 |
| ,, பாட்டு | — | 64 |
| தத்துவமசி மஹாவாக்ய வசனகவி பாடல் | — | 40 |
| சிவஞானபோதம் சூத்ரம் 12க்கு உரை உள்பட | — | 96 |
| சிவப்பிரகாச உரை | — | 101 |
| இருபா இருபது | — | 20 |
| சதமணிக்கோவை – உரை உள்பட | — | 101 |
| சிவபோதகம் பாடல் | — | 10 |
| சிவபோகசாரம் வெண்பா கவி பாடல் | — | 100 |
| முத்திநிலைபோதம் - பாட்டு | — | 20 |
| உண்மைநெறி – வகை 3க்குப் பாடல் | — | 24 |
| விருத்தாசல புராணம் சர்க்கம் 18க்கு பாட்டு | — | 435 |
| சமாதிச் சருக்கம் – பாட்டு | — | 50 |
| ஆக | — | 1872 |

---

430. சுவடி நெ. 247 (A)

## அகஸ்தியர் குணவாகடம்

ஏடுகள் 151. 2 முதல் 152 வரை. பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள். இடையிடையே செல்லரித்துள்ளன.

(நீள × அகலம் 41 × 3 செ. மீ.)

இதில், தன்வந்தரி வாகடம் – தசவாயுக்களின் விவரணம், நாடிகளின் விபரம், பஞ்சபூதாதிகளின் விவரம், வாதபித்த தோஷங்களின் குணகுணங்கள் – 30 தத்துவங்கள் – 96 வகைக் கருவிகள் அவற்றின் நிறைகள், வாதபித்த கபங்கள் அதிகரிக்கும் காலம் (102) சுரநிதானம் (136) வாத, பித்த, சிலேத்மச்சுரம்,

பூதசுரம் – ஆகிகசுரம் – மாறல்சுரம் – ஆமசுரம் – தாதுகதசுரம் – சன்னிவாதசுரம் – 13 வகைகள் – அசாத்ய சன்னி விபரம் – தோஷம் வருகிறவிதம் – மகாதோஷம் – ஜிஹ்வாதோஷம் அதிசாரம் – வாத, பித்த, கப, தோஷாதிஸாரம் – அஸாத்யாதிஸாரம், குன்மம் 8க்கு குணகுணம் – மருந்து – சூலை 15ன் குணம் – வாதம் 80க்கும் பேர் குணகுணம் – வாதஸ்தம்பனம் – பித்தம் 20க்கும் பேர் வரலாறு – (செய்யுள் 380 வரை) கபம் இருபத்தொன்றுக்கும் பேர் வரலாறு – (செ. 381) விரண சிலேத்துமம் – மேகம் 21க்கும் பேர் குணகுணம் – (410) பிரமிய உத்பத்தி வரலாறு – சலம் 20க்கும் பேர் நிதானம் உத்பத்தி – வாதசலம் 4க்கும் சமுதாய குணம் – பித்தமேகம் ஆறுக்கும் பேர் சிலேத்மத்தினாலே பிறந்த மேகம் 10க்கும் பேர் குணகுணம் (454) குஷ்டம் 18க்கும் பேர் குணகுணம் – உத்பத்தி. புண்டரீக குஷ்டம் (483) – பாண்டுரோக உத்பத்தி குணகுணம் (500) காமாலையின் பேர் – காமாலை உத்பத்தி (508) சோப ரோகம் உத்பத்தி குணம் (527) மகோதரம் உத்பத்தி குணகுணம் (534) விஷபாகம் 8க்கும் பேர் குணகுணம் உத்பத்தி (570) கிருணி குணபாடம் உத்பத்தி (588) அதிசாரம் வகைகள் – அஜீர்ணம் – வாதவிழூசி – சேத்துமவிழூசி – மூலம் உத்பத்தி வரலாறு – மூலத்தின் குணகுணம் – (619) கண்டியம் 12க்கும் பேர் குணகுணம் – (650) பிரும்ம – ராஜ – வைசிய – சூத்ர – வாத – பித்த – சிலேத்ம – விகார – வாத சிலேத்ம – பித்த சிலேத்ம – வாதபித்த – காசரோகம் நிதானம் – (670) உளமாந்தை குணம் – (685) பெரும்பாடு உத்பத்தி குணகுணம் – (698) – கல்லடைப்பு – மூத்திரகிரிச்சம், விப்புருதி (736) – கரப்பான் பேர் குணம் வரலாறு – (746) விக்கல் குணம் – (764) பவுத்திரக் குணம் – (772) முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

அட்டானன் – ஆயுருவே தந்தனைத்தான்
அய்யருமே வம்மையர்க்கு வருளிச்செய்ய
அட்டான வம்மையுமே நந்திக்குச் சொன்ன
நந்தியுமே சீஷருக்கு வருளிச்செய்ய

தடவான தன்மந்திரி யச்வனி தேவர்
சமரசமா மகத்தியமா முனிவோன்தானும்
நிடவான ரிஷிதேவர் சொன்னநூலின்
நேர்ப்பெல்லாம் விபரமாய் நிகழ்த்தினேனே. (சு)

நிகழ்ந்தசீர் பிரிதிவியு மப்புத்தானும்
நேரான தேயுவொடு வாயுவுமாகும்
அகழ்ந்தவா காசத்தோ டைந்து பூதம்
அரிதான பிரிதிவிதான் மன்னுமாகும்
தகழ்ந்த வப்புச் சலமாகும் நெருப்புத்தேயு
தாக்கான வாயுவுமது காற்றுமாகும்
இகழ்ந்தவா காசமது சப்தமாகும்
ஏற்றமாம் பிரிதிவிபொன் னிரமுமாமே. (எ)

*End :*

வீசுகின்ற சாத்யத்தைச் சொல்லக்கேளு
பிறந்தவா சனப்பவுத்திரம் பக்கபவுத்திரம்
மூசுமூலம் பவுத்திரமே கப்பவுத்ரம்
முடுக்கான கிரந்தியென்ற பவுத்திரந்தான்
தாசுகின்ற வஞ்சுந்தான் சாத்யமாகும்
சரக்கண்ட மாலையொடு கொடிப்பவுத்ரம்
ஆசுகின்ற வாசனத்தின் கண்டமாலை
அசாத்தியந்தா னிதுமூன்று மறிந்திடாயே. (எஅ௰)

பவுத்திர நிதானம் முற்றும் ஆககவி எஅ௰

*Colophon :*

விரோதிக்ருத் வருஷம் மார்கழி 18உ
அகஸ்தியர் குணவாகடம் எழுதி முடிந்தது முற்றும்.
பரிபூரணம்.

431. சுவடி. நெ. 247 (B)

## சுர நிதானம்

ஏடுகள் 153 முதல் 188 வரை;

ஏடுகள் சிதைந்துள்ளன; அபூர்த்தி.

இதில், சுரம் வருவதற்கான ஏதுக்கள், சுரலங்கண விபரம், தந்தசுத்தி, சீதசுரம், அவபத்தியம் – ரத்தத்தைப்பற்றிய சுரங்கள், ஆமச் சுரம், வாதச் சுரம், பித்தச் சுரம், சிலேஷ்மச் சுரவகை, வாதபித்தச் சுரம், சன்னிவாதச் சுரம், த்வந்த்வச் சுர வகைகள், தோஷச் சுரம், மாறல் விஷமச் சுரம், தாபச் சுரம், பூதச் சுரம், ஆகீகச் சுரம். பதினறு நாள் வரும் மாறல் சுரம் – இரத்தம், மூளை, இவைகளைப்பற்றிய மாத மாறல் சுரம் – தோஷம் வரும் விதம் – சன்னி நிதானம் – சாத்யாசாத்தியம் – வாத, பித்த, சிலேத்ம சன்னி – ரெத்த வெறி – பித்த வாத வெறி – அசாத்ய குணம் – வாத நிதான அகவல், பித்த நிதான அகவல், வாத நாடி அகவல், பித்தகுண நாடி அகவல், சிலேத்ம நாடி அகவல், அசாத்ய நாடி அகவல், நாடியகவல், பதிமூன்று வகைச் சன்னி நிதானம் – அகவல் – அசாத்ய குணம் – முதலியன உள்ளன.

***Beginning :***

இந்திரனே தேவர்க்கு ராசாவதுபோல
சந்திரனே ... ... ... .. ... ... ... ...
வியாதிக்கரசுத் துலங்கும் புகழாதித்தன்
வியாதிக்கரசு வெதுப்பு —

***End :***

வகுத்தள யிரவிதாள பவள சயிந்தத்
திரிகடுகு கறுவுகொடி யலவு — குலவு
மிடுகும் மலையரிசி வகைவசவு கமழுந்திரவு
குமுளுஞ் சிவதை ரோகணி சீரக

வெணவகையின் வகையு மவையினும்
சிவைகள் கொள் திரிகை துரிசுவகைகள்
ரியலகிரி வகைகள் கரியசந்நி நாயகன்
மின்னுநீழ்சிலை பண்ணை ரோசனையன்ன பேதியும்
மன்னுநாவித் துண்ணு பாளமு
முன்னுநீழ் வெறி பொன்னுருகிடும்
மன்னதோர் பொறிக்கார வகைச்சார வகைபூத
வசுவாசி மருமேவு நெறியான வகையோடு
வரிமேவு பீத ரோகணி
மேலமா மிசைபேதி சாரவகை யாதுமே
காதுபா டாண மோது
சாள்காரி வாசிலோடு நாறுமேதிதில்
கெந்தகம் விளங்கம் ஓமமும் மஞ்சளும்
தாங்க நீருரை கிம்புரம்
துணங்கு பாசியுங்கிளர் காயமுஞ்சந்ததம்
புரந்தவேசமும நந்தியின்
பரந்தபூடுகள் சம்பி ரங்கொழுஞ்சி சாறடை
தசமூலம்
முந்தவே யெருக்குவாய் கரிச்சையோடிரதநித்
தெரிபைப்பால் பருதமூலியு)
மவுரி வெள்வேல்கள் தளர்கொடுவேலியெழு
முள் வேர்ப்பட்டை நடையிர் — அசாத்யகுணம்

**குறிப்பு :**

முதல் 10 ஏடுகளில் அட்டவணை காணப்படுகின்றன. பின்னர் 4 ஏடுகளில் முத்தன்சாயபு, சந்திரசாயபு, கதிஜாபீ முதலியோரின் சாதகக் குறிப்புகள் உள்ளன.

கடைசியில் செல்லு அரித்த 54 வெற்றேடுகள் காணப் படுகின்றன. அவைகளுள் சிவநாமரஸமும், கண்டௌஷதமும் ஒரு ஏட்டில் எழுதப்பட்டுள்ளன.

## 432. சுவடி நெ. 248 (A)

# தன்வந்தரி வைத்தியம் இருநூறு ( கருக்கிடை )

ஏடுகள் 1 முதல் 35 வரை. பக்கத்திற்கு 10 வரிகள்.
பூச்சிகள் அரித்துள்ளன.
(நீள × அகலம் 30 × 3½ செ. மீ.)

இதில், அஷ்டாங்க வைரவபூஜை, ஞானம், முப்புபலிநீர், நைவேத்யபூசை, வடமொழி நூல் மாத்திரை (4) வைரவன் மாத்திரை, சகலசுரம், சங்கிக்கு மாத்திரை, சஞ்சீவி மாத்திரை, கிரந்தி 7க்கும் மாத்திரை, (5½) கலிக்க மாத்திரை, சன்னி மாத்திரை, (6) மேகராசாங்கத்தெண்ணெய், வாதராசாங்கத் தெண்ணெய் (7), வாதத்திற்குத்தைலம் (9), ரோகத்திற்கு எண்ணெய், பெரும்பாட்டுக்கு எண்ணெய் (11), புடத்தைலம் புங்கம் விரைத் தைலம் (12) அருகன்வேர்த் தைலம், ரணங் களுக்குத் தைலம், மூலத்திற்குத் தைலம் (13), வாதத்திற்குச் சூரணம், சயத்திற்குச் சூரணம், தாளீசச் சூரணம் (14) பித்தத்துக்குச் சூரணம், மூலம் 9க்குச் சூரணம், பிரமாம் லேகியம் (17) கர்மம் நோக்கி லேகியம், வழலை (19½) அப்பு உப்பு, திருமுத்தித் தைலம் ( திரிமூர்த்தித் தைலம் ) (20), தோஷம் 60க்கும் கஷாயம் (22) சன்னிக்குக் கஷாயம், ஆக்கிராணம் (23) வல்லாரைக் கற்பமுறை (24½), வங்கபற்பம் (25), தாமிர பற்பம் (25½), பித்தளை பற்பம், அயம், வெங்கலம், திரா, பற்பவகைகள், காந்தச் செந்தூரம் (29½), கட்டுவகை (30½), செயநீர், வீரக்கட்டு, பூரக்கட்டு (31), அப்பிரகச் செந்தூரம் (31½), வச்யம்.

*Beginning :*

ஆதியந்தமில்லாம லக்ண்டபரி பூரணமாய்
சோதியந்த வாள்மயிலே சொற்பெரிய — வாதியேகேள்
ஆதியந்தமான நல்லதொரு சரஸ்வதியே
வாதியுந்தன் பங்கிலுறை வாழ்கவே. (க)

வாதியென்ன வல்லபைமுன் வளர்முகத்தின் கணபதியே
சோதியென்ன மனவிளக்கின் சொற்பெரியன் — ஆதிமறை
ஆதியென்ன நான்முகவன் நல்லதொரு பிரும்மாவின்
காதியென் னுவில் கணக்கே. (உ)

*End :*

அளித்தக்கால் வயறுபிழைத்த பிழைப்பெல்லாம் போம்
பரிவாக அன்னமிட்டு மோசம் செய்தால்
அளித்தக்கால் லென்னவடா மோசம் வேண்டாம்
அப்பனே நெட்டுடைத்தால் சாப மெய்தும்
நளித்தக்கால் பெரியோரைப் பழித்தகர்மம்
நலமாக யெத்தேசம் போனல் தீரும்
வழிச்சக்கால் வல்வினைகள் வந்துசேரும்
வளமான பாவமடா வகுத்துப்பாரே. (உ0எ)

பாரப்பா கர்மத்தின் தொகுப்பே காணு
பண்பான வேதாந்தக் குறியைக் காணு
ஆறப்பா வாசியுடன் குறியைக் காணு
அப்பனே கண்ணேட்டமறிந்து பாரு
நேரப்பா நின்றுநிலை தன்னைக் காணு
நேருன கருவிகளோடொக்கக் காணு
நாரப்பா நாதாந்த வைத்தியந்தா னின்னூல்
நலமான கருக்கிடை யிருநூறும் முற்றே. (உ0அ)

குருபாதமே துணை.

*Colophon :*

வைத்யர் படேசாயபு அவர்கள் புத்தகம்.

ஸ்ரீ ராமஜெயம்

433. சுவடி நெ. 248 (B)

## தன்வந்தரி வைத்யம் (எழுபத்தொன்று)

ஏடுகள் 14. பக்கத்திற்கு 7 முதல் 9 வரிகள்
இடையிடையே செல்லரித்திருக்கிறது.
(நீள × அகலம் 30 × 3½ செ. மீ.)

இதில், பஞ்சபூதக்கூறுகள் : அதன் நிறங்கள் - தேவதைகளின் விபரம் – ஷட்சக்ரங்களின் நிலை – கருத்தரிக்கும் விதம் – அதன் வளர்ச்சி – சரீரக்கூறு – தசநாடி விளக்கம் – வாதத்தின் குணம் – பித்தத்தின் குணம் – பஞ்சவாயுக்களின் குணம் – மேகத்திற்கு எண்ணெய் – பவளபற்பம் (6) – வல்லாரை கிருதம் (8) – கலிக்கம் – கண்டங்கத்திரி லேகியம் (10) – சன்னிக்கு மாத்திரை (11) – தாளகபற்பம் (13) முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

ஆதியாங் கணேசன் காப்பு ஆதிமறை வேதங்காப்பு
சோதியாய் முனிவர்காப்பு சோதித்த பெரியோர்காப்பு
நீதிசேர் குமரன்காப்பு நிலைத்திடும் நாதாக்கள்காப்பு
ஆதியாய் நின்றசத்தி அமர்ந்திடுந் தேவிகாப்பே. (க)

காப்பாகு மென்குருத்தான் நந்தியீசன்
கருணைதரு மெந்தனுக்குக் கருவாய்ச் சொன்னர்
வாப்பாக அசுவினியே யுந்தனுக்கு
வகையாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நீப்பாகும் பிரிதிவியோ டப்புமங்கும்
நிலைத்ததொரு தேயுவொடு வாயுமாகும்
ஆப்பாகு மாகாசத்தோ டைந்துமாகும்
அறிந்ததொரு பிரிதிவியும் மண்ணுமாமே (உ)

*End :*

சொன்னதொரு நிகண்டப்பா யைனூறில்தான்
சொற்பெரிய வழலை மறைப்பெல்லாஞ் சொன்னேன்
மன்னதொரு வாசிமறைப் பெல்லாஞ் சொன்னேன்
... ... ... ... ... ... ... ...
அன்னதொரு கிரந்தத்தில் மூன்றுலட்சம்
ஆனதொருயென் மொழியைக் கண்டபேரே (எஉ)

பேரான உத்திரத்தில் மூவாயிரம் பேர்
பிரபல்லியம் கைகொண்டு தேர்ந்தார் பாரு
ஆறான யென்மொழிதான் முன்னூறு லட்சம்
அப்பனே அதிலிருக்கும் வாதமெல்லாம்
வாறான முன்னூற்றில் தீர்ந்து சொன்னேன்
வளமான முன்னூறில் பாரு பாரு
நாறான யென்மொழியைக் கண்டபேர்க்கு
நலமான சிவயோகப் பதவி முற்றே. (எங

*Colophon :*

சார்வரி வருஷம் சித்திரை மாதம் 30௳ திருசிரபுரங்கோட்டையிலிருக்கும் முத்தையா பிள்ளை குமாரன் குளுந்தா பிள்ளை தன் வந்திரி சாஸ்திரம் எகு எழுதி நிறைந்தது முற்றும், வேணும் தேவிசகாயம்.

---

434. சுவடி நெ. 248 (c)

## அகஸ்தியர் இந்திர ஜால நிகண்டு இருநூறு

ஏடுகள் 27 : பக்கத்திற்கு 6 வரிகள்
இடையிடையே சிதிலமாக உள்ளன
(நீள × அகலம் : 30 × 3½ செ. மீ.)

இதில், தாதுபுஷ்டி மருந்துகள் வசிய முறைகள் - மை வகைகள் - அழிஞ்சில் தைலம் - வாடைத்தூள் - இடுகுளிகை

பஞ்சாக்ஷரமாறல் - உச்சாடனம் (11) முகவசீகரணம். தும்பை கற்பம் - கவுதும்பை கல்பம் - சோரை வடிய - அரவுநெய் - மாரணம் - மாரண மந்திரம் - தேங்காய் மாரணம் - நண்டுவளை மண் - வண்ணார் மண் - தில்லம்பால் - கள்ளிப்பால் கற்பம் - முதலியன உள்ளன.

*Beginning :*

உன்னிய பொதிகை வாழுங் குறுமுனியருளையோதி
யின்னில நிகண்டுபாட யிந்திரசால நூலைப்
பன்னிய பாஷைதோணப் பண்டிதவேதனுவுங்
கன்னியு முமையுமீசன் கந்தனுங் காப்புத்தானே (க)

தானெனுய் வழலையாதி தறுக்குறுவடிவுமீசன்
வானமும் புவியுமாகி மந்திரவெளியில் நின்று
ஞானமுமாகி யம்மை நாதமும் விந்துமாகி
மோனமாய் நின்றபிண்ட முடிவுமே காப்புத்தானே (உ)

*End :*

வில்முறித்தாற்கு விஷ்ணுமூலம்,
கல்லடைத்தாற்குக் கருந்தூஞ்சிதேவி
வெல்வரிப்பூடு வெல்வளியாதி
கொள்ளிப்பூடு கொல்லும்பச்சிலையே (ககூஅ)

பூட்டினேமிந்தப் பொன்னிருநூறும்
வருந்தவும்வேண்டாம் ஓட்டமுமில்லை.
... ... ... ... ... ... ...
நாட்டமுமில்லை நமனென்ற பேர்க்கே. (ககூகூ)

பாரினிலிந்த முறைப்படி பார்த்துத்
தேறுநீ பாபஞ் செய்யவும் வேண்டாம்
அரிநிலப்பாடு மறப்பனுனலும்
நேரிருனூறும் நினைத்ததுமுத்தே. (உள)

மலைதாங்கி வேர், கொள், கலங்கொம்பு - தாம்பிரத்தகடு — தம்பனமூலி - சிவயநம - உரு - ளஅ.

*Colophon :*

மணிக்கார படேசாயபு
சேவடிவேணும் குருவே துணை.

## 435. சுவடி நெ. 248 (D)

# நெஞ்சறி விளக்கம்

ஏடுகள் 14 : பக்கத்திற்கு 8 வரிகள்
(சிற்சில இடங்கள் சிதிலமாயிருக்கின்றன)

இதில், மனதின் லக்ஷணம் – அடக்கும் விதம் – உலகுத் பத்தி – ஞானமார்க்க லக்ஷணம். குருவின் லக்ஷணம். இறைவன் திருவடியடைய உபாயம் – மாயையை விலக்குதல் - முதலானவை உள்ளன.

*Beginning :*

வஞ்சகமனத்தினுசை மாற்றியே பெரியோர் தாளில்
கஞ்சன மலரிட்டேத்தும் கணபதி தாசன் சொன்ன
நெஞ்சறி விளக்கமான நீதிநூல் நூறும் பாட
குஞ்சர மூர்த்திமூலக் குருபரன் காப்பதாமே (க)

பூமியில் சௌந்திரப்பெண் புணர்திரு நாகநாதன்
நாமென நாளுநாவில் நவின்றுசெந் தமிழால் பாடக்
காமமுமாசாபாசக் கன்மமுமகத்தி மூல
மேறுமேய்யழுத் தஞ்சாலே யுனையறிந் துணர்வாய் நெஞ்சே (உ)

தந்தைதாய் நிசமூமல்ல சனங்களும் நிசமுமல்ல
மைந்தரும் நிசமுமல்ல மனையவள் நிசமுமல்ல
யிந்தமெய் நிசமுமல்ல யில்லறம் நிசமுமல்ல
சுந்தரநாகநாதன் துணையடிநிசம்பார் நெஞ்சே (ங)

*End :*

நித்தியப் பொருளாமிந்த நெஞ்சறிவிளக்கம் நூறும்
பக்தியாய் மனதிலெண்ணிப் படித்ததன் பயன்காண்போர்கள்
முற்றுமெய் ஞானம் பெற்று மூவர்க்கும் முதல்வராகி
சத்தியுஞ் சிவமுந் தோன்றுந் தற்பரந் தன்னில் வாழ்வார்
நெஞ்சே (கக)

... ... ... மணிசேர் மூலக் கணபதிதாசன் நானே
நினைவினாலறிந்து செப்பும் செஞ்சறி விளக்க மிந்நூல்
வினவியே படிப்போர் கேழ்ப்போர் வினையல்லாங்கண்டு
மெய்யுற் பரமெனும்
மோட்.சானந்த பாதம்பெற்று பதத்துள் வாழ்வார் நெஞ்சே (எ)

தக்ஷிணாமூர்த்தி துணையுண்டாக.

*Colophon* :

குரோதி வருஷம் பங்குனி மாதம் 7உ. *1845* மார்ச் *17*உ
இப்படிக்கு அய்யாச்சாமி பிள்ளை.

---

**436** சுவடி நெ. *248* (E)

## அகஸ்தியர் மகாமுனி வகாரம் முப்பது

ஏடுகள் *8*; பக்கத்திற்கு *6* முதல் *7* வரிகள்
பூர்த்தி; இடையிடையே பூச்சியரித்துள்ளன.

இதில் அரிதாரச் செந்தூரம், பாஷாணக்கட்டு, நீலகண்ட செந்தூரம், துருசுச் சுன்னம், நாகக்கட்டு, சாரக்கட்டு, கௌரிக் கட்டு முதலியன உள்ளன.

*Beginning* :

சீர்பெருகும் நிர்குணத்தின் பாதங்காப்பு
செழுங்கனியி னமிர்தமுண்ட கரிமுகவன்காப்பு
கார்ப்பெருமே கந்தனுட பாதங்காப்பு
கன்னி மகே சுவரியின் கருணைகாப்பு
பார் பெருகும் பரமனுட பாதம் போற்றித்
தருகிறேன் வாதமுறைக் கருவை யானும்
நேர் பெருகி சாஸ்திரத்தின் பொருளை யாய்ந்து
நிகழ்த்துகிறேன் முப்பதிலே நினைவாய்ப்பாரே (க)

நினைவாலே பாடினதை பார்த்துமே யந்த
நிச்சயமே யென்றெண்ணி ரிஷிகள் சித்தர்
தனதாலே யெந்தனிடம் வந்து நின்று
சற்குருவே கும்பமுனி ஞானமூர்த்தி
கனமான சாஸ்திரத்தின் பொருளையெல்லாம்
கருத்துகந்து வெளிவிட்டி ரண்டாரப்போ
பணமான பொருளாசை மிகுந்து நின்ற
பாதகர்க்கு யின்னூல்தான் பலியாதென்றேன் (உ)

*End :*

கட்டியே பாயாமல் வாசியைத்தான்
கனத்ததொரு பூரகரே சகமே செய்து
தெட்டியே கும்பகத்தில் நின்றுயானால்
சினத்திலே சித்தியடா கட்டு வாசி
கொட்டியே யலையாதே சர்மநோயால்
கூத்தனுக்கு யிரையாவாய் கொள்கிப்பாரு
ஆட்டியே யலையாமல் குருவைக்காரு
ஆதியந்தம் தோத்துமடா வருளைநோக்கே (உகூ)

நோக்கினால் முப்பதிலே முயன்று காணும்
நுணுக்க மெத்தச் சொல்லிவிட்டேன் முப்பதுக்குள்
வாக்கினால் சொன்னதினால் யாருள் காண்பான்
வாதமென்ற பொருளதிலே வெளியாய்ச்சொன்னேன்
போக்கினால் வாசியைத்தான் முதுமையாகும்
புத்தியுள்ள புலஸ்தியனே பொருளைக்காரு
தாக்கினால் சதாசிவத்தி னருளைத்தாக்கு
சத்தியமாய்ச் சொல்லிவிட்டேன் முப்பதுமேமுற்றே
(௩௦)

**குறிப்பு :**

அல்லாஹுத்தாலா நல்லதுக்குதவி செய்வானாகவும். ஆமீன் ஆமீன் யாற்பூலாலமீன் ஆமீன்.

**பாலில்லாத பேர்க்கு மருந்து**: தைவேளை, மணக்குத்தான் வேர் இது இரண்டும் சரியெடை நிறுத்துப் பசுவின்பால் வார்த்து அரைத்துப் பாலில் கலக்கி, நெல்லிக்காய் வீதம் 3 நாள் கொடுக்கப் பால் சுரக்கும்.

**பால் சுரக்கப் பத்து**: முலையில் பூச விபரம் – கோழிக் காரம், மாடப்புருயெச்சம் ரெண்டுஞ் சமனுய்ச் சேர்த்து 3 நாட்கள் பூசவும். கல்லுங்கரைந்து பால் ஊறும்.

மாட்டுக்குப் பூ விழுந்தால் – வேலிப் பருத்திச்சாறு பிழியத்தீரும்.

மனிதர் கண்ணில் பூ விழுந்தால் நாயுருவி ரஸம் பிழியத்தீரும்.

**மலட்டு வலிக்கு**: கொடிக்கள்ளிச் சாம்பலைச் சுட்டு விராகனெடை 5 – நிலவாகை 1 வராகனெடை – வசம்பு 3 வராகனெடை – ஓமம் 2 வராகன் - இவைகளைக் கழுதைப்பாலிலே அரைத்து உண்டைபண்ணிக் கொடுக்க 3 நாள் கொடுக்கவும்.

---

**437.** சுவடி நெ. 248 (F)

## தன்வந்திரி நிகண்டு முன்னூறு

ஏடுகள் 61. பக்கத்திற்கு 8 வரிகள்

இடையிடையே பூச்சியரித்துள்ளது. மையிடப்படவில்லை

இதில், வாசிசூஷ்மம், சுவாசம் முடக்கும் வழி, சுப்ரமண்யர் தியானம், வாலைப்பெண்ணிற்கு 'சல்லிவேர்' என்று பெயர். சல்லி மரம், சல்லிவேரறியும்படி – திரேதா, கிரேதா, துவாபர யுகம் – வழலைபேர் – முப்பின் பேர் – தலைப்பிண்டத்தின் பேர், அண்டம் பதப்படுகிற விதம், சுற்றசில் பெயர், சுத்தசலம், நூல்கோர்வை, சத்திமுப்பு, சிவமுப்பு, சுன்னம், முப்புச் சுன்னத்தின் பெயர் – இந்நூல் வலிந்தளித்தால் சாபம், அண்ட விந்தின் பெயர், தன்வந்தரி வாக்கிற்கு எதிர்வாக்கில்லை, வாலை

தியானம், வாலைபூசை, நஞ்சுக்கொடியின்பேர் – கருநெல்லி, வெண்சாரை, அண்டச் சுன்னம், சத்தியண்டச் சுன்னம், அம்ருதங் கொள்ள, வெடியுப்பு முறை, கல்லுப்பு முறை, வெடியுப்பு ஜயநீர், கல்லுப்புச் சுன்னம், அண்ட ஜயநீர் – ஞான சூக்ஷ்மம் – கொடி முடி – பசப்புஞானி, வைத்யத்தின் குரு – ஸ்திரீகளுக்கு மருந்து – வைத்யர்க்கு மை, ரஸஸிந்தூரம், மாரணத்தின் முப்பு, அஞ்சன மை, அம்ருத கற்பம், வசியத்தின் தைலம், வசிய விபூதி – காந்தச் செந்தூரம், வாசி சூட்மம், தேவிசக்கர பூசை, வீட்டிலடங்கும் விபரம், கையான் கற்பம், அண்டச் சயநீர் பெயர் – தந்வந்தரி சித்தர்களுடனே சிநேகஞ் செய்து, ஆசீர் வாதம் பெற்ற விபரம், வைரவத் தியானம், பூசை முதலியன காணப்படுகின்றன.

*Beginning :*

ஆயிதிரோ தாயினுட மந்தக் கூறும்
அன்பான மனோன்மணியும் ஆதிபோற்றி
ஆயிதிரோ தாயியென்ற மனோன்மணித்தாய்
வளர்ந்தெொரு வாலையுடப் பாதம்போற்றி
மாயிதிரோ தாயினுட்டுக் கணபதியேயென்று
வாழ்த்தினேன் வல்லபையி னாதிபோற்றி
ஆயிதிரோ தாயியருளான சத்தி
நலமான வைரவன்தன் பாதம்போற்றி (க)

கனமான கணபதியும் கந்தன்காப்பும்
மகத்தான யக்ஷணிதன் பாதங்காப்பு
கனமான ரிஷகளுட பாதங்காப்பு
வகுத்தவொரு யென்குருவின் பாதங்காப்பு
கனமான சதாசிவத்தினருள் தான்காப்பு
மகத்தான வழலையுட ஆதிகாப்பே. (உ)

*End :*

ஒன்ணுதுபல ... ... ... ... ... ... தள்ளு
வேதாந்த புத்தியதர்ய நின்றாருக்கு
கண்ணுது கல்வியது மிகவே தோன்றும்
கனமான வாசியது சினத்தில் நிற்கும்
உண்ணுது அறிவாலே குனமுனடை காட்டி
அசையாது யாக்கையதி லகஸ்தியனைக் கண்டால்
வண்ணுது அஷ்டசெள பாக்கிய மீவான்
வளமான யேபோன கத்தைக் கண்டேன். (௩ள)

கண்டதனு லகஸ்தியனென்ற பேருமாச்சு
கனமான வகஸ்தியர்தான் கண்டான்பாரு
விண்டதனுல் யான்விண்டேன் யார்விண்டார்கள்
விலையில்லா யிதக்கத்தால் விண்டேனப்பா
விண்டதனுல் முந்நூறுங் கண்டபேர்கள்
அரனெனவே பேருண்டாம் அருளினேன்பார்
மண்டதனு லின்னூலைக் கண்டபேர்க்கு
மகத்தான சிவயோகி யெனலாம்பாரே. (௩ளக)

ஆமப்பா யின்னூலைப் பதனம் பண்ணு
அப்பனே நல்லோர்கள் பதனஞ் செய்வார்
வாமப்பா யின்னூலை யெடுத்துக் கொண்டு
வளமாக நீயெடுத்துப் பூஜை பண்ணு
... ... ... ... ... ... ... விருவெல்லாந் தோணுங்
கனமான யிந்நூலைக் கைவிடாதே
நாமப்பா முந்நூறும் பாருபாரு
நலமான கருக்கிடைநிகண் டிதுதான் முத்தே. (௩ளஉ)

குருவே துணை.

குறிப்பு.

காசத்திற்கு மருந்து

ரசகர்ப்பூரம் வராகனெடை 1
குங்குமப்பூ ,,
கோரோசனை ,,
பசுநெய் துட்டு எடை

இது நாலும் ஒரு குடுவையிலே போட்டுத் தண்ணீர் ஓடுமிடத்தில் புதைக்கவும். 3 நாள் சென்று எடுத்துக்கொண்டு நன்றாக அரைத்துப் பணவெடை கொடுக்கவும். 3 நாள் உப்பில்லாப் பத்தியம். ரெத்தகாசம் கண்டால் அபின் வராகனெடை அந்த மருந்தோடு சேர்க்கவும்.

---

438. சுவடி நெ. 248 (G)

## அகஸ்தியர் எட்டு

ஏடு 1; பக்கத்திற்கு 8 வரிகள்; அபூர்த்தி.

இதில், அரிதாரக்குளிகை (அமுதசஞ்சீவி) தாளகக்குளிகை முதலானவை உள்ளன.

*Begiuning :*

சீரணியும் பூரணத்துள் தேவிபாதம்போற்றி
செகத்திலுள்ள பெரியோர்கள் பாதம்போற்றி
வாரணியு முலைமடைந்தை தாயுமின்னாள்
வைத்தியத்தி லெட்டதனை வளமாய்ச் சொன்னார்
காரணியும் முகத்தானே கடவுளானை
கங்கைபிறை திங்களணி செஞ்சடையினாலே
ஆரணியு மகத்தியனா ரோதுமிந்நூல்
சங்கரன்தன் பாதமுதல் காப்புத்தானே. (க)

தானென்ற அரிதாரம் பலந்தானென்று
சமத்தான லிங்கமதிலரைக்கால் சேரு
தானென்ற சூதமதில் பாதிசேரு
திறமான சௌவீர மதில்கால்கூட்டே. (உ)

கூட்டியே தாளிசச் சாத்திலாட்டிக்
குன்றியைப்போ லுண்டைசெய்து வைத்துக்கொண்டு
நாட்டியே யீளையொடு சுவாசகாசம்
நலமான ரத்தமத்த மூலரோகம்
நாட்டிலே யிதுவெல்லா மோடிப்போகும்
நலமான வமுதசஞ் சீவிதானே. (௩)

*End :*

கொள்ளடா தாமிரத்தின் பொடிதானென்று
குணமான வெங்காரம் பலந்தானென்று
தள்ளடா காந்தமொன்று வீரமொன்று
சமத்தான கருவங்கம் பலந்தானென்று
வுள்ளடா கருநாவி பலந்தானென்று
வெடியுப்பு கால்பலந்தான் கூடச்சேரே
மெள்ளடா பாகையிலைச் சாற்றில் நண்ணு
முறையாகச் சாமது ... ... ... ... ... (அ)

குறிப்பு :

கடைசியில் 8 வெற்றேடுகள் உள்ளன.

---

**439.** சுவடி நெ. 249

## அகஸ்தியர் வைத்ய ரத்னச் சுருக்கம்

ஏடுகள் : 83. பக்கத்திற்கு 8 முதல் 9 வரிகள்
மிகவும் சிதிலமாகவுள்ள சுவடி. அச்சிடப்பட்டுள்ளது.
(நீள × அகலம் 37 × 3½ செ.மீ.)

இதில், நாடிக்குணம், வைத்யர் லக்ஷணம். ரஸானந்த பைரவம், வாதராக்ஷஸன், சமைக்கினி, கற்பக மாத்திரை, கபாட,

மாத்திரை, பூபதிச் செந்தூரம், ரஸசிந்தாமணி, கோரோசனை மாத்திரை, பூமணி மாத்திரை, அர்த்தநாரீசுவரம், சிலோதாரி மணி, கரிசாலை லேகியம், கண்டங்கத்திரி லேகியம், பஞ்ச தீபாக்னி லேகியம், சிந்தாதி லேகியம், மகாவில்வாதி லேகியம், சம்பங்கி வில்வாதி லேகியம், மகாகண்டங்கத்திரி லேகியம், கபாட லேகியம், திப்பிலி ரஸாயனம், மதுஸ்னுஹி ரஸாயனம், சௌபாக்ய சுண்டி, கூழ்பாண்ட லேகியம், அக்னிமுகச்சூரணம், திருதராஷ்டிரதச் சூரணம், அசுவகந்திச் சூரணம், தாளீசபத்ரிச் சூரணம், கண்டாத்ரிச் சூரணம், பஞ்சதீபாக்னிச் சூரணம், நிலவகைச் சூரணம், வல்லாரைச் சூரணம், சஞ்சீவிச் சூரணம், ஏலாதிச்சூரணம், அசுவகந்தி திராக்ஷாதித்தைலம், வில்வாதித் தைலம், குமரித்தைலம், கொம்பரக்குத்தைலம், பிருங்காமலகத் தைலம், சந்தனுதித்தைலம், பொன்னுங்காணித்தைலம், கீழாநெல் லித்தைலம், ஆதண்டைத்தைலம், நிலப்பனைக்கிருதம், பொன்னுங் காணிக்கிருதம், புளியாரைக்கிருதம், வல்லாரைக்கிருதம், கூழ் பாண்டக்கிருதம், தூதுவளைக்கிருதம், கண்டங்கத்தரிக்கிருதம், கண்டங்கத்திரிகிருதம், கணத்தெண்ணெய், கரப்பான் எண் ணெய், மாந்தயெண்ணெய், மேகத்தெண்ணெய், வீழியெண்ணெய், மேகத்தெண்ணெய், கலிங்காதியெண்ணெய், அஞ்செண்ணெய் தைலம், சுகசீதபேதி எண்ணெய், பனத்தெண்ணெய், வீரபத்திரக் கலிக்கம், ஆக்கிராணம், நஸ்யம், கண்டௌடிதம். பூர்ணசுத்தி. லோகச் செந்தூரம், காந்தச் செந்தூரம், லோகமகரந்தச் செந்தூரம், திரிலோகச் செந்தூரம், பஞ்சலோகச் செந்தூரம், லோகச் செந்தூரம், அப்பிரகச் செந்தூரம், ரஸபற்பம், தாளக பற்பம், வங்கபற்பம், நாகபற்கம், தாமிரபற்பம், வெள்ளிபற்பம், தங்கபற்பம், வெங்காரம், சிலாஜித் பற்பம், பவள பற்பம், பஞ்சலோகச் செந்தூரம், மண்டூரச் செந்தூரம், அப்பிரகச் செந்தூரம், ரஸபற்பம், தாளக பற்பம், வங்கபற்பம், அஞ்செண் ணெய், வாதச்சுரக் கஷாயம்; பித்தச்சுரக் கஷாயம், சிலேத்மச்சுர கஷாயம், கன்னி தோஷம், ரசச் செந்தூரம், விழுதுமுடி, காளகண்டமேக நாராயணச் செந்தூரம், ரசலோகச் செந்தூரம், ரஸகர்ப்பூர பற்பம், காரீயச் செந்தூரம், சன்னி யெண்ணெய் முதலிய பற்பல முறைகள் உள்ளன.

*Beginning :*

பூரணமாய் நிறைந்தகுரு பரைத்தாள்போற்றி
புகலுகிறேன் வைத்தியரத்னச் சுருக்கந்தன்னை
வாரணமா முகத்தோனைப் பணிந்துபோற்றி
வைத்தியந்தான் முன்னூத்தி யறுபதுக்குள்
காரணமாஞ் செந்தூரம் பற்பம் லேகியம்
கருவான தைலமொடு கிருதமெண்ணெய்
சூரணமாக் கிராணமொடு கலிக்கமாத்திரை
மெழுகு குரு நாடிமுதற் சொன்னோம் பாரே. (க)

கரிமுகனடியை வாழ்த்திக் கைதனில் நாடிபார்க்கில்
பெருவிரலங்குலத்தில் பிடித்தடிநடுவே தொட்டா
லொருவிரலோடில் வாதமுயர் நடுவிரலிற் பித்தந்
தெருவிரல் மூன்றில் பின்னுஞ் சிலேட்டுமநாடியாமே. (உ)

*End :*

பண்ணவே பத்தியந்தான் பாலுஞ்சாத
மிதமான யாவிநெய் சிறுகீரையாகும்
பண்ணவே காணிபுளி யாரையாகும்
பக்குவமாய் தேனோடு சர்க்கரையுமாகும்
கண்ணவே மிளகோடு தூதுவளையாகும்
கனமான வெள்ளாட்டின் வத்தலாகும்
தண்ணவே பருப்புக்குப் பாசிப்பயறு
குந்தளமாஞ் சந்தனாதி வைத்துமுழ்கே —
முழ்கவே வியாதியெல்லாங் கடலேபுக்கு
முக்கியமா மகஸ்தியர்க்குச் செபந்தான்பண்ணு
நெகிழவே தியானமதென் னேரம்பண்ணு
நேரான தேவியைத் தான் தியானம்பண்ணு

மகிழவே சிவன் தனையே பூசை பண்ணு
 தவருத வியாதி யெல்லாந் தவறுண்டே போம்
மகிழவே வைத்தியமுஞ் செய்தானகில்
 வையகத்தி லொப்பாரு மீசன் முத்தே.

தெக்ஷிணமூர்த்தி துணை.

கடைசி ஏட்டில் கீழ்கண்ட "சந்நியெண்ணெய்" காணப்படுகிறது.

போமப்பா சந்நியெல்லாங் கடலே புக்கும்
 பாங்கான தைலமொன்று சொல்லக்கேளு
நாமப்பா வேப்பெண்ணெய் புங்கினெண்ணெய்
 நயமான பின்னையெண்ணெய் பசுவின்நெய்யும்
காமப்பா காட்டிலா மணக்கினெண்ணெய்
 கடுவாகச் சமன்சேர்த்து சட்டியில் வார்த்து
ஆமப்பா முசுருமுட்டை படி காலாகும்
 அப்பனே யெண்ணெய்படி காலதாமே. (க)
காலான படிவீதஞ் சேர்த்துக்கொண்டு
 காணப்பா குக்குடத்தின் முட்டைபத்து
மாலான மஞ்சளைத்தான் கூடவிட்டு
 மயங்காதே கடை மருந்து சொல்லக்கேளு
சாலான சாதிலிங்க குந்துருக்கஞ்
 சமத்தான கெந்திரஸம் பாஷாணந்தான்
ஆலான நாபியொடு மிளகு திப்பிலி
 அழகான வாலையுட திப்பிலியும் போடே. (உ)
போடப்பா வங்கமொடு நேர்வாளந்தான்
 புகழான கழஞ்சுசிறைச் சமனாய்க்கூட்டி
நாட்டப்பா சித்திரமூலக் கஷாயந் தன்னால்
 நலமாகக் கஷாயம் கொண் டரைத்துக்கொண்டு
சாடப்பா யெண்ணெயிலே கரைத்து விட்டு
 சதிராகக் கொதிக்கையிலே யெருக்கம்பாலு
கோடப்பா கொடிக்கள்ளி சதுரக்கள்ளி
 குணமான யிலைக்கள்ளிப் பாலுங்கூட்டே. (ங)

கூட்டவே திருகுக்கள்ளி நாரங்கள்ளி
கூசதே படர்ந்தகள்ளி முள்ளிக்கள்ளி
காட்டவே பால்வகைதா னுழக்குமாகும்
சாதகமாம் யெண்ணெயிலே விட்டுக்கிண்டி
மூட்டவே கமலம்போல் தீயைப்போட்டு
முதிராமல் கொதிக்கையிலே கஸ்தூரி கேளு
சாட்டப்பா வஞ்சுபண மூலைப்பாலாலே
தானரைத்து யெண்ணெயிலே நன்றாய்வாரே. (சு)

வாரப்பா மூலைப்பால்தான் படிகால்வீதம்
வளமான தேசிப்பால் படிகாலாகும்
சேரப்பா காட்டெருமைப் பால்பலந்தான்
திறமாக யெண்ணெயிலே விட்டுக்காய்ச்சி
ஆரப்பா ஆத்தலரியிலைநால் போடு
வப்பனே வெள்ளுள்ளி வரைத்துப்போடு
மூட்டியே மெழுகுபத மானபோதே
முன்னவர்க்குப் பூசித்து வடித்திடாயே. (ரு)

வடித்திட்ட தைலத்தைப் பரணிதன்னிலடைத்து
வாகான கோரோசனைக் கழஞ்சுபோடு
பிடித்திட்ட சன்னிவகை பதிமூன்றுக்கும்
பேரான கரண்டிநிறை யுள்ளே கொள்ளு
துடித்திட்டச் சன்னியெல்லாந் துலைந்துபோகுந்
துடியான யிசிவுகுத்துளைவு போகும்
நடித்திட்ட நரம்பெல்லா மிருதுவாகி
நளினமாய் சிவெட்டெல்லாம் நளினமாமே. (சூ)

---

440. சுவடி நெ. 250 (A)

## அகஸ்தியர் வைத்ய சிந்தாமணி

ஏடுகள் 260; பக்கத்துக்கு 1 முதல் 10 வரிகள்
எழுத்துகள் சுத்தமாகவுள்ளன; செல்லரிக்கவாரம்பமாகியுள்ளன.
(நீளம் × அகலம் 37 × 3½ செ. மீ.)

இதில், நாடிநிதானம் – சுரலட்சணம் – சந்நிசுரலட்சணம் – சுரத்திற்குப் பத்தியம் – ஆகரோகநிதானம். நாடிவெண்பா கவி. 96.

ஊர்த்வவாதம் – சிரேர்வாதம் – பட்சவாதம் – பாரிசவாதம் – ஊருஸ்தம்பம் – ஆமிலவாதம் – ரஸவாதம் – தனுர்வாதம் – திமிர் வாதம் - நயனவாதம் - பிரமவாதம் - மூத்திரவாதம் – விழுசிவாதம் தூமவாதம் – என்பன.

**பித்த நிதானம் :**

வாதபித்தம் வகை 2க்கு கவி 84 – ஆக இனம் 3க்கு 180 (ஏடு 49) கர்க்கவகை. வாதசுரம், பித்தசுரம். சீதசுரம், சந்நி பாதச்சுரம், மாறல்சுரம், ஆக இனம் 6க்கு 549 வெண்பா. (ஏடு 53)

வாதசுரகஷாயம் – பித்தச்சுர கஷாயம், வாதசுரக் கருக்கு – வாதசேத்தும சுரத்திற்கு-பித்தச் சிலேத்மத்துக்கு-சிலேத்ம பித்தச் சுரத்திற்கு – தொந்த – அசீர்ண – சர்வசுரம் – விடாச்சுரம் – தோஷ சுரம் – சந்நிபாதம் சுரம் 13க்கும் – சர்வசந்நி – தசமூலம் – பஞ்சமூலம் – தசமூலம் – அஷ்டாதச மூலம் – பஞ்சகோலம் – அந்தர்தாகம் – தாகம் – சூலைக்குப் பாண்டு சோபைக்கு - புராணச் சுரத்திற்கு – மாறல் சுரத்திற்கு – ஒருமாறல் சுரம் – இருமாறல் சுரம் – மூன்ரும்மாறல் சுரம் – நாலாம்மாறல் சுரம் – சாயங்காலச் சுரம் – இராத்திரி சுரம் – அத்திசுரம் - இரத்தசுரம் – கெர்பிணி சுரத்திற்கு – அரையில் சுரத்திற்கு – திரிதோஷசுரம் – மூர்ச்சை இவைகளுக்குக் கஷாயவகைகள் – இருவது மேகத்திற்கு – பிரமேகத்திற்கு – ரத்தபித்தம் – சுர அதிசாரத்திற்கு – அதிசார சூலைக்கு – சுவாசகாசத்திற்கு – மந்த சுரத்திற்கு உருண்டை – சர்வ சுரத்திற்கு – அஜீர்ண வலிக்கு – கிராணிக்கு – கிருமிக்கு – தீபனத்திற்கு – நீர்க்கடுப்பிற்கு – சயித்தியத்திற்கு – சூசிகா வாயுவின் சுரத்திற்கு –

கஷாயம் முடிந்தது ஆக இனம் 7க்கு வெண்பா 701 (ஏடு 66)

வாதகரச் சரக்குகள் – பித்தகரச் சரக்குகள் – சிலேத்மகரச் சரக்குகள் – திரிதோஷகரச் சரக்குகள்.

ஆக வெண்பா 22. ஆக இனம் 8க்கு 723 (ஏடு 68)

அரிதாரசுத்தி – அரிதார பற்பம் – நீரிழிவுக்கு – வெள்ளைப் பாஷாணம் – கெந்தகம் – துருசு – கர்ப்பூர சிலாசத்து – நிமிளை – மாட்சிகசுத்தி – வெங்காரசுத்தி – நேர்வள சுத்தி – மைசாட்சி சுத்தி – வங்கபற்பம் – சுரசம் – பிரமை – சயம் – சுவாசம் – நெடுங் காசம் – மார்புநோய்-பாண்டுவிற்குச் சுவர்ணபற்பம் – பவளபற்பம்– வைரக்கல் பற்பம் – மரகதப் பற்பம் – நீலக்கல் பற்பம் – புஷ்பராக பற்பம் – கோமேதகப் பற்பம் – நாகபற்பம் – வைர பற்பம் – அப்ரக பற்பம் – மாத்திரைகளுக்குச் சேர்க்கும் அப்பிரகச் செந்தூரம் – தாமிரபற்பம் – அயச்செந்தூரம் – லோகச் செந்தூரத்திற்கு – உளமாந்தை – காசம் – சுவாசம் பதினெட்டு எலிகடியும் தீரும் – அயப்பொடி – காமாலை, பாண்டு – விஷபாகம் – நீராமை மகோதரம் தீரும் – அயச்சத்துச் செந்தூரம் – கெந்திபற்பம் – அயச் செந்தூரம் – காந்தச்சத்து – காந்தபற்பம் – செந்தூர பற்பம் – காரீய பற்பம் – கிரிச்சத்திற்கு – கல்லடைபிற்கு வெள்ளீயபற்பம் – மாங்கிஷவடைப்பு – குன்மவலிக்கு வங்கபற்பம்– கெந்தகபற்பம் – பூனுகத்தாமிரபற்பம் – அரிதாரபற்பம் – மாறல் சுரத்திற்கு – கர்ப்பூர மாத்திரை – அப்பிரகச் செந்தூர மாத்திரை– நவலோகாக்கினி குமாரன் – நவரத்தினக்கினி குமாரன் – சித்தி தாக்கினி குமாரன் – லகுவாக்கினி குமாரன் – அக்கினி குமாரன்– சந்நிவாதம் 6க்கும் காந்தபற்பம் – திரிபுராந்தக ரஸம் – காளகண்ட ரஸம் – சாம்பவீரஸம் – புவனேச்வர ரஸம் – லோகபற்பம் – மாகாக் கினி குமாரன் – நரசிங்க ரஸம் – விச்வம்பர ரஸம் – பார்வதி ரஸம் – நாராயணீ ரஸம் – பைரவ ரஸம் – லட்சுமி நாராயண ரஸம் – இரண்யகர்ப்ப ரஸம் – கமலாசன ரஸம் – விஷபயான ரஸம் – உன்மாதகேசரி ரஸம் – இரத்தின பூபதி – தாமிர பூபதி– ஆக வெண்பா 298. ஆக இனம் 9க்கு வெண்பா 1021 (ஏடு 95)

மாத்திரைப் புரயோகம் ; – பூபதி மாத்திரை – சிந்தாமணி – பூர்ணசந்திரோதயம் – வசந்த குஸுமாகரம் – ராஜம்ருகாங்கம் – சொர்ணமாலினீ வசந்தம் – கஸ்தூரி மாத்திரை – மகாஸந்நிபாத பைரவன் – வாதராட்சதன் – வாதராஷ்ட்ரம் – ஸ்ரீ ராமச்சந்திர பாணம் – சாம்பவிரஸம் – ஆனந்த பைரவன் – அம்ருதரஸம் – சீதபஞ்சரி – சுயமக்கினி – பூதேசரஸம் – பிரதாப மார்த்தாண்ட ரஸம் – கிராணி கபாடம் – கோடாசூளி குளிகை – பிரதாபலங் கேச்வரன் – க்ரவ்யாதரஸம் – ஆனந்தக்ரவ்யாத ரஸம் – (ரச பைரவானந்தயோகி சொன்னது) மகாபூர்ண சந்திரோதயம்.

மாத்திரைப் பிரயோக வெண்பா 135. ஆக இனம் 10-க்கு வெண்பா 1156. ஏடு (108).

கெருடருத்திர ரஸம் – பார்கவி ரஸம் – விஷசந்நிபாத ரஸம் சாம்பவி ரஸம் – அர்த்தநாரீசுரன் – வித்தியாதிகண்ட ரஸம் – சிந்தாமணி – சந்நிபாத பைரவம் – சுரங்கேசரி ரஸம் – நாராயண ரஸம் – விக்கிரம ரஸம் – பஞ்சபாஷாணச் செந்தூரம் – கச்சபி மாத்திரை – சந்திரசேகர ரஸம் – சந்திரப்பிரபாவதி ரஸம் – சைத்யப்பிரபாவதி ரஸம் – மகாப்பிரபாவதி ரஸம் – காசகுலாந்தக ரஸம் - பிரமேககுலாந்தக ரஸம் – சஞ்சீவி மாத்திரை – வாகாதி ரஸம் – சூலாந்தக ரஸம் – வடவாக்னி ரஸம் – பஞ்சவிக்கிரம ரஸம் – தாம்ராதி மாத்திரை – ஜகன்மோகன ரஸம் – சந்திரகாச நாமரஸம் – திரிமூர்த்திரஸம் – சஞ்சீவி ரஸம் – கஜசங்கவாட ரஸம் – கசசாலங்கவாட ரஸம் - சங்கேச்வரி ரஸம் - தாளகேச ரஸம் - அண்டபேரண்ட ரஸம் - அம்ருதசஞ்சீவி ரஸம் - சுரமஞ்சரி ரஸம் - சலமஞ்சரி - சீதமாதாங்கசுர ரஸம் - அசீர்ணகண்டரஸம் - வித்யாதர ரஸம் - சீதபஞ்சன ரஸம் - ராமபாண ரஸம் - மார்த்தாண்ட ரஸம் - சரபாசுக்கிர ரஸம் - சிங்கநாத ரஸம் - நீலகண்டரஸம் - பூறுதிரஸம் - நரசிங்கரஸம் - ஆபதோத்தாரண ரஸம் - அம்ருதநாராயண ரஸம் – கர்ப்பூராதி குளிகை - பைரவன் – அஷ்டபைரவன் - ஆனந்த பைரவன் - திரிபுர பைரவன் - ஸ்வச்சானந்த பைரவன் - மதன பைரவன் - மனோப பைரவன் -

சிங்கார பைரவன் - சங்கார பைரவன் - சந்நிபாத பைரவன் - சந்நிபாத ரஸம் - சந்நிபாத சிரோன்மணி - கோடாசூளி குளிகை - அரசன்கோடாசூளி - சுராங்குசம் - சர்வச்சுராங்குசம் - பேதிச் சுராங்குசம் - மேகநாத ரஸம் - மாகாளிங்காதி ரஸம் - லோகோத்தாரண ரஸம் - தினுர்த்தசுர ரஸம் - சமரோகணிக் குளிகை - லோகதாரண ரஸம் - விநோத ரஸம் - மோகன ரஸம் - ரஸதாம்ர பற்பம் - கெருடபுத்திர ரஸம்.

ஆக கவி 292. ஆக இனம் 11க்கு வெண்பா 1448 (ஏடு 136)

**லேகிய வகை :**

மகாவில்வாதி லேகியம் - லகுவில்வாதி - வில்வாதி - குண்டலாதி லேகியம் - சிஞ்சாதி லேகியம் - மகாசிஞ்சாதி - ஸ்வஸ்தஅபயாதி லேகியம் - அயிலேயாதி லேகியம் - ஆர்த்திராதி லேகியம் - கூஷ்பாண்ட லேகியம் - திரிபலாதி லேகியம் - கண்டகாரி லேகியம் - திராட்சாதி லேகியம் - மகாபிரஸாத லேகியம் - சௌபாக்யசுண்டி - கண்டசர்க்கரை - மேலான பில்வாதி லேகியம் - சரபங்கவில்வாதி லேகியம் - மதனகாமேசுர லேகியம் - வீரிய விருத்திக்கு - மதுஸ்நுஹி ரஸாயனம் - திப்பிலி ரஸாயனம் - வல்லாதி ரஸாயனம் - பரங்கிப்பட்டை ரஸாயனம் – வல்லாதி ரஸாயனம் – கெந்தக ரஸாயனம் – திலவல்லாதி ரஸாயனம் - பாடாதக்ரஅரீதகி - லசுனபுட்டம் (பிஷ்டி) - அஷ்ட குன்மகுடோரி - கௌதமீதக்ரலசுனம் - கோழிக்கடுகு - ரத்த மூலத்திற்கு நாரத்தங்காய்க் கடுகு-சூலைக்குடாரம்-எலுமிச்சங்காய் கடுகு - மண்டூரபற்பம் - சிநேகப்பொட்டணம் - லோகாம்ருத ரஸாயனம்.

ஆக கவி 254. ஆகயினம் 12க்கு வெண்பா கவி 1702 (ஏடு 158).

ஏலாதிச்சூரணம் – தாளீசச்சூரணம் - அசுவகெந்திசூரணம் - கண்டார்த்ரகம் - அபயாதிச் சூரணம் - மகாதாடிமாதிச் சூரணம் - திராட்சாதிச் சூரணம் - யோகராஜகுக்குளு - குக்குளுச்சூரணம் -

சிங்காதிச் சூரணம் – சூர்ணராஜன் – கெந்தகச் சூரணம் – ஸௌபாக்யசுண்டி - சம்பூர்ணம் - மூஸ்தாதிச் சூரணம் - சாரணை வேர்ச் சூரணம் - கர்ச்சூராதிச் சூரணம் - தாபாவனச் சூரணம் - காந்தாதிச் சூரணம் – சந்தனாதிச் சூரணம் – லகுவேலாதிச் சூரணம் - தாட்சிணுப்பொடி - சார்தூலாதிச் சூரணம் - திப்பிலியாதிச் சூரணம் - அசுவகந்திச் சூரணம் - பரங்கிப்பட்டைச் சூரணம் - பரங்கிப்பட்டைப் பிட்டு - மகாஏலாதிச் சூரணம் - யோகராஜகுக்குளு - வாராபத்யச் சூரணம் - நாகராதிச்சூரணம்.

ஆக கவி *128*. சூரண வகை முடிந்தது. ஆக கவி *1830*. (ஏடு *169*).

கந்தக வடகம் - காங்கேய வடகம் - தாளீசபத்திரி வடகம் மண்டூர வடகம் - செவ்வியவடகம் - ஏலாதி மாத்திரை - பாவனக் கடுக்காய் - வைரோசனாதி வடகம் - அம்சமண்டூரம் - திரிகடுகாதி மண்டூரம்.

ஆக வெண்பா *166*: ஆக இனம் *14*க்கு வெண்பா *1867*. (ஏடு *173*).

மஞ்சள் எண்ணெய் – எலிமிச்சங்காயெண்ணெய் – நெல்லிக்காயெண்ணெய் – கரப்பானெண்ணெய் – விஷகரப்பானெண்ணெய் – கொடிவேலியெண்ணெய் – ஆயில்பட்டையெண்ணெய் - சந்தி யெண்ணெய் - சிற்றலாதி யெண்ணெய் - சத்தி நெய் - கடுக்காய் நெய் - பூசணிக்காய் நெய் - இலந்தை நெய் - புளியாரைக்கிருதம் - ஐலேயகிருதம் - கதகாதிகிருதம். கதகாதிப பிட்டு - வாஸாதிகிருதம் - ஆர்த்ராதிகிருதம் - வசாதி கிருதம் - சதாவரிகிருதம் - சாவிந்தாதி கிருதம் - கூழ்பாண்டக் கிருதம் - பஞ்சகவ்யகிருதம் - கதலிகந்த கிருதம் - மகாகல்யாண கிருதம் - பஞ்சகவ்ய கிருதம் - கல்யாண கிருதம் - சட்பலகிருதம் குக்குளுகிருதம் - அசுவகந்தி கிருதம் - கனகாதி கிருதம்.

ஆக கவி *175*. ஆக இனம் *15*க்கு வெண்பா *2041*. (ஏடு *187*).

மகாநாராயணத் தைலம் - மகாபூதிகாத் தைலம் - லகுபூதிகாத் தைலம் — பிருங்காமலகத் தைலம் — பஞ்சார்க்கத் தைலம் — சதுர்சாதத் தைலம் - பூனகத் தைலம் - மகாநிர்குண்டித் தைலம் - விஷமுஷ்டித் தைலம் - சந்தனாதித் தைலம் - உயர் சந்தனாதித் தைலம் - அசுவகந்தி பலாலாக்ஷா தைலம் - அஸ்திகர்ணி பலாலாக்ஷா தைலம் - அஸ்திசர்ணித் தைலம் - சம்பீரத் தைலம் - சர்பிந்தாதித் தைலம் - வில்வாதித் தைலம் - கெந்தகத் தைலம் - தேவதூப தைலம் - சிவனார் வேம்புத் தைலம் - லசுனாதித் தைலம்- பூதீகா தைலம் - மகா பூதிகா தைலம் - பஞ்சார்க்கத் தைலம் — தீர்த்தகோசாதித் தைலம் - அரிமேதாதித் தைலம் - முக்கூட்டுத் தைலம் - கற்கடகாதித் தைலம் - ஆற்றினாத்தித் தைலம் - மஹா பலாசத் தைலம் - ஏலாதித் தைலம் - விஷமுஷ்டித் தைலம் — குமரித் தைலம் - லசுனேரண்டத் தைலம் - கெந்தகத் தைலம் — மஹா விஷமுஷ்டித் தைலம் - பிரஸாரணித் தைலம் - கேதகீ தைலம் - செம்பீரத் தைலம் - சகதேவித் தைலம் - லகுசந்தனாதித் தைலம் - வங்கிமரிசாதி (பங்கமரிசாதித் தைலம்), லகு விஷமுஷ்டித் தைலம் - விஜயவைரவத் தைலம் - சித்தபலாதித் தைலம் - சந்தனபலாதி - அபையாதி - மரிசாதி - கேதகீ தைலம் - அம்ருதாமலகத் தைலம் - மகாபிருங்காமலகத் தைலம் — மகாயேலாதித் தைலம் - இந்திராணித் தைலம் - கேசரஞ்சனத் தைலம்.

ஆக கவி 335க்கு இனம் 16க்கு வெண்பாகவி 2376. (ஏடு 214)

குன்மவலி - வயிற்று வலிக்கு - சேத்துமத்திற்கு - உதர சூலைக்கு - திரளாத பெண்கள் திரள - உப்புசம் மேல் சுவாசத்திற்கு - தோள் வலிக்கு - சலக் கழிச்சலுக்கு - அந்திர தாகத்திற்கு - கடுப்புக் கழிச்சலுக்கு - மூலக் கிராணி - வயிறு கழிய - மதுமேக மேல் தாகத்திற்கு - விக்கலுக்கு - கழிச்சலுக்கு- வாந்திக்கு - காமாலைக்கு - முயல் வலிப்பிற்கு - அண்ட வாதத்திற்கு - மூலக் கிராணிக்கு - நீர்க் கட்டுக்கு - ஊமத்தஞ்

காய் தின்ற பேருக்கு - சூலைக்கட்டு - பல்லரணைக்கு - பெண்டுகட்கு உதிரம் கட்டுப்பட்டு யிழுகிறதற்கு - வட்டி நோய் (ஸ்திரீ ரோகம்) - மைவிழிக்கு - உதட்டுக் கிருமிக்கு - கம்ப வாதத்திற்கு - யோனி சூலைக்கு - தோயாப்பூவுக்கு - மல பந்தத்திற்கு - ரத்தப் பிரமியத்திற்கு - அத்தி சுரம் - பாண்டு, சோப (வீக்கம்) - மஞ்சட்காமாலை - பெரும்பாடு - நீர்க்கட்டு - வாய்க் கிரந்தி - பெரும்பாடு - சூசிகா வாயு - சத்தி குன்மம் - உள்நாக்கு - முதலிய வியாதிகளுக்கு மருந்துகள் - சகல விரணங்களுக்கும் எண்ணெய் - விரைவாதத்திற்கு விரேசனம் - தேளுக்கு - எலி கடிக்கு - ஊமத்தங்காய் தின்றபேருக்கு - அடிப்புறப்பட்டதற்கு - கிராணிக்கு - வெளிப்புரைக்கு - தமர் வாயுவிற்கு - சுழிகணம் - சொருகு மாந்தத்திற்கு - கக்குவானுக்கு - நரம்புச் சிலந்திக்கு - படர்தாமரைக்கு - விரல்சுத்திக்கு - நேர்வாளசுத்தி - கேசரஞ்சனம் - ஆக்கிராணம் - காலசுர சந்நிக்கு அஞ்சனம் - வீரபத்திரனஞ்சனம் - கருடாஞ்சனம் - திவ்வியாஞ்சனம் - விக்கலுக்கு அனுபானம் - பத்யாபத்தியங்கள் நீரிழிவு பத்தியம் - பல ரோகங்களுக்குப் பத்தியம்.

ஆக கவி 268. இனம் 17க்கு வெண்பா கவி 2644. (ஏடு 238)

*Beginning :*

ஒருவாய்னல்வாய் மதமூன்றி லோரா
றிருதாளின் முகத்தாளிசைய – வருமோர்
களிறை யினித்துரைத்த கல்வியீர் (தே)ாத்திர
வெளிற்றை யினித்தாரவே. (க)

தோத்து மிம்பரும்பரென சூழ்ந்தமாராயிருப்பச்
சாத்தும் வைத்தியசிந்தாமணியைப் – போத்தியே
வெண்பாவால் யானும் விளம்புதற் கென்னுவிலே
வெண்பாவாப்! மேவாய் விரைந்து. (உ)

*End :*

விரைந்தருந்த லேகியமு மேவுசரபாணந்
தரந்த ரசாயனமுந் தானுதகஞ் – சிறந்ததொரு
சீரணமாஞ்சாமத்திற் சேர்தைலம் பதினென்றும்
ஆரணவர் சொன்னாரறிந்து. (உசூரு)

அறிந்த விந்நூலையாரணவர் சொன்னார்
செறந்த வகைபாஷாணம் சேர்நெய்யும் – பிறந்ததொரு
யீராறு நாழிகையில் யேற்குமே சீரணமாய்
நேராருரைத்தானெறி. (உசூசூ)

மாவில் வருமாந்தமைய்யம் விளவீக்கம்
கற்கமுடன் பூவைச் சுகம்பித்தம் பொருதுமே – தேவையுள்ள
அன்னத்தால் வாதம் மடரு மவையறிந்தோர்க்
கின்னத்தால் நோயுமிலைத்தேர். (உசூஎ)

நின்னய நீலாஞ்சனமும் நெற்பொறியும்
... ... ... ... ... ... பெண்ணரசே
தேனில் குழைத்தருந்தத் தீருமெனவே பெரியோர்
மானிலத்தில் சொன்னார் வகுத்து. (உசூஎ)

---

441. சுவடி நெ. *250* (B)

## அகஸ்தியர் வைத்தியசிந்தாமணி

(தொடர்ச்சி)

**(பல ரோகத்திற்கு வெண்பா)**

ஏடுகள் *22*; *239* முதல் *260* வரை.

பக்கத்திற்கு *11* வரிகள். சிதிலமாக உள்ளது.

இதில் ஆக்கிராணப்பொடி, வாதசுரத்திற்கு - பித்தசுரத்திற்கு - எரிவாதம் - சூதிகா வாயு - நீரடைப்பு - கல்லடைப்பிற்கு - அண்டவாதத்திற்கு – குன்மவலி – வீக்கம் – பீலிகை – விக்கல்

சத்தி - அஷ்டகுன்மம் - பேரண்டவாதம் - எரிகுன்மம் அசீரணம்- சுவாசகாசம் - வாயு - மேகம். ஈளை - காசம். பித்தம் - ரத்தபித்தம் அரோசகம் - பீனிசகாசம் - குத்திருமல் - எழுநாயறு - கிரந்தி எலிகடிக்கு - ஈளைகாசத்திற்கு - சிலேத்மப் பிணிக்கு - சுவாச காசத்திற்கு - வலி மேகத்திற்கு - மாருச் சுரம் - பித்தச் சுரம் அசீரணம் - மந்தம் - விஷம் - விசூழி - சலக்கழிச்சலுக்கு - கரப்பான் - செங்கரப்பானுக்கு - சகல கரப்பானுக்கும் - பல கரப்பானுக்கு - வீக்கக்கரப்பானுக்கு - நீர்வத்த - மலநீரடைப் பிற்கு - சக்தி வீக்கத்திற்கு - சூலைக்கு - பத்தியம் - வாதத்திற்கு- மகோதரத்திற்கு - கிராணிக்கு - வாயுவு கிராணிக்கு - வாயு குன்மத்திற்கு - பக்ஷிதோஷம் - காமாலைக்கு - விப்புருதிக்கு - வாதத்திற்கு - மூலத்திற்கு - எழுச்சி - சந்நி - அதிசாரம் - கல்லடைப்பிற்கு - நீரடைப்பிற்கு - பெரும்பாடு - குன்மத்துக்கு ரத்த மூலத்திற்கு - வரட்சி - இருமல் - அத்திசுரம் - வலிகுன்மம் - பிள்ளை பெத்ததற்கு - காமாலை-பித்தத்திற்கு - கெற்பவிப்புருதிக்கு- குத்திருமல் - நீர்க்கடுப்பு - பெரும்பாடு - பேய்நாய் கடிக்கு - பெரும்பாடு - நீரடைப்பு - கல்லடைப்பு - மூலத்திற்கு - நீர் கடுப்பிற்கு - பித்தமயக்கத்திற்கு - `பிச்சுக்கு - வாதத்திற்கு - வாதத்திற்கு (வேறு) - சகல வாயுவிற்கும் - வாதச்சுரோணிதம் - கல்லடைப்பிற்கு - சூலை, சொறி, சிரங்கிற்கு - அரையாப்பிற்கு -

ஆக வெண்பா 139. ஏடு 250.

குன்மத்திற்கும் வயிற்றுவலிக்கும் - மேகத்திற்கு - இரத்தப் பிரமியத்திற்கு - பெரும்பாட்டிற்கு - மேல்சுவாசம் - சூலை - மார்வலி - இரத்தக் கரப்பான் - சூலைக்கடுப்பிற்கு - வெடிசூலைக்கு கபாலசூலைக்கு - ஈரல்வலி - வயிற்று வலிக்கு - இடுப்பு வலி - மார்புவலி - தோள்வலி - வாயூறல் - நீர்க்கடுப்பிற்கு - அண்ட வாதத்திற்கு - கெர்ப்ப சூலைக்கு - கெர்ப்பத்தின் மேல் வந்த வயிற்றுக் கழிச்சலுக்கு - நேத்திரவாயு - வயிற்றுவலி - முட்டுக் கட்டு - கழிச்சல்மேல் வீக்கத்திற்கு - மைவிழிக்கு - கம்பவாதத் திற்கு - வாய்க்கிரந்தி - சகல விரணங்களுக்கும் எண்ணெய் -

உள்நாக்கு - பாண்டு சோபைக்கு - தேளுக்கு - சீதமண்டலி - எலி கடி - சலக் கிராணிக்கு - விழூசிக்கு - சயித்தியத்திற்கு - சயித்தியத்திற்கு - கழிச்சல், நீரழிவுமேல் தாகத்திற்கு - வாந்தி - விக்கல் அர்ப்புத வாயுவிற்கு - குடல் வாதம் - மாலேக்கண் - நாக்குப்பூச்சி விழ - பாஷாண வேகந்தீர - வயிற்றில் இரத்தக் கட்டு விழ - தந்தரோகத்திற்கு - இருமலுக்கு - கணப்பிற்கு - உன்மாதப் பயித்தியத்திற்கு - வீரியம் கட்டுப்பட - நாலாமுறைக் காய்ச்சலுக்கு - சூதிகா வாயுவின் சுரத்திற்கு மருந்துகள் முதலியவைகள் உள்ளன.

*Beginning :*

ஆரியமாம் வாகடத்தி னுட்பொருளே யாராய்ந்து
சீரியதோர் செந்தமிழால் செப்பவே — கூறிய
உள்ள நிதானம் சிகித்ஸையோத வினயகனே
வள்ளலே யென்மனத்துள் வாழ். (க)

வாவெனவே சிலேத்துமத்தின் வந்த வியாதிகளும்
போவெனவே நாவிலிடப் போகுமே — பாவனையாய்
வாகான பீனிசமும் மற்றும் சளிதீர
ஆக்கிராணம் பண்ண அரை. (உ)

மருக்காரை சுக்கு மருதந்தோல் வேள்வேலா
பெருக்காவரை பிரம்போடேழும் — நறுக்கியே
நாலொன்ருய்க் காய்ச்சி நாலுநாள் கொப்பளிக்கப்
பால் பல்லாங் கிழவன் பல். (கஙअ)

கடுக்கைசுக்கிந்து கிராம்பதோடங்கே
அடுக்களையீர்! நீர் வார்த்தரைத்துக் கொடுக்க
அயரிளவன் முலேமாதே யுனது
வயறகளப் புண்கள் புகா. (கஙகூ)

* * * * *

அஞ்சுப்பு சுக்கோடரியகருஞ் சீரகங்கள்
பிஞ்செவச் சாரமே லவங்கமே — மெஞ்சுசத்திச்
சார மனேசிலேகள் தான்கெந்தகஞ் சுத்தி
கார நேர்வாளமாங் காண். (க)

*End :*

நீண்டநெட்டைப் பேய்மருட்டி நெய்சீதாசெங்கழுநீர்
தீண்டுங் குறிஞ்சாதிக் கழியிலைநீர் — வேண்டுவேப்
பெண்ணெய் வகைக்கொன்று யேர்கடுகரோகிணிதன்
ஒண்ணரையின் தன்பலமா மோது. (கருரு)

ஓதுமிது தைலமாய் வடித்ததை யெள்ளுடலின்
மீதுநனைத் திடவே யூத்தி — தீதுசெய்யுஞ்
சூதிகா வாயுவின் மேல் தோன்றுஞ்சுர மீண்டுவிடும்
வாதியுங் கண்டே மகிழ்ந்து. (கருசு)

குறிப்பு :

கடைசியில் 32 வெற்றேடுகள் சேர்க்கப்பட்டுள்ளன.

---

442. சுவடி நெ. 251 (A)

## பிரும்மானந்த சைதன்யரான தேரையர் வைத்யம் ஐநூறு

ஏடுகள் 51, பக்கத்திற்கு 8 வரிகள்

(நீள × அகலம் 41 × 3 செ. மீ.)

மிகவும் சிதிலமாக இருக்கின்றது - அபூர்த்தி

இதில், 'சிவனூர்' வேம்புத்தைலம் - லிங்கக்கட்டு - தாளக் கட்டு - தாளகச் செந்தூரம் - பாஷாணக்கட்டு - சர்வவாதத்திற்கும் எண்ணெய் - குஷ்டத்திற்கு யெண்ணெய் - மேகம், அரையாப்பு, சூலைக்கு எண்ணெய் - சூலைக்கு - பீனிசம் - கபாலச் சூலை நேத்திர சூலைக்கு எண்ணெய் - மேகத்திற்கு சிலாசத்து பற்பம் - சிங்கிபற்பம் - மிருதார் சிங்கிக் குழம்பு - பெரும்பாடு, சூதக வாயுவிற்கு உள்ளிக் குழம்பு - லேகியம் - வயிறு பேதிக்குக் குமட்டிக்காய் சூரணம் - பேதிக்கு ரத்தூதிக் குழம்பு - அண்டவாதம், கழல்வாதத்திற்கு மேல்கட்டு - சூலை, கிரந்தி,

வாயு, புண், கை கால் குடைச்சலுக்குக் கெந்தகச் சர்க்கரை - வாயுப்பிடிப்பிற்குக் கஷாயம்-பரங்கிச்சக்கைப்பதங்கம் - சுழிமாந்த யெண்ணெய் - உள்காய்ச்சலுக்கு எண்ணெய் - சூலை, எரிச்சலுக்கு லேகியம் - இருமலுக்கு லேகியம் - காக்கைவலி, சுவாசகாசம், இளைப்பு வாயுக்குடைச்சல் - எலிவிஷம் இதற்கு ரஸம் - பூததாபச் சூரணம் - காசம், ஈளை, புண்ணிற்குப் பாலைரஸம் - நட்டுவாக்காலி விஷத்திற்கு மருந்து - வெள்வங்க பற்பம் - உப்புச் செந்தூரம் - மஞ்சக்காமாலைக்கு மருந்து - ஊதுகாமாலைக்கு - வரட்காமாலைக்கு - சோகைக்கு மருந்து - வெள்ளோக்காளத்திற்கு - அந்திரவாயுவிற்கு - ரத்தபித்தம், உஷ்ண ரோகத்திற்கு - ஈளை, இருமல், மூர்ச்சைக்கு மருந்து - அஷ்டகுன்மத்திற்கு - வயிற்று வலிக்கு - காமாலை, சோகை, பாண்டு, விஷபாகத்திற்குக் கஷாயம் - வீக்கம் - பெரும்பாட்டிற்குச் சாறுபூசல் - பீனிசத்திற்கு நஸ்யம் - பாண்டுவிற்கு மருந்து - முகவாதத்திற்குத் தைலம் சுவாசகாசம் இருமலுக்குப் புகை - குத்திருமல், தொண்டைப் புகைச்சல், ஈளைக்கு நெய் - வாந்தி விக்கலுக்குக் கஷாயம் - பக்கச்சூலைக்கு மருந்து - எரிவு காந்தலுக்கு - மூலக்கடுப்பு, வெட்டை, ரெத்தக்கடுப்பிற்கு மருந்து (ஏடு 23) மூலக்கடுப்பிற்கு வேது மருந்து - மூலத்திற்கு - கடுகடுப்பு வழலைக்கு - எலி விஷம்- இருமலுக்கு அடை - அண்டவாதத்திற்கு - நீர்ப்பாய்ச்சலுக்குத் தைலம் - எலும்புருக்கிக்குப் பொரி ஔஷதம் - சிந்தாதி லேகியம் - மலசலங்கட்டினுல் - முறைக்காய்ச்சலுக்கு - அறுவகை மூலத்திற்குப் பற்பம் - குட்டம் மூலத்திற்குச் சூரணம் (ஏடு 30) வங்கரஸ சஞ்சீவிச் செந்தூரம் - நாகபற்பம் - அடைகஷாயம் - செவிடு, காதிரைச்சலுக்குத் தைலம் - திரிலோக சிந்தாமணி லேகியம் (ஏடு 31) பேதிக்குச் சிவதைவேர்ச் சூரணம் - திருநீலகண்ட மெழுகு பேதிக்கு - பேதிக்கு லிங்க மெழுகு - பேதி மாத்திரை - குமட்டிக்காய்ச் சூரணம் - பேதிக்குச் சதுர்வித மெழுகு - கண்டௌஷதம் - கண்டாத்திரி லேகியம் - உஷ்ணத்திற்கு - பித்தவாயு, பசி தீபனத்திற்குச் சிவதைச் சூரணம் - பயித்தியம், கிறுகிறுப்பு, மேகம், கெர்ப்பிணியின்

வாய் வேக்காடு, பெரும்பாட்டிற்கு, அகஸ்தீச்சுரம் - தொண்டைப் புண், எலும்புருக்கி, வாயு, பித்தத்திற்கு அம்ருதசஞ்சீவி எண்ணெய் - கிரந்தி, தாது புஷ்டிக்கு லேகியம் - கடிவிஷம் கரப்பானுக்குத் தைலம் (ஏடு 37) குன்மம், சூடு, மூலவாயுவு, வாய்நாறல், எலும்புருக்கிக்கு நெய் - மூர்ச்சை, வாயுவிற்குக் கஷாயம் - பசிதீபனத்திற்கு எண்ணெய் - சளிசுரத்திற்குக் கஷாயம் - சூலைநோய், அந்திரபித்தம், வாந்தி, பொருமலுக்கு இஞ்சிச் சூரணம் - அக்கரத்திற்குக் கஷாயம் - நாகபற்பம் (ஏடு 42) மேக சஞ்சீவித் தைலம் - மகாகோடாசூழிக் குளிகை - முதலியன உள்ளன.

*Beginning :*

ஆதியாம் சிவசக்தி புதல்வா போற்றி
அரியயன் தேடரிய பராபரனே போற்றி
சோதியாஞ் சரஸ்வதிதன் பாதம் போற்றி
சொற்பெரிய பொதிகைமுனி பாதம் போற்றி
வாதியாஞ் சித்தாதி பாதம் போற்றி
மகத்தான நாதாக்கள் பாதம் போற்றி
ஓதியான் வைத்த வைத்திய நூலஞ்னூறு
முத்தமனே தேரையன்சொல் லுறுதி பாரே. (க)

பாரப்பா செந்தூரம் குளிகை வேது
பற்பஞ்சூ ரணங்கிருதந் தைல மெண்ணெய்
நேரப்பா திராவகநெய் கற்கம் நேந்திர
மையஞ் சனமை மருந்து கற்பம்
கோரப்பா குழித்தைலம் புகையாக் கிராணம்
கூள்பாண்டம் துவரெண்ணெய் குடிநீர் புட்டு
சேரப்பா மெழுகுகண் டவுஷதம் பத்து
செவித்தைலம் மூலிகையுந் தெளிந்து போற்றே (உ)

*End :*

செய்யப்பா மயக்கரா தீண்டித்தானல்
திறமான விழுதியிலே வேருங்கூட்டி
நையப்பா அரைத்துகடி வாயில் பூசில்
... ... ... ... குழிகையிலே தின்னத்தீரும்
பையப்பா புண் விரியன் தீண்டித்தானல்
பத்திர செருப் படிச்சாத்தி லிழைத்துள்ளீய்ந்து
மெய்யப்பா குளிகையொன்றூ மத்தைச் சாற்றில்
வெண்ணெய்போ லரைத்துடனே பூசத்தீரும் (௩௭௨)

தீரடா பெருவீரியன் தீண்டித்தானல்
செருப்படைச் சாற்றிலிழைத் துள்ளேயீந்து
பாரடா கடிவாயின் மேலேபூசில்
பக்கென்று விஷமிறங்கி பயந்திட்டோடும்
வேரடா உதிரமண் டலிதான் தீண்டில்
விழுதியிலேச் சாத்திலிழைத் துள்ளே யீய்ந்து
பாரடா கடிவாயில் தடவிப்போடு
மகத்தான விஷமிறங்கு மாத்திப்போடே (௩௭௩)

போடடா சுருட்டை ... ... ... ...

---

443 சுவடி நெ. *251* (B)

## அகஸ்தியர் வைத்ய சூத்திரம் முந்நூறு

*1* முதல் *43* ஏடுகள். பக்கத்திற்கு *8* முதல் *9* வரிகள்.

பூர்த்தி: மிகவும் செல்லரித்துள்ளன.

இதில் காந்தச்சத்து - தாளகச் செந்தூரம், கற்பூரசிலாஜது சத்து - அப்பிரகவெள்ளை நீத்துச்சத்து, பொன்னிமிளைச்சத்து, தாளகத்தின்வெள்ளை (ஏடு *10*) ரஸபற்பம் - அப்பிரகச்செந்தூரம் ஏடு (*14*) சீந்திச்சர்க்கரை - சீந்திச்சர்க்கரைச் சூரணம் - அமிருத சஞ்சீவி - வில்வாதி லேகியம் - கருவங்கச் செந்தூரம் (ஏடு *16*)

அயச் செந்தூரம் - சூலைகண்டத்திற்கு - துருசுச் செந்தூரம் குன்மத்திற்கு - அரப்பொடிச் செந்தூரம் - பாண்டுவிற்கு லேகியம்- கெந்தக பற்பம் - மேகச் சூலைக்கு - வங்கச் செந்தூரம் - தாமிரச் செந்தூரம் (ஏடு 21) நவசிந்தாமணி லேகியம் - காந்தச்செந்தூரம் - 6 வகை கிராணிக்கு லேகியம் - நோயாளியின் கருத்து - வைத்திய நிவ்ருத்தி - கிளிஞ்சிச்சுன்னம் - அயச்செந்தூரம்- நாகச்செந்தூரம் (ஏடு 27) மூலக்கிராணி - வாயுவிற்கு - வங்கச்செந்தூரம் - தங்கச் செந்தூரம் - அக்கினி குமாரன் பொடி - ஆனந்த பைரவன் - வைர பற்பம் - பேதிக்கு லேகியம் - வாயு, சூலை, வலிகுன்மத்திற்குச் செந்தூரம் (ஏடு 30) அயச்செந்தூரம் - காந்தச் செந்தூரம் - மண்டூரச் செந்தூரம் - பதங்கத்தால் செந்தூரம் - வீரசூரசங்கார ரசபூபதி - நாகச் செந்தூரம் - சரக்கு சுத்தி - காந்தச் செந்தூரம் - மண்டூரச் செந்தூரம் - நாகச் செந்தூரம் குன்மத்திற்கு - சிலாசத்துச் செந்தூரம் - காந்தச்செந்தூரம் (ஏடு 37) சயத்திற்கு அனுபானம் - வாதத்திற்கு வேப்பெண்ணெய்த்தைலம் - வாதத்திற்குச் சவுரித் தைலம் - முக்கூட்டெண்ணெய் - முதலியனவுள்ளன.

*Beginning :*

காலுந் தலையுங் கடந்துநடு வாகிநின்ற
மேலுந்துரிய விளக்காமே யக்கனலாம் — வால
வைத்திய முன்னூறு சூத்திரமாய் விளங்கி
வைத்தியங் காணேசம் பார்.

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே யென்குருவே சிவமேயப்பா
மாதவத்தா லட்டசித்தி யெட்டும் பெற்று
வரிசையினல் வைத்தியநூல் வகையாய்ச் சொல்வேன்
போதலத்தின் முகத்தானைக் கைக்கோட்டானை
புழுக்குழியில் வீழ்ந்தானைப் புதல்வன் தன்னை
சாதகமாய் மனமடங்கி யறிவிற்கூடித்
தற்பரமாய் நின்றகண பதியேகாப்பு. (க)

*End :*

செய்யப்பா தைலங்கள் சூரணங்கள்
செயமான பூபதிகள் கற்பத்தோடு
செய்யப்பா கற்பத்தைக் கொள்ளுமுன்னே
லேகியமாகச் செய்துவைப்பாய் வராவண்ணஞ்
செய்யப்பா வைத்தியத்தா யிரத்திற்கொன்ருய்
செப்பினேன் வைத்திய மென்னசொல் வேன்
கையப்பா முகத்தைப்பார்த சநாடியைப் பார்
கருச்சொன்னேன் பதினயி ரத்தில்காணே. (உஅகூ)

காணப்பா பார்த்துணர்ந்த வாதந்தன்னல்
கவனந்தப் பாமல்வைத் தியஞ் செய்வாய்
கோணப்பா வடுகனெடு பூசைசெய்வாய்
சொல் குருவை மறவாதே லட்சியத்துள்ளே
தோணப்பா நந்திகுரு யுபதேசத்தைச்
கைக்கொண்டு சூட்சுமமாய் பேணிப்பாரு
ஆணப்பா ஆணவத்தை விட்டுக்கற்பங்
கொண்டாலா காசங்கொண்டு மூலங்காணே. (உகூய)

மூலாக்கினி யெழுத்தாலே மவுனங்கொண்டு
முட்டினன் வடுகனங்கே நிருத்தஞ்செய்வான்
ஞாலத்தில் குண்டலிக்குள்ளடக்கப்பாரு
ஆசையலன் வைப்பதற்கு வடமாலைசாத்து
நீலத்தில் நந்தியுட பூசைபண்ணு
செகந்நாத சீவாலியின் மணியினேசை.
காலத்தின் கருவறிந்து பூசைசெய்தால்
கைக்குள்ளாம் வயித்தியமுன் னூறும் முற்றும். (௩௨)

**குறிப்பு :**

இது 125ம் பக்கத்தில் காணப்படும் 235 (A)யின் மற்றொரு பிரதியாகும்.

---

**444.** சுவடி நெ. 251 (C)

## கும்பமுனிநாயனுர் வைத்திய ரத்னச் சுருக்கம்

ஏடுகள் 1 முதல் 42 வரை. அபூர்த்தி.

பக்கத்திற்கு 5 முதல் 7 வரிகள். செல்லரித்துள்ளது.

இதில், வாத பித்த கப நாடி லக்ஷணம் - சுர லக்ஷணம் - சுயமக்கினிச் செந்தூரம் (ஏடு 7) கற்பக மாத்திரை - கபாட மாத்திரை - பூபதி மாத்திரை - சிந்தாமணி கோரோசனைக் குளிகை - பூமணிக் குளிகை - அர்த்தநாரீச்வரன் - (ஏடு 11) சிலோதாரிமணி - கரிசாலை லேகியம் - கண்டாத்திரி லேகியம் - பஞ்சதீபாக்கினி லேகியம் - கண்டங்கத்தரி லேகியம் - மகா வில்வாதி லேகியம் - சரபங்க வில்வாதி லேகியம் - மகா கண்டங்கத்திரி லேகியம் - (ஏடு 20) கபாட லேகியம் - திப்பிலி ரசாயனம் - மதுஸ்னுஹி ரசாயனம் - சௌபாக்யசுண்டி - கூஷ்மாண்ட லேகியம் (ஏடு 25) அக்கினிச் சூரணம் - திராக்ஷாதிச் சூரணம் - அசுவகந்தி - கண்டங்கத்தரிச் சூரணம் - தாளீசபத்திரிச் சூரணம் - பஞ்சதீபாக்கினிச் சூரணம் - நிலவாகைச் சூரணம் - வல்லாரைச் சூரணம் - சஞ்சீவிச் சூரணம் (ஏடு 30) ஏலாதிச் சூரணம் - வில்வாதி எண்ணெய் - கொம்பரக்குத் தைலம் (ஏடு 35) பிருங்காமலகத் தைலம் - சந்தனுதித் தைலம் - பொன்னுங்காணித் தைலம் - கீழாநெல்லித் தைலம் - ஆதண்டைத் தைலம் - காணி கிருதம் - புளியாரை கிருதம் - வல்லாரை கிருதம் (ஏடு 41) கூஷ்மாண்ட கிருதம் - படோலாதி கிருதம் - முதலியன காணப்படுகின்றன.

***Beginning :***

பூரணமாய் நின்றருளும் பரைத்தாள் போற்றி
புகலுகிறேன் வைத்ய ரத்னச் சுருக்கந்தன்னை

வாரணமா முகத்தானைப் பணிந்து போற்றி
வைத்தியந்தா னிந்நூற் றருபதுக்குள்

காரணமாஞ் செந்தூரம் பற்பம் லேகியம்
கருவான தைலமொடு கிருத மெண்ணெய்
சூரணமாக் கிராணமொடு கலிக்க மாத்திரை
சுறுக்குகுரு நாடிமுதல் சொன்னோம் பாரே. (க)

கரிமுகனடியை வாழ்த்திக் கைதனில் நாடிபார்க்கில்
பெருவிரலங்குலத்தின் பிடித்திட நடுவே தொட்டால்
ஒருவிரலோடில் வாதம் திருவிரலோடில் பித்தம்
தெரிவிரல் மூன்றிலோடில் சேத்தும நாடியாமே.

*End :*

போச்சப்பா ரசபற்பம் வைத்துக்கொண்டால்
புகழாக மேகவகை சூலைபோகுங்
காச்சப்பா குட்டமொடு சொரிசிரங்கு
கருவான சிங்குவை நோய் காணுதோடும்
வீச்சப்பா கிரந்தியொடு யோனிப்புத்து
விதமான புண்புரைகள் விழலாய்போகும்
ஆச்சப்பா நீரருக்கல் குறியரிப்பு
அப்பனே அஸ்திரேணமறியப் போமோ. (உ௦உ)

ஆறுமே கூஷ்பாண்டக் கிருதங்கேளு
அப்பனே பூசினிக்காய்ச் சாறுபடிரெண்டு
நாறுமே தாழையுட விழுதுச்சாறு
நன்றாகப் படியொன்று தென்னம்பூச்சாறு
சாறுமே படியொன்று கூடவிட்டுக்
கலங்காதே குமரிச்சாறு படிதானென்று
சாறுமே செவ்விளநீர் படிதானென்று
திரமான வாவின்னெய் படிதான்ரெண்டே. (உ௦௩)

**குறிப்பு :**

கடைசி 6 ஏடுகளில் "கறங்குழம்பு" சிரஸ் நோய்க்குத் "தைலம்", கோடாசூழி மாத்திரை, கரிசாலை எண்ணெய், கெந்தக தைலமுறையும், அகஸ்தியர் அருளிச்செய்த கர்ப்பக்கோள் முதலானவைகள் உள்ளன.

இதுவும் ஏற்கனவே கூறப்பட்டுள்ள 249 செ. சுவடியேயாகும். அதையும் பார்க்கவும்.

## 445. சுவடி நெ. 252 (A)

## மிகராசுமாலை

ஏடுகள் 52; பக்கத்திற்கு 5 முதல் 6 வரிகள்

மிகவும் சிதிலமாகவுள்ளது.

(நீள × அகலம் 39 × 3 செ. மீ.)

இது இஸ்லாமிய மதசம்மந்தமான சுவடி.

***Beginning :***

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

***End :***

அறியமிக ராசுமாலை தன்னையறிந்து
அறியாமல் கூறியதை விரியும் — பெரியோர்கள்
பிழைகண்டாக்கால் லீண்டும் பொரு.........க்கி
பெரியோனிடத்திலே அடியேனுக்குப் பேணித்
துவாச் செய்து மனுவுங்கேள்.
பீற் ஹியனுமருள் யெங்களுக்கு உண்மையாகியவந்த
............ யருபத்தொரு பத்தொண்டிருப்பதனுல் லிமா
கவிசெய்தான் யிலகடலில் மனுவுந் திருவுண்டா
மாராபீனு வள்ளலெனுமுன் ............ தருபுத்திரனுக
யினியமறை சகல கவியெல்லா மறிந்துணர்ந்து
குருவித்தைவந்த மதா - சாயபு கூறுமிக ராசுமாலைதானே

***Colophon :***

விரோதிகிருது வருடம் ஆடி மாதம் 9-ந் தேதிக்குச் சரியான ரமுலான் 3-ந் தேதியில் மிகராசுமாலை யெழுதி முடிந்தது முற்றும். ஆண்டவன் துணை. அமீனல்லாபு. அமீயாறப்புலாலமீன்.

மிகராசுமாலை முற்றும்.

## 446. சுவடி நெ. 252 (B)

## பாலர் கதை

ஏடுகள் 26; பக்கத்திற்கு 5 முதல் 6 வரிகள்.

மிகவும் சிதிலம்; அபூர்த்தி.

இதில் மகம்மது நபியின் சரிதம் செய்யுட்களாகக் கூறப்பட்டுள்ளது. மொத்த செய்யுட்கள் 213 உள்ளன. கதையின் கோர்வையை அறியமுடியவில்லை.

---

## 447. சுவடி நெ. 252 (C)

## மணிக்கடைக் கயறு சூத்திரம்

ஏடுகள் 4; பக்கத்திற்கு 7 வரிகள்.

மிகவும் சிதிலம் அபூர்த்தி.

இதில் மணிக்கட்டில் கயிறு கட்டி அளவெடுத்து அந்த அளவிலிருந்து வியாதியைக் கண்டுபிடிக்கும் விதங்கள் கூறப் பட்டுள்ளன.

*Beginning :*

கமலக்கை மணிக்கடை கயத்து சூத்திரம்
விமலனை நோக்கியே வேடமாடு ............
............ பிணியது சேரச் செப்பிய
மலந் திருமுனி மத்துமுள்ள ............

*End :*

இந்தமுறையெல்லா மியம்பிய குருமுனி
விந்துபோல் சாவுரோகமுஞ் — சந்தைய
மீண்டு யேக மீளுமுரைத்திட
வந்துரைமாந்த மானிட ராவரே. (௩௰)

*Colophon :*

பிலவங்க வருஷம் ஆடி மாதம் 15-ந் தேதி மணிக்கடை கயத்து சூத்திரம் முற்றும். ஆதியே துணை.

சற்குரு பாதமே துணை.

---

**448.** சுவடி நெ. 252 (D)

## சித்தராரூடம்

ஏடுகள் 49; பக்கத்திற்கு 5 வரிகள்.

சிதிலமாகவுள்ளது.

இதில் விஷசந்துக்களின் பெயர், சாதியறிதல் - இரை யெடுக்கும் நாள் - ஆடுங்குறி - கெற்பக்குறி - பல்லின் குறி - விஷக்கடியின் குறி - விஷமேறுங் குறி – விஷப் பரீக்ஷை - விஷம்மீள வகை - பாம்பு வாழும் ஸ்தலம் (ஏடு 9) - இந்தந்த நக்ஷத்திரத்தில் கடித்தால் மரணமென்று சொல்லவும் - மரணக் குறி - சோதனையறிதல் - கடிவிஷ அடையாளம் - புள்ளியறிவது (ஏடு 14) வயது 120 ஆனால் இறகு முளைத்துப் பறக்குந் தினிசுகள் தூதன்வந்து சொல்லுங்குறி - திரை – தூதன்நிலை - திசை அக்ஷரம் (ஏடு 18) – வேகக் குறி – சிந்து (ஏடு 23) - மருந்து சேர்க்க விபரம் (ஏடு 29) - நஸ்யம் - வேகக்குறி நஸ்யம் - ஒத்தடம் - துவாலை - உள்ளுக்குத் தூள் மருந்து - ஆக்கிராணம் - சோத்தில் மருந்து (ஏடு 35) – திறுகுக் கள்ளி மருந்து - கலிக்கம் - விஷத்திற்குத் தைலம் - மேல்பூச - வாய், மூக்கில்விடத் தைலம் - விரியன் வகைக்கு நஸ்யம் - விரியன் 6ன் பெயர் (ஏடு 39) விரியன் கடிக்கு நஸ்யம், துவாலை, உள்ளுக்கு மருந்து - (ஏடு 40) - துவாலை - புகை - சிந்தாமணிக் குழம்பு (ஏடு 46) - பத்தியம் - விஷம் ஏற்றவும், இறங்கவும் மோதிரங்கள் (ஏடு 49) முதலிய விபரங்கள் உள்ளன.

*Beginning :*

திருமருதூர் வளரும் சொக்கலிங்கர்
சீர்பாத கமலமென் சிரத்தில்வைத்து
மருவுசித் திராருடப் பொருளினை
வகுத்துச் சொல்லுகிறேனிந்த மகிதலத்தில்
தன்னதனதன்னதனன
புண்டரீகத் திலுறைவோன் படைத்ததிற்
பொல்லாத விஷ செந்துமெல்லாமுமே
விண்டுரைக்கக் கேளுமினி நல்லபாம்பு
விரியன்வழலை கொம்பேரி மூக்கன்
சாணுக்கன் மூக்கன் புடையன் மண்டலி
சவடிமுக்குரு மண்ணுள்ளி சாரை.

*End :*

மருத்துவர் அனைவருந் திரைவளர்சூழ்
தரைமிசை யொருநூறு பருவமும் சரவரவே
இருந்துதாள் வாழ்ந்த திருமகள் விளக்கம்பெற்றுப்
பதினறு சிறுவரைப்பெற்று முத்திபெறுவார்களே - தன்ன

**விருத்தம் :**

வேதியர் முதனற்சாதி விடவராக் கடியுண்டோருக்
கோதிய மந்திரந்தான் மருந்துநாலு நோய்திரத்தோர்
சாதியின் மிக்கவேதத் தலைவராய் பிறந்துபின்னர்
போதில்வாழ் பிரமராகிப் புகழவீற் றிருப்பர்தாமே.

சித்தராருடம் முற்றுப்பெற்றது.

**குறிப்பு :**

255 நெ. சுவடியையும் பார்க்கவும்.

449. சுவடி நெ. 252 (E)

## பேடச கற்பம்

1 முதல் 22 ஏடுகள்; பக்கத்திற்கு 6 வரிகள்.

சுத்தமாக எழுதப்பட்டுள்ளது. பூர்த்தி.

இது சுவடி நெ. 212 (B) கூறப்பட்டுள்ள "பெடிசம்" என்ற சுவடியேதான். ஆகவே முன்னர் குறிப்பிட்டுள்ள சுவடியைப் "பேடச கற்பம்" (பேஷஜகல்பம்) என்றே திரித்து வாசிக்கவும். கடைசி 4 ஏடுகளில் "சட்ரஸ நிகண்டு" அதாவது சுவடி நெ. 212 (A)ல் உள்ளபடி 18 செய்யுட்கள் மாத்திரம் காணப் படுகின்றன.

**குறிப்பு:**

பின் 3 ஏடுகளில் சிரஞேய் வரலாறு காணப்படுகின்றது. பின்னர் சித்தராரூட நிகண்டு அகராதி, மற்றும் மருந்து அகராதி அட்டவணை முதலான விபரங்கள் கடைசி 4 ஏடுகளில் உள்ளன.

---

450 சுவடி நெ. 253 (A)

## திரட்டு வாகடம்

ஏடுகள் 10; பக்கத்திற்கு 7 வரிகள்

செல்லரித்துள்ளது.

(நீ. × அ. 24 × 3 செ. மீ.)

இது அச்சிடப்பட்டுள்ளது. இதில் அஞ்செண்ணெய்த் தைலம். சுகத்திற்குக் கஷாய வகைகள் - குன்மத்திற்கு மருந்துகள் - பரங்கிப்பட்டைச் சூரணம் - சொறி சிறங்கிற்கு - நீரடிமுத்து மருந்து - கபாலசூலை, பீனசத்திற்குக் கண்டங்கத்தரி மருந்து - விப்புருதி மகோதரத்திற்குக் கும்மட்டிக்காய் உப்பு - (ஏடு 6) சர்வாங்க வாயு, மூலத்திற்குச் சீரகாதிச் சூரணம் - எலும்புருக்கி

க்ஷயத்திற்குத் தண்ணீர்விட்டான்நெய் - சுரத்திற்கு இலாமிச்சைக் கஷாயம் - சன்னிக்கு முசுறுமுட்டைத் தைலநசியம் - சன்னிக்குப் பூச்சு - கரப்பானுக்குச் செங்கதாரி எண்ணெய் (ஏடு 8) - விஷ பாகத்திற்கு முள்ளிக்குடிநீர் - கண்டமாலை, துடைவாழைக்குப் பூச்சுமருந்தும், எண்ணெயும் - பித்தகாசம் முதலான கண்ணோய் களுக்கு தாமிராதி மாத்திரையும், பொன்னுங்காணித் தைலமும் உள்ளன.

*Beginning :*

... ... ... ... ... வருகின்ற பக்கவாதம்
சீதமே நடுக்குவாதம் சிறந்திடும்
சூதமே அசிந்தவாதந் தோன்றிய முகத்தில் வாதம்
பேதமா வாதந்தீர பெருமையாம் மருந்துகேளே (க)

*End :*

உரைத்திடு முத்துவெள்ளி யுயர்ந்ததாம்பிரஞ் சங்கோடு
கரைத்திடு துரிசுதுத்தம் கலந்தலையோடு பொன்னும்
திரைத்திடு பீதரோணி சேர்புங்கு நிம்பச்சாற்றால்
அரைத்திடக் கண்ணில் தொண்ணூற்றாறுமே வகன்று
[போமே (சஎ)

போமிது பொன்னுங்காணி புகழ்சிறுகீரைமுத்தம்
ஓமிது சீந்தில் நிம்ப முயருஞ்செண்பகப்பூ வங்க
மாமிது மதுரமேல வளருஞ்செங் கழுநீர் கோட்டம்
நாமிது சொன்னோமெண்ணெய் நற்பதஞ்செய்துமுழ்கே (சஅ)

மீனாக்ஷி துணை வேணும்

குறிப்பு :

இதுவும் சுவடி நெ. 217ன் மறு பிரதியாகும்.

## 451. சுவடி நெ. 253 (B)

# திருமந்திர வாகடம்

ஏடுகள் 14; பக்கத்திற்கு 8 வரிகள்.

இதில் பிராணுதி பஞ்சவாயுக்களின் லக்ஷணம் நாடி பார்க்கும் விதம் - மரண நாடிக்குறிகள் - இடகலே, பிங்கலே, நாடிவிபரம் - வாதபித்த கபதோஷ லக்ஷணம் - சூலேயின் லக்ஷணம் - சந்நிலக்ஷணம் முதலானவைகள் காணப்படுகின்றன.

***Beginning :***

உன்னிய கொர்ப்பக் குழியாம் வெளியிலே
பன்னிய நாதம் பகர்ந்த பிருதிவியாம்
வன்னியும் வாயுவும் மாயுறுஞ் சுக்கில
மன்னிச் சமனய் வளர்க்கு முதலமே. (க)

உதகமுதிர் முறுங் கனல் வாயுவாற்
சிதகுறவங்கங்கள் செய்து முடிந்திடும்
மதற்றுரோமம் பகுந்தா தசையற
நிதகுறன்பது வாசலும் நீங்குமே. (உ)

***End :***

பொடியாய் நோய்போக புகழ்சொன்னுரென்னந்தி
மடிவான சூதம் மகத்தான தங்கமும்
மிடிவான கெந்தகப் பேரான சத்துடன்
குடியாய்ச் செந்தூரிக்கும்படி தின்றிடே. (கககா)

தின்றிட நோய்கள் திசை கெட்டு வோடிடும்
பன்றிட வாயுவும் பக்கத்திற் சேராது
தன்றிய லோகற்குத் தான்செய் முறையினி
மன்றிய சித்தாய் மகா வியாதி போக்கவே. (ககஉ)

---

452. சுவடி நம்பர் 253 (c)

## திருமூலர் அகவலும், பட்டணத்துப் பிள்ளை திருக்காஞ்சிபுரத்தில் சொன்ன பெண் பாலகவலும்

ஏடுகள் 4; பக்கத்திற்கு 7 வரிகள்.

இதில் கீழ்காணும் "திருமூலர் அருளிச் செய்த அகவல்" காணப்படுகின்றது. பின்னர்

*Beginning :*

முளமயக்கத்தேன் வேகமென்னும்
விகாரமறந்தேன் — பங்கமுறுங்கனி
பாசமறந்தேன் கும்பிட்டாடல்
குளிக்க மறந்தேன் செம்போடு
பூசனைசெலுத்தல் மறந்தேன்
எல்லா மிறந்த விடத்திருகந்தேன்
அல்லும் பகலும் மற்றதுவானேன்
சங்கையில்லாசாதி பேதங்கடந்தேன்
மூயங்குமிருந்த மூடமறந்தேன்
பொய்யாம் பொருளை மெய்யாய் விரும்பி
மய்யாயென்னும் அமலத்துறைவோன்
இன்பக்கடலிலென்னை யமர்த்தித்
துன்பக் கடலைத் துலைத்துத் துடைத்துப்
பதிவசமாக்கும் பாசமறுத்துக்
கதியதுவென்று கட்டுரைசெய்து
அடியிலு முடியிலுமங் கெங்குந்தானய்
விடியுமுதயம் போல் விளங்குவாறே.
திருமூலதேவர் அருளிச்செய்த அகவல் முற்றும்.

*Beginning :*

திருமால் பயின்ற திசைமுகனனைத்தும்
வருமேழ் பிறவியு மானிடத்துதித்தும்
வலம்வரு கோமான் மலரடி யிறைஞ்சி
குலவியச் சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிந்து காதல் கொண்டாடும்
மானிடர்கெல்லாம் யானெடுத்துரைப்பேன்.

*End :*

பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சேர்ந் திழியும் வாசலுக்கருகே
சலஞ்சேர்ந் திழியுந் தண்ணிய வாச
லித்தை நீங்க ளினிதெனவேண்டாம்
பச்சிலையிடினும் பக்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபதம் வீடருள்பவனை
முத்தித் தாளனை மூவா முதல்வனை
அண்டரண்டமு மணைத்தரு புவனமுங்
கண்ட அண்ணலைக் கச்சியுட் கடவுளை
ஏகநாதனை யிணையடி யிரைஞ்சிப்
போகமாதரைப் போற்றுதலொழிந்தே.

பட்டணத்துப் பிள்ளை திருக்காஞ்சீபுரத்தில்ச் சொன்ன "பெண் பாலகவல்" முற்றும். ஹரி : ஓம் : சிவமயம்

**குறிப்பு :**

பின்னர் 20 ஏடுகளில் தனித்தனியான மருந்து முறைகள் காணப்படுகின்றன. அவையாவன :— சோகை, பாண்டு, சுரம், கிராணி, சயம், கழிச்சலுக்கு, திரிகடுகாதிச் சூரணம் - மண்டை வியாதித் தைலம் - கர்ப்பூராதி மாத்திரை, கோடாசூழி மாத்திரை - கடுக்காய் நெய் - பூசினிக்காய் நெய் - இலந்தை நெய், கண்டகாரி கிருதம் - புளியாரை கிருதம் - ஐலேய கிருதம் (முசுமுசுக்கை) கதகாதி (தேற்றான்) கிருதம் - கதகாதி பிஷ்டி - வல்லாதி லேகியம் முதலியவை.

**453.** சுவடி நெ. 254 (A)

# செந்தூர அட்டவணை

ஏடுகள் 50 பக்கத்திற்கு 7 வரிகள்

மிகவும் சிதிலம்

(நீ × அகலம் = 27 × 2½ செ. மீ.)

இதில் ரஸப்பிரளயச் செந்தூரம், சண்டமாருதச் செந்தூரம் சர பஞ்சார்க்கச் செந்தூரம் - சர்வாக்னி ரஸச் செந்தூரம் - காள கண்ட மேகநாராயண ரசச்செந்தூரம் - ஈச்வர சிந்தாமணி ரசச் செந்தூரம் - ருத்திர ரசச் செந்தூரம் - மதன சிந்தாமணி ரசச் செந்தூரம் - கௌரீ சிந்தாமணி ரஸம் உத்தீர ரசச்செந்தூரம், பஞ்சலோகச் செந்தூரம் - மகா பூர்ண சந்திரோதயச் செந்தூரம்- அப்பிரகச் செந்தூரம் - ரசச்செந்தூரம் - லோகச் செந்தூரம் - நாகச் செந்தூரம் - அரிதாரச் செந்தூரம் - லோகச் செந்தூரம் ஈயரஸச்செந்தூரம் - வங்கச்செந்தூரம் (ஏடு 33) சந்யாசி மூலிகை வங்கச்செந்தூரம், நவனுத சித்தர் காரீயச்செந்தூரம் - (ஏடு 34, 35) தாமிரச்செந்தூரம் - அக்கினி குமாரச்செந்தூரம் - உத்திர ரஸச் செந்தூரம் - கௌரீ சிந்தாமணி-ரணமுக்தீச்வர ரஸச்செந்தூரம் - அக்கினி குமாரச் செந்தூரம் (ஏடு 38) முதலானவைகள் உள்ளன.

***Beginning :***

ரஸம் பலம் 5 நெல்லிக்காய் கெந்தகம் பலம் 2½. இது ரெண் டுங்கூட்டி சிறு செருப்படைச்சாறு... ... விட்டு 1 நாள் அரைக் கவும்.செம்பருத்தஞ்சாறுவிட்டு ஒருநாள் அரைக்கவும்...தக்காளிச் சாறுவிட்டு ஒரு நாளரைக்கவும். பெருசெருப்படிச் சாறுவிட்டு ஒரு நாளரைக்கவும். மாதுளையிலைச் சாறுவிட்டு 3 நாளரைக்கவும். மகிழம்பூச்சாத்தில் ஒரு நாளரைக்கவும். எடுத்துப் பொடியாக்கிக் கங்கா ஜலக்குப்பிக்கு 7 சீலை மண்செய்து உலர உலர ஆறவிட்டுச் சீலைமண் செய்யவும். குப்பிஉலர்ந்த பின்பு மருந்தைக் குப்பிக்கு முக்கால்பாகமட்டு மேத்தி வாய்க்குப் பலவக்கல்லிட்டு மூடிக் களிப்பாக்கு, கடுக்காய், உப்பு, குளவிவைத்த கூடு, கிட்டம்,

கருவேலம்பிசின், பொன்மெழுகு, வெள்ளைக்கல்லு, வெல்லம், சுண்ணும்பு, முட்டை மஞ்சள் கருவிட்டு அரைத்து அதன் பிறகு எலுமிச்சம்பழச் சாறுவார்த்து அரைத்துப் பிசினிபோலே ஆன பிறகு, குப்பிவாயை யடைத்து ஒட்டி அடுப்பில் நாலு மரக்கால் கொள்ளும் அண்டா... ...வைத்து 4 விரட்கெடை மணல்போட்டு குப்பியைவைத்து, குப்பி ( கழுத்துவரை மணல் ) விட்டு அடுப்பில் தீயிட்டு, இள விறகுபோட்டுத் தீபாக்கினியால் 1 சாமம், கமலாக்னியால் இரண்டு சாமம், காடாக்கினியால் இருபத்தோரு சாமம் ஆக இருபத்திநாலு சாமம்எரிக்கவும்...ஆறி மறுநாள் எடுக்கவும். எரிக்கிறபோது குப்பி பொங்கினல் கத்தாழஞ்சோறு......... ஒரு சீலையிலேகட்டிப் பொட்டணமாகப் பிடித்துக் குப்பிவாய்க்கு ஒத்திடவும். நிற்கும். குப்பிஅடுப்பில் ஏற்றுகிறபோதும் இறக்கும் போதும் விநயக பூசை வைத்யர் பண்ணவும். 2 பரதேசிக்கு அமுது கொடுக்கவும். இந்தக்குப்பி உடைத்து பார்க்க முருக்கம் பூப்போல செந்தூரம் இருக்கும். இதற்குத் திரிபுரதாண்டவர் ரசமென்றும் பேர்.

*End :*

சதையடைப்பான் 18ம், இந்திரகண்டி 5ம், மத்தவாயு, பித்தம் 128ம், உஷ்ணரோகம் 326ம், சிலேத்மரோகம் 96ம், தீரும் - இந்தக் குளிகை ஒண்ணு கள்ளிவடகத்தில் 10 நாட்கள் கொள்ளவும். வயத்துவியாதி 60ம், வாய்வுத்திரட்சி 32ம், மகோதரம், பெருவயறு, விஷம், சோகை, காமாலை, பாண்டு மற்றுமுண்டான வியாதியுந் தீரும். அக்கினி குமாரச் செந்தூரம் முற்றும்.

---

**454.** சுவடி நெ. 254 (B)

## அகஸ்தீசர் பதினறு

ஏடுகள் 4; பக்கத்திற்கு 6 வரிகள்.

சுமாராகவுள்ளது. அபூர்த்தி.

இதில் தாளகபற்பம், வீரச்சுன்னம் – வெள்ளைப்பாஷாண பற்பம் - காந்தச் செந்தூரம் - லிங்கச் செந்தூரம் - அரிதாரப்புகை முதலான மருந்து முறைகள் உள்ளன.

*Beginning :*

அரிதாரப் பிரிதிவி வாய்வுண்டாகும்
ஆனதோர் (சவர்க்காரம)ப்பு வாகும்
பெரிதான கௌரியது தேயுவாகும்
பிரையொரு வெண்காரமே வாயுவாகும்
மரிதான லிங்கமா காசமாகு
மதுகளெல்லாம் பச்சையுடன் மாட்டலாகும்
தெரியாத வைத்தியரே யென்னூலப்பா
சித்தரய்யா சொன்ன வித்தை சகத்தில்பாரே (௧)

செகத்திலுள்ள வைத்தியரே செப்பக்கேளு
திறமான அரிதாரக் கட்டிதன்னைச்
சுகத்திலே சுண்ணும்புக்குள்ளே வைத்துச்
சுகமாக நீத்திதனை யெடுத்துக் கொண்டு
இகத்திலே மனிதருக்கு யீயக்காசம்
எலிகடிகள் விஷகடிகள் பித்தம்பாண்டு
மகத்தான குளிர்காய்ச்சல் மறுறுக்கொண்ட
நாட்பட்ட நோய்களுமே வையகத்தில் (௨)

*End :*

தாரமும் ரசமும் கேசரியதால் தூளேசெய்து
பாரமாஞ் சீலைதன்னில் பரப்பியே திரியுருட்டி
வீரமாம் விளக்கில்போட்டு வேப்பெண்ணெய் தன்னைவார்த்து
கோரமாங் தீக்கொளுத்திக் கொடும்புகை
[மூக்கிலேத்தே (௧௪)

ஏத்திடில் சங்நிதோஷம் யெழும்பிடில் குட்டரோகம்,
பாத்திடில் பரங்கிச்சூலை பல்கடி முதலாயுள்ள.

குறிப்பு :

கடைசி 6 ஏடுகளில் தாளகபற்பமுறை, தாம்பிர பஸ்பம், கருவங்கச் செந்தூரம், தாமிர பற்பம், நாகச்செந்தூரம், கருவங்கச் செந்தூரம், (ஏடு 5) மூலத்திற்கு வீரச்சுன்னம், அப்பிரகச் சுன்னம், லோகபஸ்பம் முதலானவைகள் உரைநடையில் கொடுக்கப்பட்டுள்ளன.

---

455. சுவடி நெ. 255.

## சித்திராரூடம்

ஏடுகள் 40; பக்கத்திற்கு 8 வரிகள்

சுத்தமாக எழுதப்பட்ட பிரதி; நுனியில் சிறிதளவு கரையானரித்துள்ளது.

( நீ. × அ. 35 × 3½ செ. மீ. )

இது சுவடி நெ. 252 (D) யின் மறு பிரதியாகும்.

---

456. சுவடி நெ. 256.

## மாட்டு வாகடம்

ஏடுகள் 12 முதல் 51 வரை; 46+5+3=54

பக்கத்திற்கு 8 முதல் 9 வரிகள்; செல்லரித்துள்ளது.

( நீ. × அ. 22 × 3 செ. மீ. )

இதில் புழுக்கூடு போக, முகச்சிலை - கண்டசிலைக்குணம் - பக்கச்சிலை, ரத்தச்சிலை - பிச்சுநோய்க்குணம் - பிச்சி நொடிக்கு - ஊதுநொடி - வறணெடி - மாடுகண் கார்க்க - அடை மூக்குக்கு - நஸ்யம் - விஷ திருஷ்டிக்கு (ஏடு 21) - படுக்கிற மாட்டுக்கு நஸ்யம் - சகலமான வியாதிக்கும் மருந்து - அழலி நோய்க்குணம் - விருப்ஙப நோய் - துடுநாழி - பொருகடல் வயிறு நோய்க்கு

(ஏடு 25) விஷந்தீண்டினல் - பாயாத மாட்டைப் பாயவைக்க மருந்து (ஏடு 29) அடைப்பான் குணம் - அடைநோய் குணம், கிடைநோய், பூனைநோய், நாய்நோயின் குணம் - அனல் வெண்ணி நோய்க்குணம் - கண்டமாலை நோயுள்ள மாட்டின் குணம் - சாரை நோய்க்குணம் - விஷநோய்க் குணம் - கருநோய் குணம் - வலி நோய், அடைமுக்கின் நோய்குணம் - கண்பாரா மாட்டுக்கு மருந்து – கொல்லிநோய் குணம் (ஏடு 33) சந்திரநோயின்குணம் – பசுவுக்குக் கன்று செத்துப்போனல் மறுகன்று பார்க்க மருந்து – பசுவுக்கு முடிவைக்க மருந்து – பால்சுரக்க மருந்து – கொம்பிறை நோயின் குணம் – (ஏடு 39) கண்டிநோய்க் குணம் – விட்டி நோயின் குணம் – நாரை நோய் – ஒட்டிநாழிகொண்ட மாட்டின் குணம் – பெருஞ்சிரங்கொண்ட மாட்டின் குணம் – தேன்னேயின் குணம் – வீக்கத்திற்கு மேற்பூச்சு – (ஏடு 43) ரோடிநோயின் குணம் – நடைவிருப்பு குணம் – பல்லடைப்பன் குணம் – பின்ன டைப்பான், முன்னடைப்பன், நாறடைப்பன், சந்தடைப்பான் குணங்கள் – நீரடைப்பன், மானியடைப்பன், ஊதானியடைப்பன், தாளடைப்பன் குணங்கள், வாய்முள்ளு குணம், நடைவிருப்பு, முன்னிடி, எருதுநோய், வாய்வியாதிகள் குணம், சிகைபிடிச்ச மாட்டின் குணம், பன்னிக்குருவை, தலைதாரைநோய் – சாநோய் காந்திநோய் – சகரை நோய் – அரப்பன் – குட்டவெண்ணி – சோகை நோய் – தவசிநோய் – ( ஏடு 57 ) தவலை நோய் – முதலான நோய்களும் அவற்றிற்கான மருந்து முறைகளும் உள்ளன.

*Beginning :*

சூரிய உதயத்தில் எறும்புப்புத்திருக்கும் மண்ணை 3 திரம் வலம்வந்து, வாய்பேசாமல், ஒரு பிடிமண், பொரும்பியிலை நாலைந்துயிலையை மென்று மாட்டை 3 வலம்வந்து இந்த மண்ணு 3 திரம் ஒத்திப் புண்மேலிடவும். மூன்றும் நாள் புழு உதிர்ந்து புண்ணுறிவரும். கட்டியும் போம்.

* * * * * *

ஏடு 41: முன்னடைப்பன் கொண்ட மாட்டின் குணம். தோள்கள் வீங்கும். இதுக்கு மருந்து. அயமுங்காயமுங்கூட்டி கோழியாவாரைச் சாற்றில் உள்ளுக்குக் கொடுக்கவும். இதற்குச் சூடு ரு.

* * * * * *

*End :*

பெருவை நோய் குணம்: இரண்டு விலாவிலும் வீங்கும். இதற்கு மருந்து ஓடைத்தாழையும் மோரும் கலந்து உள்ளுக்குக் கொடுக்கவும். இதற்குச் சூடு இரண்டு விலாவிலும் - கத்துக் கொடிபோல் - வெள்ளைக்கனன்.

குறிப்பு:

அடுத்து 5 ஏடுகளில் நடுக்கின மாட்டுக்கு மருந்துகள், மண்டையடைப்பான் - தென்னெறு கண்டத்துக்கு - வெதுப்பு மாட்டிற்கு - முன்சுழல் நோய்களுக்கு - பன்னிக் குறவனுக்கு - நறுளி அடைப்பானுக்கு - முன்னடைப்பானுக்கு - பின்னடைப் பானுக்கு - பன் பளுவன் கொண்டைக்குணம் - ஓட்டுக்கொண்டை மாட்டின் குணம் முதலான நோய்களுக்கு மருந்துகள் உள்ளன.

---

### 457. சுவடி நெ. 257.

## வைத்திய அட்டவணையும், சில்லரைப் பாட்டும்

ஏடுகள் 67 + 4 + 4; பக்கத்திற்கு 6 முதல் 8 வரிகள்.

(நீள × அகலம் 24½ × 3 செ. மீ.)

இதில் தாளிசபத்திரிச் சூரணம் – அம்ருதசந்தனதி மாத்திரை - இஞ்சிக் குழம்பு - சித்திர வல்லாதி (ஏடு 7) - கருப்பு விஷ்ணு சக்கரக்குளிகை - மேகமிருவதற்கும் பெயர் (ஏடு 12) - இஞ்சிகண்டார் ரசம் - சீதஜ்வராங்குசம் - பல்

லிக்குத் தாக்ஷிணுப்பொடி - சயரோகத்திற்கு எண்ணெய் - சாரச்சுன்னம் (ஏடு 24) பாரிசவாயு, நடுக்குவாதம், வாய்க் கோணலுக்கு வேப்பெண்ணெய்த் தைலம் - தந்தநோய் 32க்கு மருந்து - பிருமரிஷி பாடல் (ஏடு 32) - உடும்பு லேகியம், உருண்டை (ஏடு 34) - சுவாச காசத்திற்குத் தைலம் - முப்பு - செண்டு விரேசனம் - அபூபக்கர் முறை - சஞ்சீவி மாத்திரை - மூதண்டத் தைலம் - இளம்பிள்ளைவாதம், மேகவாயுவுக்குப் புகை கொடுக்கும் குறிப்பு விபரம் (ஏடு 42) அரையாப்பிற்குப் பட்டி - அண்டவாதம், விரைவாதத் தைலம் - வெள்ளை வைத்தியன் முறை - (தில்லாப்பட்டி) (ஏடு 46) - சிவநாம ரசம் - தாதுபுஷ்டி மருந்து - ரசாகான் சொன்ன மருந்து (ஏடு 50) - விஷகடி மருந்து - சலவல்லாதி லேகியம் - மேகராஜாங்க யெண்ணெய் - பூவந்திப்பட்டை யெண்ணெய் - சர்வாங்க மாத்திரை - சூலைகுடோரி மாத்திரை - கஸ்தூரி யெண்ணெய் - வெடியுப்பு சயநீர் - பேய்க் கும்மட்டி லேகியம் (வயிறு நோய்க்கு) (ஏடு 62) மேகத்திற்கு மருந்து - மூலவியாதி லேகியம் - மேகவூறல், கைகால் கருப்பிற்கு, தோலுரிதலுக்குப் பூவரசங்காயெண்ணெய் - பித்த வெட்டைக்கு மண்டூரம் - சித்திரவல்லாதி - மூதண்டத் தைலம் என்பனவும் கடைசியில் சரநூல் 4 ஏடுகளிலும் காணப்படுகின்றன.

*Beginning :*

தாரணி தொழுசதுர் மறை வேதம்
பொதிகை தமிழ்முனி வோதிய வேதநூல்

தாளிசபத்திரி வடக ரஸாயனஞ்
சர்க்கரை யிரப்பாவில் சூரண மென்னுட

மருந்து தனித்தனி சொல்வது விபரமுடன்

சோர் பெறவேமுனி யேகம தாகவே
சொல்லிய கற்க வகை காரணமொடு.

*End :*

சித்திரமூலவேர் சின்னிவேர்
சங்கம்வேர் ஆத்திவேர்

| | |
|---|---|
| குப்பிவேர் | குமிழம்வேர் |
| வெள்ளெருக்கம்வேர் | மிளகரணைவேர் |
| குண்டுமணிவேர் | வெள்ளறுகுவேர் |
| சிவனார்வேம்பு | திப்பிலிமூலம் |
| கெருடங்கிழங்கு | அமுக்கிராக்கிழங்கு |
| விருகங்கிழங்கு | செங்கதாரிப்பட்டை |
| பிரப்பங்கிழங்கு | பூதவிருக்ஷம்பட்டை |
| வாதகரப்பான்பட்டை | பரங்கிப்பட்டை சேர் 1 |
| கொப்பரை | |

**கற்கவகை :**

| | |
|---|---|
| வெட்பாலரிசி | நீரடிமுத்து |
| கருஞ்சீரகம் | காட்டுச்சீரகம் |
| கெந்தகம் | துரிசு |
| துத்தம் | சூதம் |

சுத்தி செய்கிற சரக்குகளைச் சுத்தி செய்யவும்.

| | | |
|---|---|---|
| நல்லவெல்லம் | — | 1 சேர் |
| எள்ளு | — | 1 சேர் |
| சேங்கொட்டை | — | 100. |

கடைச்சரக்கெல்லாம் இடித்து வஸ்திரகாயஞ் செய்து கொண்டு —

---

**458.** சுவடி நெ. 258 (A)

## அகஸ்தியர் சூத்திரம் நூறு

ஏடுகள் 32 ; பக்கத்திற்கு 6 வரிகள் ; பூர்த்தி.
ஏடுகளின் நுனிபாகம் முழுவதும் செல்லரித்துள்ளன.
(நீள × அகலம் 30 × 3½ செ. மீ.)

இதில் லிங்கங்கட்டு, செயநீர், உப்புகட்டு, வழலைமார்க்கம் - வங்கபற்பம் (ஏடு 6) நாகபற்பம், நாகச் செந்தூரம், ஏகமூலிகை (ஏடு 10) சாரத் திராவகம், லிங்கம் சுத்தி - அரிதாரக்களங்கு - பூனீரெடுக்க - தங்கத்திற்குக் கரு (ஏடு 16) - சாரக்கட்டு - சிவதீட்சை, ஞானம், மவுனம், துருசு வெள்ளை (ஏடு 22) - அரிதாரபற்பம் - சூதக்களங்கு - தாமிரவெள்ளை - பாஷாணக் கட்டு - பாஷாணக் களங்கு - கண்டங்கத்தரி - வேர் துருசு - சிப்பிநீர் (ஏடு 28) - லிங்கக்கட்டு (ஏடு 30) முதலானவை களுள்ளன.

*Beginning :*

காரணமாய் யெனையாண்ட பராபரனேபோற்றி
கட்டாக வாதத்தில் லட்சங்காப்பு
தாரணமாய் பாதிக்குக் குறுக்கிச்சொன்னேன்
சார்வாக ஆயிரத்திருநூறு சூத்திரம்
நாரணநூல் வகைதோரணக் கருக்குருவுடன்
தென் பாரேன் ... ... ...

*End :*

மனம் வேறு பூரணமே யென்றுயென்று
வாழுவதல்லால் மத்தொன்றும் செய்யாதேநீ
மனம்வேறு தட்டுண்டால் யெல்லாம் போச்சு
மாய்கையுற்றுத் திரிந்தலைவான் மாள்வானய்யோ
மனம்வேறு சாதகமாய் சாஸ்திரத்தைப்பார்த்து
மனமன்பில் குருவுவையே வணங்கி நின்றால்
மனம்வேறு மாறுது சித்திமுத்தி
வாய்க்குமே சூத்திரந்தான் மகிழ்வார் முத்தே (எ)

குருபாதந்துணை . முற்றும் சிவமயம்.

459. சுவடி நெ. 258 (B)

## போகர் சூத்திரம் 35

ஏடுகள் 8; பக்கத்திற்கு 6 முதல் 7 வரிகள்

இதில் ஜீவனில் ஆண் பெண் பேதம் இல்லை. வாசியோகம் வயிரவ, மகேசுவர, சக்தி பூஜா விதிகள் – குருவருள் முதலான விவரங்கள் காணப்படுகின்றன.

*Beginning :*

குருவருளை யறியமாட்டார் குற்றங்கள் மிகவும்பேசி
வர்மவினை யறியமாட்டார் வர்மமே மிகவுஞ் சொல்வார்
அறிவுயர்கிட்டாதாகி லல்லலேபட்டு மாள்வார்
மருவியே மாரசன்ம மனமிசையருப்பர்தாமே (க)

* * * * * *

திருவண்ணுமலையராகி நின்ற பொருளறியார்
சிவலிங்கமறியார்கள் சிவபூசையறியார்
குருலிங்க சங்கமமாய் நின்ற பொருளறியார்
கொடுக்கின்ற தீர்த்தம் பிரசாதமது மறியார்
அருவன்றி உருவன்றி நின்ற பொருளறியார்
அகத்திவை யறியாதவர் அருவுருமறியார்
திருநின்ற பெருமைதனை யறியா மூடர்
சிவகுருவையறியார்கள் சிவபதமுமறியார். (கச)

* * * * * *

*End :*

பலபல சோலியாயுடலை மாய்க்கவேண்டாம்
பரமகுரு யறியாத பாவியாரே
நிலமிலே யுடலை......றக்கும் போது
நீர்க்குமிழி யாயிருக்கும் நிலையுமில்லை

அலமலந்து உடல்சுழுத்தி திருவோரெல்லாம்
அவனிதனி லேபிறந்து அலைவர்சால
பலமாகக் குருபதத்தைப் பிடித்தகாலம்
பிறவாத வீட்டிலின்பம் பெறுவர்தாமே. (நடு)

---

**460.** சுவடி செ. 258 (c)

## ரோமரிஷி பதினாறு

ஏடுகள் 5 ; பக்கத்திற்கு 7 வரிகள்.

ஏடுகளின் நுனிபாகம் செல்லரிக்கப்பட்டுள்ளன. இது வாதிகளுக்கேற்ற சுவடி.

*Beginning :*

தந்திமுகத்தோன் சதங்கைத்தானே காப்பு
சகலபொருளாய் நிறைந்த தாயார் காப்பு
முந்தியரைந்தோன் முதல்நூ லன்பதுக்குள்
மூலமுதல் திரிகோணம் வாசிவாதஞ்
சுந்திரம்போ லறிவுடைய மக்களுக்குத்
தொடுகுறிப்பு மிடிநிலமுந் தோணுந்தோணு
மிந்தநூல் வுரைபதினாறுஞ் சொன்னேன்ரோம
ரிஷிநூலுக் கெதிர்நூலொன் றில்லைதானே. (க)

தானென்ற மூலமுத லாறுவீடு
சாகரத்தின் கோட்டையிலே சார்ந்துநிற்கும்
தேனென்ற வளையமடா திரிகோணந்தா
னுத்துப்பார் பவளநீர் போன்றிருக்கும்
.............. பாட்டினுள்ளே கணேசந்தானும்
வல்லபையும் வீற்றிருப்பார் முக்கண்போல
.............. யிவரையல்லோ பூசைபண்ணி
நலமான சிவயோகம் நலம்பெற்றேனே, (உ)

*End :*

ஆகாத வேலையிலேக் கண்டால்......பிச்சி
மாகாச விந்துவல்லோ முத்தாய்ப்போச்சு
சாகாதோ யிந்நீரிலாளைக் கல்லு
சத்தியுவர் சூடனது சத்தேபட்டால்
வேகாதோ யினயினமுஞ் சேர்ந்ததானால்
வெங்கிளிஞ்சிக் கெற்பிணிநீர் விட்டால்கொல்லும்
போகாதோ குரு முடிக்கும் பாகமெல்லாம்
புட்டறிந்து பார்த்தவர்க்குப் பொருள்தான்முற்றே.
(கசு

குறிப்பு :

3 ஏடுகளில் "மந்திரத் திருப்பாடல்கள்" உள்ளன. மந்திரங்களும் சக்கரங்களும் எழுதப்பட்டுள்ளன.

---

461. சுவடி நெ. 258 (D)

## திருமூலர் தண்டகம்

ஏடுகள் 26. பக்கத்திற்கு 6 வரிகள்.
நுனி ஏடுகள் சிதிலம் – பூர்த்தி.

இதில், நீலகண்ட மந்திரம், சக்கரம், முப்பு, கிளிஞ்சி, எடுக்கும் வித்ம் – மாரணஞ் செய்ய, அஷ்டகர்மப் போக்கு – காரசார விபரம் – அஷ்டாங்கபோக மார்க்கம் – வாதம் சித்திக்க – பூசை விதி முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

பூமகள் கைலைமேவிப் பூரணமான தொன்றே
ஆகமவேதஞான சுருதியுமான தொன்றே
நாகவா பரணம் பூண்ட நந்திதண்டகமென்ரேதி
தேகமா மகத்தா னந்தி விநாயகன் காப்பதாமே. (க)

காணப்பா வஷ்டாங்க யோகம் மார்க்கம்
காட்டினர் தத்துவ மங்கிஷத்தில் மைந்தா
பூணப்பா நானூற்றைப் புகழ்ந்துபாரு
பொறிவுடம் யையபூதம் பூட்டுந்தோணும்
வீணப்பா வென்றுசொல்லி விட்டிடாதே
வேதாந்த மெய்குருவாய் உற்றுப்பாறு
தோணப்பா அறிவின்மதிற் விலகக்கூடில்
தொல்லுலகில்........கம் தொய்யும்பாரே. (கூக)

ஆமப்பா யின்னூல் தான் நீலகண்டம்
மதிசூட்மம்சூட்சாதி சூட்மங்கண்டு
ஓமப்பா பேருவாய் மூலங்கண்டு
ஒரு மா வுல் மாத்திரையே தண்ணீர்வார்க்க
தாமப்பா மூலவர்க் கத்தோடே (தான்)
தாஞெருவன் நவகோடிசித்துமாடி
நாமப்பா நந்திகுரு நீலகண்டம்
நலமான தண்டகமருள் செய்தார்முத்தே. (கoக)

முத்துமே திருமூல ரருளிச்செய்த
மூதண்டத் தியானமது நன்ருய்ப்பாரு
அத்தருக்கு மானந்தஞ் செயலோகோடி
அலங்கார மானதொரு வனேகங்கோடி
வித்திக்கும் வேதாந்த மடுத்தபேரை
வெகுளியாய் பேசாதே யின்னூ லாய்ந்தோா
உத்திடுங் காண் நவநந்தி சித்தர்பாதம்
உண்மையாய் நிலைக்கும் கற்பமுறுதி முத்தே. (கoஉ)

முற்றும் – சட்டைமுனி திருவடிகளே சரணம் – சிவமயம் – குருபாதமே துணை – அல்லா வுதவி...

## 462. சுவடி நெ. 259 (A)

## அன்னசாரம் (தான்யவர்க்கம்)

ஏடுகள் 36. பக்கத்திற்கு 8 வரிகள். மிகச்சிதிலம், அபூர்த்தி.
(நீள × அகலம் 37 × 3 செ. மீ.)

இதில், கார் அரிசியின் குணம், சண்டிக்கார், செம்பிலிப் பரியன், பூம்பாக்கார், குருவிக்கார், மட்டைக்கார், ஓட்டைக்கார், சித்திரக்கார், பிசானம், தில்லைநாயகம், கல்லுண்டை, சிறுமணி, பொங்கல் சம்பா, கருடன் சம்பா, கைவரைச் சம்பா, செஞ் சம்பா, புனுகுச் சம்பா, ஈர்க்குச் சம்பா, சீரகச் சம்பா, முத்துச் சம்பா, குங்குமச் சம்பா, அனந்தஞ் சம்பா, கடுகுச் சம்பா, துய்ய மல்லிகைச் சம்பா, வளைத்தடிச் சம்பா, – குருவை – கருங் குருவை – மணக்கத்தை – வாலான் – பச்சரிசி – (ஏடு 6)

**தண்ணீர் வர்க்கம் :**

வெயில் பட்ட நீர் - குளிர்ந்த நீர் - ஆற்று நீர் குணம் – ஆற்றில் முழுக - வாய்க்கால் நீர் - ஊற்று நீர் - குளம், கிணறு, நல்ல கிணறு, ஏரி, ஓடை, அருவி, சுனை நீர் இவைகளின் குணம் – (ஏடு 9) பள்ள நீர் - பனி நீர் - சமுத்திர நீர் - உவர் மண் தண்ணீர் - செம்மண்ணீர் - களிமண்ணீர் - ஈளை நீர் - கிளர்பூமி நீர் - நல்ல இருவாட்டு நில நீர் - மலை நீர் - செங்குள நீர் – (ஏடு கக).

**பறவைக் கறி குணம் :**

(ஏடு 30) செம்போத்து - காக்கை - குயில் கறி - மயிலிரைச்சி– காக்கை நெய் - உடும்பு நெய் - ஆமைக் கறி - புறாக் கறி – ஆட்டுத் தலை - கால், மூளை, நுரையீரல், மாங்காய் பீசம், நாய்க் குடல் - மணிக் குடல் - பெருங் குடல் - (ஏடு 31) நாக்குக் கறி - ஆட்டுக் கண்ணு - ஆட்டுக் கன்னம் - வெள்ளாட்டுக் கறி - செம்மறிக் கறி - மான் கறி - கடமான் - முயல் - உடும்பு, வெள்ளைச் சுண்டெலி - பசுவின் கறி - கீரிப்பிள்ளை - மீன்கொத்தி,

கொக்கு, காடை, கௌதாரி, காட்டுக் கோழி, நீர்க் கோழி முதலான கறிகளின் குணம் - கானுங்கோழி - கோழி முட்டை குணம் - தவிட்டுப் புரு முட்டை - ஊர்க் குருவி (ஏடு ௩௩) ஆட்டுக் கறி - வெளிச்சைக் கெண்டை மீன், விலாங்கு, குறவை மீன் - வாளை, மிருக்கைசூட்டு மீன் குணம் - தலை முழுதும் அடவு - தாம்பூலம் தின்னும் வேளை - சித்தர்கள் பெயர்களறிய - முதலியன வுள்ளன.

*Beginning :*

மண்டலமெல்லா மீய்ந்து வளர்ந்திடும் பொருட்டா...யி
ப... ... ... ... ... ... ... ... ... ணையீய்ந்தான்
கண்டுதா னுலகமெல்லாம் களிப்புட னன்னசாரங்
கொண்டுட லுயிரும் .............. ஜனித்தவாறே. (க)

அன்னமயமே மார்க்க மளித்தவள் பூமிதேவி
சொர்ணமாய் மாரிபெய்து துறந்தது விளைந்ததன்னை
தென்னவாய் தொந்தமேழும் தொல் புவிவிளங்கித்தென்றூர்
பன்னமுன்னன்ன சாரம் பரமனு லுரைக்கொண்ணுதே. (உ)

*End :*

பாடினூர் நவசித்தரனந்தங் கோடி
பக்குவமாய் நாதரிஷி சொன்னதாலே
நாடியே நாதரிஷி தன்னைக்கூவி
தேகக்காண்டதை வெளியில் போட்டாய்
போடியென்ன காரியத்தைச் செய்தாயென்று
பெருமையுட னறுவோங்கி குகைக்குள்வைத்து
சாடியே யனைவோர்க்குஞ் சாபமீந்தேன்
சம்சயங்கள் தீராமல் சயித்தார்பாரே.

**463.** சுவடி நெ. 259 (B)

## கஷாய வர்க்கம்

ஏடுகள் 9; பக்கத்திற்கு 8 வரிகள்

ஏடுகள் செல்லரித்துள்ளன.

இதில் வாதச் சுரக் கஷாயம், பித்தசுரக் கஷாயம், சிலேத்ம சுரக் கஷாயம், வாதபித்தச் சுரக் கஷாயம், பித்தவாதச் சுரக் கஷாயம், பித்தசிலேத்ம சுரக் கஷாயம், மூளையைப்பற்றினச் சுரக் கஷாயம் (ஏடு 4) தோல், சதை, உதிரம், சுக்கிலம், அஸ்தி முதலானவைகளைப் பற்றிய சுரக் கஷாயம், சந்நிபாதச் சுரக் கஷாயம், சத்தி, உழலை, தாபச் சுரக் கஷாயம் அதிசாரச் சுரத்திற்குக் கஷாயம், வயிற்றுக் கடுப்புக்கு மருந்து, விஷசுரம் பலதுக்கும் கஷாயம், மூர்ச்சை, சந்நிசுரக் கஷாயம். தசமூலாதிக் கஷாயம் - சந்நிக்குக் கஷாயம் - அஞ்சனம், (ஏடு 8) - கையான் கற்பம் (ஏடு 9).

*Begenning :*

சொல்லுங்கூவளை வேர்சுக்குத்
தோற்றும் பற்படகஞ்சீந்தில்
வல்லுளவரிசி சித்தமட்டி
............... மருவுமுத்தம்
அல்லி யஞ்சிறு காஞ்சோறி
அவை மருந்திவை முன்னூலோர்
வெல்லுமேழ்ச்ச ரக்குங் கபத்தின்
விதிப்படி குடிநீர்செய்வர் (க)

*End :*

பொய்யாதானர் சொன்னபடி
மொழி போ...............
மெய்யே சொன்னேன் சிவனறிய
வித்தை யெவர்க்கும் மிகநன்று

கைய்யாந்தகரை தன்னுடனே
.............. கூட்டி
நைய்ய மென்று தின்பீரேல்
நரைபோ முடம்பும் நடுங்காதே. (எய)

கடைசி ஏட்டில் கீழ்க்கண்ட பறங்கிப்பட்டைச் சூரணமுறை காணப்படுகின்றது.

சேங்கொட்டை சேர் 4, பசுவின் பால் சேர் நாலில் அபின் 1 வராகனெடை கரைத்து அதில் கொட்டையைப் போட்டுக் காய்ச்சச் சுத்தியாம் - பருப்பெடுத்துப் போட்டு நேகவரைத்து ஒரு பானையில் போட்டுத் தண்ணீர்விட்டு ... வேடுகட்டி அதன் மேல் பரங்கிப்பட்டை பலம் 6 - சீவி வைத்து மேல் மூடிச் சீலை செய்து 10 நாழிகை எரித்தெடுத்துச் சுத்திக் கெந்தி வராக னெடை 3. சாதிக்காய் வராகனெடை 2. சாதிப்பத்திரி வராக னெடை 2. ஏலம் வராகனெடை 2. கிராம்பு வராகனெடை 2 திரிகடுகு, திரிபலை, திப்பிலி மூலம், ஓமம், லவங்கப் பட்டை விளங்கம், தாளீசம், கார்போகரிசி வகைக்கு வராகனெடை 3. எல்லாம் இடித்த சூரணத்துடன் சர்க்கரை சேர்த்துக் கலந்து கொடுக்கவும். வெருகடிப் பிரமாணம், கிரந்தி, மேகக்கட்டி, மேக ரணம், மேககுஷ்டம், ஊரல், சூலை, ரசக்கூட்டு, பாஷாணக்கூட்டு, சூதகவாயு, முகவாதம், வலிப்பு, கிராணி, விஷபாண்டு, தலைவலி, பீனிசம், வாதம் 84, இவை தீரும். பத்தியம் பால், நெய், கறி, பருப்பு, உப்புக் கூட்டவும்.

---

**464.** சுவடி நெ. 259 (c)

## வைத்திய அட்டவணை பற்ப முறைகள்

ஏடுகள் 15 ; பக்கத்திற்கு 8 வரிகள். சிதிலம்.

இதில் பவளபற்பம், பவளவங்கபற்பம், லிங்க மாத்திரை - மேகத்திற்கு எண்ணெய் – பித்தவெட்டை, சோகைக்கு

உருண்டை, பஞ்ச சூதமெழுகு - கண்ணில் பூ, சிகப்பு, சதைக்கு மருந்து, புண் புரைக்கு நெய் - பாஷாணக்கட்டு - வெள்ளைமெழுகு- லிங்கக்கட்டு – செந்தூர முறை – சூலைக்கட்டுக்கு பால்ரஸ உருண்டை – சுரத்திற்கு மாத்திரை – சர்வசோடசக் குளிகை (ஏடு 3) – மேகத்திற்கு எண்ணெய் – பூவந்திப்பட்டை எண்ணெய் – நீரெரிச்சல், வெட்டைச் சூட்டுக்கு – பறங்கிப் பட்டைச் சூரணம் - மேக ஊறல், சூலை, வாயுவிற்கு – மூலவாயு, மூலக்கடுப்பிற்குச் சிலாசத்து பற்பம் – கெந்தக பற்பம் – கல்நார் பற்பம் (ஏடு 6), மேக இரணத்திற்கு எண்ணெய் – சுழிகணத் தெண்ணெய் – க்ஷயம், சுவாச காசத்திற்கு லேகியம் – பறங்கிப் பட்டை லேகியம் – மேகச் சூட்டின்மேல் கண் புகைச்சலுக்கு மருந்து, அப்பிரகச் செந்தூரம் – கெந்தகக் தைலம் – பித்த வெட்டை, பித்தவாயுவிற்கு – சீரகப் பாவனை – கல்லுப்புச் செந்தூரம் – லிங்க பற்பம் – கெந்தகத் தைலம் – வீரமெழுகு – சௌவீரக்கட்டு (ஏடு 9) – பாஷாணக்கட்டு – சாரச்சுன்னம் – வெடியுப்புச் சுன்னம் – வெங்காரச் சுன்னம் – கட்டு - பூரக்கட்டு – ரசக்கட்டு – நாகக்கட்டு – லிங்கக்கட்டு – பற்பம் – துரிசுச் சுன்னம் - சிலாசத்து பற்பம் – சூதக்கட்டு – சுரத்திற்குப் பாஷாணக் கலிக்கம் – நாகபற்பம் – வெங்கார பற்பம் – பால் பற்பம் (ஏடு 12) - நாக வெட்டை - சன்னி சுரத்திற்கு மாத்திரை - மடல்துத்தக் கட்டு – தாது விருத்திக்கு – பாஷாணக் களங்கு – நாகரஸச் சுன்னம் - மேகச்சூடு, பித்தச் சூட்டுக்குத் தைலம் - புருஷ வசியம் – ஸ்திரீவசியம் – பாஷாணக் கட்டு – வெங்காரக் கட்டு – கை கால்வெள்ளைக்குப் புகை – வெட்டைக்கு மருந்து – சுரத்திற்கு மாத்திரை – பாஷாணக்கட்டு – ரத்தப் பிரமியத்திற்கு – கிரந்திப்புண், நாள்சென்ற புண், அழுகிய புண்ணுக்கு மருந்து – முதலிய முறைகள் காணப்படுகின்றன.

***Beginning :***

பவளம் தேவையானது கரிப்பான் சாற்றிலொரு நாளூற விட்டு, உலர்த்தி, மறுநாள் வெள்ளெருக்கம்பாலிலதுபோல்

செய்து, மூன்றும் நாள் கரிப்பான் சாற்றிலூறவைத்து, உலர்த்தி யெடுத்துத் துடைத்துப்போட்டு, அகலில் கீழா நெல்லியரைத்துப் பவளத்திற்குக் கீழும் மேலுமிட்டு, அகல்மூடி, அரைக்கசபுடமிடப் பற்பமாம். சயம், இருமல், சுவாசகாசம், சுரம் இவைகள் தீரும்.

* * * * *

லிங்கம் பலம் ஒன்றுக்குக் குழிமீட்டானிலையும், குதிரை யடியினிலையுமரைத்துக் கவசஞ்செய்து, 2 சீலை மண் செய்து, பத்தெருவில் புடமிடப்பற்பமாம் – நெய், தேன், பனைவெல்லத்தில் பணவெடை வியாதியறிந்து கொடுக்கத் தீரும்.

* * * * *

*End :*

ரச கர்ப்பூரம் கட்டி விராகனெடை 2½ கர்ப்பூரவல்லி இலைச்சாறு பிழிந்து, புது ஓட்டில் கட்டிவைத்துச் சுறுக்கிடவும், 2 ஜாமம் மறுபடியும் குழிக்கல்லிவிட்டு மேற்படி சாறுவிட்டரைத்து உருண்டை செய்து 5 நாள் இருபோதும் பனைவெல்லத்தில் வைத்துக் கொடுக்கவும். பத்தியம் - உப்புப்புளி 6 நாள் தவிர்க்கவும். 7 வது நாள் உப்புப்புளி சேர்த்துக்கொள்ளவும். வேறொன்றுமாகாது.

அதிகப்புண், நாட்சென்று அழுகிப்போயிருந்தால் 2 வராக னெடை பூரம் கொடுக்கலாம். கிரந்திப்புண் உபாயமாயிருந்தால் 1 வராகனெடை அல்லது 1½ வராகனெடை முன் சொன்னபடி கொடுக்கவும். பூரத்தைச் சுறுக்கிட்டுக் குழிக்கல்லிலரைத்து வில்லை தட்டி யொரு சில்லோட்டில் வைத்து 1 விராட்டி தணலில் வாட்டி (பற்பம்) செய்துகொள்ளவும்.

பல்வலிக்கு மருந்து – காரமுமிக் காந்தலில்...... 3 சேர்த்துப் பல்லில் வைக்கத் தீரும்.

---

**465.** சுவடி நெ. 260

## பிள்ளை வாகடம்

ஏடுகள் 40. பக்கத்திற்கு 7 வரிகள்.

மிகச் சிதிலம். பூர்த்தி. சாறு பூசப்படவில்லை.

(நீள × அகலம் 37 × 3 செ. மீ.)

இதில், பட்சி தோஷக் குணம், தூங்குப்புள் குணம், வெளிக்கொள்ளிக் கண்ணன் குணம், (ஏடு 7) — செங்கண்ணன் குணம் — குழி தோஷக் குணம், (ஏடு 9) நீர் மாந்தத்தின் குணம் — செரியா மாந்தத்தின் குணம் — போர் மாந்தத்தின் குணம் — கட்டு மாந்தம் — தலை மாந்தம், விஷ மாந்தம், வரள் மாந்தம், ஊது மாந்தம், கணம் எட்டுக்கும் வகை — நீர் கணத்தின் குணம் — (ஏடு 12) எரி கணம் — வரள் கணம், முக்கு கணம் — சுழி கணம்— கண சந்நி — அக்கரக் காய்ச்சல் — நீராமம் — ஆம சந்நி — சந்நி வாதம் — அஸ்தி சுரம் — (ஏடு 15) வாத, பித்த, சேத்தும நிலையறிய — மாங்கிஷ சுரக் குணம் — ரச குணம் — ரத்த சுரக் குணம் — கரப்பான் 18ன் குணம் — வாதக் கரப்பான், பித்த கரப்பான் குணம் — அரிகரப்பான் குணம் — தலை மாந்தத்திற்கு மருந்து — வெப்பு மாந்தத்திற்கு மருந்து (ஏடு 17) வெப்பு மாந்தத்திற்கு மருந்து — போர் மந்தம், சுழிகணம், சீதசுரத்திற்கு மருந்துகள், விக்கல், தாபசுரத்திற்கு மருந்து — கணத்திற்கு — கணமெனப்பட்ட அக்கரத்திற்கு மருந்து — குளிர்காய்ச்சலுக்கு — ஆமசுர மாந்தம், பேதி மாத்திரை (ஏடு 20) சுரசந்நிக்கு ராமபாணக் குளிகை — மாந்தத்திற்குக் கஸ்தூரி மாத்திரை — செந்தூர மாத்திரை — பாலசஞ்சீவி மாத்திரை — மாந்த கணத்துக்கு மாத்திரை — சுரத்திற்குக் கோரோசனை மாத்திரை — அக்கரம் 18க்கும் எண்ணெய் — அஸ்தி சுரத்திற்கு எண்ணெய் — கரப்பான் சூலிக்குயெண்ணெய் — மாந்த கணம் — பேராமைக் கட்டுக்குயெண்ணெய் — மாந்த கணம் போர்மாந்தத்துக்குக் குடிநீர் — மாந்தம், போர் மாந்தத்திற்கு மருந்து — பிள்ளைக்கு பாலரோகத்திற்கு மருந்து — கணத்திற்கு நெய் — கணம் 8க்கு

நெய் – கக்குவான் – ஆமசுரம், கணத்திற்கு நெய் – வாந்தி கழிச்சலுக்கு நெய் – தலை கனத்திற்கு நெய் – ரெத்தக்கடுப்பிற்கு லேகியம் (ஏடு 26½) முலைப்பாலுண்ணும் குழந்தைக்குக் கோரோசனை லேகியம் (ஏடு 27) – வெருகெண்ணெய் – மோரெண்ணெய் – முக்கூட்டெண்ணெய் – வாதக் கரப்பானுக்கு எண்ணெய் – மாந்த கணம், போர் மாந்தத்திற்குயெண்ணெய், சுரதாபத்திற்குயெண்ணெய் – மாந்த கணம், பேராமத்திற்கு யெண்ணெய் – சுரதாபத்திற்கு யெண்ணெய் – கோரோசனை மாத்திரை (ஏடு 30) – காய்ச்சலுக்குக் கஷாயம் – சுழிகணத்திற்கு யெண்ணெய் – கணத்திற்குச் சூரியபுடயெண்ணெய் – சுரத்திற்கு அரக்குத் தைலம் – மாந்த கணம், பேராமத்திற்கு வெருகெண்ணெய் – மாந்த சந்நிக்குப் புகை – தாந்திரிக சந்நிக்குப் புகை – மாந்தம், பேராமத்திற்கு யெண்ணெய் – மாந்த கணத்திற்குக் கஷாயம் – மாந்தம், பால் கரிசைக்குக் கஷாயம் – அதிசார சுர வாந்திக்குக் கஷாயம் – மாந்த சுழி கணத்திற்கு எண்ணெய் – கஷாயம் – கடுப்புக்குக் கஷாயம் – மாந்தத்திற்குக் குளிசம் – மந்திரம் – (ஏடு 34) எழுநாயறு குணம் – கிராணி மேகமுதல் கடுப்பிற்கு – முசல் கரப்பான் குணம் – மசரிப்புழு குணம் – செங்கிரந்தி குணம் – கருங்கிரந்தி குணம் – மாந்த வலிப்புக் குணம் – பெருவலியம் – பேர்மாந்தக் குணம் – முட்டடப்பான் செய்யுங் குணம் – பிறந்தது முதல் 12 நாட்கள் வரைக்குஞ் செய்யும் குணம் – 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12 நாள் வரைக்கும் செய்யுங் குணங்கள் முதலானவைகள் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

பிறந்த நாள்தொட்டு வளர்பிள்ளைக்குத்தான்
பேசிடும் ரோகங்கள் பிறக்கும்வாறுஞ்

சிறந்ததோர் தாய்தந்தைக் குள்ளரோகஞ்
சிசுமேலே தோன்றுமிது சிறப்பதாக . . . .

அறந்தமைக்கு மருத்துவச்சி யாலேபோகு
மதுவன்றி மருந்தறிவார் தன்னால்தீருந்
திறந்தெரிந்து பார்த்துவிடுஞ் சிறுபிள்ளைக்குச்
சீராகவருநோய்க (ளோ) தக் கேளே. (க)

செங்கிரந்தி கருங்கிரந்தி செவ்வாப்புத்தான்
தீயானகரப்பானு மரையிற் காணும்
அங்கமெல்லாஞ் செவ்வாப்புச் சிவந்துகாணு
மதுவன்றி கருங்கிரந்தி தொண்டைக்கட்டும்
புண்குடரம் பேயணுகல் பட்சிதோஷங்
பின்னும்வெகு ரோகங்கள் பிரித்துச்சொல்ல
அங்கரிது குழந்தைபிணி யறிந்துதீர்க்க
யாராலு மாகாதெனத் தான்சென்னரே. (உ)

*End :*

பிள்ளைபிறந்த பனிரெண்டாம்நாள் பனிரெண்டாமாசம்
பனிரெண்டாம்ஆண்டில் சோருமுலையீர் சூரனென்னும்
பேயணையும் அதுசெய்யுங்குணம். சுரம்வரும்,வாந்தி
பண்ணும். தாகமுண்டாம். உதடு உலர்ந்துபோகும் –
முலைகுடியாது
உறங்கிக்கிடக்கும் – சிறிவிக்கு மேல்வயிறு வலித்து
உபாதிப்படும்
உடம்பு கனத்திருக்கும். இதுக்குப்பலி –
மஞ்சளரைத்துப் பாலது
பண்ணி கொன்னைப்பூமாலை சூடி (கா) வி வஸ்திரங்கட்டி
குறுணியரிசிச் சோறும்,கருவாடும், மீனிறைச்சியும்,
புண்ணாக்கிலே கறியும் மூனு கொழுக்கட்டையும்,
ஐந்து பணியாரமும் இதுவெல்லாம் மண்அகலிலிட்டு
அய்யன் கோவில் நோக்கி வைக்கவும். அய்யனுருக்குப்
பொங்கலிடவும், தீரும்.

*Colophon :*

ஆங்கீரஸ வருஷம் தை மாதம், புதவாரமும் அவிட்ட நக்ஷத்திரமும் கூடிய புண்ணிய தினத்தில் காதிர்சா மகன் பாவாவுக்கு வெங்கடாசல வாத்தியார் எழுதிக்கொடுத்த பிள்ளைவாகடம்.

---

**466.** சுவடி நெ. *261.*

## இரஸவர்க்கம் (குணவாகடம்)

ஏடுகள் *48.* பக்கத்திற்கு *6* வரிகள்

மிகச்சிதிலம் *311* செய்யுட்களேயுள்ளன

(நீள × அகலம் $37 \times 2\frac{3}{4}$ செ. மீ.)

இது சுவடி நெ. *203*, *204* (A), சுவடி *191*, இவைகளைப் போன்றவை.

கடைசி *4* ஏடுகளில் சரக்குகளின் அட்டவணை காணப் படுகின்றது.

---

**467.** சுவடி நெ. *262* (A)

## அகஸ்தியர் பற்ப, சிந்தூரம்

ஏடுகள் *58.* மிகச்சிதிலம்

(நீள × அகலம் $34 \times 3$)

பக்கத்திற்கு *6* வரிகள். எழுத்து சுத்தமாகவுள்ளது. சாறு பூசப்படவில்லை.

முதலில் பல ஏடுகள் செல்லரிக்கப்பட்டுள்ளன.

இது மிகவும் சிதிலமாகவிருப்பதால் சுவடியின் பெய.. கண்டுபிடிக்க இயலவில்லை. *46* நெ. செய்யுளுடன் "பற்ப விலக்கணம்" முற்றும் எனக் காணப்படுவதால் அந்தப் பெயரே இதற்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

இதில் பஞ்சபாஷாணபற்பம் – சகலச்சுன்னம் – சிந்தாமணி. ரசகர்ப்பூரம் – பச்சைக்கர்ப்பூர வைப்பு – சலாகை கர்ப்பூரம் (செய்யுள் 48) சௌவீர வைப்பு (செ. 50) வாதராக்ஷஸன் (செ. 55) சுயமக்கினி (செய். 60) – பூபதி – லகுஏலாதி (செ. 60) ராமபாணம் (செய். 61) சந்திரோதய உருண்டை (செ. 63) – சந்நியானந்த பைரவன் (செ. 64) கோடா சூழி – பால சஞ்சீவி – சிலோதாரி மாத்திரை (செ. 70) – சோகிரஸ மாத்திரை – நிம்பாதி மாத்திரை – அப்ருதரஸ மாத்திரை (செ. 73) – கனகரஸம் – காளகண்டமேக நாராயணச் செந்தூரம் (செ. 75) – ரசச் செந்தூரம் (செ. 76) – பாதரசச் செந்தூரம் – ஜயரஸச்செந்தூரம் (செ. 78) காந்தச்செந்தூரம் (செ. 80) – காரீயச் செந்தூரம் – லோகச் செந்தூரம் – அயக்காந்தச் செந்தூரம் – தாமிரச் செந்தூரம் (செ. 83) தங்கச் செந்தூரம் (செ. 84) அப்பிரகச் செந்தூரம் – மஹாபூர்ண சந்திரோதயம் (செ. 86) வீரிய ரசச் சந்திரோதயம் – அப்பிரகச் சத்து சந்திரோதயம் (செ. 88) லோகச் சந்திரோதயம் (செ. 89) பூனகச் சந்திரோதயம் (செ. 90) தங்கச் சந்திரோதயம் (செ. 93) அரிதாரச் செந்தூரம் – பஞ்ச லோகச் செந்தூரம் (செ. 96) முதலியன உள்ளன.

*Beginning*

... ... ... ... ... ... ... ... ...
அனுபானமங்கங் கரித்துக் கொடுத்திட
தனியேவியாதியும் கழிச்சலு மோடிடும்
யிவ்வகைப் பற்பங்களெல் லாஞ்சரிகூட்டி
அவ்விடை சூதம்நின்றும் பூசிலே

மாவிடங்கு கூட்டி மத்திக்கு ...... சத்திநீற்
ஆவிடகுப்பிக்கு மத்தி யெரித்திடு
இந்துவுனுள் மூன்றெரித்திட மாபற்பம்
சிந்தாமணி யது ......... யெடுத்ததை

நாலாயிரத்து நானூருடன் நாற்பதென்
னுலாம் வியாதிக் கனுபானத்திற் – யீந்திட
நோய்களெழு பதிமூன்றுதோஷம்
மாய்ந்திடும் பற்ப வகையிது முற்றுமே. (சுசு)

பற்பவிலக்கண முற்றும்.

*End :*

பஞ்சலோகச் செந்தூரம்

தங்கத்திடையினி சாற்றிடு நாறும்பூ
தொங்கும் பரத்தைப் பூவுளசாறுவிட்
டரைவில்லை பிடித்து ரவியிலுலர்த்திட்டுச்
சொல்லும் யிருபதெரு:புடத் தீர்ந்தபின்
பத்தலரையிட்டுப் பரத்தை செம்பீரநீர்
பத்தரைத்துப் புடம் பத்திட்டுப் பார்க்கவே
பவளமதாகும் பணவெடையுட்கொள்
கவளங்கச் சயங்கள் நோய்கள் நாசமாம்
மேகமிருபத்து வொன்றுவெகு மூத்திரம்
போகுஞ் சகத்திற் நோய்களொளிந்திடும்
இம்முறையாக யிரும்பினரப் பொடி
அம்முறையிட்டா லவையும் பவளமாம்
வயிற்றிலெழுந்த நோய் வாந்தி லோகந்தா
னுயிற்புகு டுருக்கு வொழுகரை செந்தூர
மாகும் வெள்ளீயம் அதிகப் பருதியாம்

குறிப்பு :

ஷெ சுவடிக்குப்பின் 4 முதல் 8 ஏடுகளில் சிற்சில முறைகளின் செய்யுட்கள் காணப்படுகின்றன. மிகச்சிதிலம்.

468. சுவடி நெ. 262 (B)

## அகஸ்தியர் பின்னூல் எண்பது

ஏடுகள் 20; பக்கத்திற்கு 6 வரிகள்.

பூச்சியரித்துள்ளன. பூர்த்தி

(நீள × அகலம் 34 × 3 செ. மீ.)

இதில் கர்மசாந்தி சுவர்ண அப்பிரகச் செந்தூரம், தாமிர பற்பம், அரையாப்புக்கட்டிக்கு மருந்து – பூனீத்தின் குரு, ஆனைக்கல் (ஏடு 5) ரஸப்பதங்கம் (ஏடு 7½) அரிதாரப்பற்பம் - சுரக் கோடாலி (ஏடு 9) தேகக்கூறு, தாதுக்கூறு, உடல்பார்க்கை, கர்மக்குறி (ஏடு 10) விக்கலுக்கு மருந்து (ஏடு 12½) தேங்காய்ப் பால் பல்வலிக்கு (ஏடு 14) ஒருத்தலைவலி, மண்டைக்குத்துக்கு, மேகத்திற்குக் கஷாயம், பிள்ளைப் பிணிக்கு எண்ணெய், (ஏடு 15) அறுகம் வேர் கிருதம், கிரந்திக்குப் புகை, பேதிமாத்திரை, பெரும்பாட்டுக்கு (ஏடு 17) தாமிரபற்பம், வைத்திய நீத்துவகை (ஏடு 18) காமகேசரிக் குளிகை (ஏடு 20) முதலான முறைகள் உள்ளன.

*Beginning :*

.........ன்பது சொன்னேன் முதலேகாப்பு
  மூலத்தில்நின்ற கணபதியே போற்றி
பின்னூலெண் பதுசொல்ல வாயிகாப்பு
  பேரான யென்குருமா முருகன் காப்பு
அன்னுளி லீசனுப தேசத்தாலே
  அகஸ்தியனு மென்றெனக்குப் பேருமாச்சு
பொன்னுன வாதத்தில் லெட்சங்காப்பு
  பூட்டினேன் பூரணசூத் திரத்தைக்கேளே (க)

பூரணநூ லாயிரத்திரு நூறுஞ் சொன்னேன்
  பொருளான வாதத்திற் காதிநூல்தான்
காரணமாய் வைத்தியத்தி லிரண்டுலட்சம்
  கடையேடும் பதினறுங் கண்டுகொள்ளு

ஆரணமாய்ப் பெருநூலைச் சுருக்கிச் சொன்னேன்
ஆயிரத்து யஞ்ஞூத்து முதலதாகும்
தாரணியில் வைத்தியத்திற் காதிநூல்தான்
தமிழ்நாலா யிரவெண்பா சாற்றினேமே. (உ)

*End :*

ஞானமென்று லோகம்விட்டா லதுவே ஞானம்
ஞானம் விட்ட யோகமென்ன மரணயோகம்
பானமென்ன ரசத்தை விட்டால் சுராமபானம்
தானபரியா ரின்னூலைவிட்டால் பரிகாரந்தான்
கோணமென்னும் வழலைவிட்டால் ரசவாதந்தான்
குணவாத பேதமல்லாமல் குணமாகாது
கானமென்ற யின்னூலெண் பதையும் விட்டால்
காசினியி லிவன்யோகி கடந்தான் முற்றே. (அ௩)

அகஸ்தியர் சுவாமி திருவாய் மலர்ந்த பின்னூலெண்பது முற்றும்.

---

## 469. சுவடி நெ. 263 (A)

## கொங்கணர் கடைக்காண்டம் ஐநூறு

ஏடுகள் 59; பக்கத்திற்கு 10 முதல் 11 வரிகள்

செல்லரிக்கவாரம்பித்துள்ளன

( நீளம் × அகலம் 34 × 3 செ. மீ. )

இதில் நாற்பத்திமுக்கோண பூசை – வடுகன் பூசை (ஏடு 7) கணபதி பூசை, நந்தீசர் பூசை (ஏடு 8) சுப்ரமண்யர் பூசை (ஏடு 9) தெட்சிணாமூர்த்தி பூசை, சண்டிகேசர் பூசை, பிரம்மதேவர் பூசை, விஷ்ணுதேவர் பூசை (ஏடு 11) ருத்திர பூசை – மகேச்வர பூசை, சதாசிவ பூசை – ஞானகுருபாதம் (ஏடு 12½) மவுனசூட்சம் (ஏடு 13) – ரேசகம் – கும்பகம் – தீட்சை (ஏடு 16½) – மூலாதாரத் தீட்டை (ஏடு 17) – யாகசாலை கட்ட (ஏடு 20) – அனுஷ்டானம்

(ஏடு 23) சீஷன்லட்சணம் (ஏடு 25½) – பருவலட்சணம் – ரவி தரிசனம் (ஏடு 26) இந்து தரிசனம் – மாதம்; நக்ஷத்திரம், வாரம், திதி, லக்கினம் (ஏடு 28) சுப்பிரமணியர் நாற்பத்து முக்கோணம் (ஏடு 30) பஞ்சபாதகம் (ஏடு 32) அஷ்டகர்மம் (ஏடு 33) – சரியைக் குணம் – கிரியைக்குணம் – ஞானதிகாரியம் (ஏடு 37) சாபநிவ்ருத்தி – குருவின் லக்ஷணம் (ஏடு 47) – முக்குளிகை மூலம் – சாதனைக்கு மாதம் லக்கினம் – அனுஷ்டான விதிகள் – குரு கடாக்ஷமார்கம்-சாபநிவ்ருத்தி முதலானவைகள் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

அண்டரண்டங் கடந்தபொருள் நிர்குணமாய்நின்ற
தளர்வில்லா நிர்மலமே சூட்சாசூட்மம்
யெண்டிசையும் பரந்தநிரஞ் சனமேயாக
யேகச்சி தானந்தத் தப்பால்ஞானங்
கொண்டதொரு பூரணமென் னுளுங்காப்பு
குறியான வெழிப்பாழும் பொழிப்பாழுங்காப்பு
புண்டரீக வெளியொளிப்பாழ் சுழிஊைமேவும்
போதமுறும் வேதாந்தக் காப்புத்தானே. (க)

ஆதியே தந்தமே தகண்டமேது
அப்புறத்தே நின்றபூ ரணந்தானேது
நீதியே நெறியேது நினைவங்கேது
நேரான சுழினைதனை நிலையாதாக்கு
சோதியே துரியமென்ற துரியமேது
துரியாதீ தத்தடங்குஞ் சுருதியேது
பேதியாதொரு மனமே பிலக்கூறுவானும்
பலத்தக்கால் மவுனமது பலக்குந்தானே (உ)

*End :*

பலனான புண்ணியத்தின் சொர்க்கஞ் சொன்னேன்
பாழான நரகத்தின் வகையுஞ் சொன்னேன்
நலமான சிதம்பரத்தின் பூசை சொன்னேன்
நாடாத சீஷனுட குணமுஞ் சொன்னேன்

புலனுகப் பாலருட பூசை சொன்னேன்
புகழ்பெறவே சாபங்கள் நிவ்ருத்தி சொன்னேன்
அலையாமல் அப்பியாச மார்க்கஞ் சொன்னேன்
அப்பனே சுவாசமாய்கை (தான்கண்டேனே) (சகூகூ)

விட்டகுறை யாலேதான் தேவிதோத்திரம்
விளம்பினேன் பொறிபுலன் காலுவாய்வு
பட்டணமா மண்டலங்கள்...
.................சொன்னேனய்யா
நிஷ்டையெல்லா மொன்றுன யேகவஸ்து
நெடுமாலி டைச்சரமே மௌனபீடம்
வட்டமதை ஓரெழுத்தென் றறியச்சொன்னேன்
மகத்தான ரவிவட்ட மானவாறே. (ருள)

வாறுன சாஸ்திரத்தி லாறுகாண்டம்
வகையாகக் குறுக்குபதில் மூனுகாண்டம்
கூறுன கடைக்காண்ட மிந்தஞானம்
காட்டினேன் ஐநூறு சீடர்க்காக
வீறுன நடுக்காண்ட மைநூறுசொன்னேன்
வேதையிலே முதல்காண்ட மைநூறுசொன்னேன்
தோறுன முன்னூத்து மூன்றுசூத்திரம்
தப்பாமற் சொச்சமுண்டு தெளிந்துமுற்றே. (ருளக)

மீனுட்சி துணை.

---

470. சுவடி நெ. 263 (B)

## தக்ஷிணுமூர்த்தி தீக்ஷாவிதி 200

ஏடுகள் 23; பக்கத்திற்கு 10 முதல் 11 வரிகள்.
செல்லரித்துள்ளன.

இதில், பிராணுயாமம், காந்தச் செந்தூரம் (ஏடு 6) காற்பத்தி முக்கோணம் (ஏடு 8) சிதம்பரச் சக்கரம் (ஏடு 10) பலவித நோய்களும் செந்தூரம் கொண்டால் தீரும் (ஏடு 17) சத்தி பூசை (ஏடு 20) முதலானவைகளுள்ளன.

*Beginning :*

வானத்தா வியபொதிகை மலையிலமர்
மகத்தான ரிஷியுடைய வாக்கினேர்மை
பானத்தா வியபூசை வாமபூசை
பரிவான சிவயோகம் பண்வோர்கேளு
மீனத்தா வியராசி போக வாழ்க்கை
விளங்குகின்ற கன்னிமுதல் வில்லுமேசஞ்
சேனைத்தா வியராசி துலாத்தின் ராசி
சென்மரா சிக்கருவைச் செப்புறேனே. (க)

செப்புகிறேன் நூலாததோர்க்குத் தேவி
முதல்வாசி சிவனோடு மந்திரங்க ளெல்லாம்சித்தி
ஒப்புகிறேன் குளிகைசித்தி வாதசித்தி
உயர்ந்துநின்ற காயசித்தி யுறுதியாகும்
தப்புகிறே னென்னளுந் தவரொட்டாது
சாதகமாய் வாசனையாய்த் தானேதூக்கும்
கொப்புகிறே னுலகத்தில் தசதீட்சைபெற்றுக்
கொடியசிவ யோகியெனக் கூறுவாறே. (உ)

*End :*

சாத்தியே மௌனத்தின் வாலைதீட்சை
சாதகமா யஞ்சுவித தீட்சையோதி
மாத்தியே யன்னமொடு பலகாரங்கள்
மாங்கிசங்கள் முட்டையோடு பொரித்துவைத்துப்
போத்தியே லேகியத்தை முன்னேவைந்துப்
புகழாக நெய்நிவே தனமும் செய்து
தேத்தியே தூபமோடு தீபம்காட்டித்
திறமாகக் கர்ப்பூரம் பணிமாறுவாயே. (௱௭)

பணிமாறு காலத்தே மணியிரேசை
பாங்கான சேகண்ட நாதவோசை
பணிமாறுங் காலத்தில் மௌனதோத்திரம்
பத்தியுறும் வாலைகையில் லேகியத்தையீந்து

பணிமாறுங் காலத்து. சகலசித்தும்
பரிவாகத் தான்வேணும் கையில்வாங்கிப்
பணிமாறும் காலத்தே பணிந்துதண்டம்
பண்ணுவாய் தீட்சைவிதி ஞானமுற்றே. (௫௦௧)

அகஸ்தியர் மூர்த்தி தீட்சாவிதி முற்றும். அகஸ்திய மூர்த்தி வாலை மனோன்மணி. மீனாட்சி துணை.

குறிப்பு : (1)

இந்த சுவடியின் முதல் ஏட்டில் "வைத்ய நூல்" களின் பெயர், மற்றும் இதற நூல்களின் பெயர், வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ள அவையாவன.

| | |
|---|---|
| பூரண சூத்திரம் | மரணகண்டி |
| மெய்ச் சுருக்கம் | சிவவாக்யம் |
| நீலகண்ட வைத்தியம் 50 | தத்துவ விளக்கம் |
| வால்மீசர் 100 | சச்சிதானந்தமாலை |
| கும்பமுனி 16 | சுந்தரமூர்த்தி அதிசயம் |
| கும்பமுனி 48 | சௌந்தர்யலஹரி |
| போகர் பூஜாவிதி | தட்சிணாமூர்த்தி பூரண சூத்திரம் 205 |
| ராமதேவர் சூத்திரம் | ,, மெய்ச்சுருக்கம் 50 |
| கும்பமுனி பூஜாவிதி | ,, முப்பு 50 |
| ,, ஞானம் 100 | ,, வைத்தியம் 50 |
| ,, கர்மசூத்திரம் 50 | ,, திரட்டு 48 |
| ,, ,, 300 | ,, வைத்தியம் 48 |
| ,, முப்பு 50 | ,, கர்மகாண்டம் 300 |
| ,, தீக்ஷாவிதி 205 | ,, கர்ம சூத்திரம் 150 |
| ,, ,, 48 | ,, செந்தூரம் 306 |
| ,, வகாரம் 100 | ,, வைத்தியம் 16 |
| ,, ,, 80 | ,, பூசாவிதி 200 |
| ,, பட்சணி | ,, தீக்ஷாவிதி 200 |
| கெருட பஞ்சாக்ஷரம் | |

| | |
|---|---|
| சத்யாரூடம் | ,, சுருக்கம் 100 |
| சித்திராரூடம் | ,, கலைஞானச் சுருக்கம் |
| மச்சமுனி 800 | 120 |
| ரோமரிஷி 25 | ,, ஆயிரத்திருநூறில் |
| சிவகீதை | சுருக்கம் 100 |
| சூடாமணி | ,, அஷ்டகர்ம |
| பஞ்சீகரணம் | பலதிரட்டு 80 |
| அதிதேவதை | நீலகண்டம் |
| ராகத்வேஷம் | வால்மீகர் 100 |
| சாதனசதுஷ்டயம் | போகர் பூசாவிதி |
| உபநிஷதம் | ராமதேவர் சூத்திரம் |
| சசிவர்ணபோதம் | ,, கருமானச் சுருக்கம் 30 |
| சரசாஸ்திரம் | ,, பலதிரட்டு 80 |
| திருமூலர் பட்சணி 50 | திருமூலர் குணவிதி |
| சுந்தரமூர்த்தி தண்டகம் | உபநிஷத்து |
| மட்சமுனி 800 | சசிவர்ணபோதம் |
| சித்திராரூடம் | சரசாஸ்திரம் |
| கருவு பஞ்சாட்சரம் | பராபரக்கண்ணி |
| வாலை பஞ்சாட்சரம் | சூதமுனி பாடல் |
| கடைக்காண்டம் | கருவூரார் பூஜாவிதி |
| ஞான உலா | சனன காரணம் |
| சிவகீதை | துரீய ஞானம் |
| சூடாமணி | உடலறி விளக்கம் |
| பஞ்சீகரணம் | மரணகண்டிகை |
| ராகத்வேஷம் | தத்துவ விளக்கம் |
| சாதனசதுஷ்டயம் | சௌந்தர்ய லஹரி |
| சூதமுனி பாடல் | கொங்கணர் 100 |
| சங்கராசாரியர் உலா | சட்டமுனி 100 |
| கொங்கணர் துரிய ஞானம் | ,, ஞானம் பின்னூறு |

கருவூரார் பூஜாவிதி
கொங்கணர்
கடைக்காண்டம் 500
ராமதேவர் பட்சணி 50
உடலறி விளக்கம்
மதன நூல்
கொக்கோகம்
வாதிவட்டம்
பகவத்கீதை

என்பன.

(2)

ஒரு தனியேட்டுக்குறிப்பில் "தட்சிணுமூர்த்தி என்கிற அகஸ்தியர் தீட்சாவிதி" என்றே காணப்படுகிறது.

---

471. சுவடி நெ. 264 (A)

## அகஸ்தியர் சூத்திரம் - நூறு

ஏடுகள் 20; பக்கத்திற்கு 7 வரிகள்.

சிறிது செல்லரித்திருக்கின்றது. பூர்த்தி. சாறுபூசப்படவில்லை.

(நீள × அகலம் 43 × 3 செ. மீ.)

இதில் துருசுச்சுன்னம், லிங்கக்கட்டுத்தைலம், உள்கருகரியுப்புக் கட்டு (ஏடு 3) சூதநீர் – வழலைக்கு இட பாகங்கள் – வங்கநீர் – கரியுப்பு – நாகவித்தை – நவலோகமாரணம் (ஏடு 7) கட்டுவகை ஜயநீர் – செந்தூர நீர் – மெழுகு நீர் – லிங்கக்கட்டு – வீரக்கட்டு (ஏடு 8) சாரக்கட்டு – உப்புக்கட்டு – செம்பு சுத்தி – உப்பு பற்பம் – உப்புச்செந்தூரம் – நவச்சாரக்கட்டு (ஏடு 11) – பெரியோர் மகிமை – நாகபற்பம் (ஏடு 13) துருசுவெள்ளை – சூதகளங்கம் (ஏடு 14) செம்பு சுத்தி - பாடாணசுத்தி - நூல்வகை – வெள்ளி வித்தை (ஏடு 16) – துருசுநீறு – வங்கபற்பம் – வெள்ளி வித்தை – அறுபத்துநாலு சரக்குக் கட்டத்தைலம் (ஏடு 18) மெழுகு–லிங்கக்கட்டு – லிங்கக்களங்கு முதலான முறைகளுள்ளன.

*Beginning :*

பூரணமாஞ் சுழிமுனை நடுக்கமலமீதே
புகழ்பெரிய மூலகண பதியேகாப்பு
காரணமா யெனையாண்ட பராபரனைப்போற்றிக்
கட்டாக வாதத்தி லட்சங்காப்புத்
தாரணமாய் படுபாதி குறுக்கிச் சொன்னேன்
சார்வாகவாயிரத் திருநூறு சூத்திரம்
வாரணமாய்க் குறுக்கிவைத்த சூத்திரம்நூற்றில்
வகைதோணக் கருக்குருவும் வகுத்தேன்பாரே. (க)

பாரப்பா கட்டுவகைச் செந்தூரங்கள்
பண்பான ஜயநீர் களங்கு மெழுகுசுத்தி
சீரப்பா வழலைக்கு இடைபாகங்கள்
திறமாக வுள்க்கருவு மேகமூலிக்
கூறப்பா மித்திரங்கள் தேவிபூசை
குறுக்குவழிப் பரிசினைகள் கோடாகோடி
ஏறப்பா தொந்தங்கள் விபரமாக
யியம்புகின்றேன் துருசுனுடச் சுன்னப்போக்கே. (உ)

*End :*

சாங்கமென்ற பூரணத்துள் கண்ணேரையிலே
சாதகமா யிருநேரம் பார்க்கவேணும்
பாங்கென்ற நாதவெளி வொளியுங்காணும்
பராபரனும் பரையுமப்போ பாசமாகும்
தீங்கொன்றும் நினையாதே யின்னூல் பார்த்தால்
சிவசிவா கர்த்தாவே யென்றுசொல்லு
சாங்கமென்ற வேதைசித்தி கற்பசித்தி
தட்டுண்ட குணம்போச்சு மனம்வேரூச்சே. (கூக)

மனம்வேறு பூரணமேயென்று பூண்டு
வாழவைத்த லல்லால்மற் றென்றுஞ்செய்யா
மனம்வேறு தட்டுண்டாலெல்லாம் போச்சு
மாய்கையுற்றுத் திரிந்தலேவான் மாள்வாரய்யோ
மனம்வேறு சாதகமாய் சாத்திரம்பார்த்து
மனம்பெலக்கக் குருவினிடம் வணங்கிநின்றால்
மனம்வேறு வாராது சித்திமுத்தி
வாய்க்குமே சூத்திரந்தான் நூறுமுற்றே (ள)

**தேவி சகாயம்**

**குறிப்பு :**

முதலில் 10 ஏடுகளும், நடுவில் 15 ஏடுகளும், கடைசியில் 12 ஏடுகளும் காலியாக விடப்பட்டுள்ளன.

---

**472.** சுவடி நெ. 264 (B)

## காலாங்கி நாயனர் சூத்திரம் - 36

ஏடுகள் 8. பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள்.

பூர்த்தி. சாறுபூசப்படவில்லை. செல்லரிக்கவாரம்பமாகியுள்ளது.

இதில் அஷ்டசித்தி – அகஸ்தியர் அண்டதைலம் – வங்கஞ் சாய்க்கதந்திரயன் (ஏடு 3) செங்கிறச் சட்டை முனிநாயனர் சிவயோக முறை (ஏடு 4) கோரக்கர் சித்தன் குடோரி – மச்சமுனி முறை – இடைக்காடன் சுத்தி (ஏடு 7) முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

சோதியுரு வாய்வதி லண்ட மெங்குந்
துகளில்பர வெளியாகிச் சொரூபானந்த
மாதியுரு வந்தமதா யளவில்லாத
வகிலசரா சரவுயிர்க ளனேத்துமாகி

ஆதியுரு வொருபாகம் பெண்ணோடானாய்
படர்ந்துநின்ற ஞானமென்னும் பரையோடேநேர்
வீதியுரு நால்வேத மதங்கள் பொங்கும்
விரிகதிரா மானைமுகன்பதங் கருத்தில்கொள்வாம் (க)

கொண்டப்பா மூலர்பதம் சிரமேற்கொண்டு
கொட்டினேன் வாதனூலா யிரந்தானப்பா
விண்டப்பா மலைநிகண்டெண் ணாயிரந்தான் சொன்னேன்
விரித்துரைத்தேன் தீட்சைவிதி யெழுநூறப்பா
கண்டப்பா சூத்திரந்தான் முன்னூறுஞ் சொன்னேன்
கற்பவிதி வாதமொடு கலந்துநூறாய்
பண்டப்பா சொல்லிவைத்தேன் சூத்ரம்முப்பதற்குள்
பாடினேன் நூல்மறைப்புப் பலவுந்தானே (உ)

*End :*

கொல்லுவது புண்ணாக்கன் மறைப்பைக்கேளு
கொடுந்துருசு வித்தையதில் மறைத்தானப்பா
வெல்லுவது நாதவிந்து மித்திரமாமப்பா
விள்ளாதே ரோமரிஷி மறைப்பைக்கேளு
கல்லான வெடியுப்பு சயநீர் மார்க்கம்
கடுஞ்சுறுக்கஞ் சாங்காய்ச்சல் கம்பிரோம
மல்லவே யுருக்கிவிடச் சுன்னமாகும்
பூனீறு வீரமுடன் பூரம்போடே. (௩௪)

போடந்தத் துரிசுமுத லொன்பானுக்கும்
போடுமுன்னே குடோரியுட னெல்லாங்கட்டும்
நீடுவது கருவூரான் கொங்கணர்தான்
நிகழும்நன் னூலெந்நூல் முறைநாலுக்கும்
கூட்டொன்றும் மறைப்பொன்றும் புகலக்கேளு
போகரோன் னூல்முறையை வழலைசெய்து
சூட்சந்த வெடியுப்பு நீரிற்றோய்த்து
துடியாக ரவிமுகமண் டலந்தான்போடே. (௩௫)

போடப்பா வெள்ளகத்திச் சவுக்காரந்தான்
பொன்னுன தெமை (சுதை) போல வெளுத்துக்கட்டும்
கூடப்பா வண்டநீர் தன்னிற்றேய்த்து
கொடு ரவியிற் போட்டிடவே கொடியசுன்னம்
மூடப்பா சகலதுறைக் கெல்லாமாதி
முச்சுவிட்டுப் பேசாதே முப்பத்தாறில்
சூடப்பா தத்துவனூல் அறியச்சொன்னேன்
சூத்திரமுன் பலவாமோ சோதிமுத்தே. (௩௬)

*Colophon :*

குருபாதமே துணை: காலாங்கி நாயனுர் போகருக்கு அருளிச்செய்தது. 36 முடக்கருவி போலே இந்த 36 பாட்டு 7 லட்சம் கிரந்த முதல் சகல நூலுக்கும் கருவி நூல் என்றவாறு. இந்த நூல்கள் புறக்கருவியாம். தத்துவநூல் என்றதற்கு "அற" மென்றவாறு. பூரணம் – பாலாபரமேச்வரி ரட்சிக்கவும்.

---

**473.** சுவடி எ. 265 (A)

## வைத்திய அட்டவணை

ஏடுகள் 17. பக்கத்திற்கு 6 முதல் 8 வரிகள்.

செல்லரிக்கவாரம்பித்துள்ளது.

(நீள × அகலம் 30 × 3 செ. மீ.)

இதில் வைத்யர் சம்பிரதாயம், கிராணீகபாடம், சந்தனுதித் தைலம், கும்மிப்பாட்டு (முக்கூட்டெண்ணெய்) சூதிகா வாய்வுக்கு (ஏடு 5½) மூலம், உட்காய்ச்சலுக்கு நெய், ஊதுபாண்டு கஷாயம், ஆரியன் கவி (ஏடு 6½) விஷத்திற்குத் தைலம், விஷ்ணுத் தைலம் (ஏடு 9) அதிசாரக் கழிச்சல், சூதகவாயுச் சூரணம் – மாதளங்காய் வடகம் (ஏடு 11) மதனகாமச் சூரணம், அளைப்பு வித்தை – ரொட்டி மருந்து – பட்டிவைப்பு – கண்மாலைக்கு – குழிவிழுந்த

புண்ணுக்கு (ஏடு 13) – ரத்திப்பிரமியத்திற்கு வத்தி – ஆரியபுத்ரன் நடகாயம் (ஏடு 14) மாதளங்காய் லேகியம், காந்தாதி லேகியம் (ஏடு 15) கொடிமிந்திரிச் சூரணம் – கெற்ப நூல் (ஏடு 16) முதலானவைகளுள்ளன.

*Beginning :*

தேசமெங்கும் வைத்தியராய் பையுந்தூக்கிச்
செப்புகின்ற மாந்தர்களே செப்பக்கேளீர்
பாசமுட னறிவெங்கே தாதுவெங்கே
பார்த்தெழுந்த அவிழ்தமெங்கே குறிதானெங்கே
நேராக நின்றநிலைத் தியானமெங்கே
நீதமுடன் பண்டிதரே யிந்தநூலை
பாரிலுள்ள வைத்தியர்தா னெவரானாலும்
பாராம லெந்தனுக்குப் பகருவீரே. (க)

வாகடத்தின் பயனறியார் நாடிகாணார்
வலதுகையைத் தான்பிடித்து மறுவார்த்தைசொல்லான்
பேர்கிடக்கப் பேர்சொல்வான் வியாதிகாணான்
பிணிபோச்சுதென்று சொல்வான் தீர்க்கமாட்டான்
ஓகோகோ வைத்தியரா யிவர்களெல்லாம்
ஒருகாலும் மோட்சமில்லை நரகந்தானே. (உ)

*End :*

பாவையர் கை காலசரும் பாங்கு கேள் – தேவையில்லை
யன்னமிதி விதற்குமன பிப்பூவுந்
தொல்லை நெய்தற் கிழங்குச் சூட்டியே – நல்ல
ஆவின் பாலிலிதைக் கொடுக்கப் பாவை நவமதாகுலைவலீ
காணிலரசந் தோலுங் கோலி மருதந்தோல் – நீரில்
வாகாகவே யரைத்துக் கருதாவின் பாலிலிதைக்
கண்டு கொடு பருகப் பத்தாகும் – மாதமதில்
பாவையரே வலிக்கில் எற்றுகுஞ் சர்க்கரை யிலுப்பைப்பூ

கொற்ருக நீரிலரைத் தாப்பாலில் – நிச்சயமாய்த்
தானருந்தப் பெருமதித்தோற்கு நலம்பேசுவேன் கூறும்
அரக்குல நிலக்குமிழ்வேர் அரைத்துக்கரைத்து விரைக்
குலக்குடிக்கப் பிள்ளைவீழும் வரைக்கும் – அரனுரைக்க
அறிந்துமுனி வோருரைத்த திறனுகு மென்தனைச்செப்பு

---

**474.** சுவடி நெ. 265 (B)

## பால வாகடம்

*ஏடுகள் 59. 18 முதல் 67 வரை.*

*பக்கத்திற்கு 7 வரிகள் சுத்தமான பிரதி*

இதில் மாதந்தோறும் குழந்தைகளுக்கு உண்டாகும் நோய்கள் – பெண்களுக்கு முதற்திங்கள் (ஏடு 21) வீங்குபுள் (ஏடு 23) மாந்தவரலாறு (ஏடு 27½) அவபத்திய மாந்தம் (ஏடு 28) – போர் மாந்தக் குணம் – பால் மாந்தம், நீர் மாந்தம் (ஏடு 29) செரியா மாந்தம் – கட்டு மாந்தம் (ஏடு 30) தலை மாந்தம் – விஷ மாந்தம் – வரள்மாந்தம் (ஏடு 31) ஊது மாந்தம் – மாந்த சந்நி – வலிப்பு மாந்தம் – வலிப்பு சந்நி – போர் மாந்தம் – நீராமைக் குணம் (ஏடு 32) சளிமாந்தம் – கணம் – மகாகணம் (ஏடு 33) – அந்தகக்கணம் – போராமைக் கணம் – விஷகணம் – நீர்க்கணம் – மூலகணம் – மந்தார கணம் – முக்கு கணம் (ஏடு 35) ரெத்த கணம் ஆமகணம் – எரிகணம் - சுழல்கணம் - சுழிக்கணம் - கணச்சந்நி – அக்கரக்கணம் (ஏடு 37) குண்டியக்கரக்கணம் – ஊதுகாமாலை – மஞ்சட்காமாலை – கீரி நோய் – ஆமக்கழிச்சல் (ஏடு 38) – மீளாத அய்யச் சுரம் – திருஷ்டி கரப்பான் வகை (ஏடு 39) சேத்துமக் கரப்பான் – எழுநாயறு – பேய்மாந்தம் – முட்டடைப்பான் (ஏடு 41) செரியா மாந்தம் – கட்டு மாந்தத்திற்கு – போர் மாந்தத்திற்கு (ஏடு 49) – வாந்திக்கு (ஏடு 50) மாந்த கணம் – பால்குறிசைக்கு (ஏடு 50½) – கீரிப்பூச்சிக்கு – ஆமக்கடுப்பிற்கு – சுரத்திற்கு – ஆமசுரத்திற்குநெய் (ஏடு 53) கழிச்சலுக்கு –

கரப்பானுக்கு – செங்கரப்பானுக்கு – கரப்பானுக்கு (ஏடு 55) ஆமச்சுரத்திற்கு – குளிர் காய்ச்சல்கடுப்பிற்கு உள்ளியாமணக் கெண்ணெய் (ஏடு 58) – பேராமம்அஸ்திச் சுரத்திற்கு – விஷ மாந்தத்திற்கு (ஏடு 61) – பழஞ்சுரத்திற்கு – மாந்த கணத்திற்குக் குடிநீர் (ஏடு 63) – பாலகுளிகை – கணத்திற்கு (ஏடு 64) பேதி மாத்திரை – ஏலாதி உருண்டை – ராமபாணக் குளிகை – கருங் கிரந்தி நோய்க்கு மருந்துகள் முதலானவைகளுள்ளன.

*Beginning :*

குட்டுணியை முக்கண்ணனை குண்ணேற்கு மூத்தோனை
தொட்டத்தவசு பெற்ற முச்சலியை – முட்ட
வழியிலிறுக்கு மதவாரணனை
தொழுதெடுத் தென் துயர். (க)

பிறந்த நாள்தொட்டு வளர்பிள்ளைக்குத்தான்
பேசியிடும் ரோகங்கள் பிறக்கும்வாறு
சிறந்ததொரு தாய்தந்தைக் குள்ளரோகஞ்
சிசுமேலே தோன்றுமிது சிறப்பதாக
அறந்தழைக்கும் மருத்துவச்சி யாலேதீரு
மதுவன்றி மருந்தறிவா ரதனல்தீருந்
திறந்தெரிந்து பார்த்துவிடுஞ் சிறுபிள்ளைக்குச்
சீராகவரும் நோய்கள் செப்பக்கேளே. (க)

செங்கிரந்தி கருங்கிரந்தி செவ்வாப்புத்தான்
தீயான கரப்பானும் அரையிற் காணும்
அங்கமெல்லாஞ் செவ்வாப்பு வந்துகாணும்
அதுவன்றி கருங்கிரந்தி தொண்டைக்கட்டும்
புண்டோரம் பேயணுகல் பட்சிதோஷம்
பின்னும்வெகு ரோகங்கள் பிரித்துச்சொல்ல
அங்கரிது குழந்தைபிணி யறிந்துதீர்க்க
யாராலுமாக தென்றரன் சொன்னரே. (உ

*End :*

### வேறு கணத்திற்கு

| | | | |
|---|---|---|---|
| சாதிக்காய் | — | விராகனெடை | 1¾ |
| சாதிப்பத்திரி | — | ,, | 1¾ |
| கிராம்பு | — | ,, | 2¾ |
| கோரோசனை | — | ,, | 1 |
| ஏலம் | — | ,, | 3 |
| அதிவிடயம் | — | ,, | 1½ |
| கோஷ்டம் | — | ,, | 2 |
| அதிமதுரம் | — | ,, | 2½ |
| லவங்கப்பட்டை | — | பலம் | ¾ |
| சண்பகப்பூ | — | விராகனெடை | 4 |
| சீரகம் | — | பலம் | ¾ |
| வெந்தியம் | — | ,, | ¾ |
| கடுக்காய் | — | ,, | ¾ |
| பரங்கிப்பட்டை | — | ,, | ½ |
| கடுகரோகிணி | — | வராகனெடை | 1 |
| ஓமம் | — | ,, | 1 |
| மாசிக்காய் | — | ,, | 2½ |
| தாளீசபத்திரி | — | ,, | 1 |
| சிற்றரத்தை | — | ,, | ½ |
| திப்பிலி | — | பலம் | ¼ |
| கம்பிப்பிசினி | — | வராகனெடை | 1½ |
| கருஞ்சீரகம் | — | ,, | 1½ |
| சிற்றாமணக் கெண்ணெய் | — | சேர் | 5 |

இந்த இருபத்துநாலு மருந்தும் வெவ்வேறே இளம் வறுப்பாய் வறுத்துப்போட்டு வெய்யிலில் கிண்டிவைத்துக் கொடுக்க சர்வ கணமுந் தீரும்.

**கருங்கிரந்திக்கு**

பேணுனிரத்தன்காளவா யுகந்தபாலுந்தான்குடிக்க
முணுக்கரியன் கற்றற்றின்முதற் சாரவுரிச்சாறுசமனுய்
நாணுவசம்பு முள்ளியுமாய் நறுக்குவிளக்கெண் ணெயுமுடனே
ஆணுவெரித்துக் குடித்திடுநீ அறுமே கரியக்கிரந்தியுமே

குக்கிலுமகிலுங் கூட்டிக் குராசானி வோமன்ருனுஞ்
சிக்கெனச் சாம்பிராணி சீலையுங் கூட்டிப் பின்னைத்
தக்கதோர் வேளைவேருஞ் சாறணை தானுங்கொண்டு
அக்கணம் புகைச்சல் சன்னி மாந்தமு மகலுந்தானே.

---

## 475. சுவடி நெ. 265 (c)

## வைத்திய அட்டவணை

ஏடுகள் 31 (78 முதல் 109 வரை) வரிகள் 6 முதல் 8 வரை.

இதில், முதல் 3 ஏடுகளில் பாலாரிஷ்டம் செய்யுட்கள் காணப்படுகின்றன. பின்னர், வல்லாதி லேகியம், வேப்பம் பட்டைத் தைலம் (ஏடு 74) அரையாப்பிற்கு (ஏடு 76½) அண்டவாதத் தைலம - பேதி எண்ணெய் - தேங்காய்க் கடுகு (ஏடு 78) பிள்ளைகள் பேராமத்திற்கு - செந்தூரம் - விஷ மருந்து (ஏடு 78½) யோகராஜச் சூரணம் (ஏடு 81) மேக ரணங்களுக்கு-குன்மத்திற்கு - ஆனந்தநாதர் அருளியது - மேகத்தெண்ணெய் - பறங்கிப்பட்டைச் சூரணம் (ஏடு 88) கோழிச் சூரணம் - நஞ்சுமுறிய (ஏடு 92) கஸ்தூரி அகவல் - தன்வந்தரி வடகம் - உடும்புச் சூரணம் (ஏடு 94) சிவனுமவதி லேகியம் (ஏடு 94½) வாதத்திற்கு மருந்து - செண்பகமொட்டுச் சூரணம் - போசனக் குளிகை - சலமஞ்சரி - கொடிவேலி வேர் தைலம் (ஏடு 97½) அசுவகந்தி நெய் - வில்வாதி லேகியம் - லிங்கக்கட்டு - திராவகம் - பித்த காசத்திற்கு (ஏடு 103) பேய்ப் புடலெண்ணெய் - சீநாதி - மதன லேகியம் - செம்பீராதி - சாரக்கட்டு - முதலிய மருந்து வகைகள் காணப்படுகின்றன.

*Beginning :*

ஒன்றுந்திங்கள் சாமுண்டி யென்னும்
 பேய்வந்தா லுடலை முறுக்கும்
நன்றாய்க் காய்ச்சல் வயிற்றுவலி
 நாசினீரு நலம் மாற்றுங்
குன்றுதன தல் பலிகேளாய்
 கோழி யிறைச்சி யொட்டடையும்
ஒன்றாய்ச் சோறுங் கறிவகையும்
 முச்சந்தியினில் வைப்பீரே. (க)

* * *

ஈராருந்திங்களுக்கு இந்திராணி யென்னும்பேய் வந்தால்
ஏராமொழியும் வாய்குன்றுமிருகண்ணீருந் ததும்பிநிற்கும்
பூனைய்க் கழியும் வயிறுப்பும் போதாயிதற்குப் பலிகேளாய்
காராருந்து மடை சோறுங் கரிய வேம்பி னடிவைய்யீர்.
(கஉ)

## மேல்தூப வகை

ஒன்றுந்திங்கள் குருந்தூப முள்ளி வசம்பும் மயிலிறகு
 ஓமங்கடுகு வகைதூபம் உயரிரெண்டாந் திங்களுக்கு
கண்டார்பூனை மயிர்வடமுங் கரியகோழி யிறகுமஞ்சள்
 கருஞ்சீரகமிவ் வகைதூபங் கருது மூன்றுந்திங்களுக்கு
மன்றுவேப்பந் தோல்கம்பளி மாட்டுக்கொம்பு வசம்போமம்
 வகைசேர்தூப மிந்தவகை வருமோர் நாலாந்திங்களுக்கு
கொண்டார் திட்டிலிரைமயிருங் குதிரைக்குளம்பு
 பன்னிவிட்டை
 கோழியெச்சந் தூபமெனக் குறித்தாரிந்தப்புவிமீதே.
(க)

* * *

இருநான்கொன்று திங்களுக்கு மிடமண்டத்தோல்
வசம்புபெருத்
தூளிதாம் வேலிப்பருத்திசின்னி யியல்பாம்
பத்தாந்திங்களுக்கு
பெருமை வசம்புவெள்ளுள்ளித் தோல்வளர்வேப்பிலையும்
பெருங்காயம்
வாகாமஞ்சு வன்னவிரை வளர்பத்தொன்றாந்
திங்களுக்கு
மருநாய்க் கடுகுவிழாவிலையும் வசம்பும் வடமும் மயிலிறகு
மாதேயிந்த வகைதூபம் வரிசையுடனே செய்திடுவீர்.
(௩)

* * *

## வல்லாதி லேகியம்

| | |
|---|---|
| எள்ளு சேர் 1 | சேங்கொட்டை சேர் 1 |
| நெற்பொரி சேர் 1 | வெல்லம் சேர் ¾ |

எல்லாம் சேர்த்துக் கொட்டை வறுத்து யிடித்துப் புன்னைக் கொட்டையளவு சாப்பிடவும்.

## தீரும் வியாதிகள்

மேகவூறல், மேகப்பிடிப்பு, நீர்க்கடுப்பு, கிரிச்சம். 40 நாட்கள் உட்கொள்ளவும்.

பத்தியம் :- புளி, புகையிலை, குளிர்ந்த நீர் விடவும். துவரம் பருப்பு, பச்சைப்பயறு, முருங்கைப் பிஞ்சு, கத்திரிப்பிஞ்சு, பசுவின் மோர், நெய், வெள்ளாட்டு உப்புக்கண்டம்.

முழுக்கு – விளக்கெண்ணெய்.

* * * *

*End :*

**சாரக்கட்டு**

| | | |
|---|---|---|
| மிளகு | — வராகன் | 3 |
| கற்பூரம் | — ,, | 3 |
| அபின் | — பணவெடை | 3 |

மேலரைத்து சாரம் - பலம் 2க்கு கவசித்து உலர்த்தி டி அவலரக்கு பலம் 2 கொண்டுவந்து, அந்த அரக்கை விளக்கில் வாட்டிப் பின் கட்டிக்குக் கவசிக்கவும். டி ஈனுக்கிடாரி சாணி கொண்டுவந்து மெழுகுபோலரைத்துத் துணியில் தடவிக் கவசித்து, உலர்த்தி, வெள்ளீயம் புலம் 3 கரண்டியலுருக்கி மேல் கவசம் கருக வாட்டியெடுத்துக்கொள்ளவும். பூனீர் பலம் 2 வெடியுப்பு பலம் 2. ... ...

---

**476.** சுவடி நெ. 266

## அனுபவ வைத்திய அட்டவணை

ஏடுகள் 95. பக்கத்திற்கு 5 முதல் 6 வரிகள்

செல்லரிக்கவாரம்பித்துள்ளது. சாறுபூசப்படவில்லை.

எழுத்து சுத்தமாகவுள்ளது.

( நீள × அகலம் 17½ × 3 செ. மீ. )

இதில் மேகக்கிரந்தி, அரையாப்பு, மேகரணம், கர்பிணி களுக்குக் கொடுக்கும் எண்ணெய் - ரத்தப்பிரமேகத்திற்கு - கோடாசூளி - சூலைவாயுவிற்குச் சஞ்சீவி எண்ணெய் - விரை வாதத்திற்குத் தைலம் - மேகரணத்திற்குத் தடவத்தைலம் - கிரந்தி. அரையாப்பு, புண், ஊரலுக்குச் சாம்பிராணித்தைலம் - (ஏடு 9) அப்பிரகச் செந்தூரம் (ஏடு 10) லிங்கப் பதங்கம் சூலைக் கட்டுக்கு (ஏடு 11) இஞ்சி ரஸாயனம் (ஏடு 15) கடுங்காரச் செய நீர் (ஏடு 17) பிரமியத்திற்கு மருந்து (ஏடு 21½) அஷ்ட குன்மத்திற்கு மருந்து (ஏடு 21) கணத்துக்கு எண்ணெய் (ஏடு 22½) கணத்துக்கெண்ணெய் (ஏடு 23½) மேகத்திற்கு

மருந்து – வீரமெழுகு, (பட்ச வாதம், பாரிச வாதம், பக்க சூலை, குன்ம வாயு, மேகக் கிரந்திக்கு) – சூத மெழுகு – (சூலை அரையாப்பு, கிரந்தி, வாதம் 80க்கு) (ஏடு 23) அப்பிரகச் சத்து எடுக்கும் விபரம் (ஏடு 24) கெர்ப்பிணிக்குக் கொடுக்கும் நீலி யெண்ணெய் (ஏடு 29½) அய அப்பிரகச் செந்தூரம் (ஏடு 31) போகம் வளருதல் மருந்து (ஏடு 31) தாக்ஷிணைப்பொடி (தந்த வாயுக்கு) (ஏடு 33) லிங்கக்கட்டு (ஏடு 35) தாளகம் சுரத்திற்கு (ஏடு 36) கருங்கிரந்தி மாத்திரை மூக்கில் ரணம், சூலைக்கு – கிரந்தி யெண்ணெய் (ஏடு 38) சயம், சுவாசகாசம், இருமலுக்குத் தாளகச் சுண்ணம் (ஏடு 39) அதிநசிய மாத்திரை புகை விபரம் (ஏடு 40) பேதியெண்ணெய் – அண்டவாயுவிற்கு மருந்து (ஏடு 43) நீரிழிவிற்குக் காரீய பற்பம் (ஏடு 44) கிரந்தி, அரையாப்பிற்குக் குழித்தைலம் (ஏடு 45) தாமிரச் செந்தூரம் (ஏடு 47) சூலைக்கட்டு, மேக வாயுவிற்கு லிங்கப் பதங்கம் (ஏடு 49) வீரமயனம் சூலைக்கட்டுக்கு (ஏடு 51) தாளக பற்பம் – பேதியெண்ணெய் – சல நோய்க்கு உச்சிதம் (ஏடு 63) சல ரோகத்திற்குச் சந்தனாதி குளிகை (ஏடு 64) திரிபுராதிச் செந்தூரம் (ஏடு 66) ஈச்வர குளிகை (ஏடு 71) பீனிசம், ஈளை, உளமாந்தைக்கு எண்ணெய் (ஏடு 72) லேகியம் – நெய் – தேத்தான் கிருதம் – பட்சவாதம், சூலைக்கட்டுக்குச் சாம்பிராணித் தைலம் (ஏடு 76) தாதுபுஷ்டிக்கு மருந்து (ஏடு 77) நெல்லிக் காய் லேகியம் (ஏடு 78) தாதுபுஷ்டிக்கு (ஏடு 79) பிரகஸ்பதி சூரணம் (ஏடு 92) மூலவாயு லேகியம் – சொறி, சிறங்குத் தைலம் (ஏடு 93) சஞ்சீவித் தைலம் (ஏடு 94) முதலான முறைகள் காணப்படுகின்றன.

புஸ்தகம் சேர்க்கும் விதம் :—

*Beginning :*

நிண்ண ளெவதற்குநேர் சரித்துப்பாதியதுங்
குண்ண வளவிற் பாதிக் கூடியதுஞ் – சொன்னதுவீர்
மையத்த மூரிடவே வாழ்வுதருங் கல்வியுரும்
பொய்யல்ல புஸ்தகத்தைப்பூட்டு.

மேகக் கிரந்தி, அரையாப்பு, மேகரணம், கெர்ப்பிணிகளுக்குக் கொடுக்கும் எண்ணெய் :-

கற்கம்

| | |
|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் சேர் 1 | மிளகு பலம் ½ |
| இலுப்பைப்பட்டைச் சாறு சேர் ½ | சீரகம் பலம் ½ |
| மாம்பட்டைச் சாறு சேர் ½ | லவங்கம் வராகனெடை 1 |
| நாகப்பட்டைச் சாறு சேர் ½ | லவங்கப்பட்டை வராகனெடை 1 |
| பூவரசம்பட்டைச் சாறு சேர் ½ | |
| வெங்காயச் சாறு சேர் 1 | செங்கதாரிப்பட்டை வராகனெடை 4 |

இதுவெல்லாம் அரைத்துக் கரைத்துத் தீபாக்னியாக எடுத்து, மெழுகு பதத்தில் வடித்துக்கொண்டு, ஒரு வேளைக்கு ⅓ சேர் எண்ணெய் வீதம் 3 காலமே கொடுக்கவும்.

இதற்குத் தீரும் வியாதிகள் :-

மேகக் கிரந்தி, அரையாப்பு, மேகரணம், கெர்ப்பக்காரிக்குக் கொடுக்கவும். சிரங்குகளுக்குக் கொடுக்கவும் சிறங்குமேல் தடவவும். தீரும். பத்தியம் :- உப்பில்லாமல் கஞ்சிபண்ணிக் கொடுக்கவும். மறுபத்தியம் :- உப்பு வறுத்துக் கூட்டிக் கொள்ளவும். பிள்ளைக்குக் கருங்கிரந்திக்குக் கொடுக்கவும். சொறி, சிறங்கு மேல் தடவவும். வாயுவிற்கு :- எண்ணெய் வாட்டிப் போடவும்.

* * *

தாளகம் பலம் ½ கத்தாழையடிமரத்துப் பால் கறந்து அதில் 4 நாள் ஊறப்போட்டு; மறுபடி, அந்த வேரைத் தானேயரைத்து ஒரு கொட்டாங்கச்சியில் சரிமட்டம் அடைத்து, ஒரு செங்கல் குடைந்து, மேல் இந்த தாளகம் வைத்து மேலே

யிந்தக் கொட்டாங்கச்சி மூடி எரிக்கவும். உருகிறபதம் பார்த்து எடுக்கவும். சுக்கில் வைத்துக் குன்றிமணிப்பிரமாணம் கொடுக்கவும். சுரங்கள் தீரும். பத்தியமாக இருக்கவும். சயம், சுவாசம், காசத்திற்குக் கொடுக்கலாம்.

*   *   *

## பீனிஸத்திற்குச் சஞ்சீவித் தைலம்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் சேர் 4 | அல்லியிலைச் சாறு சேர் $\frac{3}{4}$ |
| பழச் சாறு சேர் $\frac{3}{4}$ | கத்தாழைச் சாறு சேர் $\frac{3}{4}$ |
| வெங்காயச் சாறு சேர் $\frac{3}{4}$ | சசம்பேலிப்பூ வராகனெடை 2 |
| ஓரிலைத்தாமரை சேர் $\frac{3}{4}$ | சடாமாஞ்சில் வராகனெடை 2 |
| நெல்லிக்காய்ச் சாறு சேர் $\frac{3}{4}$ | ஏலம் வராகனெடை 2 |
| கீழாநெல்லிச் சாறு சேர் $\frac{3}{4}$ | சிறுநாகப்பூ வராகனெடை 2 |
| பொன்னுங்காணிச் சாறு சேர் $\frac{3}{4}$ | கோஷ்டம் வராகனெடை 2 |
| வில்வயிலைச் சாறு சேர் $\frac{3}{4}$ | மாசிக்காய் வராகனெடை 2 |
| கையாந்தகரைச் சாறு சேர் $\frac{3}{4}$ | கடுக்காய் வராகனெடை 2 |
| ஆரைக்கீரைச் சாறு சேர் $\frac{3}{4}$ | தான்றிக்காய் வராகனெடை 2 |
| வல்லாரைச் சாறு சேர் $\frac{3}{4}$ | தாளீசபத்திரி வராககனடை 2 |

இவைகளையெல்லாம் சாறுவிட்டு அரைத்து, எண்ணெயில் கலந்து எரித்து, மெழுகு பதத்தில் வடித்துக்கொண்டு 4 நாளைக்குக் கொருக்கால் முழுகிவரவும். தீரும் வியாதிகள். காலெரிவு, கையெரிவு, மேகரோகம், பீனிசம், கண் புகைச்சல் முதலியன.

**குறிப்பு :**

இதில் காணப்படும் மருந்து முறைகள், அண்ணாசாமி, சிதம்பரம் பிள்ளை, சூக்ஷ்ம நாராயணன், ஞானியார், பாப்பார் இவர்கள் கையாண்ட முறைகளாகும்.

477. சுவடி செ. 267 (A)

## வைத்தியத்திரட்டு

ஏடுகள் 62. பக்கத்திற்கு 5 முதல் 6 வரிகள்.

மிகச் சிதிலம். அபூர்த்தி.

(நீள × அகலம் 27 × 2½ செ. மீ.)

இதில், காணப்படும்முறைகள் செய்யுள் வடிவாகவே காணப்படுகின்றது. மகராச வங்கச் செந்நூரம் (ஏடு 17) செயநீர் (ஏடு 19) வல்லாரை நெய் (ஏடு 25) கெந்தித் தைலம் (ஏடு 28) பரங்கிப்பட்டைப் பதங்கம் (ஏடு 32½) சிவனார்வேம்பு (ஏடு 39) தாகத்தையடக்க (ஏடு 42½) விந்துபலக்க (ஏடு 43½) சுரங்கிஷ மாத்திரை (ஏடு 47) நவனசோதித் தைலம் (ஏடு 49½) தாமிராதி மாத்திரை (ஏடு 53) தாரக்கொண்டைக் கற்பம் (ஏடு 56) பூரண சந்திரோதயம் (ஏடு 58) அக்கினிகுமார மாத்திரை (ஏடு 61).

*Beginning :*

வில்வ வேரும் கரந்தை தூதளையின வேரும் சடமாய்குமிளின் வேரும் தளைத்த ஆலரசு யித்திதிட்ட .. விழுது தானும் செம்முள்ளி வேரும் கிளா வேர் வட்டமாத்திருப்பி வேரும் வரிசையா......

*End :*

அக்கினிகுமாரன் மாத்திரை

தூளாகும் வியாதியெல்லாம் குமரியாலே
சொல்லுகிறேனரப் பொடியு முருக்குச்செம்பு

வீளாகு வெங்கலமு மனேசிலை வெங்கார
மின்னலுறு மரிதாரம்திப் பிலியும்நேராய்

கூளாகுங் குமரியுடசாற்றை விட்டுக்
குமுறவே மூன்றுநாளாட்டி வாங்கி

சூளாகுஞ் சட்டிக்குள் ளிதனைவைத்து
சட்டிக்கு மேல்சட்டி கொண்டுமூடே. (௬௧௨)

முடியே சீலைசெய்து மண்ணுஞ்சேர்த்து
முறையோடே யடுப்பேத்தி மூன்றுநாள்தான்
நீட்டியே தீயெரிக்கச் செந்தூரமாகும்
நினைவாகச் செந்தூர மெடுத்துக்கொண்டு
நாட்டியே நாலிலொரு பலந்தான் வெட்டி
உத்தமனே கோமியத்தில் நனையப்போட்டு
நாடியே நாவிதனையெடுத்துக் கொண்டு
நலமாக மருந்துவகைநயந்து கேளே. (௩கங)

கேளப்பா திப்பிலியு மதனின் மூலம்
கெடியாக யிரண்டுபல மதனைத்தூக்கி
நீளப்பா வெள்ளுள்ளித் தைலம் கொண்டு
நீயிட்டுச் செந்தூரங் கூடயிட்டு
நாளப்பா பணவெடையாய் குளிகைகட்டி
நலமாக நிழலிலே யுலர்த்திக்கொண்டு
கேளப்பா குளிகையொன்று வுள்ளிச்சாத்தில்
கொடுத்திடவே சன்னிபதி மூன்றும் போகும். (௩கச)

போகுமய்யா............

---

**478.** சுவடி நெ. 267 (B)

## அகஸ்தியர் பதினாறு (ரஸவர்க்கம்)

ஏடுகள் 4. பக்கத்திற்கு 7 வரிகள். சுத்தப் பிரதி. பூர்த்தி.

இதில், ரஸமணி, மால்தேவிபற்பம் – ரஸக்களங்கு – பாஷாண முறைகள் சரக்கு சத்ரு மித்ரு முதலானவைகள் காணப்படுகின்றன.

*Beginning :*

ஆதியென்ற மூலமுதல் கணபதியின் பாதம்
அடிதொழுது சூத்திரந்தான் பதினாறப்பா
தேடியே யண்டபிண்ட மெல்லாம் சேர்த்து
சீராகப் பாடியது பன்னூலப்பா
பாடினதோர் பூரணசூத் திரத்திற்காகப்
பதிவாகப் பாடிவிட்டேன் சூத்திரத்தி (லந்தநூலை)
நாடியே நந்தீசர் சொன்னவாக்யம்
நன்றான மூலமுதல் கணபதியே காப்பாம். (க)

*End :*

காணேதான் னூத்திலேதான் மெய்யதாகும்
கருவதுதா னன்பதிலே மெய்யதாகு
மானேதா னிந்தநூல் கரைகாண்பிக்கும்
பூட்டியதோர் பூட்டெல்லா மஞ்சில்காணும்
தோணவே கருக்குருவும் வழித்துறையும்
சுகமாகும் வேதைவழி யெட்டேயாகும்
பேணவே பதினாறு மிதுவேயாகும்
பலமாகும் அகஸ்தியரச வாக்கியம்முத்தே. (கசு)

*Colophon :*

அருணகிரிதாசன் என்ற பெயரும் காணப்படுகிறது. சுவடி எழுதியவரின் பெயராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

---

**479.** சுவடி நெ. *267* (C)

## அகஸ்தியர் ஐந்து

ஏடுகள் *2.* பக்கத்திற்கு *7* வரிகள்.

இது *143*ம் பக்கத்தில் காணப்படும் சுவடி நெ. *236* (H)ன் மறுபிரதியாகும்.

---

480. சுவடி நெ. 267 (D)

## பலதிரட்டு

ஏடுகள் 10. பக்கத்திற்கு 7 வரிகள். சிதிலமாயுள்ளது.

இதில், துருசுக்குரு, அண்டவாத மருந்து – கலிக்கம் – பாஷாணக்கட்டு முதலான முறைகள் தனித்தனியாகக் கொடுக்கப் பட்டுள்ளன.

*Beginning :*

ஆமிள்ள துருசொன்று சொல்லக்கேளு
ஆகாகா யிதன்கருக்கை யாருங்காணர்
வாமிந்த வங்கத்தைத் தகடுபோட்டு
வளமாகத் தா(ளகமே) பலமேயொன்று
வேமிந்த வீரங்கால் பலமேபூசு
வேருந்த சிவனானு... பூசே
காமிந்த வரசுடைய பட்டைவாங்கிக்
கலக்கியதைப் பரப்பின்பதின் வேர்த்தோல்மூடே. (க)

*End :*

பாருந்தின மெழுகு...பின்பு
பானையோடு சுண்ணாம்புச் சீலைசெய்து
காருஞ்சி லாசத்துச் சுண்ணம்மேலே
காணவொரு சீலையெருக்கன் சாறுவிட்டுத்
தாருநீ வங்கமது வுருகும்போது
தனிமுக்கால் துவைத்தெடுத்து நா...
வேருநீ யுள்புகுந்து செம்புசாகும்
வேறேயில்லை யிதுகுருவே விளம்பினேனே. (எ)

* * *

**கலிக்கம்**

| | |
|---|---|
| தும்பையிலை | உப்பு |
| துளசியிலை | மிளகு |

இவைகளை நசுக்கி மூக்கு, காது, கண்களில் பிழிந்துவிடவும்.

* * *

நாடியதோர் பூரணமாய் வேதாந்தத்தில்
 நடனதிரு சூத்திரத்தைப் பாடுதற்கு
ஆடியதோர் கணபதியும் கந்தன் காப்பு
 அருள்பெருகும் சித்தர்முதல் ரிஷிகள்காப்பு
கூடியதோர் ஞானபர வாலையாலே
 கூறுகிறேன் அகாரமுடிச் சிகரத்தாலே
பாடியதோர் பலநூல்கள் பொய்யாய்போக
 பாலருக்கு மெந்தனுட னூலிதானே. (க)

* * *

## இருமலுக்கு மருந்து

| | | |
|---|---|---|
| சாரணைச் சாறு படி | — | 1 |
| கையாந்தகரைச் சாறு படி | — | 1 |
| குப்பைமேனிச் சாறு படி | — | 1 |

அதில்திப்பிலி கூட்டி இதுபோலே காய்ச்சி நா...
நெய்யிலிட்டுக்கிண்டி – தேன்விட்டுக்கிண்டி.
சுக்கு, மிளகு, தூவிக்கிண்டி (இறக்கிக்) கொண்டு
துட்டெடை கொடுக்கவும்.

---

481. சுவடி நெ. 268

## நயன சாஸ்திரம் (நயனவிதி)

ஏடுகள் 23 + 17. பக்கத்திற்கு 7 வரிகள்.

சாறு பூசப்படவில்லை.

(நீள × அகலம் 38 × 2½ செ. மீ.)

இதில் கண்ணோய்கள் 96க்கும் மருந்துகள் கூறப்பட்டுள்ளன இதுவும் "அகஸ்தியர் நயனவிதி 500" நூலின் மறு பிரதியாகும்.

*Beginning :*

கண்தனில் வியாதி தன்னைக் கருத்துடனருளிச்செய்யப்
பனந்தர மொழிந்து யேற்றப் பலப்பலவியாதியெல்லாம்
நண்தரு தொண்ணூற்ருறு நாயகி நயந்து கேட்கத்
தண்பயில் சடையினருஞ் சாற்றினர் தரணியோர்க்கே. (க)

மாதுமை பாகர்சொன்ன மாமறை முதலையாய்ந்து
தீதுகள் வாராதென்று திருவுளத்துதித்தபோது
ஆதிமாமுனிவர் சொன்ன ஆயுருவேதத்தாலே
நாதனர் தெரிந்துரைத்த நயனமாம்விதியிதென்றே. (உ)

*End :*

கன்றினில் (கண்ணினில்) வெள்ளைதன்னில்கலந்ததோர் பாலிலாடை
உன்னிய விழியில்கண்ணிலுற்றிடும் பஞ்சுபோலே
துரைத் .திழுந்திரிகடுகு தமை...... .....................
நன்றிய செந்தன் வெள்ளைச் சாறடைச் சடைக்கஞ்சாவும்
மன்னிய பூரமெல்லாங் கலந்திடப் படலம்போமே.

கோஷ்டமும் மதுரமோடு குறுகிய வெட்டிவேரும்
நாட்டிட வரைத்துநல்ல யெண்ணெயில் கொதிக்கவைத்து
வீட்டினுள் ளடுப்பைவைத்து மெழுகினிலிறக்கிக்கையை
நீட்டியென் தலையில்வார்க்க நீர்ச்சல ரூபம்போமே.

குறிப்பு :

சுவடி நெ. 199, 237 (B) இவைகளையும் பார்க்கவும்.

---

**482.** சுவடி நெ. 269 (A)

**சுர நிதானம்**

ஏடுகள் 20. பக்கத்திற்கு 7 வரிகள்.

செல்லரிக்கவாரம்பித்துள்ளது.

(நீள × அகலம் 34 × 3 செ. மீ.)

இதில், சுர நிதானம் – வலிப்புச் சன்னிக்குச் சூடு போடுதற்குத் தலம், சத்திரகத்தி விபரம், சுர லெட்சணம், சுர லங்கனம், லங்கனம் போடாத பேர்வழி (ஏடு 4) தந்தசுத்தி – சுரம் வருகிற விபரம் – வாத சுர குணம் (ஏடு 7) அகுதவாத சுரக் குணம் – தாப சுரக் குணம் – சீதச் சுர குணம் – விஷ சுரக் குணம் – விஷ சுரக் குணம் – அவபத்திய தோஷக் குணம் – விஷ தோஷக் குணம் (ஏடு 11) தோஷக் குணம் – உதிர தோஷக் குணம் – திரிதோஷங் குணம் – பித்தச் சுரக் குணம் – சேத்தும – வாத பித்த – வாத சிலேத்தும சுரக் குணம் – பித்த சிலேத்மச் சுரக் குணம் – பூத சுரக் குணம் – அசீர்ணச் சுரம் (ஏடு 13) அபிகாத மந்த சுரக் குணம் – துக்கச் சுரக் குணம் – அஸ்திச் சுரம் – மாங்கிஷ சுரக் குணம் – சுரம் விட்ட நிதானம் – தச அவஸ்தைக் குணம் – சிங்குவாத சன்னி குணம் – சந்நிவாதக் குணம் (ஏடு 16) பித்த சுரத்தின் குணம் – பித்த சேத்துமக் குணம் முதலானவைகள் உள்ளன.

*Beginning :*

கத்தனே வருளால் கவிமுன் படைத்து
சித்தமே மகிழ்ந்து சீமானே – மெத்தபேல்
சிக்கந்தர் பாட்சா தெட்சணையில் மேல்யேவ
(கத்தனருளால் வந்தலுக்குமரன் கனத்ததோர் சாஸ்திரத்தை)
உத்தமனே யருளாலுயர்ந்த காப்பு. (க)

முன்னவனருளும் நாவேமுதல்வன் மானிடத்தை
சொன்னவனருளும் நாவே சுகமதை மிகவோதாமை
தன்னவனருளும் நாவே தனைக்கீயப் படைத்தலுக் குமரன்
சொல்லிய பொருளும் வாகடத் துய்யவன் காப்புத்தானே.
(உ)

வாதுகூறிய வைத்தியரே சொல்லக்கேளும்
வாகான கண் மூன்று சிரசு நாலு
நீதியுடன் முகமைந்து கையும்ஆறு
நிசமான சரீரம் எட்டும் காலும் பத்து

விதமுட னிதையறிந்தால் வியாதி தீர்ப்பான்
விதமறியான் மானிடர்கள் பழியேகொள்வான்
சேதமாம் மிம்மருந்தும் பலித்திடாது
செத்தபின்பு தீநகரஞ் சேருவானே. (க)

*End :*

நன்றான வாதசுரந் தனக்குக் கஞ்சி
நவநாழிக் குள்ளாக நாட்டலாகும்
பன்றான பித்தசுரந்தனக்குக் கஞ்சி
பத்துநா ழிகைதன்னிற் கொடுக்கலாகும்
மன்றான சிலேத்துமசுரந் தனக்குக்கஞ்சி
மத்தியா னந்தன்னில் வகுக்கலாகும்
மென்றான விக்கர்மமிப்படியே செய்தால்
மேன்மையா மருந்தென்றே விளம்பலாமே.

குறிப்பு :

சுவடியின் முதல் ஏட்டில் கீழ்கண்ட செய்யுள் காணப்படுகிறது.

பேசுங்கஷாயங் கற்கஞ் சுரசம் பலனொருசாமமுமாம்
பிணிதிருவடகம் வறுத்தசூரணம் பலனோமூன்றுதிங்கள்
ஆசுகிருதஞ்சொல்லும் ரஸாயனம்
லேகியமதுபலனாறுதிங்கள்
அபினிதைலத்தின் பலனது ஆண்டுக்குமதியமீராய்
வீசிய முன்னூலுரைத்தவர்தம் மாத்திரை பற்பஞ்
செந்தூர மெத்தினைநாளிருக்கப் பலனும்
யீசன்முன்னாள் நந்திக்குரை செய்த
வவிழ்தத்தின் பலனிதுவே.

## 483. சுவடி நெ. 269 (B)

# அகஸ்தியர் நூத்தைம்பது

ஏடுகள் 23. (38 முதல் 60 வரை.) பக்கத்திற்கு 6 வரிகள்.
அபூர்த்தி. செல்லரிக்கவாரம்பித்துள்ளன.

இதில், சரக்கு சுத்தி முறைகளும், லேகிய வகைகளும் காணப்படுகின்றன. – 32வது செய்யுள்முதல் இறுதிவரை கீழ்க்கண்ட முறைகள் உள்ளன.

சீனக்காரச் சுத்தி, பொறிக்காரம், துருசு, குந்துருக்கஞ் சுத்தி, வெங்காரம், கெந்தகம், ரஸம் சுத்தி – மிருதாரசிங்கு சுத்தி (ஏடு 38) தொட்டிப் பாஷாணம் – மடல் அரிதாரம் – துரிசு சாஸ்திரவேதி சுத்தி, அஞ்சனக்கல், லோகம் – தாமிர சுத்தி – நாகம், காந்த சுத்தி (ஏடு 40) காரீயம், பொன்னிமிளை சுத்தி – வாதசுரக் குணம் – அப்ரகம், கல்மதம், நேர்வாளசுத்தி (ஏடு 41) சிவதை, அமுக்குரா, 64 பாஷாண சுத்தி, காரம், சாரச் சுத்தி காந்தச் செந்தூரம் (ஏடு 44) காரீய பற்பம், வங்க பற்பம், தாமிர பற்பம், வெள்ளி பற்பம், தங்கச் செந்தூரம் (ஏடு 46) கடுக்காய் லேகியம் (ஏடு 49) ஆமலக லேகியம் – தானிக்காய் லேகியம் – திரிகடு லேகியம் – மிளகு லேகியம் (ஏடு 52) திப்பிலி லேகியம் – வெள்ளுள்ளி லேகியம் – கடுக்காய் லேகியம் (ஏடு 54) வெந்தய லேகியம் (ஏடு 55) ஓம லேகியம் – பெருங்காய லேகியம் (ஏடு 56) லோகச் செந்தூரம் முதலான மருந்து முறைகள் உள்ளன.

*Beginning :*

**சீனக்காரஞ் சுத்தி**

கட்டியே குமரிச்சாற்றில் கடிகைமுப்பதுவே காய்ச்சி
முட்டியே கழுவிப்பின்பு வுலர்த்தியே வைத்துக்கொண்டு
செட்டியார் சீனத்திற்குச் சுத்தியின் சிறப்பைக்கேளு
அட்டியே யாவின்பாலிலூறவை யதிகசுத்தி. (நடந)

*End :*

சொன்னது தொகைதான் நூத்தன் பதுஞ்சூட்சமாகு
முன்னமேசொன்ன நூலின் முக்கியமுன்னூறுசூட்சம்
வன்னவே வாறுலோக மாரணமதிகச்சூட்சம்
அன்னமே சொன்ன நூத்தன் பதுமறிவீர்முற்றே. (கடுக)

அகஸ்தியர் நூத்தன்பது முடிந்தது முற்றும்.

**குறிப்பு :**

கடைசி ஏட்டில் கீழ்கண்ட செய்யுள் உள்ளது.

பண்டுதான்மாந்தர் செய்தபாவத்தால் வந்தநோய்க்குக்
கண்டுதான் ரோகந்தீர்க்குங் காவலன்தம்மைநோக்கி
விண்டுதான் குறைகள்சொல்லி மேவியதூபங்காட்டிக்
கொண்டுதாம் பூலமீய்ந்து குருக்கள்போல் நினைப்பார்தாமே.

---

484. சுவடி. நெ. 270 (A)

## அகஸ்தியர் பரிபாஷை (முதல் காண்டம்)

ஏடுகள் 17. பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள்.
செல்லரிக்கவாரம்பித்துள்ளது. சாறு பூசப்படவில்லை.
(நீள × அகலம் 40 × 3½ செ. மீ.)

இதில், சித்தர் நூல்களில் காணப்படும் பரிபாஷைகளுக்கு விளக்கம் கூறப்பட்டுள்ளன. சித்து வேலைகளுக்கு வேண்டிய பிரயோகங்களும் உள்ளன. பற்பல நூல்களின் தொகுப்பும் உள்ளன. ரஸவாதத்திற்கும் உபயோகமான முறைகள் காணப்படுகின்றன – பூனீர் எடுக்கும் விதம்; பிண்டம், பார், மண், சுத்தகங்கை, செயநீர், ஊஷரம், சுத்தஜலம், விந்துநாதம், பஞ்சரதக்குகை, பெண்டாட்டி – புருஷன், வில்லோசை, மண், அப்பு, உப்பு, வெள்ளாவீ, அஞ்செழுத்து, பிறவிக்கடல், முதலானவைகளின் விவரங்களும் உள்ளன.

*Beginning :*

பரமனார் ஐயத்தின் பரஞ்சுடருலகுக்கெல்லாஞ்
சிரமென வுதித்தஞானம் தெய்வநாயகன்ருள்போற்றி
வரமென வகாரமோடு மறைப்புநூல் பாஷையெல்லாம்
குருமுனி தமிழாய்ச்செய்யக் குமரனைங் கரன்ருள்காப்பே. (க)

காப்பென வுரைத்தவாதம் கண் ... ... ... லெட்சந்தன்னை
சேர்ப்பது பாதியாகத் திரட்டியே நூலையெல்லாம்
நாற்பது மூன்று மொன்றுய் நடத்திய காண்டந்தன்னை
பார்ப்பது வைநூருகப் பாஷைநூல் படித்திட்டோமே. (உ)

*End :*

வயனமென்ற வழலைக்குப் பூமிமூலம்
வாகான தீட்சைக்குக் கடலேமூலம்

நயனமென்ற யோகத்தின் வாசிமூலம்
நல்லதொருகற்பத்தில் ரஸமே மூலம்

குயனமென்ற குளிகைக்குப் புடமேமூலம்
குத்தமிலா ஞானத்தில் மனமேமூலம்

தயனமென்ற யிவையெல்லா மென்னூல் மூலம்
சாரகா ரத்துறையைத் தாக்கிப்பாரே. (எ)

தாக்கிப்பா ரிந்தநூ லஞ்சுகாண்டந்
தான்பார்க்கில் சமுசயங்கள் தட்டுண்டேபோம்

நோக்கிப்பா ரிந்தநூல் தனக்குச்சாட்சி
ரோமரிஷி யஞ்ஞூறு மருந்தின் னூலுங்

தேக்கிப்பா ரிதனாலே தெளியாதுண்டோ
சிவசிவா குருத்தேடித் திரியவேண்டாம்

பாக்கியமாம் நூலிலே ரண்டாங்காண்டம்
பாடுகிறேன் முதற்காண்டம் பரமாமுற்றே. (எக)

முதற்காண்டம் முற்றும் — குருவே துணை.

485. சுவடி நெ. 270 (B)

## அகஸ்தியர் பரிபாஷை (இரண்டாங்காண்டம்)

ஏடுகள் 19. பக்கத்திற்கு 7 வரிகள்.

சாறு பூசப்படவில்லை. பூர்த்தி.

(நீள × அகலம் 40 × 3½ செ. மீ.)

இதில், ரவிமதி அங்கி, வெடியுப்பு (ஏடு 3) முடிதலை, சீனவுப்பு (ஏடு 5) உப்புதலையூசரம், புளிக்கொடி (ஏடு 7) வங்கம், தாளகம், உப்பு (ஏடு 8½) அகாரவுப்பு, வெடியுப்பு, நிலவுப்பு (ஏடு 9) வழலை – துருசு – காசச்சுன்னம் – வெடியுப்புத் திராவகம் (ஏடு 13½) மாசி, பங்குனி, வளையலுப்பு (ஏடு 15½) இடியுடன் பிறந்தவன்னி (ஏடு 16) முதலானவைகளுக்கு விளக்கங்களுள்ளன.

*Beginning :*

முத்தணி நகையாள் வெற்றி முதலுமைபாகம் வைத்த
சுத்த மெஞ்ஞான தீபஞ் சுடரெனுஞ்சோதிபாதம்
நித்தமுந் தொழுது போற்றி நீதிசேர் பாஷைநூலின்
பத்தமு திரண்டாங்காண்டப் பொருளினைப் புகலுவோமே. (க)

புகலுமுற்காண்டந்தன்னில் பூட்டினேன் வழலைநாமஞ்
செகமுயிருப்பின் தீட்சை செலத்தின் பேர்சொல்லிவைத்தேன்
யிகமதில் மூடஞானத் திருளினைவெளியதாக்கும்
பகலவன் (போலு)மிந்தப் பாஷைநூற் பயன்பெற்றோர்க்கு. (உ)

*End :*

இருக்கலாம் எமனையு மேவல்செய்து
மிவ்வுலகுமவ்வுலகு மெவரும்போற்றப்
பெருக்கலாம் கைலையினீசம் பாதம்
பெற்றிடலாம் சித்தருடன் பேசலாகும்

இருக்கலா மாயிரத்தெட் டண்டம்கூட்டி
நிமிஷத்தில் சுத்திவந்து நிலைக்கலாம்பார்
முருக்கெல்லால் ஈசனுப்பு முருக்கெல்லால
முத்தாது மத்தவுப்பால் முடியாவாறே. (கூகூ)

வாறான யிக்காண்ட மிரண்டுக்குள்ளே
வழலைகுரு செய்கின்ற மார்க்கம்சொன்னேன்
கூறான பின்னதிலே கற்பமூலங்
குணமான யிடைபஞ்சீ கரணஞ்சொல்லுங்
தூறான நாலினிலே யோகஞ்சொல்வேன்
சுத்தவுப்பு யெடுக்கும் வகை யஞ்சில் சொல்வேன்
சீரான வுப்பெடுக்கும் வகையைப்பாரு
தெளிவான ரண்டாங்காண்டஞ் சிவநூல்முற்றே.

இரண்டாங்காண்டம் முடிந்தது. முற்றும்.

---

**486.** சுவடி நெ. *270* (c)

## அகஸ்தியர் பரிபாஷை முதற்காண்டம் இருபத்தைந்து

ஏடுகள் 5. பக்கத்திற்கு 7 வரிகள்.

சாறு பூசப்படவில்லை. பூர்த்தி.

இதில், கலியம்முருக்கியிலை, குருமுறை, தாளகக்கட்டு, முதலானவைகளுள்ளன.

*Beginning*

பானு(ரு)லகிற் சிவனீசு வரனைப்போற்றி
வைகுண்டம் மாமுனிவர் தாளும்போற்றி
ஈனமில்லா யுகத்தி லரியைப் போற்றி
யின்பரத்து முதியோர்கள் தமையும் போற்றி

கானகத்தில் சித்தர்களையும் போற்றி
யவருடன் புண்ணியமுந் தாழ்மை போற்றி
மானமுள்ள தாய்தகப் பனையும் போற்றி
மணிமுத்து மாமுனிவன் நவின்ற நூலை. (க)

நவின்றிட்ட நூல்தள்ளி முன்னூல் பார்த்தால்
நயமாகும் பொரு ளுனக்குப் பாடும்மெத்த
பலித்திட்ட நூலெல்லாம் பார்ப்பாய் நித்தம்
பயித்தியக்கா ரனைப்போல லைந்துமகானாய்
தவித்திட்ட தவம் போல விதனை யூணி
தையலரை திமிர்த்துசெய்து பார்த்தானாகில்
குவித்திட்ட தனம் போலேயிருபத்தஞ்சில்
குருமுறையாய் பார்த்துவந்தா லாகுஞ்சொன்னேன். (உ)

*End :*

தானான தைலமிதை நவிலக்கேளு
தனியான வில்வவேருபயிரும் வேரும்
கானகத்திலாமிச்சு அருகன்வேரும்
கருதானை வணங்கிகீழ்க்கா நெல்லிவேரும்
மானடி பூண்டும்நில வேம்பின்வேரும்
மணலிவேரும் கொடுப்பைவேரும் சங்கம்வேரும்
ஆனதிதான் வேறொன்று பலந்தான்பத்து
அடவாக யெடுத்ததனை யிடித்துவையே. (உங)

இடித்ததிலே சந்தனம்பத்து போடுபலம்
யின்னமிதில் தேங்காயிளநீர் பதக்குவிட்டு
போடிதனை யெட்டொன்றாய்க் காய்ந்துவற்றி
யிதமாக வடித்துநீ வைத்துக் கொண்டு
வடித்ததிலே யாவின்பால் சமனாய்விட்டு
வாரதிலே யெள்ளெண்ணெய் படிதான்விட்டு
கொடுத்திடுவாய் சவ்வாதுங்கட மொன்றதிலே
குணமாக யெரித்துநீ பதத்தில் வாங்கே. (உச)

பதத்திலே மெழுகுபோல் திறண்டுவந்தால்
பதனமாயிறக்கு நன்ருய் வடித்துக்கொண்டு
நதமதிலே முழுகுமிதை நவிலக்கேளு
நுண்மணிதண் டெழும்புமடா தேகம்பொன்னும்
... ... ... ... ... ... ... பாண்டு குட்டம்
பருவவிளையாட மன்னன் திங்கள்ரெண்டு
உதவியதாய் உலகத்தோ ரிதனை... ... ...
... ... ... ... முழுகுமே நவின்றேன் முத்தே (உரு)

முடிந்தது முற்றும். தக்ஷிணாமூர்த்தி சகாயம்.

---

**487.** சுவடி நெ. *271*

## வைத்திய அட்டவணை

ஏடுகள் *44*; *16* முதல் *59* வரை. பக்கத்திற்கு *6* வரிகள்
மிகவும் சிதிலம், செல்லரித்துள்ளது.
(நீள × அகலம் *25* × *3* செ. மீ.)

இதில் குருபற்பம், லிங்கச்செந்தூரம், ஈயசுத்தி (ஏடு 32) தம்பனக்குளிகை (ஏடு 23½) இரும்புத் தாமிரம் எடுக்க (ஏடு 34) சுரத்திற்கு மாத்திரை (ஏடு 36½) சர்வத்திராவகம் (ஏடு 37) அப்பிரகச்சத்து – சுரத்திற்கு ராமபாணக் குளிகை (ஏடு 39½) திராவகம் (ஏடு 40) கந்தகத்திராவகம் (ஏடு 42) இரும்பில்கிட்டம் (ஏடு 44) எலிகடிக்கு மருந்து (ஏடு 52½) சாதிலிங்கக்கட்டு (ஏடு 56).

***Beginning :***

குருபற்பம்

| | | |
|---|---|---|
| இரதம் | வராகனெடை | 3 |
| சவ்வீரம் | ,, | 2 |
| ரெங்கு | ,, | 1 |

இது மூன்றும் பற்பமாம்.

ரெங்கு எருக்கம்பால் வாத்தரைக்கவும்.
இரதம் பூசனிக்காய் நீரில் வேகவைக்கவும்.

அப்பிரகம் சுண்ணும்புத் தண்ணீரிலரைத்து சவ்வீரத்திற்குப் பூசி டோலாயம் கட்டித் தீபாக்கினி, கமலாக்னியாகவெரிக்கவும் இதுகள் தூளாம். இது சின்ன குருபற்பம்.

இரதம் வராகனெடை 100 குழிக்கல்லில் போட்டு, 4 நாளைக்கு 1 பூசனிக்காயாக தினம் 30 நாழிகை பூசனிக்காய்ச் சாறுவார்த்து 6 மாதம் இடைவிடாமல் அரைக்க இரதம் குழம்பாகும். இந்த இதரத்தை ஒரு பரணியில் வாங்கி வைத்துக் கொண்டு செப்புத் தகட்டில் தடவிப் புடம் போட்டு இதை வெள்ளியில் சேர்க்கப் பத்துமாத்துக்காணும். நிதானம் கைகண்டது.

*End :*

| | | | |
|---|---|---|---|
| வெள்ளீயம் விராகன் | — | — | 10 |
| நாகம் ,, | — | — | 10 |
| இதரம் ,, | — | — | 10 |
| உருக்கிக்கட்டின சவ்வீரம் பணவெடை | | — | 1 |
| சாதிலிங்கம் | ,, | — | 1 |
| தொட்டிப் பாஷாணம் | ,, | — | 2 |
| பழங்கால மனோசிலை | ,, | — | 2 |

---

488. சுவடி ரெ. 272

## ரேமரிஷி சூத்திரம் நூறு

ஏடுகள் 22. பக்கத்திற்கு 6 முதல் 10 வரிகள்.

சுத்தமாகவுள்ள பிரதி.

(நீள × அகலம் 25 × 3 செ. மீ.)

இதில், வழலை, சுத்தகங்கை, சிங்கிவித்தை, கிளிஞ்சிநீர், தங்கக்குரு – முப்பு மார்க்கம் – வெள்ளி பற்பம் – அயச்

செந்தூரம் – கருவங்க பற்பம் (செய். 27) துத்தநாக பற்பம் (செய். 30) அப்பிரகம், நிமிளை பற்பம் – சூத பற்பம் (செய். 40) சாதிலிங்க பற்பம் (செய். 42) லிங்க பற்ப குணம் (செய். 48) சிங்கி பற்பம் – சிங்கிச் செந்தூரம் – சவுக்கார பற்பம் – சிவத்தங்கச் செந்தூரம் – வழலை சவர்க்காரம் செய்முறை (செய். 57) துருசுச்சுன்னம் (செய். 67) யோக மார்க்கம் (செய். 70) தீட்சை விதி (செய். 80) சொரூப முத்தி (செய். 90) சுவாசம், விதி, மதி லெட்சணம் – சவுக்காரச் சுன்னம் (செய். 96) முதலான விபரங்கள் உள்ளன.

*Beginning :*

மூலவட்ட மாகிநின்ற குருவேகாப்பு
முத்திக்கும் முதலான வித்தேகாப்பு
மேலவட்ட மானபரப் பிரம்மங்காப்பு
வேதாந்தங் கடந்துநின்ற மெய்யேகாப்பு
காலவட்டம் தங்கிமதி யமிர்தப்பாலை
கன்றுபசி யாத்திமனக் கவடுநீக்கி
ஞாலவட்டச் சித்தாடும் பெரியோர்பாதம்
நம்பினதால் ரோமனென்பேர் நாயன்றனே. (க)

தானாக முன்னுரைத்த வஞ்ஞாத்துள்ளே
தவராமல் பாடிவிட்டேன் யோகமார்க்கம்
தானாகும் வாதத்திற் காதியுப்பை
சமுசயங்க ளில்லாமல் சொல்லிவைத்தேன்
தானாக வழலையென்ற வுப்புவித்தை
தன்னுக்குள் தன்னினத்தைத் தாக்கும்வாறும்
தானான கருவுண்டு சுத்தகெங்கைச்
சலமதனை மறைத்துவைத்தேன் தன்மைபாரே. (உ)

* * *

பேசினது முன்னுரைத்த யஞ்ஞாத்துள்ளே
பேசிவைத்தே னதனாலே மறைத்தார்சித்தர்
காசினியில் சட்டைமுனி தீட்சைக்குள்ளே
கருமறைப் பில்லாமல் வெளிகாண் சொன்னார்
மோசமென்று திருமூலர் கிழித்துப் போட்டார்
மூலகுரு வர்க்கமெல்லாம் மோசக்காரர்
பாஷையினால் பாடிவைத்தார் நூல்கள்தோறும்
பற்றிநின்று பார்த்தாலும் பனிரெண்டாண்டே. (சச)

***End :***

உப்பல்லோ பிண்டத்தில் சேர்ந்தபோது
உடலுமுரு வொன்றாகித் தண்ணீராச்சு
அப்பல்லோ முப்பூவுக் காணியாணி
யதைவிட்டால் கட்டாது வழலைமார்க்கம்
செப்பல்லோ பந்துக்கு மூடலாச்சு
தீக்ஷணமாயிந்தநூல் தெளிவோ ரோமம்
முப்பொருளு மொன்றாகி நின்றசோதி
மூலவட்டக் குருவாலென் மொழிதான்முற்றே. (எ)

ரோமரிஷி சூத்திரம் முற்றும் — குருபாதமே கதி.

---

**489.** சுவடி நெ. *273*

## மருந்து அட்டவணை

ஏடுகள் *19*. பக்கத்திற்கு *7* முதல் *8* வரிகள். சிதிலம்.
(நீள × அகலம் *37* × *3½* செ. மீ.)

இதில், பீனிசவத்தி – ஹிங்க்வாஷ்டகம், அதிபூதரஸம் – லிங்கக்கட்டு – சாரச்சுன்னம் – பாஷாண பற்பம் – தாம்ர பற்பம் – தாதுவிருத்திக்கு – சூத பற்பம் (விரை வாதம், அந்திர வாயு, அண்ட வாதத்திற்கு) அண்ட ஓடு சுன்னம் (சுவாச காசத்திற்கு) காந்தச் செந்தூரம் – சுழி கணத்திற்கெண்ணெய் –

இருமலுக்கு முத்துச்சிப்பிச் சுன்னம் – பாண்டுரோகத்திற்கு சங்கம்வேர்க் குடிநீர் – தீத்தாச் செட்டியார் சொன்ன வகாதம். ஏலாதி மாத்திரை – திராவகம் – சூலைக்கட்டுக்கு – இருமல், கசத்திற்கு மிளகாய் லேகியம் – உப்புக்கட்டு – மலட்டு வலிக்கு வீரச் செந்தூரம் – வில்வாதி லேகியம் – சுயமக்கினி – கோரோசனை மாத்திரை – கோடாசூழி உருண்டை – சஞ்சீவி மாத்திரை – தாளீசபத்திரி வடகம் – கும்மட்டிக்காயெண்ணெய் – கர்ணரோகத்திற்கு எண்ணெய் – தாளீசபத்திரிச் சூரணம் – கணத்தெண்ணெய் – அஞ்சனவன்னத் தைலம் – வீர மெழுகு – பவுத்திர ரோகத்திற்குச் சுடர்த் தைலம் – மேகயெண்ணெய் – கெந்தக ரஸாயனம் – அச்வகந்தி ரஸாயனம் – ஸகல விஷத்திற்கும் மருந்து – வீர மெழுகு – மகோதரம், பெரும்பாட்டுக்கு லேகியம் – ரச சுத்தி – உதிரம் கட்ட – சந்நிக்குச் சந்திரோதயவடி – கண்டாத்திரி சூரணம் – மகாவாஸாதி – அண்ட பற்பம் – கர்ப்பூரவைப்பு – சயரோகத்திற்கு – முதலான முறைகளுள்ளன.

***Beginning :***

திப்பிலி, அக்கிராக்காரம், வெங்காரம், சுக்கு வகைக்குப் பலம் *1*, மிளகு பலம் *8* இந்த சரக்கெல்லாம் கல்வத்தில் போட்டு *12* நாள் அரைத்து வைத்துக்கொள்ளவும். இதனால் தீரும் வியாதிகள் :– சுரம் யாவதும், வாயு, கபரோகங்கள், தலைவலி முதலியன.

**பீனசவத்தி**

நவச்சாரம் பலம் $\frac{1}{4}$, ரஸம் பலம் $\frac{1}{4}$, கெந்தகம் பலம் $\frac{1}{4}$, சதகுப்பை, மாஞ்சி, சுக்கு, திப்பிலி, மிளகு, சாம்பிராணி, சூடம் வகைக்கு பலம் *1*, வெற்றிலைச் சாற்றில் *3* நாள் அரைப்பு. அந்த சாற்றில் தானே யரைத்துக் கரைத்து *2* சேர். துணியில் துவைத்துக் காயப்போட்டு வைத்துக்கொள்ளுகிறது.

விரற்கெடை துணி கிழித்து வத்தி திரித்துக் கொடுக்கப்பட்ட விதி. பீனிசத் தலைவலி, ஒருத்தலைவலி, நேத்திரவாயு, இன்னஞ் சில சிரோரோகங்கள் தீரும். கைகண்டது.

*End :*

தீருமேகண்டகுச்சம் பதிமூன்றே நாள்
தீர்க்கர்ணி கச்சன்னி தொண்ணூறே நாள்
பாருமே புக்குநேத்திரச் சன்னி நாளெட்டு
பத்து நாளிர தத்தெழு சன்னிக்காகும்
பேருமே பிரலாப மீரேழாகும்
பெரியசிங்கு வாசன்னிக்கு யீரெட்டாகும்
ஆருமே வபின்யாசம் பதினைந்தாகும்
ஆவதிநாள் சன்னிக்கு வறிந்திடாயே. (எ-அ)

---

**490.** சுவடி நெ. *274*

## நயனவிதி அட்டவணை

ஏடுகள் *11.* பக்கத்திற்கு *4* முதல் *6* வரிகள்.

செல்லரிக்கவாரம்பித்துள்ளது.

(நீள × அகல *46* × $2\frac{1}{2}$ செ. மீ.)

இதில், நயனரோகங்களின் அட்டவணை கொடுக்கப்பட்டு உள்ளது. ஏற்கனவே கூறப்பட்டுள்ள *237* (B) சுவடியையும் சுவடி நெ. *199* போன்றது. *96* வியாதிகளின் பெயர்கள் தனித்தனியே கூறப்பட்டுள்ளன.

---

## 491. சுவடி நெ. 275

## மருந்துச்சரக்கு அகராதி

ஏடுகள் 32. பக்கத்திற்கு 1 முதல் 5 வரிகள்
சாறு பூசப்படவில்லை. சுத்தமான பிரதி.
(நீள × அகலம் $27\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ. மீ.)

இதில், மருந்துச்சரக்குகளின் பெயர்கள் அகராதியாகக் கொடுக்கப்பட்டுள்ளன. மிக்க உபயோகமுள்ள சுவடி.

***Beginning :***

அசுவகந்தி — அமுக்குரா
அமுரி என்பது — சுத்த சலம்
அண்டம் — கோழிமுட்டை
அண்டம் — தலைமண்டை
அமுரி — மூத்திரம், சிறுநீர்
அருகு — புலி
அசதி — சோம்பல்
அகம் — தேகம் அல்லது பூமி
அங்கம் — தேகம்
அரப்பொடி — இரும்புப்பொடி
அயம் — இரும்பு
அப்பென்பது — தண்ணீர்
அடி — பூமி

***End :***

வெள்ளீயம் — வெண்ணாகம்
வெட்டிவேர் — குறுவேர்
மோதகவல்லி மரம் — கொழுக்கட்டை மரம்

---

**492.** சுவடி நெ. *276* (A)

## அகஸ்தியர் முப்பத்தாறு

ஏடுகள் *9*; *5* முதல் *6* வரிகள்.

செல்லரிக்க வாரம்பித்துள்ளது.

(நீள × அகலம் *42 × 2½*)

இதில் நாகவெள்ளை, செம்புவெள்ளை, லோகவெள்ளை (செய். *17*) சாதிலிங்கச்செந்தூரம், காந்தச்செந்தூரம் (செய் *24*) தங்கவெள்ளை (செய். *25*) சந்திரோதயம் (செய். *29*) சிவபூபதி (செய். *34*) முதலான வாதம் செய்வதற்கான மருந்து முறைகளுள்ளன.

***Beginning :***

பாரப்பா செம்பினு வெள்ளை கேளு
திறமான தாமிரத்தைக் குகையில் வைத்துச்
சேரப்பா பதினுலு பலமே போட்டு
சேர்ந்துருகும் போதினிலே மருந்து கேளு
காரப்பா வண்டமது பலமோ ரண்டு
காட்டுநவச் சாரம்பல மிரண்டு போடு
சீரப்பா கல்வத்தில் தூளதாக்கிச்
சிறந்ததொரு பொடிமேலே காரம்போடே (க)

போட்டதனைப் பொடித்து நன்றாய்ப் பொடியைத்தூவு
புகழானச் செம்பினுட ஊறல்போகும்
தாட்டிகமாய்ப் பின்பெடுத்து வங்கங்குத்தித்
தனியோட்டி லுத்தியிடு களங்கம் போகும்
மாட்டிதனைக் குகையிலொரு பலம் போடப்பா
வாகாகக் கண்விட்டே யுருகும் போது
நாட்டியதோர் சுண்ணத்தில் தாளகத்தை
வைத்துநல மாகப்பதினஞ் சுதரம்நீற்றே. (உ)

நீற்றிய பின் வாங்கியதை யெடுத்துக்கொண்டு
நிறுத்திடுவாய் பலமொன்று காரங்கால்தான்
போற்றியிதைப் பழச்சாற்றி லரைத்துக்கொண்டு
புகழாகப் பயறளவு வுண்டைசெய்து
நேர்த்தியாய்க் கொடுக்கையிலே சத்தைவாங்கு
நேரான செம்பதுவெங் கலம்போலாகும்
மாற்றியிதை யரைப்பலந்தான் கல்வத்திட்டு
வாட்டியதைப் பொடித்திடுவாய்த் தூளாங்காணே. (௩)

**End :**

சிவமான பூபதியை யனுபானத்திற்
திறமாக வரிசியெடை கொடுத்துக் கேளு
சவமாகப் போனலுந் தாதுவுண்டாஞ்
சாதுரியப் பிராணன்வரும் முழித்துப்பார்ப்பான்
தவமான பிரும்மலபியவ் வளவேயாகில்
வாய்திறந்து பேசினபின் மரணமாவான்
தவமான வாதிக்குப் பூபதியைச் சொன்னேன்
சாதிக்கும் வயித்தியஞ்செய் தனமுமாமே (௩௫)

ஆமப்பா வீதுடனே வைத்தியமும் பாரு
வட்டதிசை மெச்சவுன்னை வழுத்தும்லோகம்
நாமப்பா வைத்தியத்தின் மருந்தையெல்லாம்
நயமாகக் குறுக்குவைத்தேன் முப்பத்தைந்தில்
வாமப்பா யிந்தமருந் தெல்லாம் வைத்தால்
வைத்தியர்பே ருரைக்கையிலே நோய்களோடும்
தாமப்பா யெட்டுரண்டு மிருபத்தஞ்சுத்
தடையறவே யுருவேறிச் சித்தியாமே. (௩௬)

அகஸ்தியர் 36 முத்தும்.

## 493. சுவடி எ. 276 (B)

## (காயகற்பம்) மூதண்ட லேகியம் முதலியன

ஏடுகள் 8. (10 முதல் 17 வரை) பக்கத்திற்கு 5 வரிகள். செல்லரித்துள்ளன.

இதில், மூதண்ட லேகியம், கெந்தக ரஸாயனம், சூத பற்பம், கற்பத்தின் பயன். சகல ரோகத்திற்கும் அகஸ்தியர் குழம்பு முதலியனவுள்ளன.

***Beginning :***

செப்படா மூதண்டம் பலந்தான்பத்து
திறமான மிளகதிலே பலந்தாளென்று
ஒப்பவே படியெட்டுச் சலத்தினுள்ளே
உறவாகப் போட்டுவொரு படியாய்க்காய்ச்சி
தப்பாமல் மலைக்கள்ளு படிதான்விட்டுச்
சாதகமாய்ப் பசுவின்பால் படிதான்விட்டு
தாக்கப்பா பழச்சாறு படிதான்விட்டுச்
சுத்தவூ மத்தைச்சாறு படிதான்வாறே. (க)

வூர்த்தபின்பு திராவகமும் வடிக்கக்கேளு
வாகான வெள்வேலம் பட்டையோடு
சாத்திடுபின் கருவேலம் பட்டையோடு
சமனாக வஞ்சுபத்துப் பலந்தான்தூக்கிக்
கூர்த்திடுவா யூமத்தைச் சமூலத்தோடு
கூருகப் பலம்பத்துக் கஞ்சாவோடு
சேர்த்திடுவாய் பலம்பத்தும் சேரக்கூட்டித்
திறமான சாதிக்காய் பலந்தாளென்றே, (உ)

*End :*

விதமாம் ரோகக் குறிப்பறிந்தால்
வேறும்மருந்து வேண்டாங்காண்
பதமாயிதனைக் கொடுப்பீராய்ப்
பறக்கும் ரோகம் வகைகேளாய்
பதமாய்நா லாயிரத்துநா
னூறுநாற்பத் தெட்டுடனே
மதிப்பாயிதனைக் குறிப்பறிந்து
வகுத்துச்சொன்னார் மாமுனியே. (உடு)

---

**494.** சுவடி நெ. *276* (c)

**காயகற்பம்**

ஏடுகள் *9.* (*18* முதல் *28* வரை) பக்கத்திற்கு *5* வரிகள்.
சிதிலம். அபூர்த்தி.

இதில், ரஸவாதத்திற்கான காயசித்தி முறைகள் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

பாடுகிறேன் காயகற்ப மைங்கரனே காப்பாம்
பரிவான சின்மயமாம் பதத்தின்காப்பு
நாடுகிறேன் சித்தருட பாதங்காப்பு
நாதாந்த மனோன்மணித்தாய் பதமேகாப்புத்
தேடுகிறே னென்றாலு மென்னாலப்பா
செப்பார்கள் காயசித்தி சித்தரப்பா
சூடுகிறேன் காயசித்திக் காதியங்கள்
சொல்லுகிறே நன்றாகக் கேளுகேளே. (க)

*End :*

கொள்ளப்பா காயமது யிருபதுநாளுண்டால்
குறுகாது நெடுகாது கல்தூணுகும்
மீளப்பா சுக்கிலத்தைக் கட்டரித்தம்
மேலேத்த மல்லாமல் கீழோடாது
தூளப்பா வடங்கிற்றுக் காமவித்தை
சுகபோகஞ் செய்தாலும் விந்துவீழாது
தாளப்பா யவ்வளவில் சன்னமாகச்
சட்டைபோம் சட்டைபோம் சாதித்தோற்கே. (௩௩)

சாதிக்க யிவ்வளவும் பத்தியத்தைக்கேளு
தாம்பூலம் தின்பதற்குச் சுண்ணஞ்சொல்வேன்
ஆதிகர்ப் பூரச் சிலையைவாங்கி
யுத்தமனே வெண்கருவா லரைத்துக்கட்டி
பேதிக்கக் கரியோட்டி லூத்தியூது
பேரான சுண்ணும்பு..................

குறிப்பு :

இந்த 276 நெ. சுவடியின் முதல் ஏட்டில் தாளீசபத்திரி வடகம் செய்முறையும், நாரங்காதி கஷாயம் செய்முறையும் செய்யுள் வடிவாக வுள்ளன.

---

495. சுவடி நெ. 277

## அகஸ்தியர் நாடித்தொகை நூறு

ஏடுகள் 14. பக்கத்திற்கு 7 வரிகள்.

பூர்த்தி. சுத்தமான பிரதி.

(நீள × அகலம் 36 × 3 செ. மீ.)

இதில், கலை விபரம் – தசஸ்தானங்கள் – மரண லட்சணம் அறியுமிடம், சமதாது – வாதக்கதிப்பு, பித்த, சிலேத்மக்கதிப்பு –

வாதபித்த சிலேத்மம் நாடி நடக்கும் நிதானம் (ஏடு 2) – நாடி சங்கலித விபரம் – வாயுவின் விபரம் – மரண லஷணம் – தோஷத்தின் விபரம் – மரணக் குறி (ஏடு 4) முறைப்பாட்டின் குணம் – மந்தம் வரும் வரலாறு – மேகக் கிரந்தி வரும்வாறு – ரோகத்திற்குப் பத்தியம் கொடுக்கும் நிதானம் – வாயுவின் குணம் – ருத்திர ரோகக் குணம் – சந்நி லட்சணம் – மூலம் வரும்வாறு – கிராணி வரும்வாறு – மேக நிறம் – பித்த மேகம் (ஏடு 7) வாதமேகம், சிலேத்ம மேகத்தின் குணம் – வாதசிலேத்ம மேகம் – பித்த மேகத்தின் குணம் (ஏடு 8) சிலேத்ம மேகம், பித்த மேகம் – வாதம், வாயு, சங்கலிதம் (ஏடு 9) வாயு மேகக் குணம் – வரலாறு – சிலேத்மச் சூலை, வாத பித்தச் சூலை (ஏடு 10) கெற்பக்கோள், சூதக வாயு வருங் குணம் – சூதகச் சன்னி (ஏடு 11) கண்ணோய் வரும்வாறு – குஷ்டம் வரும்வாறு (ஏடு 12) வைத்தியனறிதல் – வைத்தியத்தின் தொகை – வைத்தியனறிதல் (ஏடு 14) முதலியன.

***Beginning :***

பாகுடன் கணேசன் பாதம் பணிந்துமுக் குணங்களாய்ந்து
வாகடச் சுவடியெல்லாம் வகைவகை தொகுக்குங்காலை
ஆகிட விதியின் சூழல் அடர்ந்திடும் நோய்கட்கெல்லாம்
போகிட மருந்து சொல்வோம் புலத்தியா! புரிந்துபாரே. (க)

புரிந்ததோ ருந்திக்கீழே புகன்றெழு சுழியைப் பற்றி
யிருந்ததோர் நாடிதானும் யெழுபத்தீ ராயிரமாய்த்
தெரிந்ததோ ரிவற்றிற்பத்து தசநாடி யிவற்றில் மூன்றும்
பரிந்ததோர் வாதபித்த முடனய்யம் புரிந்து கொள்ளே. (உ)

***End :***

தானென்ற சரீரபலன் சஞ்சாரங்கள்
சாப்பிடுற வன்னத்தில் தாக்கும் பார்த்து
வேனென்ற நித்திரையும் நினைவும் பார்த்து
வியாதியுள்ளோன் குணம்பார்த்து வனுபானங் கண்டு

நாலென்ற செலவழித்துக் குருவைக் கார்த்து
நலமான வாத்துமா வதனைக் கண்டு
வாளென்ற மாய்கையிலே மனம் நாடாமல்
வளர்ந்திருப்பார் பெரியோர்கள் வைத்யம் பாரே. (ள)

ஆமின் அல்லாவுதவி செய்வானுகவும். முற்றிற்று.

*Colophon :*

1881ம் வருஷம் செப்டம்பர் 28வ அகஸ்தியர் 1500லுள்ள நாடியின் துகை நூறு யெழுதி முடித்தது. இந்த சுவடி தெற்கு வீதி வைத்யர் நயன சோத்து உசேன்கான் சாயபு குமாரன் வைத்திய நயன் சோத்து காதர்பாட்சா சாயபுவுக்குப் படிக்க வேண்டியதற்காக எழுதினது.

---

**496.** சுவடி நெ. 278

## இரஸவர்க்கம் (அன்னசாரம்)

ஏடுகள் 20. பக்கத்திற்கு 4 முதல் 5 வரிகள். மிகச்சிதிலம். சாறுபூசப்படவில்லை. எழுத்து சுத்தமாகவுள்ளது. பூர்த்தி.
(நீள × அகலம் $53\frac{1}{2} \times 2$ செ. மீ.)

இதில், 110 செய்யுட்களுள்ளன. சுவடி நெ. 259 (A)யைப் போன்றதே. இருந்தாலும், இதில் வேறு மருந்துச் சரக்குகளின் குணங்களும் கூறப்பட்டுள்ளன.

---

**497.** சுவடி நெ. 279

## போகர் நிகண்டு (பலசரக்கு மருந்து)

ஏடுகள் 16. 49 முதல் 66 வரை.
மிகச்சிதிலம். எழுத்து சுத்தமாகவுள்ளது. அபூர்த்தி.
(நீள × அகலம் 37 × 3 செ. மீ.)

இதில், 64 மருந்துச்சரக்குகளின் குணங்கள் கூறப்பட்டுள்ளன.

*Beginning :*

பாடினேன் கடைமருந்தின் பண்புதன்னைப்
பரிவாக அறுபத்து நாலுமாகும்
வாடினேன் மதிமயங்கி வடமொழியைப்பார்த்து
வகையெல்லா மாத்தானைக் கேட்டுக்கேட்டு
மூடினேன் முத்துப்போல் பொறுக்கிச்சேர்த்தேன்
மூடனுக்குந் தெரியவென்று மொழிதப்பாமல்
நீடினேன் நிகண்டுக்குள் நேர்மையாக
நேர்பாகச் சொன்னபடி நினைவாய்ப்பாரே. (க)

பார்த்திட்ட சுக்கதனுல் சர்வரோகம்போம்
பண்பாக மிளகுக்கு வாதம்நாசம்
பேர்த்திட்ட திப்பிலீதான் சிலேத்துமத்துக்காதி
பெளிசான மூலந்தான் சுரத்தைப்போக்கும்
கார்த்திட்டக் கரியினுட திப்பிலியினலே
சேர்ந்திட்டச் சன்னிதனைத் தானேபோக்கும்
சேர்த்திட்ட செவியந்தான் சிலேட்டுமத்துக்காதி
சித்திரமூ லந்தனக்குச் சுரங்கள்போமே. (உ)

*End :*

இறுங்கசப்புப் பசலைக்குச் சூதங் கட்டும்
இருவேலி தாபத்தைப் போக்கிவிக்கும்
பறும்பருத்தி பெரும்பாடுதனைப் போக்கிவிக்கும்
பணத்தசெம் பருத்திக்கு ரத்தம்பித்தம்போகும்
அறும்........வேக்காடு வகத்திவிக்கும்
அதியசத்தி.........தம் போகும்
கறுமசுக் கீரைதான் சுரத்துக்கெல்லா.........
...................நாலுவிதங்கட்டும். (சுடு)

கட்டான வண்டுட்டி சா.........
கடிய பூசினிதனக்கு உளரல்போகும்
மட்டானக் கரிதான்நீர் பெருக்கும்.........

**குறிப்பு :**

சுவடியின் ஆரம்பத்திலுள்ள 11 ஏடுகளும் மிகச் சிதிலமாக உள்ளன. மருந்துச் சரக்குகளின் குணங்கள் செய்யுள் வடிவாக உள்ளன. ஆக 56 செய்யுட்களில் ஆரம்பச் செய்யுளும், கடைசி செய்யுளும் சரியாக விளங்கவில்லை.

---

**498.** சுவடி நெ. 280

## (A) திரட்டு வாகடம் (ரஸவாதிகளுக்கு)

ஏடுகள் 4. பக்கத்திற்கு 4 வரிகள்.
சிதிலம். சாறு பூசப்படவில்லை.
(நீள × அகலம் 36 × 2½ செ. மீ.)

இதில், நோயாளியின் நோய்களைக் குணம் செய்யும் முறை கூறப்பட்டுள்ளன.

***Beginning :***

அலைந் தலைந்து வுலகமெலாம் செடிபூண்டுதேடி
அறுபதிநா லுஞ்சரக்குஞ் சுட்டுசுட்டு
அலைந் தலைந்து திரிந்தாலும் வாதம்காணன்
அம்பரத்தி னெளிகாணர் கசடரப்பா
அலைந்தலைந்து யிப்படியே சுட்டுச்சுட்டு
அப்பனேகோடான கோடிபேர் மாண்டார்
அலைந்தாலும் வாதமொடுங் ஞானம்ரண்டு
அறிந்திட்ட பெரியோர்கள் சொல்லார்கேளே. (க)

.........வாதமென்ற வைத்தியத்தைப்பாரு
சொல்பெரிய வைத்யந்தான் பிரம்மவித்தை
சரியாக வைத்யந்தான் திறமாய்ச் செய்தால்
கோடிரஸ வாதத்திற் கொக்குமொக்கும்
தெரியாமல் வைத்தியத்தைவிட்டு வாதம்பார்த்து
வதினலே செலவுசெய்து பிழைப்போமென்று
.................. பலகூட்டம் கூடி
ஆசைகொண்டு திரிந்திட்டால் வாதமாமோ. (உ)

*End :*

நிற்கவே சொன்னதென்றால் வைத்யரேகேளும்
நீசனன பொய்யுரைத்தால் நிசமாகாது
கார்க்கவே பொய்யகற்றி மெய்யைநம்பு
கனகமாம் சகலசித்தும் கைக்குள்ளாகும்
மெய்யன்ற வைத்தியரே யென்னுள்பாரும்
விருதுசொல்வி வைத்யசிரோ மணியாம்பாரு
கைக்கவே நோயாளி தாதுபார்க்கில்
கண்பார்த்து முகம்பார்த்து கையைப்பாரே. (அ)

---

## (B) திரட்டு வாகடம் (ரஸவாதத்திற்கு)

ஏடுகள் 3. பக்கத்திற்கு 6 வரிகள்.

*Beginning :*

உலகத்தோர் பிழைக்கவென்றே சொன்னேனப்பா
உத்தமர்க்காம் கர்மிகளுக் குதவாதென்று
உலகத்தோர் பாஷாண்டி மெத்தவுண்டு
உத்தமனேயவர் பிழைக்க வேஷங்கொண்டு
உலகத்தோர் வேதாந்த குருநானென்று
ஓகோகோ வாய்ப்பேச்சால் மானிடரையேசும்
உலகத்தோர் குடிகெடுத்துப் பொருள்பறித்து
ஒன்றுமில்லை யென்றுகெட் டலைவான்மாதே. (க)

*End :* ..........

எண்ணவே குருதேடி வாதம்பாரு
யில்லாட்டா லென்னுலே குருவென்றெண்ணிப்
பண்ணவே பதனமாய் வைத்துப்போற்றி
பக்குவமாய் வாதமுதல் வாசியோகம்
பண்ணவே யஷ்டாங்க ஞானமார்க்கம் ..........
கைமுறையாய் சவுக்காரம் வழலைச்சுன்னம்
கண்ணவே கருக்குருவும் வெட்டவெளியாகக்
காட்டினேன் கண்ணடி முகம்போல்காணே. (ரு)

கருவென்ருல் பூமியுடநாதம் விட்டால்
காணிலது வாதமுதல் வைத்தியமுமாகா
கருவென்ருல் தைமாசி பங்குனியினேடு
காத்திருந்து உவருப்பை வாருவாரு
பருவமாய் வாரியே யெடுக்கவென்ருல்
பாங்கான உவர்க்காட்டில் குடிசைபோடு
பருவமாய் வாரியே யெடுத்துவந்து
பாண்டத்தில் விட்டுநீ சுத்தசலம்வாரே. (சு)

வார்த்துமே கலக்கியே தெளிவைவாங்கி
வளமான புத்தோட்டில் வாருவாரு
வார்த்துமே ரவிதனில் காயவுப்பாம்
மறுபடியும் சுத்தசலம் தெளிந்துமுன்போல்
பார்த்துமே தெளிவிறுத்து ரவியில் காய்ந்தால்
பக்குவமாயிப்படியே பத்துமுறை செய்யே.

*　　*　　*

சேதியொன்று சொல்கிறேன் பணிவாய்க்கேளு
சகமதிலே சியாமளா தேவிதன்னை
நீதியுடன் சதுர் காண்டம் பார்வையிட்டு
நேர்றியுடனே தேவிதனை வச்சயஞ்செய்தால்

கொதியுடனே வந்ததொரு ஊழியுந்தான்
சொல்லுமுன்னே போகுமடா துன்பம் நீங்கும்
வியாதியுடன் மூதண்டங் கொண்டுவந்தா
லென்மகனே வூழியது வொடுங்கிப்போமே. (ய)

இந்தப்பாட்டு அகஸ்தீசர் பாடினது. ... ... ... ...

சப்தகாண்டத்தில் 802 பாட்டுக்குமேல் 810 பாட்டுவரை இருந்தது வெகுஜன் உபகாரம் – ஸ்ரீ ராமஜயம்.

* * *

(C) குறிப்பு :

கீழ்க்கண்ட இருமுறைகளும் தனித்தனி ஏட்டில் எழுதப்பட்டுள்ளன.

### வல்லாதி லேகியம்

சேங்கொட்டை பலம் 4 சுத்திபண்ணி அரப்பொடி......... ......... ஒரு தேங்காய், ஓமம் பலம் 1, சீரகம் பலம் 1, தான்றிக்காய் விரை போக்கியது பலம் 1, கார்போகரிசி பலம் 1, பரங்கிப்பட்டை பலம் 1.

இதுவெல்லாமிடித்துச் சூரணம் பண்ணவும் (பெரு உரலில்) பனைவெல்லம் பலம் 4, பசுவின் நெய் படி ½ நெல்லிக்காய் பிரமாணம் சாப்பிடவும். பத்தியம் – இச்சாபத்தியம். சித்தாமணக்கு எண்ணெய் முழுகவும்.

### குக்குடாதிச் சூரணம்

*Beginning :*

கோதைநீர் கேளீர் குக்குடத்தின் சூரணத்தை
போதமுடமென்றீர் புகலக்கேளீர் – ஏதமொறு
பட்டையொ நாலுபலம் பாங்காச்சீவி
யிட்டமுடன் குப்பிச்சாத்திட்டுறி – கட்டாய

நிழலுலர்த்தி நேரானகாந்தம் திரிகடுகு
வால்மிளகு அரிதாரம் கெந்தகம் சாதிலிங்க
மோமமுடன்
பூவுதிரி சாதிக்காய் பூமத்திரி கார்போகு துத்தந்துரிசு
... ... ... ... ... ... ... ...

**End :**

நீராமை பிணியிவைகள் அகலுமென முனிவ ருரைபகலு
முற்சரவணமுருகர் பக்தியுடன் சொன் னார்முகந்து.

---

### 499. சுவடி நெ. 281 (A)

## அகஸ்தியர் நாடி நூல் 26

ஏடுகள் 8. பக்கத்திற்கு 4 முதல் 5 வரிகள்.
செல்லரிக்கவாரம்பித்துள்ளது. பூர்த்தி.
எழுத்து சுத்தமாகவுள்ளது.
(நீள × அகலம் 40 × 2 செ. மீ.)

இதில், நாடி பார்க்கிற விதம் (ஏடு 3) நாடி நடை – சந்நி நாடி (ஏடு 4) சாத்யகால நாடி (ஏடு 5) மரண நாடி – சாத்தியா சாத்திய நாடி (ஏடு 6) திரிவித சுரத்தின் அடையாளம் முதலியனவுள்ளன.

**Beginning :**

ஆதிதன் பிரியமான அகஸ்திய ரருளினாலே
ஆதியாய் பாடிநூலை நின்மல வடிவுகொண்டு
காதியா முகைபித்தீனக் கருதினல்த்துதித்து யின்னம்
சோதியா மற்றோர்தங்கள் துணைவடி சரணங்காப்பாம். (க)
நாயன் கிருபைசெய்வானாகவும்.

மூலத்திலே முப்பத்தீராயிரம் நாடி
முளைத்தெழுந்து ........... முடிந்ததோடே
கோலமாய் பதிமூவாயிரம் நரம்பு கோர்வையாம்
சூழ்ந்திருக்குங் கூட்டுக்குள்ளே
காலனும் நாடிபத்து வாயுவு பத்து
கதிப்ப தெல்லாம் முற்கோர்வைப் பகையினாலே
நாலாயிரத்து நானூற்றி நாற்பத்தெட்டு
நாமஞ்சு பேர்பிறக்கு மென்று நாட்டலாமே. (க)

நாட்டிலுள்ள மானிடர்க்கு வரும் நோய்கண்டு
நாடியிது வாயுவுபத்து விடங்குறியுங்கண்டு
கூட்டிலுள்ள வினைதீர்க்க வௌஷதங்கள்கண்டு
கொடுப்பதற்கு சாத்தியாசாத் தியமுங்கண்டு
ஏட்டிலுள்ள நூல்முறையாய் கைமுறையுங்கண்டு
எழுத்தறிந்த வைத்தியனு யிப்பகுதி யேத்துத்
தேட்டமுள்ள சுகிர்தகுண முடையோனுங்
குறை மீட்டுப் பிழைக்கவைத்தா லவனேதாதா. (உ)

ஓமென்ற மலக்கட்டைக் கழிக்கவைத்தால்
உடலிலுள்ள வாதையெல்லா மோடிப்போச்சு
தாமென்ற சிறுநீரைத் தெளிய வைத்தால்
சடத்திலுள்ள வேகமெல்லாந் தணிந்து போச்சு
கூமென்ற வுமிழ்நீரை முறியவைத்தால்
கூட்டிலுள்ள பகையெல்லாங் குலைந்துபோச்சு
கோமென்ற யிவைமூன்றுங் களங்கமத்தால்
கொல்லவந்த காலனையும் வெல்லலாமே. (உசு)

---

**500.** சுவடி நெ. *281* (B)

## தில்லைமுனி சுவாமியார்
## வைத்தியசிந்தாமணி விளக்கம்

ஏடுகள் *15.* பக்கத்திற்கு *5* வரிகள்.

சிதில்ம். பூர்த்தி. எழுத்து சுத்தமாகவுள்ளது.

இதில், அஷ்டவித பரீட்சை - நாடி நிதானம் - சலப் பரீட்சை (ஏடு 4) நாக்குப் பரீட்சை - அசீர்ணத்தின் குணம் - சுரத்தின் நிதானம் - வாதசுரத்தின் குணம் - பித்தசுரத்தின் குணம் (ஏடு 5) சிலேத்ம சுரம் - வாத பித்த சிலேத்ம சுர குணம் - பித்த சிலேத்ம சுரம் - சீதாங்க சன்னி, கண்டகுச்சம் - கர்ணிகை சன்னி (ஏடு 8) புக்குநேத்ர சன்னி - ரத்தப்பிரலாப சன்னி - பிரலாப சன்னி - சீவகச் சன்னி - அவனிகா சன்னி, சாத்யாசாத்ய சன்னி - அசாத்திய சன்னியறிதல் - சன்னிக்கு நாள் அறிதல் (ஏடு 10) தோஷம் வரலாறு - அவபத்திய தோஷம் - திரிசங்கை தோஷம் - விஷ சீத சன்னி - ரத்த சீவுக தோஷம் - பீத சிஹ்வா தோஷம் - கிருஷ்ண சீவுக தோஷம் - தோஷத்திற்கு நாளறிதல் - அதிசார வரலாறு - சிலேத்ம பித்தாதிஸாரம் - அஸாத்ய அதிசாரம் - சுரத்திற்கு லங்கனம் (ஏடு 13) முதலியவைகளுள்ளன.

*Beginning :*

ஆதார மூல கணபதியைப் போத்தி
அவ்விடத்தில் வல்லபையை யங்கண்டேத்தி
மீதான மேருதலன் சிவனைப் போற்றி
மெல்லிசவுந் தரிசரணம் விரைந்துபோற்றி
சூதாகுத் தொல்லைதவிர்த் தென்னையாண்ட
சுவயம்பிரகாச சத்குருவைத் தொழுதுபோற்றி
மாதாபிதா பெரியோர்கள் பாதம்போற்றி
வைத்தியசிந் தாமணியின் மருத்துவஞ் சொல்வேன். (க)

சொல்லுகிறேன் எம்பெருமான் நந்திக்கன்னுள்
தொகுத்தவுரை அகஸ்தியமுனி வகுத்தடீகை
தில்லைநா யகக்குருவந் தருளிச்செய்ய
செயநேனும் மாலைசின்னஞ் சிறியேன்பாரில்
கல்விநிறை வைத்தியசிந்தா மணியின்னூலை
கருத்துகந்து கட்டுமட்டாய்க் கவிதைசெய்தான்
வல்லவர்க ளின்னூலைக் கற்ருய்ந்தோர்கள்
வைத்தியசிந் தாமணியென் றுரைக்கலாமே. (உ)

*End :*

போதித்தான் தில்லைகோ விந்தநாதன்
பொதிகைமுனி தில்லைமுனி முதலாஞ்சித்தர்
சாதித்த சாஸ்திரங்க ளனந்த மந்தச்
சகலசாஸ்தி ரங்களையுந் தானன்றாகச்
சோதித்துத் தில்லைமுனி விளக்கமென்றுஞ்
சொற்பெரிய வைத்தியசிந்தா மணியிதொன்றும்
நாதித்தா ரந்தாதி வரிசையாக
நாடிமுதல் குணக்குறியால் நாடுவீரே. (ருஅ)

நாடுவீர் மும்மலக்கு... தீயிட்டு
ராகத்தைக் கடிந்துதீ வினையைநீக்கி
தேடுவீர் நானென்ற பழக்கம்விட்டுத்
தேகாதி நயவஞ்சமனித் தாயமென்றே
யோடுவீர் மனதையொரு நிலையில்வைத்துப்
புத்திதனைத் தில்லையற்குத் தத்தம்பண்ணிக்
கூடுவீர் கோபமத கரியைக் குத்தி
கொற்றமுறும் சித்தர்களே சித்தராவார். (ருகூ)

சித்தருய்சிவ தேகமும் நிகருய்மரணமன்றிச்
சனனமன்றி மூடுவித்த சுயம்பிரகாச
பத்தருய் யின்னூலைப் பார்த்தோர் வாழ்க
பைந்தமிழால் தில்லை கோவிந்தர் சொன்ன
சித்தர்மே வியமருதூ ரானைரானை
ஆதார மூலகண பதியேபோற்றி. (சூ0)

தில்லைமுனி சுவாமி வைத்திய சிந்தாமணி விளக்கம் முற்றும்.

குறிப்பு :

(a) இதன் பின்னர் 2 ஏடுகளில் கழிச்சலுக்குச் சுண்டை வத்தல் சூரணம், சலோதாரி மாத்திரை, இஞ்சிரஸாயனம் — திரட்டுவாகடச் செய்யுள் முதலானவைகள் கூறப்பட்டுள்ளன.

(b) முதல் ஏட்டில் கஸ்தூரிகுணம் என்ற தலைப்பில் கீழ்க்கண்ட செய்யுள் காணப்படுகிறது.

விற்புருவ மின்னே! விளங்கக்கேள் கஸ்தூரி
நற்சிகப்பு ரஞ்சித்தில் நாலாறு – தற்சுருவ

முண்டாற் குணமுளதே யுண்டாலறும் ரோகஞ்
செண்டார் முலைமாதே! தெளிந்துகேள் – கொண்டால்

வாயுவுபித்தம் வாதம் வகைமூன்றி லொன்ருன
நோயுஞ் சிலேத்மத்தினுட் புகையுந் – தோயவே

கண்டசுரச் சன்னி கால்வலியுந் தாதுநஷ்ட
அண்ட வாதகுன்ம மண்டாதே – யொண்டொடியே

நெஞ்சடைப்பு நீரடைப்பு நீராமை பேராமை
மிஞ்சும் வயிற்றுவலி மேலெரிவு – நெஞ்சுவலி

கெற்பக்கிருமி கிறுகிறுப்பு காலெரிவு
அற்பாந்திர வாயு வகலுமே – உற்பனமாய்

மயக்கந்திரி தோஷம் வாயில் வழுவழுப்புத்
தியக்கம்வாய் நீரூரல் தீருமே – செயக்குணமும்

வாந்தியரோ சகதுன் மாங்கிஷத்தி லுள்ளடைப்பு
சந்திரீகக் கல்லடைப்புத் தள்ளுமே – யேந்திழையே

ஆனந்த வாயுவொடு வக்கினி மாந்திகமுந்
தானந்தகச் சன்னியையுந் தாக்குமே – ஆனந்த

பயித்தியவகாரம் பலரோகங் குஷ்டம்
சைத்தியப் பதிமூன்று சன்னிகளும் – வைத்தியத்தில்

கூட்டுங்கஸ்தூரி குணமாம் வியாதியெல்லாம்
ஓட்டுங்காமாலை சுரமுள்படவே – கூட்டுமின்னஞ்

சோகை சொறிசிரங்கு துன்பமகன் றேயோடும்
ஆகையால் நேத்திரத்தில் வியாதியெல்லாந் – தோகையரே
தின்னக் குணமுரைத்தோஞ் சென்னியில் செந்தூரமிட்டால்
மன்னர் சமூகத்தில் வசியமாம் — பின்னவே

சந்தனத் தோடொக்கச் சரிகூட்டி மேல்பூச
யிந்தவியாதி யெல்லா மேகிவிடும் – முந்தவே
அம்புவியல் கஸ்தூரி யாராய்ந்து பார்த்தறிந்து
கும்ப முனி சொன்னூர் குணம்.

---

501. சுவடி நெ. 282 (A)

## வாதமெண்பதுக்கும் பெயர் வெண்பா

(மீராகான் சாயபு வாதநிதானம்)

ஏடுகள் 10; பக்கத்திற்கு 6 முதல் 7 வரிகள்

பூர்த்தி – செல்லரிக்கவாரம்பித்துள்ளது.

எழுத்துப்பிழையுள்ளது.

(நீ × அகலம் 39 × $2\frac{1}{2}$ செ. மீ.)

இதில் 80 வகை வாதரோகங்களின் குறிகுணங்கள் வெண்பாச் செய்யுள் நடையாகவுள்ளது. மொத்த செய்யுட்கள் 63.

*Beginning :*

அருசுகுரு சுமயில் வுகலமுடன் அவனியும்ஆ.........
வரிசையாகவனு மலையாவையும் மத்துள்ள சீவனையும்
பிரியமாய் அக்துடனொளியால் வகுத்தே பிறந்திடும்
நன்னபியே
துருசாயுகந்திட வாதவெண்பாவுக்குத் துணை
முகம்மதுவேகாப்பு (க)

ஐந்துகரத் தொந்திவயத் தந்திமுகத் தந்தைமன
முந்திமகிழ் வந்துதித்த மூர்த்தியே — சிந்தைதனில்
ஏகபோகமாய்ப் பணிவேனே கருணையா லேயெனக்
காக வெண்பா வாக விவைகாப்பு.

அல்லாவுதவி செய்யவும். நயனசோதி மஸ்தான் சாயபு
குமாரன் மீராகான் சாயபு வாத நிதானம்.

வெண்பாவைப் பண்பாவை வேரியன் ருமரையில்
கண்பாவை போலவெனக் கண்பாவை — கண்பார்க்கும்
மாலயனுஞ் சங்கரனும் வாழ்த்திடப் புண்டரீக
வாலயத்தில் வாழும் மனம்.

ஊர்த்தவ வாதம்

சொல்லூத்துவ வாதகுணந் தூக்குமேல் மேச்சிருமல்
பொல்லா வருசிப் பொருமல் மிகும் — அல்லாமற்
மந்தமனல் பித்தம் (மனம்) வாங்குமுபரோகந்
தந்து மன மிச்சைசெய்தால்

*End :*

கர்மவாதக் குணம்

பாதகமாம் கண் மத்தி னென்றதும்......
..................தந்தான் — பன்மை
கொட்டுகையார் பாடுகையார் கோபஞ்செய் தாருகையால்
..................மிகுஞ்சொல் (சூரு)

வாதநிதானம் முத்தும்.

*Colophon :*

மஸ்தான் சாயபு குமாரன் மீராகான் சாயபு சுவடி முடிந்தது முத்தும். ஆதியே துணை. விஜய வருஷம் மார்கழி மாதம் 15உ எழுதி முடிந்தது முத்தும்.

---

**502.** சுவடி நெ. 282 (B)

## பித்த நிதானம்

(மீராகான் சாயபு)

ஏடுகள் 3; பக்கத்திற்கு 6 வரிகள். சுத்தமாகவுள்ளது. பூர்த்தி.

இதில் பித்தரோகங்களின் குறிகுணங்கள் வெண்பாவாக எழுதப்பட்டுள்ளது. மொத்த செய்யுட்கள் 21.

*Beginning :*

**அசீரண பித்தம்**

ஆகந்திரும்பு மரியவிழி தான் சுழலுந்
தேகம்வேர்த்தே நடுங்கும் செய்முர்ச்சை — தாகமுறும்
மெத்தமல நீர்கழியும் மேவு மசீரணத்தின்
பித்த மெனத் தேர்ந்தறியப் பேசு. (க)

**விவன பித்தம்**

சென்னிசுத்துங் காந்திகெடுங் தேக மசந்தாகம்
துன்ன மயிர்தானுதிருங் துர்கந்தம் — பண்ணியமெய்
வேர்வைமிகுதி விவன் பித்த மென்றறிந்து
சோர்வை விடவே தெரியச் சொல் (உ)

*End :*

என்னு மிருபதோ டிரண்டு பித்தமென
மன்னீர் பெரியோர் வகுத்தார்கள் — கன்னியரே
யிந்தக் குணங்க ளிசைந்தாளிப் பித்தமென
தந்துரைத்தார் நல்லோ ரதற்கு (உக)

பித்தநிதானம் முற்றும். எந்திரபித்தத்திற்குக் குணமில்லை. விஜய வருஷம் கார்த்திகை மாதம் 13உ எழுதிமுடிந்தது. முத்தும்.

**குறிப்பு**

*1.* அடுத்த ஏட்டில் கீழ்க்கண்ட புஸ்தகங்களின் பெயர் மட்டும் காணப்படுகின்றது.

| | |
|---|---|
| அகஸ்தியர் ஔஷத சாரம் 60 | தேரையர் நோயின் சாரம் 133 |
| வைத்ய மலை அகராதி | புலிப்பாணி ஜாலத்திரட்டு 202 |
| புலிப்பாணி சிதம்பர பூசை 25 | முனிவர்களருளிச்செய்த பதார்த்தகுண சிந்தாமணி |
| யூகிமுனி சிகித்ஸாசார சங்கிரகம் | அகஸ்தியர் வைத்யவல்லாதி 600 |
| புலிப்பாணி வைத்தியம் 500 | |

பதினெண்சித்தர்கள் பால
வாகடத் திரட்டு 1200
அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம் 360
சட்டமுனி நிகண்டு (300)
அகஸ்தியர் சௌமிய
சாகரம் 1200
அகஸ்தியர் வைத்திய
காவியம் 1500
அகஸ்தியர் கர்மகாண்டம் 300
தன்வந்தரி நிகண்டு 300
ரோமரிஷி வைத்யம் 500
அகஸ்தியர் பரிபாஷைத்
திரட்டு காண்டம் 5
அகஸ்தியர் வைத்யசாரம் 30
அகஸ்தியர் வைத்யகாண்டம்
பாண்டு வைப்பு 600
தக்ஷிணாமூர்த்தி மெஞ்ஞான
திருமந்திரம் 1500
தன்வந்தரி வைத்திய
சிந்தாமணி 1200
அகஸ்தியர் பஞ்சகாவிய
நிகண்டு 800
அகஸ்தியர் வைத்யம்
பின் எண்பது
ரோமரிஷி சூத்திரம் 100
18 சித்தர்கள் அருளிச்
செய்த வைத்ய சில்லரைக்
கோர்வை 87
வைத்ய சாரசங்கிரகம்
புத்தகம் 1
மலாய் பாஷை „ 1

போகர் வைத்தியம் 700
தன்வந்தரி பாலவாகடமென்
னும் சிமிட்டு ரத்னச்சுருக்கம் 360
தேரையர் கரிசல் (300)
அகஸ்தியர் ஆயுள்வேதம்
தேரையர் வைத்தியம் 1001
அகஸ்தியர் பரிபூரணம் 400
போகர் நிகண்டு 1200
ராமதேவர் வைத்ய
காவ்யம் 1000
அகஸ்தியர் அமுதகலை ஞானம்
திருமூலர் 120
அகஸ்தியர் நோயின்சாரம் 60
அகஸ்தியர் வைத்ய
பூரணம் 205
18 சித்தர்கள் திருவாய் மலர்ந்
தருளிய வைத்ய சிரோரத்ன
நடனகாண்டம் 1600
மச்சமுனி வைப்புத்
திருமந்திரம் 800
18 சித்தர்கள் திருவாய் மலர்ந்
தருளிய நாடி சாஸ்திர
அட்டவணை 32
யுனானி பதார்த்த குண
சாரசங்கிரகம்
அகஸ்தியர் மதிவெண்பா 100
விரலிவிடுதூது புத்தகம் 1
கிரந்த புஸ்தகம் 1

2. மற்றும் 3 ஏடுகளில் தாளீசபத்திரி சூரணம்-சிவஞரமிர்தம் – ஏலாதிகுளிகைச் செய்யுட்கள் காணப்படுகின்றன.

3. கடைசி இரு ஏடுகளில், கதிஜாபீவிக்கு சீர்கொடுத்த மரச்சாமான்களின் பட்டியல் காணப்படுகின்றது.

---

**503.** சுவடி நெ. 283

## (ஆயுர்வேத விஷயம்) (டீகாஸஹிதம்)

ஏடுகள் 133. பக்கத்திற்கு 5 வரிகள்

மிகச்சிதிலம் – அபூர்த்தி

(நீள × அகலம் 45 × 2½ செ. மீ.)

இதில் 4-ம் ஏடு முதல் 133 ஏடுகள் வரையுள்ளன. ச்லோகங்கள் கிரந்தலிபியிலும் டீகா (உரைநடை) தமிழிலும் உள்ளன. இச்சுவடியின் பெயர் இன்னதென்று குறிக்கப்படவில்லை. ஜ்வரம், அதிஸாரம், நாடிநிதனம், மரணலக்ஷணம், மருந்துகளின் சுத்திக்ரமம், பஸ்ம ஸிந்தூரம், க்ருதம், லேகியம், கஷாயம் முதலானவைகளும் செய்முறைகளும் உள்ளன. வாந்தி, விக்கல், ரத்தபித்தம், ஸந்நிபாதம் முதலான ரோகங்களுக்கு மருந்துகள். லங்கன சிகித்ஸை முறைகள் முதலானவைகளும் காணப்படுகின்றன. மிகவும் உபயோகமுள்ள சுவடி.

கடைசி சில ஏடுகளில் சாறு பூசப்படவில்லை. 12 ஏடுகள் காலியாகவும் உள்ளன.

---

**504.** சுவடி நெ. 284.

## (வைத்தியத் திரட்டு)

ஏடுகள் 60. பக்கத்திற்கு 5 முதல் 6 வரிகள்

மிகவும் சிதிலம், விஷயம் புலப்படவில்லை.

செல்லரித்தும், முக்கால்வாசி ஒடிந்தும் உள்ளன.

(நீள × அகலம் 25 × 4 செ. மீ.)

இதில் பாலசஞ்சீவி மாத்திரை (ஏடு 9) ஷண்முகசிந்தூரம் (ஏடு 21) ஆனந்த பைரவன் மாத்திரை (ஏடு 27) பிள்ளைபெத்த வளுக்கு – சன்னி – சிக்கல் சூதிகா வாயுவிற்கு (ஏடு 40) பேதி மாத்திரை (ஏடு 41) நீரிழிவிற்குக் கல்நார் செந்தூரம். விஷ பேதிகளுக்கு உப்பு (ஏடு 46) சீவரக்ஷாமிருதம் (ஏடு 48) கட்டிகளுக்குக் குமட்டிக்காய் லேகியம் (ஏடு 51) முதலானவை களுள்ளன. மிகவும் செல்லரித்துப்போய்விட்டதால் ஆரம்பமும், முடிவும் குறிப்பிட இயலவில்லை.

---

**505.** சுவடி நெ. 285 (A)

## பலதிரட்டு

ஏடுகள் 8; பக்கத்திற்கு 4 வரிகள்.
மிகச்சிதிலம் செல்லரித்துள்ளது, இடையில் முறிந்துள்ளது.
(நீள × அகலம் 40 × 2½ செ. மீ.)

இதில் குமரித்தைலம், கூஷ்மாண்ட லேகியம், மேகத்திற்கு அவிபத்தியோகம் (கிரந்தலிபியில்) – குமரித்தைலம், வாதாசன குளிகை, அயச்செந்தூரம் முதலியனவுள்ளன.

***Beginning :***

(A) 1. குமரித்தைலம்

திரிகடு
திரிபலா
சீரகம்
பூஞ்சாந்தி
பூலாங்கிழங்கு
லவங்கப்பட்டை
செவ்வல்லிக்கொடி
கஸ்தூரிமஞ்சள்

கோஷ்டம்
மாஞ்சில்
மதுரம்
போளம்
லவங்கம்
லவங்கப்பத்திரி
அக்கிராக்காரம்
செண்பகமொட்டு

| | |
|---|---|
| ஆனைத்திப்பிலி | மண்குஷ்டி (மஞ்சிஷ்டா) |
| சோம்பு (பெருஞ்சீரகம்) | மரமஞ்சள் |
| கிளியூரம்பட்டை | நன்னாரிவேர் |
| விளாமிச்சைவேர் | வெட்டிவேர் |
| கோரைக்கிழங்கு | பீதரோகிணி |

இவைகள் வகைக்குப் பலம் $1\frac{1}{2}$ எடுத்து அரைத்து, எடுத்துக் கொண்டு சக்கைத்தூள் பலம் $1\frac{1}{2}$க்குக் குமரிச்சாறு படி 9.

| | |
|---|---|
| பசுவின் பால் | படி $\frac{3}{4}$ |
| எள்ளெண்ணெய் | படி $\frac{3}{4}$ |

இவைகள் சேர்த்தெரித்துக் கடுகு மெழுகு பதத்தில் இறக்கி 45 நாட்களுக்குத் தானிய புடத்தில் வைத்து எடுத்துக்கொள்ள வேண்டியது.

## 2. அவிபத்தி சூரணம்

| | |
|---|---|
| நெல்லிப்பருப்பு | வாய்விளங்கம் |
| ஏலம் | லவங்கம் |
| ஜாதிக்காய் | கோரைக்கிழங்கு |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | |

இவைகளெல்லாம் ஒரு பங்கு.

சுத்தி செய்த சிவதைவேர் 3 பங்கும் கூட்டிச் சூரணித்துச் சரீரத்திற்குத் தக்கபடி திரிகடிப் பிரமாணத்தில் சர்க்கரை கூட்டி இளவென்னீரில் சாப்பிடவும். ஜாஸ்தியாய் பேதித்தால் மோர் சாதம் சாப்பிடவும்.

*End :*

## 3. அயச்செந்தூரம்

இரும்புத்தூள் வராகன் 8 நல்லெண்ணெயில் ஊற நாழிகை 60 வெந்நீரில் கழுவக் கனிப்போம். கருவப்பட்டைக் கஷாயத்தில்

4 நாள் அரைத்துப் புடம்போடவும். நெல்லிக்காய்ச் சாற்றிலும், புளியிலைச் சாற்றிலும், கோமூத்திரத்திலும் தனித்தனியே $2\frac{1}{2}$ ஜாமமரைத்துப் புடம்போடவும். செந்தூரிக்கும். திரிபலாதி கஷாயத்தில் 2 ஜாமம் அரைத்துப் புடம்போடவும். ஆலம்பாலில் புடம் 1, எருக்கம்பாலில் புடம் 1.

## (B) பொன்னுங்காணித் தைலம்

ஏடுகள் 2

( நீள × அகலம் 26 × 3 )

பொன்னுங்காணி
நெய்சுண்டி
வல்லாரை
சிறுகீரை
ஊசிப்பாலை

இவை ஐந்தின் சாறு தினிசுக்குப் படி 1

கையாந்தகரை
கோவை
சீந்தில்
புளியிலை
முசுமுசுக்கை
கீழாநெல்லி
கருநொச்சி

இவைகளின் சாறு வகைக்குப் படி $\frac{1}{2}$

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் சாறு | படி | 2 |
| பால் | படி | 2 |
| நல்லெண்ணெய் | படி | 4 |

ஷி கடைச்சரக்கு

வெள்ளருகு
கிராம்பு
கொத்தமல்லி
பூனீறு
தேவதாரம்
சிறுநாகப்பூ
சீரகம்
கோஷ்டம்
கஸ்தூரி மஞ்சள்
சிறுதேக்கு
செண்பகப்பூ
லவங்கப்பத்திரி

கார்போகரிசி
செவ்வல்லிக்கொடி
நன்னாரி வேர்
பச்சைப் பூலாங்கிழங்கு
முத்தக்காசு

இவையெல்லாம் பலம் 1 விதமெடுத்துப் பசுவின்பால் விட்டரைத்து வெட்டிவேர் பலம் 1 விளாமிச்சைவேர் பலம் 1 இரண்டையும் 4 சேர் ஜலம் விட்டு 2 சேராய்க்காய்ச்சி எல்லாம் சேர்த்துக் கமலாக்கினியாயெரித்து, மெழுகு பதத்தில் தைலம் வடிக்கவும்.

நெல்லில் 13 நாளைக்கு வைத்துப் புடம்போட வேகமாக ஆறும். பின்புதான் பெடுத்துத் தலைமுழுகவும். மேகம் 21, பித்தம் 42ம், நயன வியாதி 96ம், கிரந்தி, சூலை, பாண்டு, விஷபாண்டு, ஐயப்பாண்டு இவை தீரும்.

பத்தியம்: புளி, புகையிலை, பாகற்காய், அகத்திக்கீரை, பூசினிக்காய், சிறுகீரை, வாயுபதார்த்தம் இவை ஆகாது.

(C) பின்னர் 11 ஏடுகளில்

1. ஸ்ரீ ப்ரும்மதேவர் ஆக்ருஷ்யமந்த்ரம்
2. காயத்ரி ஜபம்
3. யஞ்ஞோபவீதமந்திரம்
4. ஸங்கல்பம்

முதலானவைகள் கிரந்தலிபியில் எழுதப்பட்டுள்ளன. ஜைன ஸம்பிரதாயப் பிரகாரம் உள்ளன.

(D) கடைசி 3 ஏடுகளில் ' ஜினஸுப்ரபாத'' சுலோகங்கள் கிரந்த லிபியில் எழுதப்பட்டுள்ளன.

---

**506.** சுவடி நெ. 286 (A)

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் 22; பக்கத்திற்கு 8 வரிகள்

மிகவும் சிதிலம். செல்லரித்து ஏடுகள் முறிந்துள்ளன.

(நீ × அ 29 × 3½ செ. மீ.)

இதில் அயச்செந்தூரம், லிங்கச்செந்தூரம் (ஏடு 1) அக்கினி குமாரச் செந்தூரம் (ஏடு 2) சண்டமாருதம், பஞ்சசூதச் செந்தூரம் – திருமூர்த்தி, அப்பிரகச் செந்தூரம், வெங்காரச் செந்தூரம் (ஏடு 3) பாஷாணச்செந்தூரம், அண்டப்பதங்கம், ஆமையோடு பற்பம், வீரமெழுகு (ஏடு 4) கண்ணுக்குச் சாதிப் பத்திரி மாத்திரை, காக்கைவலிப்புக்கு மருந்து (ஏடு 5) மேகக் கட்டி உடைய, பேதிக்கு எண்ணெய் (ஏடு 9) மேகரணத்திற்கு மருந்து – தாதுபுஷ்டிக்கு நெய் – சகல வாயுவுக்குக் குக்கிலாதிச் சூரணம் – இங்குவாஷ்டக மாத்திரை – சுராங்கிஷ மாத்திரை – கோரோசனை மாத்திரை. (ஏடு 11) சிலாசத்து பற்பம் – லிங்கச் செந்தூரம் – வீரமெழுகு (ஏடு 12) பல் கெட்டியாகப் பொடி, வெடியுப்புச் சுண்ணம் – பீனிசத்திற்கு எண்ணெய், சூட்டினல் வந்த வியாதிக்குக் கீழாநெல்லித் தைலம் (ஏடு 13) இலந்தை சர்பத் – வல்லாரை சர்பத் – மேகரண எண்ணெய் – கருப்புப் பிளாஸ்திரி – ஆவாரையெண்ணெய் (ஏடு 14) ரஸப்பிளாஸ்திரி, இங்கிலீஷ் பிளாஸ்திரி – இங்குவாஷ்டக மாத்திரை (ஏடு 15) சொறிசிரங்கு எண்ணெய் – அக்கினிகுமாரன் மாத்திரை – சண்ட மாருதச் செந்தூரம், பஞ்சசூதம் – திரிமூர்த்தி (ஏடு 17) கட்டுவாதி – அப்பிரகச்சத்து – வெங்காரச் செந்தூரம் – வங்க பஸ்பம் (ஏடு 18) பறங்கிப்பட்டைச் சூரணம் – மதனகாமேசுர விந்தாதி லேகியம் – தைலம் – தாதுவிருத்திக் கோளா (ஏடு $21\frac{1}{2}$) தாதுபுஷ்டி லேகியம் (ஏடு 21) விலாங்கு மீன் லேகியம் சயத்திற்கு நாராயண ரிஷி சொன்ன லேகியம் முதலான மருந்து முறைகள் உள்ளன.

***Beginning :***

இரும்பு லாடம் அரப்பொடி சேர் 1 கல்வத்திலே போட்டு ......................வில்லைத் தட்டி ஓட்டில் வைத்து முழுப்புடம் போடவும். திரும்பிக் கல்வத்திலிட்டுக் கஞ்சாங்கோரைச் சாற்றினல் அரைத்து வில்லை செய்து, காயவைத்துப் புடம் போடவும். இப்படி 6 புடம் போடவும். கடைசியில் சாதிலிங்கம்

வராகனெடை 10 கூடச்சேர்த்து வெள்ளெருக்கம் பழுப்புச் சாற்று லரைத்துப் புடம் போடவும். ஆறினவுடன் எடுத்துப் பொடி செய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும். தீரும் வியாதிகள் காமாலை, பாண்டு, பித்தம், வெட்டை இதுகள் தீரும். தாது புஷ்டி ரத்தபுஷ்டி உண்டாகும். அனுபானம் அறிந்து கொடுக்கவும். புளி தள்ளவும்.

### சயத்திற்கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பேரீச்சங்காய் | பலம் | $1\frac{1}{2}$ | கொடிமுந்திரி | பலம் | 4 |
| கல்கண்டு | ,, | 4 | அக்கிராக்காரம் | ,, | 1 |
| சாதிப்பத்திரி | ,, | 2 | அதிமதுரம் | ,, | 1 |
| சீரகம் | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| சித்தரத்தை | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| தேன் | ,, | 2 | பசுவின் நெய் | ,, | 4 |
| பன்னிநெய் | ,, | 4 | | | |

இதுவெல்லாம் (கல்லுரலிலிட்டிடித்து) கழற்சிக்காய் பிரமாணம் சாப்பிடவும். சயரோகந்தீரும்.

### (B) பலதிரட்டு

ஏடுகள் 9 (பக்கத்திற்கு 8 வரிகள்)

மிகவும் செல்லரித்துள்ளது. ஏடுகள் பாதியில் முறிந்துள்ளன.

இதில் மஞ்சள் முலாம் செய்யும் விபரம். கட்டி உடைவதற்கு சிறங்கு காய்வதற்கு – நாராக்கு முலாம் (ஏடு 1) பச்சைப் பிளாஸ்திரி – கட்டிகள் உடைய – அமுங்க – துர்மாமிசம் கரைய (ஏடு 2) கட்டிக்கு மேல்முலாம் (ஏடு 3) சிறங்கு காய பிளாஸ்திரி– ஆறாத உண்ணிக்குப் பிளாஸ்திரி (ஏடு 4) நெருப்புச்சுட்ட புண்ணுக்கு பிளாஸ்திரி (ஏடு 5) கண்டமாலைக்கு ஒத்தடம், சீழ்பிடித்த காயத்திற்கு வெண்ணெய் – மேக ரணத்திற்கு (ஏடு 6) வயிறு கடுப்பிற்கு – ரத்தக்கடுப்பிற்கு – கண்ணோவுக்குப் பத்து (ஏடு 9) முதலான மருந்து முறைகள் உள்ளன.

*Beginning :*

| | |
|---|---|
| மஞ்சள் மெழுகு | சேர் 3 |
| மிருதார்சிங்கி | சேர் 7 |
| வெள்ளைக் குங்கிலியம் | சேர் 1 |
| இங்கு | விராகனெடை 2 |
| பசுவின் நெய் | சேர் 1 |

ஷெ மெழுகை நன்ருய்க் க்காய்ச்சித் தண்ணீரில் வடிகட்டித் தண்ணீரின்மேல் நிற்கும் மெழுகையெடுத்து பிறகு காய்ச்சிக் கொண்டு ஷெ முன்னே எழுதின சரக்கையெல்லாம் பொடித்து உருகும் மெழுகில் போட்டு நன்ருய்க் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு டப்பாவில் போட்டுக்கொள்ளவும்.

இதற்குத் தீரும் வியாதி: கட்டி உடையாமல் துர்மாமிஸம் மூடியிருந்தால் இது போடவும். கட்டி உடையும். கைகண்டது.

### வயிற்றுவலிக்கு, பேதிநிற்க

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | வாய்விளங்கம் |
| அசமதாகம் | கடுக்காய்த்தோல் |
| திப்பிலிமூலம் | குராசானி ஓமம் |
| கிராம்பு | சாதிக்காய் |
| சாதிப்பத்திரி | அதிவிடயம் |
| நெல்லிமுள்ளி | தான்றித்தோல் |
| சிறுநாகப்பூ | சுக்கு |
| வால்மிளகு | கசகசா |
| அபின் | புளியங்கொட்டைத்தோல் |

இதுகள் வகைக்கு சமன்; எடுத்துப் பொன்னிறமாக வறுத்துப் பொடித்து வைத்துக்கொண்டு, உட்கொள்ளவும். இதற்குத் தீரும் வியாதிகள்: வயிறுகடுப்புக்கும், வயிற்றுவலி இவை தீரும். வெந்நீரில் கொடுக்கவும். கைகண்டது.

---

507. சுவடி நெ. 287

## தன்வந்தரி வைத்தியம்

ஏடுகள் 113; பக்கத்திற்கு 12 முதல் 18 வரிகள்
சுத்தமான எழுத்து, சிற்சில இடங்களில் செல்லரித்துள்ளது
(நீள × அகலம் 21½ × 5 செ. மீ.)

இச்சுவடி தஞ்சை சரஸ்வதிமஹால் நூல் நிலயத்தாரால் 3 பகுதிகளாக அச்சிடப்பட்டுள்ளது. இதில் எல்லா வியாதிகளின் குறிகுணங்களும் தக்க சிகித்ஸை முறைகளும் உள்ளன. வைத்தியர்களுக்கு மிகவும் உபயோகமுள்ள சுவடி.

*Beginning :*

செக்கர்மதிப் பிறைமௌலித் தவளமேனித்
திகம்பரர் பொன்மாமேருச் சிலையார்செல்வன்
முக்கண்ணுடைக் கடவுளொரு பாகம் நீங்கா
முதல்வியணி பவளவிதழ் முத்தமுரல்
மைக்கய ற்கட்சிறுவனுதை தனத்துத்தீம்பால்
மருவிநுகரருவி மதமொழுகி நீண்ட
கைக்கரட மால்யானை முகத்தோனுதி
கற்பகக்கன் றிருசரணங் கருத்தில்வைப்பாம்.

*End :*

சர்வ பில்லிசூனியத்திற்கும் மாரணத்தைலம்

ஆவாரைவேர், தேற்றும் வேர், அனிச்சம்வேர், முருங்கைவேர், பாவட்டைவேர், சிறுகீரைவேர், குமிழம்வேர், கொடிக்கழற்சிவேர், செங்கழுநீர்க் கிழங்கு, முடக்கொத்தான், காற்றெட்டிவேர், புங்கம் வேர், இசங்கம்வேர், பிராய்வேர், புன்முருங்கைவேர், எழுமுள்ளி வேர், நீர்ப்பூலாவேர், வேலிப்பருத்திவேர், வீழிவேர், குருந் தோட்டிவேர், வில்வவேர், தாமரைவளையம், கொடுப்பைவேர், பொடுதலை, அமுக்கிராவேர். ஆக 21க்கு பலம் 8.

தரித்திடித்து 4 மரக்கால் தண்ணீரில் போட்டு, 4 படியாகக் காய்ச்சி, அதில் 4 படி எண்ணெய் விட்டுப் பசுவின் பால் 4 படி விட்டு, 1 படி எலுமிச்சம்பழச் சாறுவிட்டு,

செங்கழுநீர்கிழங்கு, பெருமரப்பட்டை, கோஷ்டம், கிராம்பு, கல்நார், சண்பகப்பூ, குளவிந்த மஞ்சள், கொத்தமல்லி, சிறுதேக்கு, மதுரம், வசுவாசிக்காய், சாதிக்காய், அரத்தை, சாத்திரவேதி, செவ்வல்லிக்கொடி, அதிவிடயம், வெந்தயம், வசம்பு, நாகணம், திப்பிலி, மிளகு, கடுகரோகிணி, சந்தனம், அரிதாரம், தேவதாரம், முந்திரிகைப்பழம், கருஞ்சீரகம், லவங்கம், பத்திரி, கஸ்தூரி மஞ்சள் இவை 21க்கு பலம் 6.

இவைகளையரைத்து முன் சொன்னதிலே கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து உள்ளுக்குங்கொள்ளவும். 2 காதுகளிலும் விட்டடைத்து இலுப்பைப்புண்ணுக்குத் தேய்த்து, வெந்நீரில் முழுகவும். இந்தத் தைலம் கொண்டால் பழயதும், புளியுந் தள்ளவும். மாதர்சம்போகம் நீக்கவும். அவரைக்காய், சிறுகீரை, புடலங்காய், முளைக்கீரைத் தண்டு, உப்புங்கூட்டுவது. தெடுமீன், காறைமீன், சின்னக்காறை இந்த மச்சம் உலர்ந்தது கூட்டவும். 4 நாட்களுக்கொருக்கால் முழுகவும். முழுகின நாளைவிட்டு, மறுநாள், உச்சியில் மட்டுந் தேய்த்துச் சுவறினபின் மறுநாளுந் தேய்த்து மறுமுழுக்கு வருமட்டுந் தேய்த்து, இப்படித் தேய்க்கவும். முழுகவும். இத்தைலம் முழுகும்போது நல்ல பெரியோருக்கு அன்னம் படைக்கவும். ஜபம் ஜபிக்கவும். இதுசெய்தால் எந்த சத்துருவான பேர்கள் செய்த கைமயக்கம், உடலெரிவு, காந்தல், தலை மயக்கம், சர்வ பில்லி சூனியமுந் தீரும். என்று தன்வந்தரி பகவான் சொன்னாரென்றவாறு.

முற்றும். குருவே துணை.

பட்டத்து யானை பார்த்தன் மைதீன் மாவுத்தன் கையெழுத்து

---

**508.** சுவடி நெ. 283 (A)

# அகஸ்தியர் ஜாலத்திரட்டு 1200

( முதல்காண்டம் (வைத்யம்) முன்னூறு )

ஏடுகள் 47 ; 12 முதல் 13 வரிகள் பக்கத்திற்கு

எழுத்து சுத்தமாகவுள்ளது: பூர்த்தி

( நீள × அகலம் 21 × 4 செ. மீ. )

இதில் நூலின்பெருமை, அஷ்டகர்மம், தம்பனம், மோகனம் வச்யம், வித்வேஷணம், ஆகர்ஷணம், உச்சாடனம், பேதனம், மாரணம், ஊமையெழுத்து, முப்பூவின் விபரம் (ஏடு 5) துருசுச் சுன்னம், கெந்தகபற்பம், ரசச்சுன்னம், அரிதாரச் சுன்னம், சர்வ நோய்க்கும் (ஏடு 6) வீரச்சுன்னம், சகல நோய்க்கும் கர்ப்பூரச்சீனிச்சுன்னம், காந்தரசச்சுன்னம் சகல வியாதிக்கும் (ஏடு 7) கபாலக்குறு, நவலோகநீத்துச்சத்துருக்குரு (ஏடு $7\frac{1}{2}$) தாமிர பற்பம் (ஏடு 8) (ஏடு 9 இல்லை) துருசுநீறு (ஏடு $10\frac{1}{2}$) ரசபற்பம், கந்தகபற்பம், வீரபற்பம், கல்லுப்பு, அரிதாரம், பொரிக் காரம் (ஏடு 11) புஷ்டிக்கு மருந்து, கரிசாலையெண்னெய் (ஏடு 12) (மேகவெட்டை, ஒருத்தலைநோய், உள்சூடு, உஷ்ணம், கெர்ப்ப வாயு – கெர்ப்பநோய், பூச்சி முதலானவைகள் தீரும்) வீக்கம், புண்புரை, சூலைப்புண், லிங்கப்புத்துக்குப் பூசயெண்ணெய் இதுவும் விளக்கெண்ணெய் (அரையாப்பு, மேகச்சூலை, கண்ட மாலை, விப்புருதி, புண், பிளவை, வெடிகள் புண், படுவன்; வீக்கம், பரு இவை தீரும்) (ஏடு 12) பொடிசிறங்குக்குதலை முழுகயெண்ணெய், வேறு – வீக்கம், சீலைப்புண், கண்வலி, குறி மறைதல், கல்லழுத்தலுக்கு (ஏடு 13) செவிநோய்க்கு எண்ணெய் (பரு, படுவன், சீழுக்கு) சன்னி, சுர, விஷத்திற்கு மாத்திரை, மை (ஏடு $14\frac{1}{2}$) சர்வ நோய்க்கும் கைகண்ட லேகியம் (ஏடு 15) வேறு (ஏடு 16) வெள்ளையாவாரைத் தைலம்; சிவன் வேம்புத் தைலம் – 100 ஆண்டு வேப்பம்பட்டைத்தைலம் (ஏடு 18) மூலிகை விபரஞ்சொன்னது (ஏடு 20) களவுபிடிக்க, தம்பனம், அரையாப் பிற்கு (ஏடு 25) மதனவாசலேகியம், ராஜவச்யம், விநோதம்,

ஊர்குருவி (ஏடு 26) ஸ்திரீ வசியம் (ஏடு 27) குந்துருக்கமருந்து (வாதபித்தசிலேஷ்மரோகம் தீர) (ஏடு 28) காஞ்சோறிக் கற்பம் சகல நோய்க்கும் மகத்தான தைலம் (ஏடு 29) வாதம், பாண்டு மகோதரம், காமாலை, ஆனந்தவாயு, கண்டமாலை, அரையாப்பு, உடலுறுக்கி, பிரமேகம், சன்னி 13க்கும் (ஏடு 31) சுகஜன்னி, உள்வீச்சு, சுரம், பட்சிதோஷம், கண்ணோய், கன்னச்சூலை, வாந்தி, விக்கல், அஷ்டகுன்மம் இவைகளுக்கு (ஏடு 32) வாடை, பயித்தியத்திற்கு (ஏடு 35) மறுட்டு வித்தை (ஏடு 36) தேவாங்கு வித்தை வியாபாரம் செய்ய (ஏடு 36½) முதலியவை உள்ளன.

*Beginning :*

பூரணமாய் ஓங்காரப் பொருளாய் போற்றி
புகழ்பெறவே சிவகாமி யாத்தாள்பாதம்
காரணமா யறிவில்நின் று மனத்தைப்போற்றி
கந்தனுக்குங் கருணைபெற்ற சீஷனுகி
வாரணுமா முகத்தோனைப் பணிந்து போற்றி
வல்லமையா யாயிரத்தி ரண்டுநூறு
சீரணமாய்ப் போகாமல் தெளிந்து சொல்வேன்
நற்பதம்ம னத்திவைப்பே னென்ருங்காப்பே (க)

காரணமே மூலவட்டங் தன்னில் நிற்கும்
கணபதியும் வல்லபையுங் தேவர்காப்பு
பூரணமாம் பராபரையும் சிவனும் நந்தி
பொருந்திநின்ற பஞ்சகர்த்தா கணங்கள்காப்பு
வாரணத்தின் மீதேறி விளையாடு மெந்தன்
மனதுரு வருள்சிறந்த குமரன்காப்பு
நாரணனும் நான்முகனும் அரியாய் நின்ற
நலமான வேதாந்தங் காப்புத்தானே. (உ)

*End :*

புணரவே குருவாணை பிள்ளையுண்டு
பிராட்டிக்கும் நேர்த்தியாய்ப் பூசைசெய்வாய்
மணறவே அஞ்சுருண்டை நீரிலாட்டி
மைந்தனே உள்ளங்காலில் தடவிப்போட்டு

உணறவே முக்காதம் ஓடலாம்பார்
ஓடவென்றால் பின்னுமதை யுரைத்துப்பூசு
புணரவே வைத்தியத்தின் மருந்தையெல்லாம்
அடக்கினேன் சகசாரல முதல்காண்டத்தே. (உகூள)

காண்டமுடன் கர்மசூத் திரம்முன்னூறும்
கண்டீரே கடைக்காண்டந் தான்முன்னூறும்
தாண்டுவாய் வைத்தியசெந் தூரமுன்னூறு
துலங்குமிந்த முதற்காண்டம் முன்னூரேடே
ஆண்டதுகை ஆயிரத்திரு நூறுமாறு
அரணுனை யாருக்கு மீய்ந்திடாதே
தாண்டவங்க ளாகுமடா யிதுமுன்னூறும்
சத்தியமாய் முதல்காண்டந் தானுமுத்தே (உகூஅ

தட்சிணமூர்த்தி துணையாக வேணும். சுபமஸ்து.

குருப்யோ நம: சிவமயம்.

---

509. சுவடி நெ. 288 (B)

## அகஸ்தியர் பெருநூல்
## இரண்டாங்காண்டம் முந்நூறு

ஏடுகள் 47; பக்கத்திற்கு 12 முதல் 13 வரிகள்

எழுத்து சுத்தமாகவுள்ளது. பூர்த்தி.

சிற்சில ஏடுகளின் நுனி சிதைந்துள்ளன.

இதில் பாஷாண மாத்திரை, சுரத்திற்கு (ஏடு 4) வாத பித்த சிலேத்மத்திற்கு மந்திரம் – பிளவை, கண்டமாலை, சொறிசிறங்கு எண்ணெய் (ஏடு 5) கரப்பானுக்கு – குழந்தை யுண்டாக – பட்சி தோஷத்திற்கு – கரப்பானுக்கு எண்ணெய் – மூலமுளைக்கு மந்திரம் (ஏடு 5) கண்ணோவுக்கு மருந்து – குட்டங் குளிர் நோய்க்கு – சயகாசத்திற்கு – பாண்டு சோகைக்கு மந்திரம் (ஏடு 6) சிவசிந்தனை – பேய்பிடித்தபேருக்கு – அஷ்டகுன்மத்திற்கு மந்திரம் (ஏடு 7) விஷத்திற்கு மந்திரம் கிறுகை. சகல பிணிக்கும்

விபூதி மந்திரிக்க அட்சரம் (ஏடு 8) கஸ்தூரிப்பிள்ளை – கஸ்தூரிப் பட்சி – சர்வாங்க மாத்திரை. (ஏடு 10) சர்வாங்க எண்ணெய் (ஏடு 11) சர்வசியம், ஆக்ராணம், கண்ணிலிடக் கலிக்கம், சன்னி சுரம் போக (ஏடு 12½) அரையாப்பு சூலைக்கு வேர்வெட்ட – ஸ்திரீ வசியம் – மண்டையிடி குன்மத்திற்கு மந்திரம் – தாளகச் செந்தூரம் (ஏடு 13) ராமபாணம் (ஏடு 14) இடிமருந்து – அழிஞ்சில் தைலம் (ஏடு 15) வெடிசூலை, கண்டமாலை, சொரி, சிறங்கு, ரணங்களுக்குப் பூசவும், முழுகவும், தீராத இரணங்கள் தீர (ஏடு 16) அரிதார மாத்திரை சுரங்களுக்கு – கெந்தக உருண்டை சுரத்திற்கு – பிணிகளுச்கு மந்திரம் (ஏடு 16 II) சத்துரு மித்ரம், சாதிலிங்கச் செந்தூரம் (ஏடு 17) சவுக்காரக்குரு – சுரம்வரும்குறி சுரதோஷத்திற்கு மாந்திரீகம் (ஏடு 18) சந்தனாதித்தைலம் மேகத்திற்கு – மயிர் கறுக்க, பித்தம்போம் – பித்த மேகத்திற்கு வில்வாதி யெண்ணெய் – சீரகம் தின்னறது – தேசிக்குறு (ஏடு 19) பலகரைலேகியம் (ஏடு 20) நோய் வந்தபேருக்குத் திதி வார நக்ஷத்திரமறிந்து செபிக்கவும். வயனம் (ஏடு 25) கைபார்க்க – உச்சி முகந்து சுரத்தை வாங்கறது (ஏடு 25½) கந்தக அரிதார உருண்டை சுரம், சன்னிகளுக்கு (ஏடு 26) படுவன், பருவுக்கு – கிருகிருப்பு, பறவை தோஷத்திற்கும் – சர்வ விஷங்களுக்கு (ஏடு 27) வெட்டுப்பட்ட புண்களுக்கு, அரையாப்பிற்கு, புண்களுச்குக் களிம்பு, கண்ணோய், கண்குத்து, ஏறுதலைநோய். நேத்திரத்தில் எந்த வலிக்கும் (ஏடு 28) சூனியம், ஏவல், தீர வெந்நீர் மூழ்கவும். (வேறு) வெந்நீர் மூழ்க (ஏடு 29) கிறுகைக்கு மருந்து – சூரியனில் திரண்டது (ஏடு 30) வாலையறியும்படி, பஞ்சதாரையுருண்டை, வாதகுன்மத்திற்கு அனுபானம் (ஏடு 31) பித்த குன்மத்திற்கு அனுபானம், சிலேத்ம குன்மத்திற்கு அனுபானம், சூலை நோய்க்கனுபானம் நீரழிவிற்கு (ஏடு 32) கஸ்தூரி உருண்டை கடுப்பு மூலத்திற்கு (ஏடு 33) குதிரைக் குளம்பு பற்பம், மேகவெட்டை, மேகசுரம், பித்தசுரம் போக (ஏடு 34) ஆனைநக பற்பம் சூலை, ஆனந்த வாயு, மூலத்திற்கு கண்ணில், குந்தம் கரைய, உடம்பில் சூலைகளுக்கும், வாயுவிடா

சீவனுக்கு வந்த கழலைக்கு (ஏடு 35) ரஸவங்கச் செந்தூரம் சேத்துமத்தால் வந்த வியாதி, நீர்க்கடுப்பிற்கு (ஏடு 36) சிலேத்மத்தால் வந்த நோய்களுக்கு, பித்தத்தால் வந்த நோய்களுக்கு, ரத்தகாசம், மந்தாரகாசம், ஈளைக்கு (ஏடு 37) பால்குழம்பு பேதிக்கு, நீரடைப்பிற்கு, மலக்கட்டுக்கு, விஷத்திற்கு வித்து சிவலோக லேகியம் (ஏடு 39) வியாதி வந்த வரலாறு (ஏடு 43) வெட்டுப் புண்ணுக்கு (ஏடு 46) கொம்பேறி முறிந்த காய முடத்திற்கு எண்ணெய். மூக்கினிலே சதைவளர்ந்தால், உச்சிப் புத்து, மூலமுளை, விழிமுடல், கறண விழுந்த புண்ணுக்கு (ஏடு 46) மந்திர எண்ணெய் பித்தப்போக, விஷப்போக, விந்து இல்லாமல் போக முதலான பலமுறைகளுள்ளன.

*Beginning :*

ஆயிரத்திருநூறு முன்னூலாய்ந்து முற்காண்டஞ் சூத்திரமாய்
பாயிரத்துறுதிகொண்டு பாடிய வைத்திய பாகமோ
ராயிரங் கவிமுன்னூறு உமைதானுரைக்க யீசன்
தாயோரைக் கஞ்சாத்திய விதி நூல்தானே. (க)

தானென்ற பொருளாயெங்கும் தாங்கிய பரமகேசன்
வானென்ற வெளியாய்நின்ற மகேசுரன் வாயுநூலோன்
பானென்ற பிரமன்வாணி வல்லபைக் கிடத்தேநின்ற
ஊனென்று கணேசன்பக்கல் ஓமென்ற வட்டங்காப்பே (உ)

*End :*

உண்டுபார் குருவுண்டு மருந்துமுண்டு
உலக......... யுண்டு உதவியுண்டு
கண்டுபார் சிவமுண்டு பூசையுண்டு
கறுத்து ............ விளியுமுண்டு
திண்டுமுண்டு செய்யாதே தீவினைக் காளாகாதே
சேடமலப் போகாதே .........
கண்டு சொன்ன குருமுறையை விட்டிடாதே
பண்டிதனே வைத்தியநூல் காண்டமுத்தே. (300)

அரிஹரி ஓம். சுபமஸ்து.

510. சுவடி நெ. 288 (c)

## அகஸ்தியர் வைத்ய வல்லாதி அறுநூறு

ஏடுகள் 98; பக்கத்திற்கு 12 முதல் 13 வரிகள்.

எழுத்து சுத்தமாகவுள்ளது. பூர்த்தி. அக்ஷரப்பிழையுள்ளது.

இதில் இடி வல்லாதி – கிரந்தி, குஷ்டம், அரையாப்பு, பவுத்திரம், பிளவை, புத்து, விப்புருதி, கண்டமாலை தீர (ஏடு 2) சீனவல்லாதி, செங்கோட்டை சுத்தி (ஏடு 3) மூலம், சூலை 18, கிரந்தி 18, கரப்பான் 21, பவுத்திரம், ருத்திர வாயு, சூலை, முட்டிப் பிளவை, தாதுநஷ்டம், இந்திரியகண்டி இவை தீரும் (ஏடு 4) அம்ருதகெந்தி குக்கில் வல்லாதி (கெந்தக சுத்தி) கை கால் முடக்கந்தீரும். கிரந்தி, குஷ்டம், சூலை வாயு, வாதம் 80, மாரடைப்பு, கரப்பான், யோனிப்புத்து, சூதிகாக் கிராணி, கெர்ப்ப நோய், கண்ணோய், கண்டமாலை, அரையாப்பு, நாசிகா பீடவிப்புருதி, யோனிப்புத்து போம், கந்தக வல்லாதி (ஏடு 6) திமிர்வாதம், அண்ட சூலை, கபாலச் சூலை, கிரந்தி, குஷ்டம், சீழ் மூலம், விரணம், கெர்ப்ப சூலை, பவுத்ரம், தண்டு சூலை, லிங்க ரோகங்கள் தீரக் கெந்தி வல்லாதி (ஏடு 7) எள்ளு வல்லாதி கிரந்தி, அரையாப்பு, சூலை தீரும் (ஏடு $7\frac{1}{2}$) சிந்து வல்லாதி – நீரடைப்பு, உதர சூலை, கல்லடைப்பு, குன்மவாயு, நீர்க்கோர்வைக்கு காந்தச்செந்தூரம் சேர்ந்தது – வாஸாதிச் சூரணம். சூலை, குஷ்டம், திமிர்வாயு, அரையாப்பு, மேகவாயு, 10வித கரப்பான், பிளவைக்கு (ஏடு 8) தேகக்கூறு (ஏடு 9) தச வாயுவின் நடத்தை (ஏடு 10) தாதுபரீட்சை (ஏடு 11) அவஸ்தை 10ம் அறிய (ஏடு 14) நூல்விபரம் (ஏடு 15) பிண்ட உத்பத்தி (ஏடு $15\frac{1}{2}$) பூரண வல்லாதி (ஏடு $17\frac{1}{2}$) கோடிப்பிணி நீங்கி விந்து கட்டும். தாது மிக வலுக்கும். (ஏடு 18) வாயுவுக்குச் சார்தூலாதிக் குளிகை, வாயு 26, குன்மம் 8, மாரடைப்பு – ருத்திரவாயு, தமரக வாயு இவைகள் தீரும். (ஏடு 19) மகா சார்த்தூலாதிக்குளிகை, வாயு குன்மம், மலசலக்கிருமி, அகுவை, வெப்புப்பாவை, பீலிகை, மகோதரம், நீராம்பல், கவுசை, சூலை,

முட்டிவாதம் இவை தீரும். அயனாதி வடகம், பாண்டு, காமாலைக்கு (ஏடு 20) திருலோக வடகம். இதற்கு அகுவை, பாண்டு 6, குன்மம் 8, காமாலை 10, நீராம்பல், மகோதரம், கவுசை தீரும் (ஏடு 21) சந்தனபலாதித் தைலம் அஸ்திசுரம் உள்ளுக்குத் தாபம், கோபம், வீச்சுரம், சத்தி, பெரும்பாடு, பீனிசம், சயகாசம், கிருச்ரம், மேகநீர் தீரும். (ஏடு 22) மேலும் நயனநோய் 96, கண்டமாலை – நீர்ச்சூலை, தாதுநஷ்டம், திமிர் வாதம், இவைகளும் தீரும் (ஏடு 23) மகாநயன சஞ்சீவித் தைலம் நயனத்தில் காசம், படலம், பில்லம், நீர்ப்பாச்சல், குந்தம், திமிரம், குவளை வீக்கம், புழுவெட்டு, எரிச்சல், பித்தம், கண்பூவு – கண் குருடு இவை தீரும் (ஏடு 24, 25) மகாதிரிபலாதித் தைலம் – கண்ணோய், கன்னப்புத்து. நீர்ச்சூலை, கபாலவலி, மண்டைக் குத்து, வெரும் புளிச்சை, நாவில்சூலை, செவிக்குத்தல் (ஏடு 26) அமுதவல்லித் தைலம் (ஏடு 26½) நாக்கில் வரும் சூலைக்குத் தைலம் மகா ஏலாதித் தைலம் – கண்டமாலை முதல் கண்டத்துக்குமேல் வருகிற வியாதிகளுக்கு (ஏடு 27) 4 நாள் மாரலுக்கும் சுவாச காசத்திற்கும் அமுதவல்லித் தைலம் பித்தத்திற்கு (ஏடு 29) பீனிசம், கர்ணரோகம், சிரசில் நோய், தந்தவாயு, நேத்திர வாயுவிற்கு – நொச்சித் தைலம், கர்ணமூலம், கர்ணப்புத்து, கர்ணசூலை – அரிகிரந்தி, கர்ணவீக்கம், விப்புருதி, காதில் சீழ் இவை தீரும் (ஏடு 30) வெருகன் கிழங்குத் தைலம் – சுரத்திற்கு வாதசுரம், பித்தவெப்பு, விஷமசுரம், விடாதசுரம், மூணும்மாறல், நாலாம்மாறல், ஒன்றும்மாறல் இவைதீரும் (ஏடு 31) சீதாசெங்கழு நீர்த்தைலம் – சுரத்திற்கு ஏரண்டத்தைலம் – நீராம்பல், மகோதரத் திற்கு (ஏடு 32) நீர்கட்டு, மலக்கட்டு, அஷ்டகுன்மம், விஷபாகம், கெண்டை, பெருவயிறு, விப்புருதி இவை தீரும். செம்பையிலைத் தைலம் – கபால குஷ்டம், கபாலக்குத்து, மண்டையிடி, பீனிசம் 6 குட்டக்கிரந்தி, வெடிகிரந்தி, கபாலச்சூலை, கபாலக்கரப்பான், வாயு, தும்மல், மூக்குநீர், கபாலத்தினவு, புழுவெட்டு, மயிர் உதிர்தல், ஆஸனத்தில் உறுத்தல், இவைகளுக்கு (ஏடு 33) கபாலத்தையும், புரையோட்டம், பவுத்திரம், அரையாப்பு,

விப்புருதி, கண்டமாலை, பிளவை, துடைவாழை, குஷ்டத்திற்கு (ஏடு $34\frac{1}{2}$) உள்ளியாமணக்கெண்ணெய் – குன்மசூலை, குடலேற்றம் பவுத்ரம், புரையோட்டம் போம். நசியம், பீனிசம், தலைக்குத்து, கண்சிவப்பு, நயனவாதம் (ஏடு 35) நீர்பில்லம், விழியெரிச்சல் இவை தீரும். கிராணிக்கு வச்சிர கபாடம், யாத்திரைபோக (ஏடு 36) வில்வாதி லேகியம் – பாண்டு, வாதசோகை, வாந்தி, இழைப்பு, அதிசாரம், குன்மவாயு, அக்கினிமந்தம்போம் - சிந்தாதி லேகியம் – சோகை பித்த பாண்டுவிற்கு (ஏடு 37) நாபியடிவீக்கம் நீர்க்கோர்வை, பெருவீக்கம், கிராணி, பாண்டு, விஷபாகம், சோகை, குன்மம் தீரும் (ஏடு 38) நெல்லிமுள்ளி லேகியம், வாந்தி, பித்தம், காமாலை, பித்தபாண்டு, திமிர்வாயு, சோகை, நீர்ச்சுறுக்கு பித்த குன்மம், உடம்பெரிவு, சரபங்கவில்வாதி சயபாண்டு, வாத வாயு, காமாலை, சோகை, மந்தாரகாசம், வாந்தி, விக்கல் மேகம், நடுக்கல், ரத்தவாந்தி, நாசிகாபீடசுரம், மாந்தை (ஏடு 39) இவைகள் தீரும். நசியம் – வலிப்பு 12க்கும் சண்டமாருதம் – வாதம், சன்னி, சுரம், சூலை, அரையாப்பு, கிரந்தி, குஷ்டம், அண்டத்தில் (ஏடு 40) பிளவை, புத்து, பவுத்திரம் இவைகள் தீரும். மிருதுவாதிக் குளிகை – மகாமிருத்வாதிக் குளிகை – சீதஜ்வராங்குசம் இந்த 3 குளிகைக்கும் சீதச்சுரம் போம் (ஏடு 41) அரிதாரக்குளிகை, மாறல் முதலான சுரம் போம். வேறு – சுரத்திற்கு (ஏடு 42) இதுவும் அரிதாரக்குளிகை சுரத்திற்கு நாசிகாபரணம் ஆக்கிராணம் செய்ய சுரங்கள் தீரும் – திரிநேத்ரமை – சகல தோஷமும் போம் – சுரத்தின்மேல் விக்கல், வாந்தி (ஏடு 43) சுராங்கிஷம், சந்தானகுளிகை, சகல சுரத்திற்கு (ஏடு 44) மகாஹிங்குளாதி – வேறு குளிகை சுரத்திற்கு (ஏடு 45) அரிதார உருண்டை ஏலாதி குளிகை (ஏடு 46) சுரத்திற்கு, சீந்தில் மை வாதக்கடுப்பிற்கு – வாதத்திற்கு அனலாதிச் சூரணம். சூலை 68க்கும் (ஏடு 47) வெள்ளறுக்குச் சூரணம். சூலை, விப்புருதி, கண்டமாலை இன்னும் அநேக ரணங்களுச்கு (ஏடு 48 B) சகலக் கிரந்திக்கும் – சச்சினிச் சூரணம் கருங்குஷ்டம், அண்டவாதம், செங்குஷ்டம் (ஏடு 49) வெண்குஷ்டம், பரு, பிளவை, கிரந்திகள்

தீரும். கருங்கோழிச் சூரணம் (ஏடு 50) இடுப்பு வலிக்குச் சூரணம் பெண்களுக்குக் கர்ப்பம் அழிந்துபோகின்ற பேருச்கு எண்ணெய் (ஏடு 51) குழந்தைகளுக்குக் கரப்பானெண்ணெய் மூலத்திற்கு – ரெத்த மூலத்திற்கு நாயுருவி நெய் – சகல மூலத்திற்கு (ஏடு 52) வயதில் வரும் வியாதிக்கெல்லாம் நெய் (ஏடு 53) உள்ளிப்பற்பம், குன்மம், சூலே 18, கவுசை. பீலிகை. அண்டவாயு – கும்மட்டிக்காய் குழம்பு – இதற்குத்தீரும்நோய் நீராம்பல். கவுசை, வாயு, பாண்டு, சுரப்பு, கெர்ப்ப விப்புருதி (ஏடு 54) இதுவும் கும்மட்டிக்காய்க் குழம்பு. உதரத்தில் உண்டான ரோகத்திற்கு – குண்டலாதிக் குழம்பு – சோகை, காமாலேக்கு கடுக்காய் நெய் – பித்த சோகை பெருவீக்கம், மலக்கட்டுப்போம் (ஏடு 55) வல்லாரை நெய் – சயம் ஈளே, இருமல், மருந்தீடு, தொண்டைக்கம்மல், நஞ்சுவிஷம், மேல் மூச்சு, காந்தல், வாய், நாக்கு வறட்சிபோம். கண்டகாரி நெய் காசத்திற்கு பாலர்களுக்கு மாந்தத்திற்கு நெய் (ஏடு 56) குஷ்டத்திற்கு எண்ணெய், குஷ்டம், குறைநோய், கண்டமாலே, சகல ரணங்களுக்கும் துருசி எண்ணெய் – குஷ்டம் 72, கிரந்தி, கரப்பான், சூலே, புளவை, புத்து. கண்டமாலே, ஒட்டுப்புண், குறைந்த் குஷ்டம், வெளறுவிஷ்டியும் தீரும் (ஏடு 57) களிம்பு ரணங்களுக்கு. வாலரசபற்பம் – துவளுகிற கால்கையில் வாதம், பக்கசூலே, கிரந்திப் புத்து ருத்திரவாயு (ஏடு 58) இதுவும் வால ரசபற்பம், வாதம், சன்னி 18 குஷ்டம், கிராணி, தாதுவிருத்தி வெடி கிரந்தி, சூலே, மேகம் (ஏடு 59) தாளகபற்பம் குஷ்டம், குறை நோய், சூலே வாதம், பவுத்திரம். கண்டமாலே, புதுப்பிளவை, விப்புருதியிவைகள் தீரும் (ஏடு 60) தாளகக்கட்டு, ரசப்பதங்கம் வேதைக்கு (ஏடு 61) நாககட்டு (ஏடு 63) நாகச்செந்தூரம் (ஏடு 64) நாகக்கட்டு வெடியுப்புக்கட்டு (ஏடு 65) கிரிச்சனந்தீர யெண்ணெய் (ஏடு 67) சயந்தீரயெண்ணெய் குழந்தைகளுக்கு வரும் பிணிகளனைத்துந் தீரும். கெருடங்கிழங்கு எண்ணெய் (ஏடு 68) மூலநோய்க்குக் கத்தாழை யெண்ணெய் மேகம், எலும் புருக்கி, சூலேவலி, அதிசாரம், கிராணி, மூலம், நீரிழிவு, அந்திர தாகம், அஸ்திசுரம், மூலரோகம் எல்லாந் தீரும் (ஏடு 69)

எண்ணெய். மேகம், கண்டமாலை, மூலத்துக்கு, கிராணி, எலும்புருக்கி, பெரும்பாடு, வங்கு, வெள்ளை விப்புருதி, அங்கவாயு, நாசிகாபீடம் (ஏடு 70) குட்டம் குறை நோய்க்கு யெண்ணெய் (ஏடு 71) வெண்ணுத்தி தைலம், குறை குஷ்டத்திற்கு குட்ட மெல்லாந்தீர – நாகம், சாரை, மலைப்பாம்பு (ஏடு 72) தாது மீறும். யாகசாலை (ஏடு 73) நவச்சாரக்கட்டு, துருசுக்குரு செய்ய நவச்சார சயநீர் – துருசுவெள்ளை (ஏடு 75) வெடியுப்புச் சயநீர் (ஏடு 76) பூனீர் முத்தீட்சை (ஏடு 78) பிர்மக்கல் தீட்சை, அன்னம் காரெள்ளு எண்ணெய் விபரம் (ஏடு 79) காரெள்ளெண்ணெய்க் கடுகு (ஏடு 80) சவுக்காரம், சவுக்காரச் சுன்னம் (ஏடு 81) நாகக் கட்டு, கந்தகக்கட்டு (ஏடு 85) நாகக்கட்டு அயச்செம்பு (ஏடு 86) வெங்காரக்கட்டு, தாமிரபற்பம் (ஏடு 86) முன்கட்டின கெந்தகத்தில் வேதை, கெந்தகபற்பம் (ஏடு 88) மகாபாலரசம், பூவழலை (ஏடு 89) வெடியுப்பு சுத்தி (ஏடு 90) வெடியுப்புச் சயநீர், சுன்னம் (ஏடு 93) பூபதி (ஏடு 96) முதலிய முறைகள் உள்ளன.

***Beginning :***

ஆதியாய் அகண்டபரி பூரணமாய்நின்ற
அகண்ட பராபரத்திருந்த வைங்கரனேகாப்பு
சோதியாம் அறுமுகவன் பாதங்காப்பு
துரியவெளி தண்ணில்நின்ற சுந்தரியேகாப்பு
வாதியா மென்குருவின் பாதங்காப்பு
மகத்தான பெரியோர்கள் சரணங்காப்பு
பேதியாம் வைத்தியந்தா னறுறூருகப்
பேசுகிறேன் வாணியுட பாதங்காப்பே. (க)

காப்பென்ற வல்லாதி சார்தூலாதிக்
கருவான வழலையொடு சவுக்காரச்சுன்னம்
நாப்பென்ற தைலமொடு பற்பமெண்ணெய்
நாடியொடு வியாதிவரும் நாட்டந்தானும்
தாப்பென்ற சூசிகா மருந்துமல்லால்
சாற்றுகிறேன் வடகமொடு குளிகைதானும்
கோப்பென்ற......... செய் சாலையோடு
குறிப்பான கிருதங்கள் கூறுவேனே. (உ)

*End :*

உத்துத்துத்துப் பார்க்கையிலே ஞானமார்க்கத்
தொளிகாணும் கர்மமெல்லா மோடிப்போகும்
சற்றும்மனந் தளராதே பலநூல்ப்பாரு
சற்குருவின் பதம்போற்றி நிலையில்நில்லு
மற்றுமிந்தக் கருவெளியில் சொன்னயானல்
மாமுனிவர் சித்தருட சாபமெய்தும்
குற்றமற்றுநிலையில் நின்றால் சாபமேது
கூடாத பலங்கிட்டும் கூறினேனே. (சுஉ௦)

கூறினசொல் மறவாதே தாயைப்போன்று
குணமான வைத்தியத்தைக் கூர்ந்துபாரு
வேறுமொரு பொருளில்லையடி முடிதானப்பா
விளங்கிநின்ற காவியத்தில் விளக்கம்பாரு
அறுமாறி நின்றுதிருடாதே மதம்பேசாதே
மற்றநூல் பொய்யென்று வசனிக்காதே
அறுமுகவன் பதம்போற்றி கையில்நெல்லி
அறுங்கனிபோல் சொன்னதிந்த
வறுநூறுமுத்தே. (சுஉக)

குருவே துணை.

---

511. சுவடி நெ. *288* (D)

## அகஸ்தியர் பூஜா விதி

ஏடு *29*, (பக்கத்திற்கு *14* முதல் *15* வரிகள்)

எழுத்து சுத்தமாகவுள்ளது. பூர்த்தி.

இதில் சக்கரபூஜாவிதி – தம்பனம், மாரணம், அஷ்டசித்தி (ஏடு *7*) உச்சாடனம், வசியம், அணைப்பு, பேதனம் (ஏடு *8*) கணபதி மந்திரப் பூசை (ஏடு *9*) பிரும்மதேவன் மந்திர பூசை (ஏடு *9*) விஷ்ணு தேவர் மந்திரம் (ஏடு *10*) மஹேச்வர தேவர் பூஜை (ஏடு *11*) சதாசிவத்தின் பூசை (ஏடு *12*) சூரிய பூசை,

சந்திரன் பூசை (ஏடு 13) குருமூர்த்தி பூசை (ஏடு 14) சீஷர் பக்குவம் முத்திரை (ஏடு 21) சத்தி பூசை (ஏடு 22) அங்கன்னியாசம் (ஏடு 23) சத்தி பூசை முத்திரை (ஏடு 24) ஆயா சுத்தி (ஏடு 27) முதலானவைகளுள்ளன.

*Beginning :*

ஆதாரமாறு மகண்ட குருபாதம்
வேதகாமத்தின் விதிமார்க்கம் — நாதமுறும்
விந்துவே விளங்கும் பூசாவிதிபார்
தந்தி முகத்தோன் கருணைதான். (க)

காரணமாஞ் சிவயோகி சித்தர்பூசை
களங்கமறச் சொல்லுகின்றேன் நன்றாய்க்கேளு
பூரணமாம் ஞானமல்லோ மௌனவாழ்க்கை
புகழான வஷ்டாங்க நடனமாடும்
சீரணமாய்ப்போகாமல் பூசைமார்க்கம்
செப்புகிறேன் மனந்தெளிந்த சித்தர்க்கய்யா
வாரணமா முகத்தோனை முதலேபூசை
மற்றதொரு பூசையெல்லாம் பிறகுதானே. (க)

செய்யப்பா வதன்பிறகு சுப்ரமண்யன்
தீர்க்கமாய் வதன்பிறகு வைரவன்றான்
செய்யப்பா வதன்பிறகு தட்சிணமூர்த்தி
சித்திபெற மூலசூட் சங்களாலே
செய்யப்பா வஷ்டகர்மம் வாலைவாலை
சிதம்பரத்தின் பதம்மாறி யாடுமூலம்
செய்யப்பா மாதர்கள் நோக்காச்சிந்தை
திறமான மௌனத்தில் சித்தியாமே. (உ)

*End :*

மெய்யான காயரசம் வாங்கச்சொன்னேன்
வீரான ரசபற்பங் கொள்ளச்சொன்னேன்
கையான சீஷனுக்குப் புத்திசொன்னேன்
கள்ளமென்ற சிஷ்யரைத்தான் தள்ளச்சொன்னேன்

பொய்யான பொய்யுரைக்கும் புலைசண்டாளர்
    பொருளீந்தும் பிறக்குரைக்கும் பாவசீஷர்
அய்யாவென் றடுத்தாலுந் தள்ளச்சொன்னேன்
    அஞ்ஞானி யவர்களுடன் பேசொண்ணுதே. (கசுசு)

ஒன்ருன மனதுறுமை சீஷனுக்கு
    உரைசொல்லி பூசாவிதி உரைக்கச்சொல்லு
விண்ணுட்டங் கண்ணுடி மேவச்சொல்லு
    மேலான மௌனத்தைப் பத்தச்சொல்லு
சுண்ணும்பும் மஞ்சளும்போல் குறியைக்காட்டி
    சுழுனையிலே நாட்டமுறத் தொட்டுக்காட்டிக்
கண்ணுடிக்குள் குருவின் பதத்தைப்போற்றி
    கருணைபெரும் பூசைவிதி கருவாம்முத்தே. (உள)

*Colophon :*

அகஸ்தியர் சுவாமி யருளிச்செய்த பூஜாவிதி முத்தும் பிலவ வருஷம் மார்கழி மாதம் ௩உ எழுதி முகிந்தது.

---

512. சுவடி நெ. 288 (E)

## அகஸ்தியர் தீட்சா விதி 200

ஏடுகள் 31; (30 முதல் 61 வரை)

பக்கத்திற்கு 13 முதல் 14 வரிகள்.

எழுத்து சுத்தமாகவும், பிழைகள் மலிந்தும் உள்ளன.

இதில் தசவித தீட்சை விபரம் (ஏடு 32) பிராணுயாம விபரம் (ஏடு 35) கற்பம் (ஏடு 38) சக்கர லக்ஷணம் (ஏடு 41) சிதம்பர சக்கர லக்ஷணம் (ஏடு 43) அஷ்டகர்ம தசையறிய (ஏடு 48) சாபநிவ்ருத்தி (ஏடு 51) பராபரத்தீட்சை, வாலை தீட்சை, புவனை தீட்சை, சாமளைதீட்சை (ஏடு 52) சுப்பிரமணியர் தீட்சை (ஏடு 53) சிவ தீட்சை 11ன் லக்ஷணம் (ஏடு 55) முதண்ட லேகியம் (ஏடு 57) முதலான விபரங்களுள்ளன.

*Beginning :*

வானைத்தாவிய பொதிகை மகத்தான
 ரிஷியுடைய வாக்கின் நேர்மை
பானைத்தாவிய பூசை வாமபூசை
 பரிவான சிவபோகம் பணம்பொற்கேளீர்
மீனைத்தாவிய பூசை விதிராசி
 விளங்கிநின்ற கன்னிமுதல் வில்லுமேஷம்
சேனைத்தா வியராசியாம் துலாத்தின்
 சென்ம ராசிக்கருவை செப்புறேனே. (க)

செப்புறேன் துலாத்தோர்க்குத் தேவிமுதல்
 வாசிசிவ னுடையசக்கரங்க ளெல்லாம்சித்தி
ஒப்புறேன் குளிகைசித்தி வாதசித்தி
 உயர்ந்துநின்ற மூலசித்தி யுகியாது
தப்புறே னென்றாலும் தவறொட்டாது
 சாதகமாய் வாசனையாய்த்தானேதூக்கும்
கொப்புறேன் புலத்தியனேவுலகத்தில் தசதீட்சைபெற்று
 கொடியசிவ யோகியெனக் கூறுவாயே. (உ)

*End :*

பணிமாறு காலத்தே மணியினோசை
 பாங்கான சேகண்டி நாதத்தோசை
பணிமாறுகாலத்தே மௌன தோத்திரம்
 பத்தியுறு வாலைகையில் லேகியத்தையீய்ந்து
மணிமாறு காலத்தே சகலசித்தும்
 பரிவாகத் தாவென்று கையில்வாங்கி
பணிமாறு காலத்தே பணிந்துதண்டம்
 பண்ணுவாய் தீட்சைவிதி தீட்சைமுத்தே. (உ0ரு)

*Colophon :*

பிலவ வருஷம் மார்கழி மாதம் 7உ தீட்சாவிதி திருச்சத்துரையில் எழுதி முகிந்தது. குருவே துணை.

**குறிப்பு :**

*160* நெ. சுவடியையும் பார்க்கவும்.

512. சுவடி நெ. 288 (F)

## அகஸ்தியர் பூரண சூத்திரம் 216

ஏடுகள் 33; (62 முதல் 94 வரை)
பக்கத்திற்கு 14 முதல் 16 வரிகள்

எழுத்து சுத்தமாகவுள்ளது. பிழைகள் மலிந்துள்ளன.
சிற்சில பகுதிகள் செல்லரித்துள்ளன.

இதில் கணேசன் பூசை, ஆதார தீட்சை (ஏடு 65) தச தீட்சை விபரம் (ஏடு 66) சாப நிவர்த்தி (ஏடு 67) வயிரவர் தியானம், சுப்பிரமண்யர் தியானம் (ஏடு 68) வல்லாரை முறை பத்தியம் (ஏடு 69) கடுக்காய், கரிசாலை, மிளகு (ஏடு 70) கற்பம் உட்கொள்ளும் காலம் (ஏடு 71) கற்பம் உட்கொள்ளும் முறை (ஏடு 73) முப்பு (ஏடு 74) சவுக்கார வைப்பு, கெந்திச் செந்தூரம் (ஏடு 75) யோகிகள் தலம் (ஏடு 77) சிலாசத்து விளையும் பூமி (ஏடு 78) கருநெல்லி கற்பம் (ஏடு 79) கடுக்காய் வேர்த்தைலம் (ஏடு 80) பூரவைப்பு, வீரவைப்பு – மாற்றம் (ஏடு 85) அஞ்சனம் (ஏடு 86) தனம் கிடக்குமிடங்கள் (ஏடு 87) சீஷன் லக்ஷணம் முதலானவைகள் உள்ளன.

*Beginning* :

கார்செறி மெய்யன் வன்மை
    கடவுளுங் காணுப்பாதம்
வோர்பொரு ளண்டம் தன்னைப்
    பூரண நாலிலோதத்
தார்செறி கொன்றை சூடித்
    தயாபரனு சோதிதந்த
நார்மத வானைப் பிள்ளை
    யார்பதங் காப்பதாமே. (க)

ஒன்ருன பூரணமு மாருதார
    முரைப்பதற்கு மேலாறுந் தொண்ணூற்ருறும்
பண்ருன தீட்சைபதி னென்றுரெட்டி
    பத்துடனே முப்பத்து ரெண்டுதீட்சை

ஒன்றான சமாதிகற்பம் வாசிநேர்மை
யுரைப்பான சிவயோகம் பிராணயாமம்
நன்றான வாதத்தின் தீட்சையோடு
நலமான சவுக்காரந் திறவுகோலே. (உ)

*End :*

ஆமிந்த யிருநூற்றுப் பதினறுக்குள் ளடக்கிவைத்த
பொருள்களெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
ஓமிந்த வுலகத்திலின்னூல் கிட்டில்உலகத்தில்
சித்திக ளுண்டாய் போச்சு
தாமிந்த சாஸ்திரத்தைக் கெணியாதீந்தால்
தலைதெறித்துப் போகுமடா சத்தியஞ்சொன்னேன்
நாமிந்தப் படிசொன்னேம் யோகிக்கீவாய்
நலமான பூரணசூத் திரந்தான்முற்றே (உகசு)

குருபாதமே கதி. நமச்சிவாய துணை.

*Colophon :*

பிலவ வருஷம் மார்கழி மாதம் 29ந் தேதி அகஸ்தியர் பூரண சூத்திரம் எழுதி முகிந்தது. மனோன்மணி துணை.

---

**513.** சுவடி நெ. 289 (A)

## ராமதேவர் 1000ல் சூத்திரம் 10

ஏடுகள் 2; பக்கத்திற்கு 7 வரிகள், பூர்த்தி.
(நீள × அகலம் $29\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ. மீ.)

இதில் வாதம் செய்வதற்கான சிப்பி ஜயநீர் கூறப் பட்டுள்ளது.

*Beginning :*

காணப்பா ஏரியிலேவிளைந்த பிண்டங்
கடிதான மாங்கிஷத்தோ டெடுத்துவந்து
பூணப்பா பொரிக்காரம் பொரித்துக்கொண்டு
பிண்டத்தை வாய்பிளந்து வதனுள்போட்டு

ஆணப்பா பெண்ணோடே கூடினப்போ
லப்பனே நாதமங்கே யிறங்கும்பாரு
தாணப்பா லோகத்தால் சட்டியொன் றுங்
சாதகமா யிணங்கஃனயு மதனுள்போடே. (க)

போட்டேநீ யடுப்பேத்தித் தீயைமூட்டிப்
பெருங்கனலைப் போடாதே வொழுங்காய்போடு
தேட்டன்னயிதை விட்டால் தேட்டுமுண்டோ
சலம்போலே யுருகிநிற்கும் பருவம்பாரு
வாட்டமில்லா நாதத்தைக் குத்திக்குத்தி
வளமைபெற வெருக்குமட்டு மடுப்பில்வைத்து
நாட்டிலுள்ளோர் காணமல் மறைவில்வைத்து
நன்ருகக் குளிர்ந்தபின் பெடுத்துவையே (உ)

*End :*

ஆடலாமிது கொண்டு கோடிவித்தை
அளவறிந்தவித்தை யெல்லாமிதற்குள் ளாச்சு
ஓடலாமிது கொண்டு குளிகைசெய்து
உசத்தியுள்ள மலேகளெல்லா மேறிப்பார்க்க
காடெல்லாந் திரிந்தாலு மிந்தப்போக்கு
நல்லமுறை யிதுபோலே யெங்குமில்லே
பாடல்போல் சொன்னேனென் றெண்ணவேண்டாம்
பத்துமே சூத்திரத்தில் பாடல்முற்றே. (ய)

குருவேதுணை. மனோன்மணி ரட்சிக்க வேண்டியது.

---

514. சுவடி நெ. *289* (B)

## அகஸ்தியர் பூரண சூத்திரம் 48

ஏடுகள் *13*; (*3* முதல் *15* வரை)

எழுத்து சுத்தமாகவுள்ளது.

ஏடுகளின் நுனி செல்லரிக்கப்பட்டுள்ளது. பூர்த்தி.

இதில் அரிதாரச் சுன்னம் (செய் 5 to 9) கெந்திசுத்தி – செம்பு சுத்தி (ஏடு 6) சயமருந்து, லேகியம் (செய். 19) உப்புச் செந்தூரம் (செய். 22) வயிரவ பூசை (செய். 25) துருசுக்குரு (செய் 27) வாயுவிற்கு லேகியம் (செய். 32) வாடைப்பொடி (ஏடு 12) முதலியன.

***Beginning :***

நாடியதோர் பூரணமாம் வேதாந்தத்தில்
நடனதிருச் சூத்திரத்தைப் பாடுதற்கு
ஆடியதோர் கணபதியும் கந்தன்ருனு
அருள்பெருகும் நாதாக்கள் பாதங்காப்புக்
கூடியதோர் ஞானமாம் வாலைத்தாய்தான்
கூறினர் நாவுதனிலாறுஞ் சொன்னர்
பாடியதோர் பலநூலில் மறைத்துச்சொன்னேன்
பகல்போலாம் பூரணத்தின் நூல்தானுமே. (க)

தானன ஞானமது பத்துநூறு
தனைக்குறுக்கி யொருநூறு சார்ந்துசொன்னேன்
தேனன வாதமது லெட்சங்காப்பு
செப்பினேன் ரெண்டுகாண்டந் திறமாயப்பா
பானனயிதைக்குறுக்கி யிருநூறு சொன்னேன்
பாங்கான வைத்தியத்தில் ரெண்டுலட்சம்
கோனன யிதைக்குறுக்கி லட்சஞ்சொன்னேன்
கூறியதை வகைப்படுத்திக் கூறினேனே (உ)

***End :***

ஆமப்பா நற்குலத்தில் பிறந்தபேர்க்கு
மதிகமுள்ள தசதீட்சை பெற்றபேற்கும்
தாமப்பா சதாநித்யம் பூரணத்தில்
சார்ந்திருந்த பெரியோர்க்குந் தப்பாதின்னூல்
காமப்பா லுண்டவர்க்கும் வழலையேற்குங்
கருவொன்றும் பொய்யாது காணுங்காணும்
போமப்பா தரித்திரமும் பிணியுங்காலன்
புகழ்ந்துபிரும்மர் கையெழுத்தும் போகுந்தானே (சஎ)

தாமென்ற வாணவத்தை விட்டபேற்கும்
சண்டாளக் கோபத்தைத் தள்ளினோர்க்கும்
மானென்ற பெண்ணாசை மறந்தபேர்க்கும்
வைத்தியமுஞ் சித்தியடா வாதஞ்சித்தி
கோனென்ற குருபதத்தைச் சார்ந்தபேர்க்கும்
குறையில்லை யிந்தநூல் நாற்பத்தெட்டும்
ஏனென்று கேழ்க்குமடா மெஞ்ஞானிக்கு
யிகபரமுங் கொடுக்குமிந்த நூல்நான்முற்றே. (சஅ)

சிவமயம். பூரணம் முற்றும்.

---

515. சுவடி நெ. 289 (c)

## அகத்தியர் வகாரத்திரயம் ஸூத்ரம் இருநூறு

ஏடுகள் *43*; (*17* முதல் *59* வரை)

ஏடுகளின் நுனி முறிந்துள்ளன. எழுத்துகள் சுத்தமாகவுள்ளன. பூர்த்தி.

இதில், பிண்டச் சுன்னம், சுன்னத் திராவகம், குருபற்பம், நீர்வுப்பு, காரசாரம், உபரஸம், சாரணை, சூடன் மணி, தாமிர வேதை, சவர்க்காரம், துருசுச் சுன்னம், வெள்ளிமுறை, கருநெல்லி கற்பம், சதுரகிரியில் சோதிவ்ருக்ஷம், தேசிநீர், வழலை, சவுக்காரம் எண்ணெய்வாங்க, திரிகூடமலை, ரோமவேங்கை, கெந்தகத்தைலம், வெடியுப்பு நீர், அன்ன பேதியுப்பு, பசியை அடக்க மருந்துகள் முதலானவைகளுள்ளன.

*Beginning :*

ஆதியான் மணக்கோலஞ் செய்யுநாளி
லதிமூல தேவரிஷி கூட்டமாச்சு
வேதியனு மாயோனுங் காணாநாயர்
விமலனார் விசுவனுக்குப் பரத்தையீந்தார்

நீதிபெறச் சாருதியால் தக்ஷிணயம்
நிலையான சார்பொதிகைக் கிரியிற்சென்றேன்
ஆதியொரு காரணத்தால் பரைதானீன்ற
வாகடந்தா னம்பரமாமருளைப் பாரே. (௧)

பாரப்பா வாதத்திலெட்சங் காப்புப்
பாடினேன் வைத்தியத்தி லிரண்டுலட்சம்
சீரப்பா காவியந்தா னுயிரத்தில்
சிறப்பாகப் பாடியதோ ரென்னூலப்பா
சாரப்பா வாயிரத்தை யிருநூற்றுக்குள்
சகலகலைச் செய்தியெல்லா மடக்கிப்போட்டேன்
ஆரப்பா வென்பாடற் கொப்புமுண்டோ
வரகரா யடிமுடியி லமர்ந்திட்டேனே (௨)

*End :*

இருந்தாலே யிரவிதனைக் கட்டவேணும்
எடுத்தவொரு வண்டத்தி லேறவேணும்
வந்தாலே கருரெண்டு மறியவேணும்
மகத்தான குக்குடத்தை யறியவேணும்
சந்திரனூர் ரவியொன்றாய் முடிக்கவேணுஞ்
சராசரத்தின் நீர்தனையே காணவேணுங்
கொந்தான பூரணமே சாரமாகுங்
காட்டுகின்ற ரவிகோடா கோடிமுத்தே (௨௦௨)

அகஸ்திய நாயனூர் அருளிச்செய்த வகாரத்திரயஞ் சூத்திரம் முற்றும். அகஸ்தியர் முனி பாதமே கதி – மனோன்மணித்தாய் துணைசெய்யவேண்டியது.

**குறிப்பு :**

இது, D. M. *106* – சுவடி நெ. *120* (B) என்ற சுவடியின் மறு பிரதியாகும்.

**516.** சுவடி நெ. 289 (D)

## கருவூரார் பாடல் முப்பது (கலிவெண்பா)

ஏடுகள் 4; (60 முதல் 63 வரை)

ஏடுகளின் நுனி சிதைந்துள்ளன. பூர்த்தி.

இதில், முப்புச் சுன்னம், ரசச் சுன்னம், வேதைச் சரக்குகள் முதலானவை சொல்லப்பட்டுள்ளன.

*Beginning :*

மூவாயிரத்தில் மு(மூ)ப்பாடல் முன்னூறு
பாவாயுரைத்த நேரடிப்பாடல் — மூவான
முப்பூவின் பாடவென் முக்யமுடன் வாதவிதமும்
முப்பதும் பாட்டாய் முடி. (க)

முடிதாண்டி மூலம் மூர்க்கமதியர்த்
திடமான துளிரேசிறப்புச் — சடமான
சிந்தை சுத்திக்கொண்டு போதத்திருந்தவர்க்கு
இந்துவத்த வந்தவர்க்குச்சுகந் தழைக்குமே. (உ)

*End :*

அதனுல் ரசங்கட்டு மப்போதே தங்கமிட்டுப்
பதையாமல் வீரனைப் பாய்ச்சியே — நிதிகாணு
தாளுபதி மேல் தானே களங்காகும்
பூனையங் குகையிலே யூது. (௩௦)

ஊது பற்பம் வெள்ளியிலே வொன்பதரைதப்பாது
கீதியடி பூரணத்தில் நேருவாய் — பாதமது
சித்தியாம் தேகசிர மமிருதம் கொள்வாத
முத்தியாம் முப்பத் தொன்றே. (௩௧)

கருவூரார் பாடல் முற்றும் – சிவமயம்.

517. சுவடி நெ. 289 (E)

## அகஸ்தியர் கேசரிநூல் சாலத்திரட்டு

ஏடுகள் 8; (64 முதல் 71 வரை)
பக்கத்திற்கு 7 முதல் 10 வரிகள்.
நுனி சிதிலமாகவுள்ளது. எழுத்து நன்றாகவுள்ளது. பூர்த்தி.

இதில், கேசரி குழித்தைலம் உட்கொண்டால் சகல சித்தியுமுண்டாகும் என்றும், இந்தத் தைலத்தை உலோகங்களில் தடவி வெய்யிலில் வைக்கப் பொன்னாகும் என்றும் உள்ளன. துருசுச் சுன்னம் – நவலோகங்களுடன் சேர்த்தால் அவைகளைப் பேதிக்கும். கேசரிக்கால் குளம்பு அஞ்சனம் – விபூதி வசியம் – பாதாளம் வரை இருக்கும் புதையலும் காணும். படைகளைக் கலைக்க – புருவத்தில் பூசுமருந்து. அம்பு, பாணம் தேகத்தில் பாயாமலிருக்க – கோடிக் காதம் பார்வை தெரிய அஞ்சனம் – யானையைப் பணியவைக்க மணி – ராஜவசியம் – கவுனக்குளிகை உலகமெல்லாம் சுற்றிவர முதலான வினோத வித்தைகள் உள்ளன.

*Beginning :*

வாக்குண்டாம் நல்லமனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனிநுடங்காது — பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதந்
தப்பாமல் சார்வார் தமக்கு.

கேளப்பா வினோதவித்தை கோடியுண்டு
கேசரிபோல் சுருக்கொன்று மில்லையப்பா
......... மாண்டவுட னெடுத்துவந்து
மனிதர்கள் புழங்காத விடத்தில்போட்டு
சூளப்பா சுவருவைத்து மேலேமூடிச்
சுகமாகக் காற்றுவெயில் மழைபடாமல்
வாளப்பா மண்டலந்தான் கிடந்தபின்பு
வளமாகச் சமூலமெல்லாம் வாங்குவாங்கே. (க)

வாங்கியே யெலும்பெல்லாம் நிறுத்துக்கொண்டு
வாகாவயந் தெடைக்குநல்ல நெல்லிப்பட்டை
வுங்கியதோர் செஞ்சந்தனக் கட்டைரெண்டு
முத்தமனே நிறுத்துவொன்ருய் ரேகித்தேதான்
தாங்கியே வொருபானைக் குள்ளேபோட்டுச்
சார்வாக வரைமட்டும் குழிதான்வெட்டிப்
பாங்கியே குழிக்குள்ளே சாணகலக்குழிதான்
பாங்காக வெட்டியதில் கலசம்வையே. (உ)

*End :*

மார்க்கமின்னஞ் சொல்லுகிறேன் மவுனமாக
வங்காளப் பச்சையுடன் பூரங்கூட்டி
நாகமென்ற தாழியிலைச் சாற்றிலாட்டு
நன்ருகத் திலதமிட்டு நிலையில்தொட்டால்
மார்க்கமங்கே......... மேல்பவளங் கூட்டு
வழியுமடா காமவெள்ளம் வாங்கிக்கொண்டு
ஏற்கவே மூலத்தில் மனதைவைத்து
யென்குருவைத் தொழுதிரைஞ்சி யேறுயேறே.

ஏறவே வீரமுடன் புனுகுபூரம்
யிதனேடு வெங்காரம் .........
நாறவே விந்துவுட னமுரிதானும்
நலமான முலைப்பாலு மமிநீரோடும்
மாறவே குருவண்டு தண்ணீர் சேர்த்து
வகையாகக் கல்வத்தில் மையையாட்டித்
தேறவே தலைநாதந் தனிலரைத்துச்
சேரிதிலே முன்செய்த துரிசுச்சுன்னம்.

சுன்னத்தில் சேர்ந்தவுடன் சிவமாய்போகும்
சுறுக்கிடவே சத்துமது மணியதாகும்
அன்னத்தைச் சிரசினிலே தரித்துக்கொள்ள
அறுபத்து நாலுசித்து மாடுமாடும்

முன்னதைப்பூ சாரணையே தந்தாயானால்
மூவுலகுஞ் சுற்றிவருங் கவுனமாகும்
எண்ணத்தைச் சொல்வேன்நான் குளிகைவேகம்
ஏமசித்தி மலைபோலா மியம்பக்கேளே.

சற்குருபாதமே கதி – சுப்பிரமண்யசாமி சகாயம்.

ராமலிங்கமூர்த்தி துணை.

---

518. சுவடி நெ. *289* (F)

## நந்தீசர், போகனாதர் பாடல் வகாரம் நூறு

ஏடுகள் *12*; (*72* முதல் *83* வரை)

பக்கத்திற்கு *8* வரிகள்

எழுத்து சுத்தமாகவுள்ளது. நுனி சிதிலம்

இதில், வீரச்சுன்னம், குருவண்டின் போக்கு, செய்முறை, நிலவுப்பு பூனைகச் சுன்னம், துருசுச் சுன்னம், நிலக்குரு முடிக்கும் விதம், சாரக்கட்டு, வழலை முறை, ஐயநீர் போக்கு முதலான ரஸவாதஞ் செய்யவல்ல முறைகள் உள்ளன.

*Beginning :*

கார்கொண்ட குருவின் போக்குங்
கறியுப்புக் குறியின் போக்குங்
வீரத்தின் சுன்னப் போக்கும்
விளங்குரு வண்டின் போக்கும்
வார்கொண்ட சக்தி போக்கும்
வளர்நில வுப்புப் போக்கும்
சீருடன் நந்தி சொல்ல
தீக்ஷையுங் காணே காப்பாம் (க)

அருள்பெற்ற நந்தியாசானெனக்குப்
பொருள்பெற்ற மூலர் போகர்யெனக்கு
தருவொத்த சோடசச்சட்டை முனியும்
பட்சமுள்ள கொங்கணன் பக்ஷமிகுதியே. (உ)

மிகுதியாக விட்டகுரு நந்தி
தொகுதியுரைக்கச் சொற்படி கேழ்க்கத்
தகுதியின் வாதத் தற்பரம்விள்ள
பகுதியின் பூதப் பஞ்சாட்சரமே. (ரு)

*End :*

மாத்தப்பா காணுஞ் சொன்னேன்
வளரடி நிலவுப் பைத்தான்
கார்த்தபோக் கருளே தங்கும்
வாதமும் காணக் காண்பார்
கார்த்தப்பா கல்லுப் புத்தான்
கருக்குரு மூலர் செய்தி
நீதப்பா தட்டா யாகில்
நீருளச் சுன்னமில்லை. (சுஎ)

நீருள்ளச் சுண்ணங் காண்பான்
நிலைகறி யுப்பைக் கட்ட
நீருள்ளச் சுண்ணம் காண்பான்
நீதியின் முடிவடைந் தான்
நீருள்ளச் சுண்ணம் காண்பான்
நிசக்குரு வண்டினலே. (சுஅ)

குருவண்டு கோசபீசம்
குறித்ததோர் வீரன்கூடன்
குருவண்டு நிலவுப்பாகும்
கொள்கைகல் லுப்புங்கூடி
குருநிறை கறியுப்போடு
கொண்டவன் குருவான்சீஷன்
குருபாதம் தொழுதுபாதம்
கூறியபொருள் கண்டாரே. (சுசு)

519. சுவடி நெ. 289 (G)

## சந்நி நிதானமும், செய்கையும்

ஏடுகள் 18; (1 முதல் 18 வரை)

பக்கத்திற்கு 8 முதல் 9 வரிகள்

ஏடுகளின் நுனி முறிந்துள்ளன. முதல் ஏடு சிதைந்துள்ளது.

இதில், கர்ணிகச் சன்னிக்குணம், மருந்து, சிங்குவா (சிஹ்வா) சந்நிச்குணம், பிரலாப சந்நி, – அந்தகச் சந்நி (ஏடு 2) புச்குநேத்ர சன்னி அபின்யாச சன்னிக்குணம் (ஏடு 3) சீதாங்க சன்னி-ருத்திர சன்னி (ஏடு 5) பிரவீச்சுக் குணம் (ஏடு 5) மலட்டு வலி, திருவலிக் குணம் – சன்னி 13க்கும் புகை, அஞ்சனம் (ஏடு 6) ஆனந்த பைரவன் குளிகை (ஏடு 7) பூபதிக் குளிகை (ஏடு 8) சந்நிக்கு நசியம் (ஏடு 9) சூலை, கால்வலி, சன்னிக்கு அஞ்சனம் (ஏடு $9\frac{1}{2}$) விஜயபைரவித் தைலம் – ராட்சதகா தைலம் – முட்டைத் தைலம் (ஏடு 10) சன்னிக்கு பூபதி – சந்நிபாத பைரவன் (ஏடு 11) கண்டூஷம் – பிள்ளைபெற்ற சன்னிச்கு மருந்து. இந்திராணித் தைலம், (ஏடு 12) சன்னிக்கு நீலித்தைலம் (ஏடு 12) வசம்புத் தைலம், தேத்தான் தைலம், முட்டைத் தைலம் – பிரேத சந்நியின் குணமும் மருந்தும் (ஏடு 14) இதற்குப் பொடி, சன்னிசுரக் குளிகை – பாதகேசரி ரஸம் (ஏடு 15) முகவாத சன்னிக் குணமும் மருந்தும் இதற்கு ஒத்தடம் (ஏடு 16) இதற்குப் புகை, முகவாத சந்நிக்கு நிம்பாதித் தைலம் (ஏடு 17) திரிபுரமெரித்தான் தைலம் – இதற்குப்பொடி முதலான முறைகளுள்ளன.

*Beginning :*

கர்ணிகசன்னிக் குணத்துக்குக் காதடியில்வீங்கும்
கருதியதோர் நாக்கு விரிந்திருக்குங்
கர்ணயா ணியமாப்போய் சொல்லும்சொல்லும்
விழுந்திருந்து உடல்நடுக்கு மிருமலுண்டாங்

துர்ணியகந்து துணுக்கென்று மெய்யேசோருந்துயிலாது
சாத்தியமா மருந்தினிச் செயஞ்சொன்னேன்
பரணியில்மை யெடுத்தெழுதுஞ்செங் கண்மாதே!
பரிவுருநாள் தொண்ணூற்ருறும் பகிர்ந்துபாரே. (௧)

**இதற்கு மருந்தும் கஷாயமும் செய்கை :**

காதடியில் தடித்திருக்கும் கர்ணிகச்சந்நி
கடிந்தேகத் தசமூலம் வெந்தநீரி
லோதுரச சிந்தூரங் குளிகைமற்ற
முற்றபல வெளஷதங்கள் கண்டுசெய்து
தீதகல வெடித்தக்கார் கருவிக்காரஞ்
செய்துபல வுவனுய் கட்டியாத்தி
மாதரசே! தைலங்கள் வைத்துமுழ்க
வருத்துகாணி யரச்சன்னி மாறுந்தானே. (௧அ)

**இதற்கு அஞ்சனம் :**

வாகைவிதை யிந்துப்புவரு மிளகுதிப்பிலியு
மோகமுடன் வெள்ளாட்டின் மூத்திரத்தில்
சேர்த்தரைத்து வுண்டைசிறு நீருரைத்தெழுதப்
போத்துசிங்கு பூவும் விட்டுப்போம். (௧௯)

*End :*

**இதற்குப் பொடி :**

பலமுகவாத சந்நிக் கிடுமருந் ததனைப்பாரு
நலமுடன் கடுகுசூதம் நற்பொரிக் காரமிந்து
வளர்திரி பலையீதெல்லாம் வளர்சமன் பொரித்துக்கூட்டி
நிலைபெறச் சுத்திசெய்த வாளம்நே ரெடைக்குச்சேரே. (௧௩௨)

நீதியா யிம்மருந்து நேரொக்கப் பொடியதாக்கிக்
கோதிலா வண்டந்தேனில் குறித்தகா சளவேகொள்ளப்
பேதறு முகவாதங்கள் பிச்சிய கோணல்தீரு
மாதியானுரைத்த வுண்மை யகஸ்தியர் அருள்செய்தாரே. (௧௩௩)

அகஸ்தியமூர்த்தி குருவே துணை.

**குறிப்பு:**

கடைசி 2 ஏடுகளில் மூலத்திற்கு ஏரண்ட எண்ணெய், பஞ்ச கெவ்விய கிருதம், நரசிம்ம கிருதம் என்ற 3 முறைகள் காணப் படுகின்றன.

---

**520.** சுவடி நெ. 290 (A)

## வைத்ய ரத்னச் சுருக்கம்

ஏடுகள்; 1 – 100 வரை

பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள்

செல்லரித்துள்ளது. எழுத்து சுத்தமாகவுள்ளது.

(நீள × அகலம் = $24\frac{1}{2}$ × 3 செ. மீ.)

இது 255ம் பக்கத்தில் காணப்படும் சு. நெ. 249ன் மறு பிரதியாகும். 354 செய்யுட்கள் வரை யுள்ளன.

---

**521.** சுவடி நெ. 290 (B)

## பலதிரட்டு, வைத்யம்

ஏடுகள்: 30; (101 முதல் 129 வரை)

பக்கத்திற்கு 4 முதல் 8 வரிகள்

செல்லரித்துள்ளது.

இதில் மாந்தமாத்திரை, 6 வகை மூலத்திற்கும் லேகியம் (ஏடு 102) சன்னி, தலைவலி, விஷங்களுக்குக் கலிக்கம் (ஏடு 102) களிம்பு. கோடாசூழி மாத்திரை கண்டங்கத்திரிச் சூரணம் (ஏடு 104) சுராங்குசம் (ஏடு 105) பீனிசத்திரி, வைரவன் மாத்திரை (ஏடு 106) புகைத்திரி, சிந்தாமணி மாத்திரை (ஏடு 107) எலும்புருக்கிக்கு மருந்து – மேகனாதி குளிகை, மாந்த கஷாயம் (ஏடு 109) மூலம், பித்த சுரம், குன்மத்திற்குக் குளிகை

(ஏடு 110) சன்னி 13க்கு, விருகன் மாத்திரை (ஏடு 111, 112) அஞ்சுப்புக் கட்டு மாத்திரை (ஏடு 113) நேத்திர வாயுவிற்குக் கலிக்கம், இடி மருந்து (ஏடு 114) விந்து ஊரல் (ஏடு 115, 116) சோகை, வீக்கம், காமாலைக்கு லேகியம்; தும்பை லேகியம் (ஏடு 117) வல்லாதி (ஏடு 118, 119) கோரோசனை மாத்திரை (ஏடு 120) கணையெண்ணெய், வெள்ளைக்கு (ஏடு 121) சித்தாதி எண்ணெய் (ஏடு 123) சிரங்குக்கு (ஏடு 125) குமிழ் எண்ணெய் (ஏடு 126) கெந்தகக் குழம்பு (ஏடு 128) முதலான மருந்துகளுள்ளன.

*Beginning :*

ஓமம், வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, பெருங்காயம், கோரோசனை, அதிமதுரம், வால்மிளகு, அக்கிராக்காரம், வகைக்கு வராகனெடை 1. வசம்பு சுட்டுப் போடவும். அரைப்பு கஞ்சாங்கோரை, கரிசலாங்கண்ணி, பெருமட்டை (பேய்மருட்டி) பீனறி, இது 3ம் சமனாகச் சாறு சேர்த்துக்கொண்டு 2 சாமம் அரைத்து 2 குண்டுமணிப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்திக்கொள்ளவும். வேளைக்கு ஒன்று கொடுக்கவும். சகல மாந்தமும் தீரும். இதற்கு அனுபானம்:– கஞ்சாங்கோரை, கருசலாங்கண்ணி, பெருமிட்டப் பீனறி இது நாலு மிடித்துப் புட்டவித்து அந்தச் சாற்றில் 7 வேளை கொடுக்கவும். இச்சா பத்தியம்.

*End :*

நாலாம் மாறலுக்கு: புங்கம்வேர், நாட்டுக்கொட்டை வேர், எருகாணி வேர், ஆவாரை வேர், சங்கம் வேர், மாவலிங்கை வேர், தும்பை வேர், துளசி வேர், வெள்ளெருக்கம் வேர், வில்வ வேர், விஷ்னுக்கிராந்தி வேர், சின்னி வேர், நொச்சி வேர், அப்பக் கோவைக் கிழங்கு, பீனறி வேர், வேலிப் பருத்தி வேர், சதுரக் கள்ளிப்பால், கொடிக்கள்ளிக் கொழுந்து, மிளகு, சுக்கு, பூண்டு, வால் மிளகு, கடுக்காய், கருஞ்சீரகம், இதுவெல்லாம் எலிமிச்சங்காய் பிரமாணம் கடைச் சரக்கு பலம் ½, எண்ணெய் படி 1.

---

522. சுவடி நெ. 291

## வைத்திய அட்டவணை

ஏடுகள் 93; பக்கத்திற்கு 6 முதல் 9 வரிகள்
எழுத்து சுத்தமாகவுள்ளது. செல்லரித்துள்ளது.
(நீள × அகலம் 33 × 3 செ. மீ.)

இதில், பிரண்டைச் சூரணம் (ஏடு 1) கல்கண்டு சுகபேதி (ஏடு 2) கிராணிக்கு (ஏடு 3) திப்பிலி ரசாயனம் – கிரந்தி மேகத்திற்கு (ஏடு 4) கபத்திற்குக் கஷாயம் (ஏடு 6) மேகத்திற்கு எண்ணெய். இருமலுக்கு, மண்டையிடிக்கு (ஏடு 7) தேத்தான் நெய், ஒருத்தலைவலிக்கு (ஏடு 8) குன்ம வாயு, பொருமல், அக்கினி மந்தம், மந்த வாயு, பித்தத்திற்கு அசுமதாகச் சூரணம். கிராணிக்கு (ஏடு 9) தமரக வாயுவிற்கு, குன்மத்திற்கு எண்ணெய் (ஏடு 10) பீனிசத்திற்கு எண்ணெய் (ஏடு 11) கைக் குடைச்சலுக்கு, குதிரைக்கு வயிற்று வலிக்கு (ஏடு 12) வல்லாதி (ஏடு 13) வலிப்பு 4க்குந் தைலம், குதிரைக்கு மருந்து (ஏடு 14) பிறவலிப்பு, சுக்கிர வலிப்பு, சுக சன்னி, வாலேந்திர சன்னி, பிறவீச்சு, சன்னி வலிப்புக்கு (ஏடு 16) சன்னி 13க்கும் சுரசம், சன்னியில் சுரசத்தாலே பேதி கண்டால் (ஏடு 17) சன்னிக்கு ஒத்தடம் (ஏடு 19) சன்னி தாகத்திற்கு, அரையில் வந்த சன்னிக்குத் தைலம், (ஏடு 20) வாதம் 84, சன்னி 13 இதற்கு ஒத்தடம் (ஏடு 20) சன்னி மண்டையிடிக்குப் பத்து, அச்வகந்தி லேகியம் (ஏடு 21) சுகசன்னிக்கு (ஏடு 22) காது கேளாத சன்னிக்கு எண்ணெய் (ஏடு 22) சன்னிக்குக் கஷாயம் (ஏடு 23) சுரநிதானம் (ஏடு 26 – 29) ரஸபற்பம், மேகம் 20க்கு (ஏடு 30) பாண்டு வீக்கத்திற்கு (ஏடு 31) அதிசாரக் கழிச்சலுக்கு மருந்து புகைச்சல் இருமலுக்கு (ஏடு 32) பூரத்தெண்ணெய், மேக ரணத்திற்கு எண்ணெய் (ஏடு 33) குன்ம வலிக்கு (ஏடு 34) அண்ட வாதம், விரைவாயு, அந்திர வாயுவிற்கு (ஏடு 34) வண்டு கடிக்கு, ரத்தக் கடுப்பிற்கு (ஏடு 35) மகோதர வீக்கத்திற்கு (ஏடு 37) போசன சஞ்சீவி, நாடிலெட்சணம் (ஏடு 40) பரங்கிப்

பட்டைச் சூரணம் (ஏடு 41) பிருங்காமலகத் தைலம், சிந்தாமணி லேகியம் (ஏடு 42) சீனிப் புட்டு (ஏடு 44) வெள்ளைக்கு (ஏடு 45) விரைவாத வலிப்புக்கு (ஏடு 47). மருந்துச்சரக்கின் பெயர் தெலுங் குலிபியில் எழுதப்பட்டுள்ளது ரஸபற்பம் வல்லாரைத் தைலம் (ஏடு 48, 49) இருமலுக்கு (ஏடு 51) ரத்தக்கடுப்பிற்கு (தெலுங் குலிபியில்) பித்த லேகியம், சாம்பிராணித் தைலம் தலைவலிக்கு (ஏடு 52) நிம்பாதித் தைலம் (ஏடு 54) கடுப்பு, கழிச்சலுக்கு மேல் சுரம் கண்டால் மருந்து, மூலத்திற்கு மருந்து (ஏடு 55) காது கேளாதபேருக்கு எண்ணெய், எரிச்சல், ஒருத்தலைவலிக்கு (ஏடு 56) அரக்குத் தைலம், நெஞ்செரிவு, குன்மங்களுக்கு (ஏடு 57) சீதேவித் தைலம் (ஏடு 58) கொம்பரக்குத் தைலம் (ஏடு 59, 60) சலமஞ்சரி (ஏடு 60½) வல்லாதி (ஏடு 61, 62) நக்ஷத்திரபலன் (ஏடு 63, 64) நக்ஷத்திரக் குறிப்பு (ஏடு 65, 66, 67) கத்தாழைக் கிருதம் (ஏடு 68) குன்மத்திற்கு, எரிவாதத்திற்கு, விஷத்திற்கு, கருத்தரியா மருந்து (ஏடு 69) வெட்டைக்கு, மலட்டு வலிக்கிச் செங்கல் கஷாயம், குன்மத்திற்கு (ஏடு 70) பலகரைப் பற்பம் (தெலுங்குலிபியில் எழுதியுள்ளது). நீர்க்கட்டுக்கு, வீரிய விருத்திற்கு மருந்து (ஏடு 71) குக்குடாதிச் சூரணம், சகல சூலைக்கட்டு, 84 வாதத் திற்கும், அந்தர் வாதத்திற்கு (ஏடு 72) திராட்சாதிச் சூரணம், பேதியானல் மருந்து, தண்ணீர் பகைக்கு மருந்து, நீரழிவிற்கு (ஏடு 73) சித்தலாதி லேகியம் (ஏடு 74) குழந்தைக் கழிச்சலுக்கு, மகா வில்வாதி லேகியம் (ஏடு 75, 76) கரப்பானுக்கு (ஏடு 78) பித்த கஷாயம் (ஏடு 79) சூதிகா வாயுவிற்கு, சன்னிக்கு லசுன பிஷ்டி லேகியம் (ஏடு 81) பல ரோகத்திற்கு, குதிரைக்கு மசாலை மருந்து (ஏடு 82) பின்னுள்ள ஏடுகள் சிதிலம்.

*Beginning :*

| | | | |
|---|---|---|---|
| பிரண்டைத்தூறு | – ½ | கணுவெடுத்ததூறு | – ½ |
| கல்லுப்புப் படி | – ½ | எருமை மோர் படி | – 3 |

இதுவெல்லாம் ஒன்ருகவிட்டு வேகவைத்து, உலர்த்தி, இடித்துச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து

மிளகு பலம் – 4 அரத்தை பலம் – 4
பரங்கிப்பட்டை பலம் – 2

மிளகும், பரங்கிப்பட்டையும் பொன்வறுப்பாக வறுத்துப் பொடி செய்து, வஸ்திரகாயம் பண்ணிச் சீனிக்கல்காணி (சீனுக்கல்கண்டு) பலம் 4 போட்டு பனைவெல்லம் – பலம் பொடிபண்ணிப் போட்டுச் சாப்பிடவும்.

* * *

ஏடு 92

### பிருங்காமலகத் தைலம்

| | |
|---|---|
| பொன்னுங்காணி | முசுமுசுக்கை |
| கரிசலாங்கண்ணி | அகத்தி |
| கருவேல் | பச்சை வெத்திலை |
| ஆவாரையிலை | வில்வ இலை |

வகையொன்றுக்குச் சாறு படி $\frac{1}{4}$

| | | |
|---|---|---|
| காறெள்ளெண்ணெய் | — படி | 2 |
| பசுவின் பால் | — ,, | 2 |
| இளநீர் | — ,, | 2 |
| பழச்சாறு | — ,, | $\frac{1}{4}$ |
| நெல்லிப்பட்டையைச் சுண்டவைத்த கஷாயம் | — ,, | 1 |

இவைகளை யொன்று கலந்து

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | வராகனெடை | 1 | சீரகம் | பலம் | 1 |
| திப்பிலி | ,, | 1 | கஸ்தூரிமஞ்சள் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | சண்பகமொட்டு | ,, | $\frac{1}{4}$ |
| பூலாங்கிழங்கு | பலம் | $\frac{1}{4}$ | பச்சிலை | ,, | $\frac{1}{4}$ |
| சோம்பு | ,, | $\frac{1}{4}$ | லவங்கப்பத்திரி | ,, | $\frac{1}{4}$ |
| சந்தனம் | ,, | 4 | | | |

இந்த சரக்கெல்லாம் பால் விட்டரைத்துப் பாலிலே குழப்பி சாறு வகை, எண்ணெய் வகை ஒன்றாகச் சேர்த்து, அடுப்பேத்தி

மெழுகு பதத்தில் இறக்கவும். விக்னேசுவர பூஜை செய்யவும். 5 பேருக்கு அன்னமிடவும்.

தீரும் வியாதிகள் : காலெரிவு, கண்ணெரிச்சல், கண் புகைச்சல், அசீர்ணம், மேகச்சூடு, தேக அசதி, தாது நஷ்டம் இதுவெல்லாந் தீரும்.

*End :*

முதண்டங் கொழுந்து மூணு மூணு தளமாக யெடுத்து, மிளகு மூணு, வெள்ளைப்பூண்டு பலம் 1.

வெண்ணெய் சேர்த்தரைத்து 3 நேரங் கொடுக்கவும். வெள்ளை விழுகிறது நிற்கும்.

குறிப்பு :

இதற்குப் பின்னர் சிறு நறுக்குகளினுலான 16 ஏடுகள் மருந்து முறைகளுடன் காணப்படுகின்றன.

---

523. சுவடி நெ. 292

## போகர் சூத்திரம் எழுநூற்றிரட்டு

ஏடுகள் 154; பக்கத்திற்கு 8 முதல் 9 வரிகள்.

செல்லரித்துள்ளது; பூர்த்தி; எழுத்து சுத்தமாகவுள்ளது.

( நீள × அகலம் $29\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ. மீ. )

இதில், உப்புக்குரு (ஏடு 9) சயவீர் பூரச் சுன்னம் (ஏடு 14) துருசுச் சுன்னம் (ஏடு 15) சாரச்சுத்தி (ஏடு 17) சாரச் சுன்னம் – நிமிளைச் சுன்னம், பரிசச் சுன்னம், காரக்கட்டு (ஏடு 18) நாகக் கட்டு, நாகச் செந்தூரம் (ஏடு 20) சௌவீர வைப்பு (ஏடு 24) சிவப்புச் சௌவீர வைப்பு (ஏடு 27) பரங்கிப் பாஷாண வைப்பு (ஏடு 29) நூல் முறை (ஏடு 30) சௌவீர வைப்பு (ஏடு 31) துருசுக்குரு, மெழுகு (ஏடு 34) வைப்பு எவச்சாரம் (ஏடு 37) சூதக்கட்டு (ஏடு 41) துரிசு வைப்பு (ஏடு 42) பச்சைத் துருசின்

சூதக்கட்டு (ஏடு 42) துரிசுக் களங்கு (ஏடு 44) துருசுச் செந்தூரம் (ஏடு 45) சூடன் வைப்பு, கிண்ணிச் சூடன், அயம் உருக்க (ஏடு 49) காந்தச் சத்து (ஏடு 51) கடுக்காய்க் கற்பம் (ஏடு 54) அமுரிமூதண்டக் கஷாயம் (ஏடு 55) கள்ளி கற்பம் (ஏடு 55) மிளகு கற்பூரப்பொடி, தூதுவேளை (ஏடு 56) கரிசாலை, சர்க்கரை வேம்பு (ஏடு 57) குமரி, மலைமூலி, கிளிமூக்கு மாங்காய் (ஏடு 58) சுத்த கற்பம், சீந்தில் (ஏடு 59) நெல்லி, சிவனார் வேம்பு, அண்ட கற்பம் (ஏடு 60) தலைமுழுக (ஏடு 61) தாம்பிரச் சுன்னம், வழலை வாங்க (ஏடு 62) மூலிகைப் பயிர் (ஏடு 63) உப்புக் கட்டு (ஏடு 64) அப்பிரகச் சத்து (ஏடு 66) கந்தகச் சத்து (ஏடு 68) நடராஜன் விக்ரகம் வார்க்க (ஏடு 70) மயில்தோகைச் செம்பு (ஏடு 71) அயச் செம்பு (ஏடு 72) தாம்ரசத்து (ஏடு 74) லோகத்திராவகம் (ஏடு 75) துருசுத் திராவகம் (ஏடு 76) சந்திரோதயம் (ஏடு 79) மகா திராவகம் (ஏடு 80) சாரக்கட்டு (ஏடு 81) கெந்தகத் தைலம் (ஏடு 82) கேசரத்தின் தைலம் (ஏடு 83) அயச் செம்பு (ஏடு 84) தாளகச் சுன்னம், சாதிலிங்க வைப்பு (ஏடு 85) நாகபாஷாணச் செப்புத் தொட்டி, கார்முகில் பாஷாணம், தீமுருகல் பாஷாணம் (ஏடு 86) விந்திரசேமம், சூதப் பாஷாணம் (ஏடு 87) குங்கும பாஷாணம், குங்குமப் பாஷாண வைப்பு (ஏடு 88) லவண பாஷாணம் (ஏடு 89) சூதக்கட்டு (ஏடு 91) துவாதசத்தின் தைலம் (ஏடு 92) தசமூர்க்கத் தைலம் (ஏடு 94) வங்காளப் பச்சை வைப்பு செம்பு சுத்தி (ஏடு 99) சூதப் பதங்கம் (ஏடு 100) வெள்ளைப் பதங்கம் (ஏடு 101) ரஸகர்ப்பூர வைப்பு (ஏடு 103) ரசச் செந்தூரம் (ஏடு 104) சிகப்புக் கெந்தி (ஏடு 105) பஞ்சபக்ஷி பாஷாணம், பவளப்புத்துப் பாஷாணம் (ஏடு 108) கௌரி பாஷாணம் (ஏடு 108) வெடியுப்புச் சயநீர் (ஏடு 109) சார நீர் (ஏடு 110) துருசு ஜயநீர் (ஏடு 110) தாமிரச் சுன்னம் (ஏடு 112) பொற்தொட்டி (ஏடு 113) ரத்த பாஷாணம், அஞ்சன பாஷாணம் கற்பரி பாஷாணம் (ஏடு 115) ரத்தசிங்கி, ஏமசிங்கி (ஏடு 116) மிருதாரசிங்கி (ஏடு 117) பாஷாணப் பேர்வகை (ஏடு 118) மிருதார சிங்கிச் செம்பு (ஏடு 119) அயச் செம்பு, பூனகச் சத்து (ஏடு 120) பூனகப் படிகச் செம்பு (ஏடு 121) சங்குச் செம்பு (ஏடு 122)

வைக்ராந்தச் சத்து (ஏடு 123) சகத்திரச் சத்து (ஏடு 126) அண்டச் சத்து (ஏடு 127) நாகபற்பம் (ஏடு 128) வெள்வங்க பற்பம். குளிகைச் சாறணை (ஏடு 130) குகைக்குள்ளே பூச மருந்து (ஏடு 130½) புடத்திற்குள் ராஜன் (ஏடு 132) சாரணைத்திட்டம் (ஏடு 133) சிங்கி (ஏடு 134) மகா சவுக்காரச் சுன்னம் (ஏடு 136) பூரச் சுன்னம் (ஏடு 139) சாரநீர், உப்புக்கட்டு (139½) உப்புப் பாத்திரம் (ஏடு 140) சூதக்கட்டு, உப்புச் சுன்னம் (ஏடு 141) வெங்கார வைப்பு, வெங்காரக் கட்டு (ஏடு 145) வெங்காரச் செந்தூரம், மித்திரம் (ஏடு 146) நீற்றினம் (ஏடு 147) செந்தூர யினம், லவணயினம், ஊத்துகாலம், செயநீர் காலம் (ஏடு 148) செந்தூரக் காலம், புடத்திட்டம், ஊத்துத் திட்டம் (ஏடு 149) எரிப்புத் திட்டம், குகைத் திட்டம், பஞ்சசுன்னக் குகை (ஏடு 150) கடுஞ்சுன்னக் குகை (ஏடு 151) அஞ்சுசுன்னக் குகை, அஞ்சுநீர், சைலகர்ணீத் தைலம் (ஏடு 152) முதலான விஷயங்களுள்ளன.

*Beginning :*

ஆனந்தமாய் நின்ற வாயிபாத
மகண்டப்பரி பூரணமா மய்யர்பாதம்
ஆனந்தமாகிநின்ற கணேசன் பாதம்
மருவியதோர் மூலத்தில் நந்திபாதம்
தானந்தமாகியதோர் காலாங்கி பாதம்
புசுண்டருடன் வியாக்கிரமா பதஞ்சலியின்பாதம்
போனந்தமாகியதோர் ரிஷிகள் பாதம்
போற்றியெழு நூற்றிரட்டும் புகலுவேனே (க)

புகலுவேன் வாதியென்ற பேர்களுக்கு
போற்றறிய மெஞ்ஞானம் வரவேவேணும்
நிகழ்கின்ற ......... மறியவேணும்
நீக்கறிய காயத்தை நிறுத்தவேணும்

புகலுகின்ற பராபரையைப் பூசிக்கவேணும்
பானமென்றால் தூசிக்காப் பருவம்வேணும்
அகலுகின்ற குருமுறையுமங்கையமும் வாயும்வேணும்
அணுக்காட்டாலிதல்லால்வாதம் போச்சே (உ)

*End :*

அடைத்திட்ட முன்சொன்ன பாஷாணவைப்பு
வப்பனே முப்பத்துரண்டு தாது
மடைத்திட்டு மலேகளிலே பிறக்குகின்ற
மகத்தான பாஷாண முப்பத்திரண்டும்
சடைத்திட்டு வயக்கரண்டிக் குள்ளேவைத்து
சைலமென்ற தைலம்விட்டு தணலில்வைத்தூது
படைத்திட்டு பவளம்போல் மெழுகுமாகும்
பராபரித்தாய் அருளியதோர் படிச்சொன்னேனே
(எசூய)

சொன்னதொரு சூத்திரத்திற்பொய் யொன்றுமில்லே
துலங்கியதோர் மணித்தாயை யெழுதிறந்துதித்தேன்
சொன்னதொரு குருபதத்தை யனுதினந் துதித்தேன்
துலங்கியதோர் குருபதத்தை யென்றுந்தெழுதேன்
சொன்னதொரு காலாங்கி வய்யருடைய பதத்தைத்
தொழுதுகொண்டு யெழுநூற்றுச் சிலுவான் சொன்னேன்
சொன்னதொரு சித்தருட பதங்கள் போற்றி
சூத்திரந்தான் பாடியது கட்சிமுத்தே (எசூக)

*Colophon :*

விஷு வருஷம் ஆவணி மாதம் 26வ அவிட்ட நக்ஷத்திரமும் சதுர்த்தசியும் கூடிய சுபதினத்தில் போகநாயகர் அருளிச்செய்த எழுநூத்திச்சிலுவான் எழுதி முடிந்தது. எழுதினது ஆரியமுத்து.

**குறிப்பு :**

கடைசி 4 ஏடுகளில் "பூவரசங்காயெண்ணெய்" முறைச் செய்யுட்கள் உள்ளன,

**524.** சுவடி நெ. 293

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் 18 முதல் 32 வரை ; 15 ஏடுகள்

பக்கத்திற்கு 5 முதல் 7 வரிகள் ; எழுத்து சுத்தமாகவுள்ளது.

(நீள × அகலம் 28 × 3 செ. மீ.)

இதில் கண் ரோகத்திற்குப் பீதரோசணி மாத்திரை, சூதக வாயுவிற்கு மருந்து, நாட்பட்ட சுரத்திற்கு மருந்து (ஏடு 18) மேகவாயு, மயக்கம், கிறுகிறுப்புக்குத் தைலம், சூட்டுக்கு குளுமை லேகியம் (ஏடு 19) பிள்ளையில்லாதவர்க்குப் பிள்ளை யுண்டாக, காது வியாதித் தைலம் (ஏடு 20) காடிகாரச்சுண்ணம், (சன்னிக்கு) (ஏடு 21) உதிரத்திரட்சி, சிக்கலுக்கு, பூததம்புரான், கீரிப்பூச்சிக்கு (ஏடு 22) சன்னிதோஷம், குளிர்ச்சிக்குத்துவாலை (ஏடு 23, 24, 25) மறைப்புமை, மாரணம் (ஏடு 26) வசிய ஈடு, காய்ச்சல் உண்டுபண்ண (ஏடு 27) மீன் விலக்க, தேங்காயுடையத் தைலம் (ஏடு 28) படை விலக்க, பாம்பு விலக, பேய்நீங்க, விந்து கட்ட, கலகம் பண்ண (ஏடு 29) பாதாள அஞ்சனம், மை, ரசக்கட்டு வேதை (ஏடு 30) பகைவனை இணைக்க (ஏடு 31)

*Beginning :*

பீதரோகணி பலம் ¼ திப்பிலி பலம் ¼

இந்துப்பு பலம் ¼

இந்த 3 சரக்கையும் நந்தியாவட்டைச் சாறு விட்டரைத்து மாத்திரைசெய்து உலர்த்தி வைத்துக்கொண்டு முலைப்பாலிலாவது நந்தியாவட்டைச் சாற்றிலாவது உரைத்துக் கண்ணிலிடக் கண் ரோகஞ் சகலமுந்தீரும். வியாதி தீரும் வரையில் மருந்து போடவும்.

நல்லமுறை, முருகன் துணை.

*End :*

### வச்ய கணபதி மந்திரம்

ஓம் எலிவாகன முடையவரே! எல்லோர்க்கும் விநாயகரே! குட்டியானை முகத்தோனே! கேட்டதெல்லாம் தரவல்லோனே! பார்வதி புத்ரனே. ஓம் கணபதி யானை முகத்தோனே. கணபதி, ஆதிகணபதி, மகாவீர கணபதி, நான் நினைத்த காரியங்க ளெல்லாம் எனக்குக் கருணை செய்யவேணும் கணபதி – கோலமான சடையனுரே கேளும் புலித்தோலுடையவரே! நீலமான கண்டரே! அன்று நீயிட்ட நீறு இன்று நான் இட்டுக் கொண்டேன் அன்று சர்வலோகமும், அன்று சர்வ ஜனங்களும், சர்வ பூத, பிரேத, பிசாசங்களும், பில்லி சூனியமும் உன் வசமானுப்போலே இன்று சர்வ லோகமும், சர்வ ஜனங்களும், சர்வ பூதப் பிரேத, பிசாசு, பில்லி சூனியங்களெல்லாம் என் வசமாக்கிவா. இதற்கு உரு – 1008 செபிக்கச் சித்தி சர்வ வசியம் ஓம், அங், இங், சிவாய நம.

---

### 525. சுவடி நெ. 294

## வைத்தியப் பலதிரட்டு

ஏடுகள் 241; பக்கத்திற்கு 7 முதல் 8 வரிகள்

எழுத்து சுத்தமாகவுள்ளது.

(நீள × அகலம் 44 × 3½ செ. மீ.)

அதில் (A) நாடிசாஸ்திரம், சிலேத்மவாத குணம், நாடி தெரிய வகை, வாத பித்தத் தொந்தமறிய, பித்தச் சிலேத்ம தொந்த மறிய (ஏடு 4) சிலேத்ம பித்தம் தொந்தமறிய, உடலின் குணமறிய வகை (ஏடு 5) அவத்தை அறிந்து பண்டிதன் விலக, வாத சன்னிக்கு (ஏடு 5) குணம் வராத அவஸ்தை அறிய வகை (ஏடு 7) சாத்ய லட்சணம் (ஏடு 8) சந்நிவாத லட்சணம் (ஏடு 10) வாத சரீரம் (ஏடு 11) பித்த சரீரம், சிலேத்ம சரீரம் – வாதசுரம்

லங்கனம் (ஏடு 11) சுரப்பிரமாணம் (ஏடு 12) வாத சுரத்திற்குக் கஷாயம், பித்தசுரக் கஷாயம் (ஏடு 13) சிலேத்மசுரக் கஷாயம் (ஏடு 14) வாதசுரக் குணம் (ஏடு 15) வாதச்சிலேத்ம தொந்தசுரக் குணம், மாந்தசுரக் குணம், சர்வச்சுரக் குடிநீர் (ஏடு 16) விஷ சுரக் குடிநீர், தோஷசுரக் குடிநீர், சீதசுரத்திற்கு, ஏகாகீக சுரத்திற்கு (ஏடு 17) சீதஜ்வர கஷாயம் (ஏடு 18) இராஜ சுரத்திற்குக் கஷாயம், மாங்கிஷசுர கஷாயம், சாயங்காலம் வருகிற சுரக் குடிநீர், சுரத்திற்குக் கண்டூஷம். சுரத்திற்குப் புகை (ஏடு 19) குளிர் காய்ச்சல், சன்னிக்குப் புகை, காய்ச்சலுக்கு நசியம் (ஏடு 20) வைரவன் கலிக்கம், கணபதி கலிக்கம், பிரகாசாஞ் சனம், திவ்யாஞ்சனம், தாகத்திற்கு, வாந்தி, விக்கலுக்கு (ஏடு 21) சர்வ சுரத்திற்கு, சத்திகிறுத்த, அதிஸார லட்சணம், வாதா திஸார பித்தா திஸாரக் குணம் (ஏடு 22) சேத்தும அதிஸாரம் (ஏடு 23) சுகசன்னியின் குணம், நாக்கு குணம், 13 சன்னியின் குண வரலாறு (ஏடு 24) 13 சன்னியின் பேர், குணம். தாந்திரிக சன்னிக் குணம், கஷாயம், அந்தகசந்நி குணம், ருக்கிதாகசன்னி குணம் (ஏடு 25) ஷிக்குக் கஷாயம், சித்தவிப்ரம சன்னி குணம், மருந்து, சீதாங்க சன்னிக் குணம், கஷாயம், கண்டகுச்ச சன்னி குணம், கஷாயம் (ஏடு 26) சன்னியாசச் சன்னிக் குணம், கஷாயம் விக்னுத சன்னிக் குணம், புக்குநேத்ர சன்னிக் குணம். ரத்தட் டீவிக் குணம் (ஏடு 26) பிரலாப சன்னிக் குணம், அபின்யாச சன்னிக் குணம், சர்வ சன்னிக்கும் பொது கஷாயம் (ஏடு 28) வாந்தி விக்கல், சுரத்திற்கு, அந்திர தாகத்திற்கு, பிரமேகம் (ஏடு 29) ஷிக்குக் கஷாயம், நீரடைப்பிற்குச் சம்பிரதாய நெய் (ஏடு 30) நெய்யும் எண்ணெயும் வைக்கிற பதமறியும்படி, ரசசுத்தி, கந்தகச் சுத்தி (ஏடு 31) நேர்வாள சுத்தி, கௌரி, வெள்ளை, தொட்டிப் பாஷாண சுத்தி, மனேசிலை, சாதிலிங்கம், குங்கிலியப் பலவகை சுத்தி (ஏடு 32) இன்னமுஞ் சிறிது சுத்தி – துரிசு கடுக ரோகிணி சுத்தி (ஏடு 33) குக்கில் சுத்தி, தாமிரபற்பம் (ஏடு 34) லோக பற்பம், காந்த பற்பம், அப்பிரக பற்பம், சுவர்ண பற்பம் (ஏடு 35) வெள்ளீய பற்பம், காரீய பற்பம், பவழபற்பம் (ஏடு 36)

முத்து, வைரம், மரகதம், நீலபற்பம், மாணிக்கம், புஷ்பராகம், கோமேதகம், வைடூரிய பற்பம். மண்டூரக்கிரமம் (ஏடு 37, 38) காமாலைக்குணம், வெங்கலச் செந்தூரம் (ஏடு 39) கந்தகச் செந்தூரம், சுக விரேசனம், நல்ல விரேசனம் (ஏடு 40) விரேசன குளிகை, இருளறு தீபம் (ஏடு 41) சுரத்தின்மேல் வீக்கத்திற்கு, சுரகேசரி உருண்டை, மிருத்தாவதி உருண்டை (ஏடு 45) குளிர் சுர உருண்டை (ஏடு 43) பலவகை வியாதிக்குக் குளிகை, சுரானந்த பைரவன். ஆவியானந்த பைரவன் (ஏடு 44) லங்கன லட்சணம், அக்கினி குமாரன் குளிகை, அர்த்தநாரீச்சுரபாண குளிகை (ஏடு 45) ஆதியானந்த பைரவன் (ஏடு 46, 47) காலக்கினி ருத்ரம், பஞ்சவக்த்ர ரஸர், கோடர்சூழிக் குளிகை (ஏடு 48) வாதராட்சஸன் (ஏடு 49) நல்ல சிந்தாமணி, திரிலோக சிந்தாமணி (ஏடு 50) இராஜபூபதி, மகாபூபதி (ஏடு 51) பூரண சந்திரோதயம் (ஏடு 52, 53, 54) பூரண சந்திரோதயம் (வேறு) அஷ்டலோகச் செந்தூரம் (ஏடு 55) அப்பிரகச் செந்தூரம் (ஏடு 56) இராஜம் ருகாங்கரஸம் விஷ்ணுபராக்ரமம் (ஏடு 57) பழஞ்சுரத்திற்கு எண்ணெய், திப்பிலியாதிச் சூரணம், ஏலாதிச் சூரணம், வாயில் ரத்தம் எடுக்கிறதற்கு முயல்நெய் (ஏடு 58) சிந்தாதிலேகியம், கிராணிக்கு (ஏடு 59) குன்மக்கிராணிக்குத் தாடிமாதி சூரணம், குன்மத்திற்கு மகோதரத்திற்கும் லேகியம் (ஏடு 60) தலைவலிக்கு நசியம், தூள், வயிற்றிலெழுந்த வியாதிக்கெல்லாம் சூரணம். அதிசாரகுடாரம் (ஏடு 61) அதிஸாரகேசரி ரஸம், சொறி சிரங்கிற்கு, படர்தாமரைக்கு, குடல் வாதத்திற்கு – வயிற்றுத் துட்டுக்கு – தேளுக்கு (ஏடு 62) உடல் கற்ருழை நாற்றத்திற்கு நரம்புச் சிலந்திக்கு, ஆருதபுண், சிலையோடினதற்கு – சூலைவாத புண்ணுக்கு எண்ணெய் (ஏடு 63) வாயினுல் ரத்தவாந்தி எடுக்கிறதற்கு, லோகபற்பத்திற்கு உருக்குப்பொடி, இரதபற்பம் (ஏடு 64) ரத்தநாசி, ரத்தப் பிரமியம், ரெத்த பித்தத்திற்கு – ரெத்த நாசிக்கு (ஏடு 65) ரத்தப்பிரமேகத்திற்கு, சமுத்திராப்பழ கற்பம் (ஏடு 66, 67) புண்ணுக்கு எண்ணெய். சிரங்கு, கரப்பானுக்கு நிலவாகைக் கற்பம் (ஏடு 68) கிராணிக்குக் குரொட்டைக்

கிழங்கு) அண்டவாதத்திற்கு, மகாசிந்தாமணி, கோடா சூழி குளிகை (ஏடு 69 முதல் ஏடு 76)

(B) வியாதியின் குணம் இன்னன்ன வியாதிக்கு இத்தனை யென்றறிய விபரம் (ஏடு 77 முதல் 79) சரீர சுத்தி, தந்த சுத்தி (ஏடு 80) மோர், பால், ஜலம், லவண சுத்தி. அரிசி சுத்தி, பத்தியத்திற்காகாத காய்கறி – வாதமில்லாக்கறி (ஏடு 81) பத்தியக்கறி (ஏடு 82) சிலேத்மக்கறி, மூலவாயுக்கறி, கட்டனைக் கறி (ஏடு 83) சந்தனத்தின் குணம், தேங்காய்ப் பாலின் குணம் (ஏடு 85) சிவனூர் வேம்புத் தைலம், வண்டுகடி, குஷ்டம், சொறி குட்டம் (ஏடு 87) வாயுவிற்கு மருந்து, சஞ்சீவித் தைலம் (ஏடு 88) வாய்நீர் ஊறுதலுக்கு, வாந்தி விக்கல், பவுத்திரத்திற்கு (ஏடு 89) வாந்தி, மந்தார காசத்திற்கு, கால்கை எரிச்சலுக்கு. விஷபாகத் திற்கு (ஏடு 90) மூல வியாதிக்கு, ஒருத்தலை நோய்க்கு. மண்டை யிடிக்கு யெண்ணெய் (ஏடு 91) சுரத்தில் கால், கை வீங்கினல், அரோசகக் கஷாயம், கிறுகிறுப்பிற்கு, விப்புருதிக்கு (ஏடு 92) மதனகாமேசுர உருண்டை, பாம்புகடி குணமறியும் வகை (ஏடு 93) நீர்ப்பாட்டுக்கு தயிலவகை, மோரெண்ணெய், பிருங்காமலகத் தைலம் (ஏடு 95) வாதத்திற்கு லகுநாராயணத் தைலம், குமாரித் தைலம், துவாதசாக்ஷரத் தைலம் (ஏடு 96) நயனமிருதம், அரக் கெண்ணெய், கணையெண்ணெய், தந்தவாயுவிற்கு, அச்வசந்தி சூரணம் (ஏடு 97) பாரங்காதி பஞ்சபல்லவக் கஷாயம், பார்ங்க் யாதி லேகியம், தாகத்திற்கு, சீதசுரக் கஷாயம் (ஏடு 100) நாரங்காதி வேணுபத்ராதி கஷாயம், அட்டாதிச் சூரணம், வயிற்றுக் கடுப்பிற்கு மாதுலுங்க சூரணம் (ஏடு 101) வயிற்றுக் கடுப்பிற்கு, வாந்திக்கு, கழிச்சலுக்கு, பயித்தியத்திற்கு திராட் சாதிச் சூரணம் (ஏடு 102) சிங்காதி சூரணம். மதனகாமேசுவரம், (ஏடு 103) மதனகாமேசுரயோகம், மகாதாளீசச் சூரணம், கிராணிக்குத் தாளீசபத்திரி மாத்திரை, கிராணிச் சூரணம் (ஏடு 104) கிராணிக்குக் குழம்பு, கிராணிக்குப் புளியாரை நெய் (ஏடு 105) பித்தக் கிராணி, வாதக் கிராணி குணம், சிலேத்மக் கிராணி குணம், இவற்றிற்கு வெங்கடாசாரியார் நெய் (ஏடு 106)

கிராணிச் சூரணம், வாயு, ஆம, ஆந்திர, பக்க, சங்கிரகக் கிராணி இவைகளுக்கு (ஏடு 107) கிராணிச் சூரணம். மூலக் கிராணிக்கு (ஏடு 108) மூலக் கிராணிக்கு, கிராணி கபாடம், ஜாத்யாதி சூரணம், பூதிகா சூரணம் (ஏடு 109) யோகருஜ சூரணம், குட்டத் திற்குத் தேற்றுன் கற்பம், 18 குட்டத்திற்கும் சூரணம், சத்தி குன்மம், வலிகுன்மத்திற்கு (ஏடு 110) கண்டார்த்ரகச் சூரணம், மானினீ சூரணம், அதிஸாரத்திற்கு நரஸிம்மாதிச் சூரணம் (ஏடு 111) கடி விஷத்திற்கு மணிமந்தாதிச் சூரணம், கர்பூராதி சூரணம், குக்குலுச் சூரணம் (ஏடு 112) கெண்டைக்குச் சூரணம், 18 குட்டத்திற்கும், பிரமேகத்திற்கும், இருவது வகைப் பிரமேகத் திற்கும் (ஏடு 113) அமுதாதிச் சூரணம் (மேகத்திற்கும் உஷ்ணத் திற்கும், வெட்டை மேகத்திற்கு எண்ணெய், சௌபாக்கிய சுண்டி, லவங்காதி ரஸாயனம், பவுத்திரத்திற்கு (ஏடு 114) பவுத்திரத்திற்கு உள்ளுக்குச் சாப்பிட, புண் திரி, பவுத்திர வீக்கத் திற்கு, பவுத்திரம், அளிபுண், மூலமாயளி புண்ணுக்கு (ஏடு 115) இரத்தக் கழிச்சலுக்கு, ரத்த சீதக்கடுப்பிற்குப் பாவனஹரீதகீ (ஏடு 115) சூலைக்குக் கஷாயம், யோனிச் சூலைக்கு, முடங்கு சூலை, கிரந்தி. சூலைப்புண், விரி சூலை, வாதசூலை, கள்ளிப்பூக் கிரந்திக்கு, வேறு (ஏடு 117) கிரந்திக்குச் சூரணம், சூலைக் கடுப்பிற்குப் பூச எண்ணெய் (ஏடு 118) கபால சூலை, வாயு சூலை – கிரந்திக்கு லேகியம், பிப்பல்யாதி லேகியம் (ஏடு 119) வில்வாதி லேகியம், வேறு (ஏடு 120) தாபச்சுரத்திற்கு, அசீர்ணசுரத்தின் குணம், கெற்பத்தில் சுரம் வந்தால் (ஏடு 121) விரேசனம், அஜீர்ணத் திற்கு, தீபனத்திற்கு, விரேசனத்திற்கு, சீதமுஞ், சுரமும், எரிப்பும், குழைப்புமுண்டானதற்கு, சலக் கழிச்சலுக்கு (ஏடு 122) மேகக்குடாரி, மூத்திரகிரிச்சம், கல்லெரிப்பு, மூத்திரக் கடுப்பு, நீரடைப்புக்கு, நீர்க்கடுப்பிற்கு (ஏடு 123) நீர்க்கடுப்பு, கல்லடைப்பு சதையடைப்பிற்கு, கல்லடைப்பிற்கு, மூத்திர கிரிச்சத்திற்கு (ஏடு 124) கல்லடைப்பு, மூத்திரகிரிச்சம், மூலத்திற்கு (ஏடு 125) நீர்கடுப்பு, பிரமேகத்திற்கு, கல்லடைப்பிற்குப் பல்லாதக மாத்திரை, கெற்பமுண்டாக, அங்கோலச் சூரணம் (ஏடு 126)

மாதுலுங்காதிச் சூரணம், கெர்பிணிக்கு, பாண்டுவிற்கு, வீக்கத்திற்கு – ஏலாதிச் சூரணம் (ஏடு 127) மூலத்திற்கு உச்சிதம், வேறு, மூலத்திற்குக் கங்காயன குளிகை (ஏடு 128) மூல வாயுவிற்கு விரேசனம், மூலத்திற்கு வேறு மூலபாண்டுவிற்குச் சூரணம் (ஏடு 128½) உறுப்புத்தள்ளின மூலத்திற்கு, உள் மூலம், பிற மூலத்திற்கு வேறு (ஏடு 129) ரத்த மூலத்திற்குச் சூரணம், மூல வாயுவிற்கு, ரத்த மூலத்திற்கு, கர்ணரோகம் 100க்கும் தீபிகாதைலம், கர்ண ரோகத்தைலம் (ஏடு 130) கர்ணபூஷண ரஸம், பிரமேகத்திற்குக் கதலீகந்த கிருதம், மேகரோகத்திற்கு நெய் (ஏடு 131) ரத்தப் பிரமேகத்திற்கு, சுக்கிலப் பிரமேகத்திற்கு, பிரமியத்திற்கு (ஏடு 132) சுக்கிலப் பிரமேகத்திற்கு, அரோசகத்திற்கு, ரத்தக் கடுப்பிற்கு (ஏடு 133)

(C) நாடிச் சுருக்கம் (ஏடுகள் 134 முதல் 136)

(D) வைத்திய சிந்தாமணி (ஏடு 137 முதல் 138)

(E) பிரமேகப்பிரமியத்திற்கு, சீழ்ப்பிரமேகத்திற்கு (ஏடு 139) சீழ்பிரமேகத்திற்கு, மேகத்திற்கு, அமிருதாதிச் சூரணம், மேகத்திற்கு, கல்லெரிப்பு, உஷ்ணவெட்டைக்குக் கதலீக்கிருதம் (ஏடு 140) எலும்புருக்கிப்பிரமேகத்திற்கு நெய், நீர்மறிபட்ட வாயு, மலபந்தம், மூலவாயுவிற்கு (ஏடு 141) நடுக்குவாதம், வாய்வாதம், பல்வாதம், முகவாதத்திற்கு, மகோதரம், விஷவாதம், பாண்டுவுக்கு, வயிறு கழிச்சலுக்கு, நெடுநாள் கிராணிக்கு, வயிற்றுக்கு ஆவி பிடிக்க, அதிஸாரக் கழிச்சலுக்கு, வயிற்றுப் பொருமலுக்கு, (ஏடு 142) அதிசாரத்திற்கு பஞ்சகவ்ய நெய், மலசுத்திக்கு, பசியாக, பஞ்சத்திரவ்யச் சூரணம், மூலவாயுவிற்கு, சூசிகாவாயுவிற்கு, அரிதார பற்பம், (ஏடு 143) அரிதார பற்பம் (ஏடு 144) 8 வகைச் சுரமும் 7 நாழிகையில்விடக் குளிகை, அர்த்தநாரி மாத்திரை (ஏடு 145) புங்கம்பூ கற்பம், புங்கங்கொழுந்து கற்பம், காசத்திற்கு அப்பிரகத் தைலம், மண்டைப்பீனிசமாதேவிக்கு நெய், நவபாஷாண முறிவு, பரங்கிப்பட்டை முறிவு, ரசபாஷாண முறிவு (ஏடு 146) நெல்லிக்காய்த் தைலம், சகல சூலைக்கு,

அதிசாரத்திற்கு, கழிச்சலுக்கு (ஏடு 147) ஒருத்தலைவலிக்கு நஸ்யம், தலைக்கு எண்ணெய், அண்டவாதத்திற்கு எண்ணெய் (ஏடு 148) அசதி சுரம், விடாத சுரத்திற்கு, நாகன்வகை, மூந்திரிப் பழநெய், கிரந்திப் புண்ணுக்கு, நேத்திர ரோகம் (ஏடு 149) ஏலாதி உருண்டை, சரஸ்வதி மாத்திரை, வாயில் ரத்தம் விழுந்தால், இருமலுக்கு, சயத்திற்கு. கஷாயம் (ஏடு 150) வேறு மேல் சுவாசம், சிலேத்துமத்திற்கு, இருமல், சயம், ஈளை, உப்பிசத் திற்கு, சீதம், இருமல், இளைப்பிற்கு (ஏடு 151) மந்தாரகாசத் திற்கு. ரத்த காசத்திற்கு, குக்குளுச்சூரணம், வெண்குஷ்டத்திற்கு மருந்து. சுரத்துக்குக் குளிகை (ஏடு 152) அம்ல பித்தத்துக்கு தோஷம் 7 வகைக்குங்குணம். மாங்கிஷ தோஷம், சத்திய தோஷம், ராசதோஷம், ஏம தோஷம், கிருஷ்ண தோஷம், அசாத்திய தோஷம், (ஏடு 153) தோஷக்கஷாயம், உண்ணுக்கிற்கு, விஷ சுரத்திற்கு, சுடுவித்தயிலம் (சுடர்த்தைலம்) (ஏடு 154) தாளீசாதி வடகம், சன்னி எண்ணெய், வேப்பெண்ணெய் தைலம், வலிப்பிற்கு வேப்பெண்ணெய்த்தைலம், பல்லுக்கிட்டின சன்னிக்கு எண்ணெய் (ஏடு 155) வாயு, விக்கலுக்கு, பிள்ளைபெற்று வயிற்றில் ரத்தங் கட்டி னால், சன்னி 15க்கும் நஸ்யம் தோஷத்திற்குத் தளம், தோஷத் திற்குக் கஷாயம், பெரும்பாட்டிற்கு, (ஏடு 156) பெரும்பாட்டிற்கு, (வேறு) தாளிசபத்திரி லேகியம், பயித்தியம் வாயு, கிராணி, பரங்கிப்பட்டைச் சூரணம், கெண்டைக்கு மருந்து (ஏடு 157) வாயுக்குளிகை, வாயுவுக்குச் சூரணம் – பஞ்ச சூரணம், நளிர்சுரம், சோபை, கால், கை, குளுந்து போகிறதற்கு (ஏடு 158) பிள்ளை பிறந்தவர்களுக்கு பச்சையுடம்பில் விக்கல் பிறந்தால், வயிற்று வலிக்குக் கஷாயம் (ஏடு 159) பக்கசூலை, பாரிசவாயுக்கு வேறு, மாருதவிக்கலுக்கு, மண்டை வியாதிக்குப் பெருங்காயச்சூரணம், சகல பீனிசத்திற்கும் (ஏடு 160) நிலப்பனைக் கற்பம், விரேசனம், விடாத சுரத்திற்கு, 4ம் மாறலுக்குத் தூதுவேளை கல்பம் (ஏடு 161) பிராய் கல்பம், வேப்பங்கற்பம் – நாறுகரந்தைக் கற்பம் (ஏடு 162) சுரம் வந்தவுடன் கொடுக்க விரேசனம், தாபசுரம், விக்கல், வெள்ளோக்காளத்திற்கு (ஏடு 163) 4ம் மாறலுக்கு (ஏடு 164)

சன்னிக்குக் குளிகை, கருங்குஷ்டம், சூலைக்கு, சுரக்குளிகை, அரிதார பற்பம், அதிசாரச்செந்தூரம், தடிப்பிற்கு எண்ணெய் (ஏடு 165) சந்தனாதித்தைலம் (ஏடு 166) ஏலாதி க்ருதம் (ஏடு 167) கல்யாண கிருதம், நமனூர் சித்தித் தைலம் (ஏடு 167½) லகுகு மாரித் தைலம் (ஏடு 168) வாதத்திற்கு எண்ணெய், துவாசித் தைலம் (ஏடு 169) சைத்தியத் தைலம், நிம்பாதித் தைலம் (ஏடு 170) சன்னிபாதத் தைலம், வேறு இருமலுக்கு (ஏடு 171) கண்டங்கத்தரி லேகியம் இருமலுக்கு, க்ஷபத்திற்கு முயல் நெய் (ஏடு 172) க்ஷபரோகத்திற்குக் குண்டலாதி நெய், இருமலுக்கு மருந்து (பாட்டு) இருமலுக்குச் சூரணம், திமிரோக, குரல் நெரிசலுக்கு (ஏடு 173) மழைகாலம் வருகிற இருமலுக்கு, சத்தி விக்கல், சேத்தும விக்கல் குணம் – பித்தத்தால் வந்த சைத்திய விக்கலின் குணம் (ஏடு 174) விக்கல், அக்கினி மாந்தம், ஓக்காளம், குத்திருமலுக்கு – சத்திக்கு மருந்து. அசீர்ண பித்தம் வெறி பித்தத்திற்கு (ஏடு 175) இதற்குக் கலிக்கம், மாந்த பித்தத் திற்குத் தலைக்கு எண்ணெய், சன்னி சுரத்திற்கு, மேக சுரம், மந்தாரகாசம், எலிகடிக்குக் கலிக்கம் (ஏடு 176) சன்னிக்குக் குடி நீர், சத்திசுரத்திற்கு, அதிசாரக் கழிச்சலுக்குக் குடிநீர், சுரத்திற்கு மோரெண்ணெய், சுரத்திற்கு வெருகெண்ணெய், சன்னிக்கு (ஏடு 177) சேத்தும சுரத்திற்கு, இரத்தத்திற்கு முரிவு, கிரந்திக்கு உப்பை (ஏடு 178) நீரழிவுக்கு மருந்து, நீரழிவுக்குக் குடிநீர், (ஏடு 179) நீரிழிவுக் குடிநீர், நீரிழிவிற்குப் பத்தியக் கறிவகை, நீரிழிவுக்குக்காரீயச்செந்தூரம், நீரடைப்பிற்கு மருந்து, கல்லடைப் பிற்கு மருந்து (ஏடு 180) கல்லடைப்பிற்கு மருந்துப் பாட்டு நீர்க்கடுப்புக்கு மருந்து, நீர்க்கடுப்பு, கல்லடைப்பு, சலமடைப்புக்கு மருந்து (ஏடு 181) கூழ்பாண்ட சர்க்கரை, பீனிசத்திற்கு மருந்து, (ஏடு 182) கண்ணுக்கு மை, நேத்திர ரோகம், கண்ணோய் பற்பம். நேத்திர வாயுவிற்கு எண்ணெய் (ஏடு 183) கண் பூவுக்கு, பித்த காசத்திற்குக் கண்ணிற்கு, மாலைக் கண்ணுக்கு இள நீர்க் குழம்பு, விரேசனம் (ஏடு 184).

அகஸ்தியர் சாபநிவ்ருத்தி (ஏடு 185) நடுக்கு வியாதிக்கு, வாத சூலைக்கு, பூதிகும்பிளித் தைலம் (ஏடு 186) இருமல், இளைப்பிற்கு மருந்து, சுரக் குளிகை (ஏடு 187) எலிகடிக்கு, உஷ்ண வாயுவிற்கு, கால்கை முடங்களுக்கு (ஏடு 188) கிராணி, கடுப்பு, கழிச்சலுக்கு, மூலரோகத்திற்கு (ஏடு 188½) சலப் பிரமியத்திற்கு, தேளுக்கு, நஞ்சுக்கு மாற்று மருந்து. வயிறுகழிய, சலக்கழிச்சலுக்கு (ஏடு 189) ராஜவிரேசனம், விஷபாகத்திற்கு, அண்டவாதம், முழங்கால் வாதம், குதிவாதத்திற்கு, சுரக்குளிகை, அக்கரத்திற்கு, குளிர் வெதுப்பிற்கு (ஏடு 190) 4 நாள் மாறலுக்கு ஆனந்த பைரவன் குளிகை, முழங்கால், நரித்தலை, கெண்டை வாதம், உள்வலிப்பு, பிறவலிப்பு, கை, வயிறு, மரணவாதம், குமாரகண்டன் (ஏடு 191) 21 பிரமியத்திற்கும், அழகிய சொக்கன் குளிகை, கோடாசூழிக் குளிகை (ஏடு 192, 193) நாலாம் மாரலுக்கு, மூலக்கிராணிக்கு, பெரும்பாட்டுக்கு (ஏடு 193½) காதில் எழுச்சிக்கு, சுரதாகத்திற்கு (ஏடு 194½) எந்த சுரத்திற்கும், வயிற்றுக் கடுப்பிற்கும், சூலைப்புண், கிரந்திக்குச் சூரணம், விப்புருதி, உஷ்ணத்திற்கு (ஏடு 195) உஷ்ணவியாதி சகலத்திற்கும், சூலைப் புண்ணுக்குக் களிம்பு (ஏடு 196) காமாலை, விப்புருதி, சூலைப் புண்ணுக்கு (ஏடு 197)

அகஸ்தியர் பாயிரம் நூற்றைந்து (ஏடு 199) அயபற்பம், காந்தபற்பம் (ஏடு 199) தாமிரபற்பம், ரசபற்பம், வெள்ளீயபற்பம் (ஏடு 200) காரீயபற்பம், வெங்கலபற்பம், திராபற்பம் (ஏடு 201) பித்தளைபற்பம், கெருடப்பச்சைபற்பம், கல்நார்பற்பம் (ஏடு 202) நாகபற்பம், வெள்ளீயபற்பம், தங்கபற்பம் (ஏடு 203, 204) கெந்தக பற்பம், மண்டூரபற்பம், (ஏடு 205) அஞ்சனக்கல்பற்பம், சாதி லிங்கபற்பம் (ஏடு 206) வீரபற்பம், பொரிக்காரபற்பம், சாஸ்திர வேதிபற்பம் (ஏடு 207) குந்துருக்க நீறு, பவழபற்பம் (ஏடு 208) வைரபற்பம், ரத்தினபற்பம், பாஷாணநீறு (ஏடு 209) நவச்சார நீறு, உப்பின்பற்பம் (ஏடு 210) ஆமையோடு நீறு, முத்து நீறு, கற்பூர நீறு (ஏடு 211) துருசுச் சுன்னம், (ஏடு 212) பொன்னிமிளை பற்பம், தங்கநீறு (ஏடு 213) மேகத்தின் தைலம் (ஏடு 214)

வில்வவேர்த் தைலம், வேங்கைத் தைலம், வெட்டிவேர்த் தைலம், வேப்பம்பட்டைத் தைலம் (ஏடு 215) குருந்தோட்டித் தைலம், கொடிவேலித் தைலம், சீரகத் தைலம், (ஏடு 216) சீரகத் தைலம், (வேறு) சூரித் தைலம், கீழாநெல்லித் தைலம் (ஏடு 217) இசங்கன் தைலம், அமுக்கிராத் தைலம், இஞ்சித் தைலம் (ஏடு 218) செம்முள்ளித் தைலம், சாறணைத் தைலம், இருவேலித் தைலம் (ஏடு 219) அகில்கட்டைத் தைலம், அறுகம்வேர்த் தைலம, கொடுப்பை எண்ணெய் (ஏடு 220) கையான்சாறுத் தைலம, சவுரித் தைலம், சென்னகரப்பட்டைத் தைலம் (ஏடு 221) ஆயில் பட்டைத் தைலம், இருப்பவல்த் தைலம், பொன்னுங்காணிக்கிருதம (ஏடு 222) சதாவரிக் கிருதம், சீரகச் சூரணம், தூதுவளைக் கிருதம (ஏடு 223) சன்னிக்குத் தைலம், நவசாரக் குழம்பு (ஏடு 224) மேனிச் சூரணம், ஓரிதழ்த்தாமரைச் சூரணம், குராசாணிச் சூரணம் (ஏடு 225) கொடிவேலிச் சூரணம் (ஏடு 276) காதல் சீழ் பாய்ச்சலுக்கு எண்ணெய், பல் வியாதிக்கு (ஏடு 227) கெற்பக கிருமிக்கு, கெற்ப வாயுவிற்கு எண்ணெய் (ஏடு 228) சிலேதம வாதம், நீர்க் கடுப்பு, மஞ்சட்காமாலை, கிருமி, தந்தவாயுவிற்கு (ஏடு 229) வீழிவேர்த் தைலம், சிவன் வேம்புத் தைலம் (ஏடு 230) சேங்கொட்டைத் தைலம், வேப்பம்பட்டைத் தைலம், பேய்த் தேய்த்தான் தைலம், வாலுளுவைத் தைலம், புரசு, வெண்புரசுத் தைலம் (ஏடு 232) வெள்வேலந் தைலம், சீரகத் தைலம், அமுக்குராத் தைலம், சீனப்பன் தைலம், சாரணைவேர்த் தைலம (ஏடு 239) முதலியன

நிகண்டில் மருந்தின் பெயர் புரியும்படி (1 – 7) ஏடுகள் பித்த தோஷத்திற்கு தழம். நீர் வண்டு கடிக்கு மருந்து. வெள்ளைக்கு மருந்து, இருமல் முதலானவைகளுக்கு மருந்து முறைகள் உள்ளன.

(A) நாடி லக்ஷணம் ஏடுகள் 1 முதல் 23 வரை

*Beginning :*

கரிமுகனடியை வாழ்த்திக் கைதனில் நாடிபார்க்கில்
பெருவிரலங்குலத்தில் பிடித்துடனடுவே தொட்டால்
ஒருவிரலோடில் வாதம் மற்றிரு விரலோடிற்பித்தம்
திருவிரல் மூன்றிலோடிற் சிலேத்தும நாடிதானே க

நாடியேபற்றும் வன்மை நலம்பெற வுரைக்குங்காலை
தேடியே வாதபித்தஞ் சிலேத்தும நாடிமூன்றும்
ஓடிய மணிக்கரத்தே மூவிர லொக்கப்பற்றி
நாடியதறிந்து சொல்ல நயத்திலே உரைக்கலுற்ரும். (உ)

*End :*

தானமாம் வாதநாடி தன்னை நீ யறியவேண்டில்
லூனமா மூனத்தாலு முலாவியே நிற்குமென்க
தேனமர் குழலினாளே! தெரிந்துசொல் வசூரியென்று
கானமாமயிலாய்! வெப்புக் கடினமே செய்வதென்னே. (எச)

விசைகலை தன்னிலாங்கே வேருற வோடியேதான்
மசகாமல் மீளுமாகில் மரிப்பதோர் பிணியுமில்லை
யசைநரம்பதனை யுன்னில் நாசில்பின் னவத்தையாகுங்
கசைநரம் பிரண்டுங்கூடிக் கதறிடில் கலக்கந்தானே. (எரு)

நாடி லக்ஷணம் முற்றும்.

(B) **சன்னிவாத லக்ஷணம்** ஏடுகள் 24 முதல் 76 வரை.

*Beginning :*

மார்பு நெற்றி கழுத்தடி தொண்டைதான்
வேர்வை யுற்றுடன் விக்கலுந் தாகமுங்
கூர முற்றகுரல் கம்மிப் பெற்றுமால்
பாரமுற் சன்னி வாதச் சுரங்களே (க)

*End :*

பூத, பிசாசுக்குக் கண்ணிலஞ்ஜனம், எலுமிச்சம்பழச் சாற்றிலாதல், சாறணையிலைச் சாற்றிலாதல் உரைத்திடவும், அக்கினி ஜபத்திற்குப் பாக்குடன் தின்னவும். ஸகல வியாதிக்கும் தேன், பசுவின் நெய், நொச்சிச்சாறு கூட்டியிடவும். ஆக கோடாசூழிக் குளிகைக்கு அனுபானம் அநேகம் உண்டு. இப்பக்கத் துகை வியாதி 190 வியாதியின் பலமறிந்து கால

மறிந்து கால் மண்டலம், அரை மண்டலம், ஒரு மண்டலம் கொடுக்கவும். (ஏடு 76).

(C) வியாதியின் குணம் (இன்னின்ன வியாதிக்கு இத்தனை யென்றறிய விபரம்) ஏடுகள் 10. (17 to 87).

*Beginning :*

எண்ணுங் கருமங்க ளெல்லா மிசைந்தெனக்கு
நண்ணுங் கலையனைத்தும் நல்குவாய் – உண்ணிறைந்தான்
முண்டத்தா னண்டத்தான் மூலத்தா னுலஞ்சேர்
கண்டத்தான் பெற்றகளிறு

(விநயக நம:).

படைத்திலங்கு கீர்த்தியான் படிமிசைமாந்தர்க் கெல்லாம்
புடைத்தெழு ரோகமுற்றபிணி பலவுள்ள தெல்லாம்
விடைப்பான விழங்கவே பேரையெல்லாம்
அடுக்கவே வகையாயெல்லாம் மறியவே வுரைக்கலுற்றேன் (க)

*End :*

வகைதரு மலமுந்தள்ளி மற்றநீர் கள்ளாநிற்கும்
மிகப்பட நாவுலர்ந்து அசையறக் கிசையாதென்னும்
முகம்மல நாற்றம்போல முடிந்திடு நாலானுளில்
நகைதருங் கதிர்மேல்நிற்க நல்லநீர் நடக்கும்வாறே. (அக)

நடித்திடும் நயனந்தன்னை நாகரவிரலே யொத்த
கடித்திடுஞ் சோதிதன்னில் கடைக்கண்ணிற் றூற்றுதாகில்
முடித்திடு மூன்றுநாளில் மூன்றுஞ் சாமத்திலாவி
விடித்திடுங் குவளைக்கண்ணாய்! விழலென்றே மடியும்வறே (கூய)

(D) பலதிரட்டு (ஏடு 87½ முதல் 133 வரை)

*Beginning :*

சிவனார் வேம்புத் தைலம், வண்டுகடி குஷ்டம், சொறி குஷ்டத்திற்கு.

சிவனுர் வேம்பு ஒரு சுமை, ஆடுதீண்டாப் பாளை ஒரு சுமை. இவைகளை ஒரு மிடாவிலிட்டுக் குழிகெல்லி எருவிட்டுத் தைல மிறக்கி வைத்துக்கொண்டு ஒரு காசத்தனையுட்கொண்டு மேலுக்குத் துவளையிடவும்.

இதற்குத் தீரும் வியாதிகள் :-

சொறி, குஷ்டம், படர்தாமரை, மேலெரிப்பு, கருங்குஷ்டம், வெண்குஷ்டம், சொறிசிறங்கு, வியாதி, ஒழுகுக் குழிப்புண், ஆருதபுண், பிளவை, பவுத்திரம், அரையாப்பு, சிலந்தி, கரப்பான், செங்குஷ்டம், முதுகுப்பிளவை, 18 குஷ்டம் இவை சகலமுந்தீரும்.

தைலமிடும்போது விஞயக பூஜை பண்ணி விநாயகனுக்குப் பொங்கலிட்டுத் தெட்சனை வைத்துத் தைலம் நிவேதனஞ் செய்து, எடுத்து வைத்துக் கொண்டு ஞாயற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழமை பொருந்திய நாளிலிட்டு உட்கொள்ளச் சகல வியாதியுந் தீரும்கைகண்டது.

*End :*

ரத்தக் கடுப்பிற்கு

முத்தின பெருமரத்துப் பட்டையை மேல் புரணியுந் தட்டிப் போட்டு உள்நாறு தட்டிப்போட்டு, அந்தப் பட்டையை யிடித்துப் பொடிபண்ணி, அதை வஸ்திரகாயம் பண்ணி, ஒரு சட்டியிலே எருமை மோர் ஒரு வெள்ளம் விட்டு, மேலே சீலை வேடுகட்டி அந்தப் பொடியையந்த வேட்டிலே வைத்து, அதிலே 5 மிளகு 5 கிராம்பும் முடிந்து நடுவே வைத்து, ஒரு சட்டியிட்டு மூடி ஒரு எரிகரும்பாயெரியிட்டு அரைப்படியாய், சுண்டவிட்டு, அந்த வேடுகட்டினதை யெடுத்து ஒரு கம்பளியிலே பொடியைப்போட்டு நெருக்கினல் $\frac{1}{8}$ படி சாறு வரும். அதிலே மிளகும், கிராம்பும் அரைத்துக் கலக்கி உள்ளுக்கு வாங்கிக்கொள்ளவும். உள் மூலம், கிராணி, இரத்தக்கடுப்பு, நிற்கும், இதற்கு உப்பு, புளி, புகை ஆகாது. பாலுஞ்சாதஞ் சாப்பிடவும். தயிரிலே சாப்பிடவும்.

அதன் பேரில் 10 நாளைக்கு பாலுந், தயிர், நெய் எதேஷ்டமாய் கூட்டிக்கொள்ளவும். ஆரோக்யமாகும்.

(E) நாடிச் சுருக்கம் (134 முதல் 136 வரை)

*Beginning :*

எண்சாணுடம்பு எழுபத்தீராயிரம் நாடி நரம்புகள் மணிவலை சுறுக்கிட்டாப்போல நிற்கும். அது பத்து நாடியாகச் சுருங்கும் இந்தப் பத்து நாடியும் மூன்று நாடியாகச் சுருங்கும். மூன்று நாடியும் பேருக்க இடை, பிங்கலை, சுழிமுனை யென்ன நாசியிலும் பங்கு. இடையாவது இடது நாசி. பிங்கலையாவது வலது நாசி. சுழிமுனையாவது நடுவே நிற்கிறது, நுனி மூக்கு.

*End :*

அவத்தை 10ம் வருமாறு, முதல் அவத்தை பிணம் நாறும். 2ம் அவத்தை நல்லது கூறும், வேற்றுமை கூறும். 3ம் அவத்தை சித்த மலங்கும். 4ம் அவத்தை இழைப்பிழைக்கும். 5ம் அவத்தை முகம் வெளுக்கும், 6ம் அவத்தை பிரளுன வார்த்தை கூறும், உடம்பிளைக்கும். 7ம் அவத்தை சோறு தேடும். 8ம் அவத்தை கண் பஞ்சாடும். 9ம் அவத்தை உடம்பு வியற்கும். 10ம் அவத்தை மரணமென்றறிக.

குரு வாழ்க, வாணி சகாயம்.

(F) வைத்ய சிந்தாமணி (ஏடுகள் 137, 138 ஆக 2 ஏடுகள்)

*Beginning :*

சித்தாமட்டி என்பது குருவட்டி
துப்பில் என்பது கரும்பு
திறண்டென்பது இஞ்சி
சூதமென்பது ரஸம்
குமரியென்பது கற்றாழை
சம்பு என்பது நாவல்

*End :*

லவரு என்பது பேய்ச்சுரை
வச்சிரவல்லி என்பது பிரண்டை,

திமட்டி என்பது சிறுகும்மட்டி ஏகவல்லி என்பது பாகல்
பேராமட்டி என்பது குருவச்சி

(G) பலதிரட்டு வைத்தியம் (ஏடு *139* முதல் *197* வரை)

*Beginning :*

*பிரமியப் பிரமேகத்திற்கு,*

*ஆவாரை வேரையரைத்துச் சுண்டைக்காயளவு காலமே சாப்பிடவும். தேற்றான் விரை 20 இளநீரிலூறப்போட்டு, அந்த யிளநீர் விட்டரைத்து அந்த இளநீரில் 4 நாள் குடிக்கவும்.*

*பத்தியம், புகைப்பு, புளி தவிர்க்கவும் :–*

*அல்லிப்பூ, வட்டத்துத்தி, சீந்தில்தண்டு, நீர்ப்பூலா வேர்ப் பட்டை, கற்றாழைமடல் சாற்றில் பிசைந்து சர்க்கரை போட்டுக் குடிக்கவும். பிரமியந் தீரும்.*

*End :*

*துருசுப் பொடிபோட்டு உரைக்கவும், கருஞ்சுருட்டிச் சாறு விட்டு அரைத்து, மிளகு பொடிபண்ணித் தூவி உரைத்து, சுக்குப் பொடிபோட்டு அரைத்து, எலுமிச்சன்சாறு விட்டு அரைத்துக் கந்தகம் சுத்திபண்ணிப்போட்டு, உரைக்கவும். அப்புறம் பசுவின் வெண்ணெபோட்டு அரைக்கவும். இந்த களிம்பின் நிறம் தாமிர நிறமாயிருக்கும். பரணியில் போடுகிறபோது சாம்பல் நிறம். பரணியில் இருக்க நீலநிறம். பரணியில் போடவும்.*

(H) அகஸ்தியர் இருநூற்றைந்து (ஏடுகள் *198* to *234*)

*Beginning :*

*பூரணமா முள்மூலம் பொரிச்சூடாகும்*
*புகையெழும்பி மேகமதாஞ் சிரசில்சூடாங்*
*காரணமாய் நீர்கலந்து கண்ணில்ரோகங்*
*தனலெழுந்து வாயுவினல் சூலைரோகம்*

மாரணமாம் வாதத்திலெழுந்து மேகம்
மதியதொரு பித்தத்தில் கிராணியாச்சு
தாரணமாம் வாயுவினுல் குன்மமாச்சு
சார்ந்தசிலேத் மங்கூடில் சயமதாமே (க)

*End :*

சஞ்சீவி போலிந்தநூலேச் சொன்னேம்
சண்டாளப் பாவிக்கு யீயவேண்டாம்
நஞ்சுபோ லிந்தநூல் நோய்களுக்கு
நயமான நோய்களேத்தான் நாடிக்கொல்லும்
கெஞ்சுவா ருலகத்திலிந்த நூலேக்
கேட்டாலுங் கொடுக்கரிது கேள்வியன்றி
மிஞ்சவே பஞ்சரித்துத் தெண்டஞ்செய்து
வேணதன மீந்தாக்கா விதனேயீயே (உளச)

ஈவதிந்த நூல்துகைதா னிருநூத்தஞ்சு
இகத்திலுள்ளோர் பிழைக்கவென்று
இரங்கிச்சொன்னேம்
தாயிருந்த பிள்ளேக்குத் தவக்கமில்லாத்
தன்மைபோ லின்னூலேச் சாற்றினேன்நான்
நோய்மிகுந்த தொல்லேயில்லே யொருநாளுந்தான்
நுண்மையாய்ச் சரக்கெல்லாம் நீத்துக்கொண்டு
வாய்மையுடன் னென்ணெயுடன் கிருதஞ்செய்து
வைத்திடுவாய் அனுபான வைத்யமுற்றே (உ௦டு)

ராமஜெயம்

ஓசையிலேழு ஒளியினிலேந்து
நாசியில்மூன்று நாவினில் ரெண்டு
தசியுந் தேவியுஞ்சிறந்து இருப்பிடம்
வாசியில்நீதி மகிழ்ந் துரைத்தாரே.

விஷ்ணுமயம்

ஓம் நமோநாராயணுய நம:
,, கோவிந்தாய நம:
,, ராமச்சந்திராய நம:

(I) நிகண்டு (பெயர் அறியும்படி) ஏடுகள் *1* to *5*.

*Beginning :*

புண்டரீகம் என்பது தாமரை
முதியார்கூந்தல் என்பது சவுரிக்குருந்து
பெரியபெருங்குரும்பை என்பது வீழி
அமுதவல்லி என்பது சீந்தில்

*End :*

ஆறியன்பாடாவது ஆடாதோடை
அகஸ்தியன்பூடு கொட்டைச்செடி
பக்தியுடைவள் வில்வமரம்
வடியிடப்பால் கரடிப்பால்
முருடியுடசில் முருட்டாமை

குறிப்பு :

இதற்குபின் 4 ஏடுகள் உள்ளன. தெலுங்குலிபில் எழுதப் பட்ட ஓலை ஒன்றும் உள்ளது.

சுக்குத்திப்பிலி கனமிளகு
துய்யகடுக்காய் சர்க்கரையும்
ஒக்கக்கூட்டிப் பொடியாக்கி
மிகவுந்தேனில் குழைத்துண்ணக்
குக்குக்குக்குக் கென்றிமல்
குரலுந்தீய்ந்து குணமாமே

---

**525.** சுவடி நெ. *295*

## யானை வைத்யம் (பலதிரட்டு)

ஏடுகள் *56* ; பக்கத்திற்கு *4* முதல் *6* வரிகள்
செல்லரித்துள்ளது ; எழுத்து சுத்தமாக உள்ளது
( நீள × அகலம் $20 \times 2\frac{1}{2}$ செ. மீ )

இதில் யானை நோய்களான சுத்தபக்காளத்தின் குணம் – மருந்து – குட்டுப்பக்காளத்தின் குணம் – உலுக்கு பக்காளத்தின்

நீர் பக்காளத்தின் குணம்-யானைக்கு மருந்து-யானைக்குலெங்கனம் – சைத்யத்துடன் புழுவிழ – சம்மட்டித்து யானைக் கண்ணுக்கு மருந்து – வாயு கவளம் முதலானவைகள் உள்ளன. தளாசு – தீபன கவளம் – ஆனை வயிறு ஊதியிருந்தால் மருந்து – யானைக்குக் காங்கையாய் உத்தாளமானல் மருந்து – நல்லபாம்பு, பேய்நாய் பேய்நரி கடித்தால் மருந்து – தீபனக் கவளம் யானைக்குக் கவளம் வாயுவின் குணம் – மேகநீர்க் கவளம் – தீனெம் – கண்ணோவுக்குப் பத்து – ரஸமிறங்கிற யானைக்குக் கவளம் – வாய்வுக்குக் கவளம்– கிரிமிசூலை, ரத்தசூலைக் குணம் – மகாயேலாதிச் சூரணம் இதற்குத் தீரும் வியாதிகள் - தசவித பக்காளம் - அஜைகதம் - 8 வித பயித்திய வாயு – மூர்ச்சை வாயு, நெஞ்செரிவு, அதிகாங்கை – அக்கினிவாயு – தீபனமுண்டாம். யானை புஷ்டியாகித் தெளுவாகயிருக்கும். மேகநீர் கவளம் – குழிநரி நெய் – யானையின் காலுக்குத் தடவ —

*Beginning :*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வசம்பு | பலம் | 1 | சுக்கு | பலம் | 1 |
| இந்துப்பு | ,, | 1 | புரோசனை விதை | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 | காட்டுசீரகம் | ,, | 1 |
| குராசானியோமம் | ,, | 1 | பெருங்காயம் | ,, | 1 |
| சாதிப்பூ | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| தேசாவரம் | ,, | 1 | கஸ்தூரிமஞ்சள் | ,, | 1 |
| பூண்டு | ,, | 2 | பனங்கருப்புட்டி | ,, | 15 |
| நெய் | படி | 1 | கடுகு | ,, | 1 |
| வாய்விளங்கம் | பலம் | 1 | கடுகரோகிணி | ,, | 1 |

இதுவெல்லாம் இளவறுப்பாய் வறுத்துக்கொண்டு வசம்பு முதல் பதமாய் வறுத்துக்கொண்டு, இதுவெல்லாமிடித்துத் தூளாக்கிக் கருப்புக்கட்டி போட்டு இடித்து, நெய்விட்டுப் பிசைந்துகொண்டு, பெரிய யானைக்கு விளாங்காயளவு, சின்ன யானைக்கு சின்ன விளாங்காயளவு உருண்டை செய்து மேய்க்கவும். மசாலாவைப் புதுப் பானையில் போட்டு சீலை வேடுகட்டி, வெய்யிலில் புடம் வைத்து எடுத்து, வைத்துக்கொண்டு யானைமுகம் பார்த்து 3 நாளைக்கொருக்கால், 8 நாளைக்கொருக்கால் மேய்த்து வரவும்.

இதுக்கு மாற்று :—

முருங்கைப்பட்டை, எருக்காலம் வேர்ப்பட்டைமேல் புரணிச் சீவிப் பொடியாய் நறுக்கி, சிராங்கையுப்புக் கூட்டிப் பதமாய் வறுத்துக் கவளம் காட்டித் தண்ணீர் குடித்ததற்கு மேல் மேய்த்து வரவும்.

*End :*

**ஐராவதம்**

உயரமே பத்ததாகும் ஓங்கிய முடிமேதென்ன
அயர்விலாக் கொம்பு நான்கும் — யணிமுகம்புகரேயாகும்
வியனுரு துதிக்கைநீளம் யிருமுழ மொன்பதாகும்
துயரில்ல ............ வேர்தலையும் வெண்கிரியினூலே
தீ......... திருக்கும் சிவந்தகண் கழற்சிபோல்
உயர்முலம் ............ வைத்துக் ............
பாய்முத மிகுதமெட்டு ......சிரியமும் மருசித்தேகும்
தெய்வ...... கொம்புகாதி நிற்கும் குலாவியமதமோயெட்டு
............ ......... தோன்றியே யிருளதாகும்
யியப்பிரா ............ யேளக் கமுளமேயாகும்
வம்புரு புருடநீளம் வருமுழ மெட்டதாமே...
மிக்க தோரினிப்பைநத்தும் வேகனிரஸ மருந்தும்
மிக்குடன் கருப்பன்சாத்தை யெடுத்தது தானே...

---

**526.** சுவடி நெ. *296*

## பலதிரட்டு வைத்யம்

### (A) தன்வந்தரி நிகண்டு முன்னூறு

ஏடுகள் *7* : பக்கத்திற்கு *6* முதல் *7* வரிகள்
அபூர்த்தி. ஏடுகளின் நுனி முறிந்துள்ளன.
(நீள × அகலம் *40* × *3* செ. மீ.)

இதில் வாசிசூட்சம், ஒருரெருஷ யோகம் செய்தால் நாசம் திரண்டுவரும். வாலையினியல்பு-வாலைபூசை, உலகோர் செய்கை வாலைக்குப் பெயர் – 4 யுகத்திலும் சித்தர் சேறுகிற துகைவிபரம் வழலைப்பேர் முதலானவைகளுள்ளன.

*Beginning :*

ஆயிதிரோ தாயினுட மந்தகூறு
அனுபான மனோன்மணியின் ஆதிபோத்தி
வாயிதிரோதாயி யென்ற மனோன்மணித்தாய்
வளர்ந்ததொரு வாலையுட பாதம்போற்றி
மாயிதிரோ தாயினுட கணபதியென்று
வாழ்த்தினேன் வல்லபையின் நந்திபோற்றி
ஆயிதிரோ தாயிதள ரானசக்தி
நலமான வைரவன்தன் பாதம்போற்றே (க)

*End :*

காட்டினார் நீலியென்றும் பூடென்றும்பேர்
கருத்தான திகைப்பூச்சி யென்றும்பேரு
நாட்டினார் காயமென்றுஞ் சிப்பியென்றும்
நலமானயந்திரப் பூச்சியென்றும் சொன்னார்
வாட்டினார் சனியீசன் வாகனன்தானென்பார்
வளமான அஷ்டமாம் பாவையென்பார்
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... (நசு)

இதன் பின்னர் 2 ஏடுகளில் (B) போகநாயனார் அருளிச் செய்த நிகண்டு. சவுக்கார, நவச்சார, சத்திச்சாரப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

(C) நந்தி தண்டகம் (ஏடுகள் 2 பக்கத்திற்கு 6 வரிகள் அபூர்த்தி)

*Beginning :*

பூமகள் கைலைமேவி பூரணத்தொன் றேயாக
ஆகம வேதஞானக் கருவியுமானதொன்றே
ஏகவாரணம் பூண்ட நந்திதண்டகமே யோத
வேதமாகமத்தின் சக்தி விநாயகன் காப்புத்தானே (க)

*End :*

தானான யொன்றே புரியஷ்டமானது
தானான தொன்றே தத்துவமானது
தானான தொன்றே சங்கங்களாவது
தானான தொன்றே தற்பரமாகுமே (கக)

(D) **வாசமுனி சூத்திரம் எழுபது** (ஏடுகள் 2; பக்கத்திற்கு 6 வரிகள். அபூர்த்தி)

*Beginning :*

ஆதியுமந்தமு மனுபோக வாயுவில்
மாதொரு பெண்பிள்ளை மாசத்தியாகின்ற
நீதிபராபரை நேமியோன் தங்கையாஞ்
சோதியில்வந்த சூத்திர மதாமே (க)

*End :*

வெள்ளையைப் போல்சூடன் வீரனைக்கூட்டிடு
ஒள்ளியவில்லை யுணர்வாய்ப் பிடித்திடு
தெள்ளிய ......... திறமாயுலர்த்திடு
உள்ளியகார ஜயநீரைக் குத்திடே (ம)

(E) **போகநாதர் சோடச சூத்திரம்** (ஏடுகள் 2 பக்கத்திற்கு 6 வரிகள் அபூர்த்தி)

*Beginning :*

முப்பாலுக்கப்பால் முதலான நிற்குணப்பாழ்
விப்பால் வழலையறிவினால் — எப்போதும்
தானவனாய் நிற்குஞ்சகலகுருவாய் தோன்றாய்
யானைமுகம் காப்பா மறி,

முத்தியா மிடைபின்னேடு மூதறிசுழினை நாடி
சத்தியா மதியேபூரந் தானதுகாய்ச்சும் பூவாம்
பத்தியாம் வழலையுப்புப் பானுவாஞ் சுழினைச்சுன்னம்
சித்தியாமுரி கங்கை சேருறக் காச்சினுலே (க)

*End :*

கறண்டங் கடப்பைநாடு கலிங்கமாம்
பறங்கத்துந் தர்மஞ் ...........
சீரங்கதேசஞ் சயிந்தமாபற் பதத்தது நிர்மயங்காவேரி
நீளந்தி மூலஞ் சோளம்
வர்மமமாருடங் கொல்லி மாலயோடு குருமிதானே (ம)

துடிறிமா மாலச்சுத் தெங்கும்
கோகளம் வைகைமூலம்
படித்திடும் பாண்டிநாட்டில் பகருகீழ்கடல் மேல்பக்கந்
திடமுறுவு ராமநாதஞ்
சேர்த்திடு மதுரைத்திட்டு வடிவளை கிலுங்கச்செட்டி
வளர்குடிச் சிலம்பினேரோ (கக)

(F) **ரோமரிஷி கருமான சூத்திரம் நான்கு** (ஏடுகள் 1 பக்கத்திற்கு 6 வரிகள் பூர்த்தி)

*Beginning :*

பூசித்த கருமான மொன்றுகேளு
புத்தியுள்ள ரோமரிஷி புகன்றவித்தை
நேசித்தசரக்கான வுப்பு ரெட்டி
நிர்மலமாங் கல்லுப்புக் கூடச்சேர்த்து
ஆதித்தன் ரவிபீஜம் நாலுகொண்டு
அடவாக மூன்றுமொன்ருய்க் கல்வத்திட்டு
பாசித்து விந்துநீர் தன்னுலாட்டி
பக்குவமா யுருட்டியதை வட்டுபண்ணே (க)

*End :*

பேச்சப்பா தாளகத்தி னூறலெல்லாம்
......... போலே யிறுகிநிற்கும்

பேச்சப்பா வொன்றுமில்லை வெள்ளிநூறில்
புகழான தாரமது யீந்தாயானால்
தாட்சியில்லை பதினறு (மாத்து......)
தடையில்லை கிடைக்குமது யேறுந்தானே (ச)

முத்தும். சிவராமஜயம்.

(G) அகஸ்தியர் மதிவெண்பா நூறு (ஏடு 1 அபூர்த்தி. 8 செய்யுட்களேயுள்ளன பக்கத்திற்கு 6 வரிகள் )

*Beginning :*

ஆதிசிவமான பதமதை அன்புடனே நெஞ்சில்வைத்து
சோதிமதி வெண்பாவைச் சொல்லுவேன் — நீதியுடன்
வாலையிரு பதத்தை வாக்கிலே வைத்தருளக்
காளையின் மேலேறுசிவன் காப்பு...

காப்பான வைங்கரனை கந்தன்வடிவேல் முருகன்
வாய்ப்பாக நெஞ்சில்மனங் கொண்டு — ஏற்பாகத்
தவமுனிவர் சித்தர்ரிஷி சாற்றியநூல் கட்கெல்லாம்
நவமணியாம் மதிவெண்பா நத்து (உ)

*End :*

சொல்லாத மாய்கையெல்லாம் துணிந்தவர்க்கே தள்ளுமல்லால்
பொல்லாத மாய்கைவிட்டுப் போகாது — சல்லாப
லீலையிலே தான்மயங்கி நின்றவுடன் கெட்டுவிடும்
வாலைசிறு பெண்ணாள் சொன்னமதி (அ)

(H) கொங்கண நாயனர் முப்பு சூத்திரம் (ஏடுகள் 2) பக்கத்திற்கு 6 வரிகள். அபூர்த்தி.

*Beginning :*

ஆயிரத் தைன்னூறிலே யறிந்தெடுத்த மந்திரம்
பாயிரத்துள்ளான் பாடல் பத்துநான்கு ஒன்றிலே
தாயிரக்கமான சத்தி தானறிந்து வாழ்வதோ
ராயிரத்தி லொன்றடா யவன்பேரடி மூலமே (க)

அடிமாந்த ளரியான ஆதிமூறு முப்படா
திடமுமுள்ள மதியமஞ்சுஞ் சென்ற பூரணமடா
விடமறிந்து நாதமான வெண்மையான வுப்படா
உடனறிந்த வுப்பினுலு முயர்ந்தகுரு வருளுமே (உ)

*End :*

சேத்திநீர்விட் டாட்டியே தெரிந்தகரி யுப்பிலே
சேர்த்தரை கெஜபுடத்தில் செப்பமுள்ள சுண்ணமாம்
நீர்த்ததும்மைச் சாரமே நிறுத்தாடுங்கொண் டேவிட
நீற்றபிர ஊயமதாம் நிலைத்தநீர் கையாடவே (கக)

**(I) அகஸ்தியர் பாடிய 50ல் கருசூட்மம் 16, பதினெட்டு ஷோடசமாலை என்ற அஷ்டாதி மாலை**

(ஏடுகள் 3; பக்கத்திற்கு 6 முதல் 7 வரிகள். பூர்த்தி)

*Beginning :*

மாலையாய் சொன்னமுப்பு மயங்கிட வேண்டாங்கண்டீர்
ஆலயக் கல்லுமல்ல அம்பலத் தாம்பூலக்கல்
சாலையில் கட்டிச்சுன்னம் கருதியே சுன்னமாக்கி
வேலையா யெடுத்துக்கொள்ளு விபசமே பலமொண்ணுமே (க)

பலமொண்ணு கம்பியுப்புப் பாத்திட வுறுதியாக
சலமில்லாக் கர்ப்பூரந்தான் தானது பலமுமொன்று
நலமதாய் மூன்றுஞ்சேர்த்து நகர்ந்திடக் கல்வத்தாலே
நலமதாய் ரண்டுசாமம் தரித்திடு அருநீராலே (உ)

*End :*

வேதையாம் நாகமொண்ணு விளம்பின ரசமுமொண்ணு
தாதையே கெந்தியொண்ணு தலமதாம் அரிநீராகும்
பாதையாமாடு தின்னுப் பாளையைத் தைலம்வாங்கி
கோதைநீ யாண்டுபாரு குவலய மறியமாட்டார் (எ)

